உ

# தருமதீபிகை

(மூலமும்—உரையும்)

## மூன்றாம் பாகம்

ஆசிரியர்
கவிராஜ பண்டிதர்
ஜெகவீரபாண்டியனார்

மதுரை
மதராஸ் சி. வரதராஜுலு நாயுடு பிரஸில்
பதிப்பிக்கப் பெற்றன.

விரோதி ௵ வைகாசி ௴

1949

# பொருள் அடக்கம்.

# முகவுரை.

இது தருமதீபிகை என்னும் அருமை நூலின் மூன்றாவது பாகம். முன்னர் இரண்டு பாகங்கள் வெளி வந்துள்ளமையால் இது மூன்றாவது என வந்தது. இனிய குண நலங்களைப் பேணி ஒழுகி மனிதன் புனித வாழ்வு காணும்படி அரிய பல தரும நீதிகளை இது காட்டியுள்ளது. காட்சி முதல் பண்பு ஈறாகப் பன்னிரண்டு அதிகாரங்கள் இதில் அடங்கி யுள்ளன.

உயிர்க்கு உறுதி நலனைக் கருதிக் காணுக; வாழ் நாளைப் பாழாக்காமல் எவ்வழியும் நன்கு பயன் படுத்துக; பேராசை மண்டிப் பிழை புரியாதே; வறுமை யுறினும் மறுமை நோக்கி வாழுக; ஏதேனும் ஒரு தொழிலை ஆதரவோடு ஆராய்ந்து செய்க; சோம்பித் திரியாதே; மறதியுறாமல் எதையும் எதிர் அறிந்து பேணுக; யாண்டும் உறுதியோடு ஊக்கிமுயலுக; எவ்வுயிர்க்கும் இதமாய் இனிது ஒழுகுக; மத வெறி இன்றி உண்மையாகத் தெய்வ சிந்தனை செய்து உய்தி பெறுக; யாவரிடமும் கண்ணோடித் தண்ணளி புரிக; அன்பு நலம் கனிந்து பண்பு படிந்து வருக என இன்னவாறான நீதி போதனைகள் கலையின் சுவையோடு கலந்து இதன் கண் தலைசிறந்திருக்கின்றன.

ஆன்ம நீர்மைகள் சுரந்து பான்மை நிறைந்துள்ள இந்நூலை நாளும் நன்கு பயின்று யாவரும் நலம் பல பெற எம்பெருமான் திருவருளை இறைஞ்சி நிற்கிறேன்.

திருவள்ளுவர்நிலையம்,
மதுரை

ஜெகவீரபாண்டியன்.

## சிறப்புப் பாயிரம்



மனித் வாழ்வு மகிமை மருவியே
புனித் மாயுயர் புண்ணிய போதனை
இனிது மேவிய இத்திரு நூலினை
நினைவு கூர்தல் நிதம்அமு தார்த்லே.

உலக வாழ்வு நாடகம் என்றதனால் அது நிலை இல்லாதது; வெளி வேடம் ஆனது; களி மயக்குடையது; விரைவில் மறைவது என்னும் நிலைமைகள் யாவும் நேரே தெளிய வந்தன.

இருவினை வயத்தராய்ப் பிறந்தும் இறந்தும் பாரில் சுழன்று வருதலால் மேடையில் தோன்றி மறையும் நாடகம் என மானுட வாழ்வு பாட நேர்ந்தது. காட்சியும் கழிவும் காண நின்றன.

சீவர்கள் இவ்வாறு ஓயாது உழன்று வரும் காட்சியைக் கடவுள் என்றும் கண்டு கொண்டிருத்தலால் அவர் நாடகத் தலைவன் என நின்றார். நடிகர்களைத் தகுதியறிந்து நன்கு நடத்தி வருகின்றமையின் நட்டுவன் என்னும் பட்டமும் பெற்றார்.

இயம்பிடும் இருளை நீக்கி எனைவெளிப் படுத்தல் வேண்டும்
கயம்படு துறையில வீழ்ந்த கண்ணிலிக்கு உதவுவான்போல்
பயம்பட வெண்பொற் சோதி படரு மன்றத்தின் ஊடு
நயம்படு மறைகள்பாட நாடகம் நவிற்றுவோனே. (1)

நாடகத் தொழில் வராத நட்டுவக் குறையோ? நாளும்
பாடகப் பதுமம் பூத்த பாத்திரக் குறையோ? சொல்லாய்!
சூடகத் தளிர்க்கை பாகா! சோமசுந்தரனே! கூடல்
ஆடகக் குன்றே! என்னை ஆட்டுவித்தனை நன்றுயே, (2)

(மதுரைப் பதிற்றுப்பத்தந்தாதி)

தமது பிறவித்துயரை நீக்கி அருளும்படி இறைவனைநோக்கிப் பரஞ்சோதி முனிவர் இவ்வாறு வேண்டியிருக்கிறார். சீவனை நடிகை ஆகவும், பரமனை நட்டுவன் ஆகவும் இதில் சுட்டியிருத்தலை உய்த்து உணர்க. ஆட்டத்தை விட்டு நீக்கியருளாமல் என்னை ஓயாது ஆட்டி வருகின்றாயே! இது நட்டுவக் குறையா? அல்லது நடியின் குறையா? என்று கேட்டிருக்கும் கேள்வியில் பத்தியும் ஞானமும் படிந்து வித்தக விநோதம் விளைந்து நிற்கின்றது. நிலைமையை நினைந்து தெளிவது நலமாம். உயர்ந்த உள்ளத்தின் பண்புகளை ஓர்ந்து உணர்கின்ற அளவு உவகை சுரந்து வருகின்றது.

எண் இறந்த கோடி இறந்து ஒழிந்த.

இவ்வுலகில் தோன்றி நின்று மாய்ந்து மறைந்து போன சீவகோடிகள் அளவிடலரியன என்றது அதன் உளவறிந்து உறுதி தெளிய. போன போக்குகளை ஞான நோக்கால் நயந்து நோக்கி ஊனம் நீக்கி உய்தி பெறுக என உணர்த்திய படியிது.

ஈண்டு அரசராய் வந்து ஆண்டு நின்று மாண்டு மடிந்துபோன மன்னர்களை எண்ணி நோக்கின் கடல் அலைகளினும், கரை மணல்களினும் பலர் என அலகிலா நிலையில் மலைவுறுதலால் மண் இறந்த மானுடங்கள் எண் இறந்த கோடி என இயல் அளந்து காண வந்தது. தோன்றி மறைந்து போன தோற்றங்களை ஊன்றி நோக்க வைத்தது, தனக்கு உறுதி நலங்களை விரைந்து ஓர்ந்து கொள்ள. உண்மை உணர்வு நன்மை அருள்கின்றது.

நாமும் வந்து அவ்வண்ணம் ஒழிகின்றோம்.

நமக்கு முன்னதாக இஞ்ஞாலத்தில் வந்து தோன்றி நின்று ஒழிந்து போனவர்களைப் போலவே நாமும் கழிந்து போகின்றோம்; போகும் முன் ஆக வேண்டியதைச் சேகரித்து அடைந்து கொள்ள வேண்டும் என இது அறிவுறுத்தி நின்றது.

ஒழிகின்றோம் என்றது இல்லிக்குடத்தின் நீர்போல் நாளும் ஆயுள் ஒழுகிக் கொண்டேயிருக்கும் உண்மையை ஓர்ந்து காண. உயிர் வாழ்வு கழிந்து போகின்ற காட்சியைக் கருதி உணரின் எவரும் தமக்கு உறுதியை விரைந்து கொள்ளுவர். கொள்ளாதார் காட்சி யிழந்த கழி மடங்களாய் மாட்சி யழிந்து மடிந்து ஒழிவர். துன்ப வீழ்ச்சியுள் ஆழ்ந்து சுழலாமல் இன்ப மீட்சியில் ஏறி மகிழ்க. இழிவில் இறங்கின் அழி துயரங்களாம்.

எய்தியுள்ள பிறவியின் அருமையையும், எய்த உரிய பயனையும் உணர்ந்து தெளிந்து விரைந்து உய்திபெறுக என்பது கருத்து.

---

423. நிழலசைவே போன்றஇந் நீளுலக வாழ்வை
விழுமிதென நம்பி விளியல்—குழுமிநின்று
ஆடுமொரு நாடகமே ஆகும் இதினின்று
வீடு பெறுக விரைந்து. (௩)

இ—ள்

இந்த நெடிய உலக வாழ்க்கை நிழலின் அசைவு போல் விரைவில் மறைகின்றது; இதனை நிலை என்று கருதிப் புலையுறாதே; பலவகையான கூட்டங்கள் சேர்ந்த ஒரு மாயக் கூத்தாட்டமே யாம்; இந்தக் கேட்டை விட்டு நீங்கித் தூய பேரின்ப வீட்டை விரைந்து பெறுக என்பதாம்.

இது வாழ்வின் நிலையை நினைந்து தெளிக என்கின்றது.

மனிதன் கண்டதைக் கொண்டு களிப்புறுகின்றான்; பெற்றது எதுவாயினும் அதனைப் பெரிதாக எண்ணுவதும், அபிமானங்கள் புரிவதும், அகம் செருக்கி ஆரவாரங்கள் செய்வதும் இயல்பாயுள்ளன. மையல் மயக்கமும் மாய மோகங்களும் வையக வாழ்க்கைகளாய் வளர்ந்து வருகின்றன. பொய்யும் புலையும் புன்மையும் வளர்கின்றன; மெய்யும் நலமும் மேன்மையும் தளர்கின்றன. தீய வழி விலகி நல்ல விழி திறந்தபோது எல்லையில்லாத இன்ப ஒளிகள் எதிர் எழுகின்றன.

அல்லல் நிலைகள் எல்லாம் அறியாமையால் விளைகின்றன. அவலக் கவலைகளுக்கு மடமை இடமாய் நிற்றலால் அந்த அஞ்ஞான நிலை கொடிய மருள், நெடிய இருள் என்று கடிய நின்றது.

உண்மையை ஓர்ந்து உணரின் உள்ளம் உருகி நன்மை காண நேர்கின்றான். உணராதவன் உறுதிநலம் யாதும் காணமல் வறிதே இழிந்து போகின்றான். அங்ஙனம் ஒழிந்து போகாமல் உள்ளம் தெளிந்து உயர்ந்து வருகின்றவன் சிறந்த பயனை அடைந்து கொள்கின்றான்.

காணுகின்ற வாழ்க்கை நிலையைக் கருதியுணர்வது அரிய மனிதனுடைய தகைமையாய்ப் பெரியமகிமையை அருள்கின்றது.

உலக வாழ்வை நிழல் அசைவு என்றது அதன் நிலைமையைக் கருதி உணர. நிலை இல்லாதது; விரைந்து மறைந்து போவது; வெளி மயக்கானது; களிப்பும் கவலையும் என்றும் இயல்பாக வுடையது என்னும் வகை தெளிய வந்தது.

வாழ்வாவது மாயம்; இது மண்ணாவது திண்ணம்:
பாழ் போவது பிறவிக்கடல்; பசிநோய் செய்த பறிதான்;
தாழாது அறம்செய்து உய்மின் தடம் கண்ணன் மலரோனும்
கீழ்மேல் உற நின்றான் திருக் கேதாரம் என்னீரே. (தேவாரம்)

வாழ்வின் நிலைமையைச் சுட்டிக் காட்டி உயிர்க்கு உறுதி செய்து கொள்ளும்படி சுந்தரமூர்த்தி நாயனார் இவ்வாறு போதித்திருக்கிறார். மாடு மனை செல்வம் எனக் கூடி நிற்பன எல்லாம் உன்னை விட்டு ஓடி ஒழியும்; இம் மாய வாழ்வை நம்பி மதி மருண்டு நில்லாதே என்று நிலையானதை நினைவுறுத்தினார்.

மெய்யான ஆன்ம ஊதியத்தை அடையாமல் பொய்யானதில்

மய்யல் மீதூர்ந்து மயங்கி நிற்பது வெய்ய துயரமாய் விரிந்து வருகின்றது.

விழுமிது என நம்பி விளியல்.

எவ்வழியும் இழிவும் அழிவும் உடையதை விழுமிது என நம்பி யுழல்வது வழுவாம் என்று இது தெளிவு தோன்ற உணர்த்தியது. விழுமம்=மேன்மை. விளிதல்=அழிதல்.

வாழ்வின் நடைமுறையிலும் இடையூறுகள் பல மிடைகின்றன; முடிவும் கடிது நிகழ்கின்றது; ஆகவே எவ்வகையிலும் பொய்மயக்கான புலையாட்டம் என வாழ்வு நிலை நாட்டநேர்ந்தது.

"Life's but a walking shadow, a poor player
That struts and frets his hour upon the stage,
And then is heard no more: it is a tale
Told by an idiot, full of sound and fury,
Signifying nothing." (Macbeth, 5.5)

"மனித வாழ்வு ஒரு அசைகின்ற நிழலே; நாடக மேடையில் இடையே கோமாளி வந்து பிலுக்கி நடந்து பிதற்றிப் போவது போலவும், மூடன் சொல்லிய பழங்கதை போலவும் வெறும் பாழானது; யாதொரு மேன்மையும் இல்லாதது" என Macbeth மேக்பெத் என்னும் படைவீரன் தனது ஆயுள் முடிவில் வாழ்வைக் குறித்து இவ்வாறு பேசியிருக்கிறான்.

கண்டு வந்த அனுபவங்கள் கடை நாளில் கருதியுணர வருகின்றன; வரவே உறுதி யுண்மைகள் உரைக்க நேர்கின்றன.

உலக ஆசைகளில் வெறியராய் ஓடியலைந்து கலகமும் களிப்பும் நீடி நிமிர்ந்து யாண்டும் ஒரு பயனும் காணுமல் வறிதே மாண்டு மறைந்து போவதே மானிட வாழ்வின் சூழ்வாய் நீண்டு நிறைந்துள்ளது.

தங்களுடைய வரவு செலவுகளைக் கருதியுணர்ந்து உறுதி நலங்களை காடாமல் ஊனமாய் ஒழுந்து போவது ஞான சூனியம் ஆதலால் அப்போக்கு ஈனம் என இகழ நேர்ந்தது.

நிலையில்லாத வாழ்வில் நிலையான நன்மையை அடைந்து கொள்பவன் உயர்ந்து மகிழ்கின்றான்; அங்ஙனம் அடையாதவன் இழிந்து கழிகின்றான். கழிந்து படாமல் கதிநலம் காணுக.

குழுமி நின்று ஆடும் ஒரு நாடகமே.

பலரும் வந்து கூடிக் குலாவி ஆடிப் பிரிந்து அகன்று போத லால் மனித வாழ்வு இனிய ஒரு நாடகம் என வந்தது.

அல்லல்களும் அவலங்களும் நிறைந்திருந்தாலும் எல்லாரும் உல்லாச விநோதங்களாய் ஓடித் திரிகின்றார். உறுவதை உணரா மல் உள்ளம் களித்து உலாவி வருதலால் இது மாயக் கூத்து என நேர்ந்தது.

உய்தி ஒன்றும் காணுமல் மையல் மயக்கங்களில் ஆழ்ந்து வெய்ய துயரங்களையே விளைத்து வருதலின் பலவகைப் பிறவிகளி லும் வீழ்ந்து சீவர்கள் படாதபாடுகள் படுகின்றனர்.

பனிமதி யின்கதிர் பருகும் ஆம்பல்போல்
முனிமதி முகத்தியர் முறுவல் நம்பினார்
துனிவளர் கதிகளுள் தோன்றி நாடகம்
கனிய நின்று ஆடுவர் கடையில் காலமே. (1)

நிழல்நிமிர் நெடுமதி நிகரில் தீங்கதிர்ப்
பழனவெண் தாமரை பனிக்கு மாறுபோல்
குழல்நிமிர் கிளவியார் கோலம் அஞ்சினார்
தொழுநிமிர்ந்து அமரராய்த் துறக்கம் ஆள்வரே. (2)
(சீவக சிந்தாமணி)

தேக போகங்களையே விழைந்து திரிபவர் ஆன்ம நலனை இழந்து விடுகின்றார்; அம் மோகம் ஒழிந்தவர் முத்தியின்பத்தை அடைகின்றார் என்னும் இது ஈண்டு உய்த்துணரத் தக்கது.

சிற்றின்ப நிலையில் இழிந்தபோது பேரின்ப நிலை ஒழிந்து போகின்றது. அதனைத் துறந்து எழுந்தவர் உயர்ந்த பதவியில் சிறந்து திகழ்கின்றார். காம விழைவால் பிறவிகள் விளையும் ஆத லால் அதனையுடையவர் பலவகை நிலைகளிலும் தோன்றி நிலை குலைந்து அலைகின்றார். அல்லல் மிடைந்துள்ளமையின் அது அவல நாடகம் என வந்தது.

கடையில் காலம் நாடகம் ஆடுவார் எனச் சீவர்களுடைய வாழ்வைக் குறித்துக் காட்டியிருக்கும் காட்சியைக் கருதிக் காணுக. மங்கையர் மதி முகத்தைக் கண்டபோது ஆம்பல்போல் அலர்ந்து இழியாமல், தாமரைபோல் அஞ்சி அகல்பவர் அமரர்

தொழ நிமிர்ந்து துறக்கம் ஆள்வர் என்னும் குறிப்பு கூர்ந்து ஓர்ந்து கொள்ள வுரியது. உயிர்களுக்கு இனிய உறுதி நலங்களை உவகையுறும்படி மேலோர்கள் சுவையாக உரைத்தருளுகின்றார்.

வாழ்வின் நிலைமையை உணர்ந்து தெளிந்து உயர்ந்த குறிக்கோளுடன் ஒருவன் ஒழுகிவரின் அவன் சிறந்த பேரின்ப நிலையை அடைந்து கொள்கின்றான்.

உலக மையலில் உள்ளம் களித்து இழிந்து போகாதே; இதனை ஒரு நாடகமாகக் கருதி நின்று வீடகம் புகுக.

---

424. நேற்றிருந்தார் இன்றுவெந்து நீறானார் என்றுநேர்
பார்த்திருந்தும் நல்லுறுதி பாராமல்—ஆர்த்துலையில்
ஆடிக் களிக்கின்ற ஆமைபோல் ஐயகோ
நீடிக் களிக்கின்றார் நின்று. (௪)

இ—ள்

நேற்று இருந்தவர் இன்று இறந்து நீறு ஆய் ஒழிதலை நேரே பார்த்திருந்தும் தம் உயிர்க்கு உறுதி யாதும் பாராமல் உலைநீரில் ஆடி மகிழ்ந்த ஆமைபோல் புலைநீரில் நீடிக் களிக்கின்றார் என்க.

உலக வாழ்வு நிழல் அசைவு போன்ற ஒரு மாயச் சாயல்; விரைந்து மாய்ந்து மறைந்து போவது; அது அழிந்து படுமுன் ஆவதை அடைந்து கொள்ள வேண்டும்; அங்ஙனம் அடையாது நிற்பது அவகேடாம் என இதுவுணர்த்துகின்றது.

நேற்று இருந்தார் இன்று வெந்து நீறு ஆனார்.

என்றது நிலையாமையின் நிலை தெரிய வந்தது.

முதல்நாள் இருந்தவர்கள் மறுநாள் இறந்தார்கள் என்று எங்கும் இழவு மொழிகள் வளமாய் வளர்ந்து வருகின்றன. இறந்துபட்ட உடல்களைச் சுடுகாட்டில் வைத்து எரித்து விடுதலால் எலும்பும் சாம்பலுமே எதிர்ப்படுகின்றன. எரிந்து கழிந்து காணப்படுகின்ற அவை இருந்து ஒழிந்து போனவர்களை எண்ணச் செய்கின்றன. சாம்பல் கண்டும் ஏம்பல் கண்டிலர்.

வெந்து நீறு ஆனார் என்றது அவர் முந்தியிருந்த சீரும் சிறப்பும் சிந்தனை செய்ய வந்தது. நீறு—சாம்பல்.

மகுட மன்னர்களாய் மகிமை பெற்றிருந்தவரும் மாண்டு மண்ணாய் மறைந்து போகின்றார். அப் போக்கை நோக்கியும் தனக்கு ஆக்கம் நோக்காமல் இருப்பது அவ கேடாகின்றது.

முடிசார்ந்த மன்னரும் மற்றுமுள் ளோரும் முடிவில் ஒரு
பிடிசாம்பராய் வெந்து மண்ணாவதுங்கண்டு பின்னும்இந்தப்
படிசார்ந்த வாழ்வை நினைப்பதல்லால் பொன்னின் அம்பலவர்
அடிசார்ந்து நாம உய்ய வேண்டுமென்றே அறிவாரில்லையே.

(பட்டினத்தார்)

உலக வாழ்வின் நிலைமையை நேரில் கண்டும் தம் உயிர்க்கு உறுதி நலம் காணாமல் வறிதே ஒழிகின்றாரே! என்று மக்களுடைய இழிவான மதி கேட்டையும் பிழைபாட்டையும் நினைந்து பட்டினத்தார் இவ்வாறு பரிந்து வருந்தி இருக்கிறார்.

ஒரு பெரிய அரசன் இறந்து போனான். உடல் புதைக்கப் பட்டது. அந்தப் பிணத்தைத் தின்று வளர்ந்த கிருமிகள் சில வெளியே வந்தன; அவற்றை ஒரு கோழி தின்றது; அதனை மறு நாள் ஒரு குறவன் கொன்று தின்றான். அவ்வழியே சென்ற காயகர் என்னும் யோக சித்தர் அவனைக் கண்டார்; தம் அயலே நின்ற செல்வனிடம், "இந்தப் பிச்சைக்காரன் வயிற்றில் ஒரு முடி மன்னன் இன்று குடி புகுந்திருக்கிறான்" என்று உல்லாச விநோதமாய்ச் சொல்லிப் போனார். அந்தச் செல்வன் திகைத்து வியந்து யோகியைத் தொடர்ந்து உண்மையை விவரமாச் சொல்லியருளும் படி தொழுது வேண்டினான். அவர் முழுவதும் தெளிவாகச் சொன்னார். மனித வாழ்வின் நிலைமையை உணர்ந்து மறுகி உறுதி நலனை நாடி அவன் அரிய தவநெறியை மருவினான்.

மன்னன் மடிந்து மனிதன் மலக்குடலில்
துன்னி யுளபடியைச் சொல்லவே—உன்னி
உளமுருகி அன்றே உயிர்க்குறுதி நாடி
வளமொருவி நின்றான் வரைந்து.

உண்மையைக்கண்டு தெளியவே புன்மை நிலை ஒருவி இம்மை நலம் மருவி யாரும் நன்மையைக் காண நேர்கின்றனர்.

சிறந்த முடி மன்னரும் இருந்த இடம் தடம் தெரியாமல் அழிந்து ஒழிந்து போதலால் இவ்வுலக வாழ்வைச் சதம் என்று இழிந்து போகாதே; நிலைமையைத் தெளிந்து நித்தியவுண்மையை

நேர்ந்து கொள்ளுக என உறுதியை ஓர்ந்து கொள்ள இது உரைத்தருளியது. மண் ஆண்டவர் மண்ணாய் மடிவதைக் கண்ணாரக் காட்டியது கதி காண வந்தது.

"A King may go a progress through the guts of a beggar."
(Hamlet 4-3)

"ஒரு அரசன் மடிந்து மாறிப் பிச்சைக்காரன் குடலில் போய்ச் சேரலாம்" என மேல் நாட்டுக் கவிஞரும் இவ்வுலக வாழ்வின் அநித்திய நிலைமையை இவ்வாறு குறித்திருக்கிறார்.

நெருநல் உளன்ஒருவன் இன்றில்லை என்னும்
பெருமை உடைத்திவ் வுலகு. (குறள், 336)

ஒருவன் நேற்று இருந்தான்; இன்று இல்லை என்னும் பெருமைதான் இவ்வுலகில் பெரிதாயுளது எனப் பரிதாபத்தோடு விநயமான நகைச் சுவையும் கலந்து இது வந்துள்ளது. பெருமை என்றது சிரிப்புடைய குறிப்புமொழி. உளன் என்றதற்கு ஏற்ப இலன் என்னமல் இல்லை என்றது செத்த பிணம் என்னும் அந்த இழவு நிலையை உய்த்துணர. உயிர் உள்ள நிலைமையை உயர் திணையால் உரைத்தார்; அஃது இல்லாமையை இழி திணையால் குறித்தார். மனித வாழ்வு விரைவில் அழியும் இயல்பினது; ஆதலால் காலம் உள்ள பொழுதே நல்லதை நாடிக் கொள்க என ஞாலம் அறிய மேலோர் இங்ஙனம் அருளியுள்ளனர்.

இன்றுளார் நாளை இல்லை எனும் பொருள்
ஒன்றும் ஓராது உழிதரும் ஊமர்காள்!
அன்று வானவர்க்காக விடம் உண்ட
கண்டனார் காட்டுப் பள்ளிகண்டு உய்ம்மினே. (தேவாரம்)

மேலே குறித்த திருக்குறளை அடிபொற்றி வந்து அநித்திய நிலையை விளக்கி ஆன்ம நலனை அடையும்படி இது உணர்த்தியுளது. திருநாவுக்கரசர் இவ்வாறு போதித்திருக்கின்றார்.

வென்றிலேன் புலன்கள் ஐந்தும் வென்றவர் வளாகம் தன்னுள்
சென்றிலேன் ஆதலாலே செந்நெறி யதற்கும் சேயேன்
நின்றுளே துளும்பு கின்றேன் நீசனேன் ஈசனேயோ
இன்றுளேன் நாளை இல்லேன் என்செய்வான் தோன்றினேனே.
(அப்பர்)

நேற்றுளார் இன்று மாளா நின்றனர் அதனைக் கண்டும்
போற்றிலேன் நின்னை அந்தோ போக்கினேன் வீணே காலம்
ஆற்றிலென் அகண்டா னந்த அண்ணலே அளவில் மாயைச்
செற்றிலே இன்னம் வீழ்ந்து திளைக்கவோ சிறிய னேனே.

(தாயுமானவர்)

நன்றுளேன் அல்லேன் யார்க்கும் நல்லறம் புரியேன்; அன்றிக்
கொன்றுளேன் அறம் பார்க்கும் கூற்றுவன் விடுவான் அல்லன்;
இன்றுளேன் நாளை இல்லேன்; யமன்வரும் போதுன் வெள்ளி
மன்றுளே இருந்த சொக்கே வழக்குநீ என்சொல் வாயே?

(பரஞ்சோதி முனிவர்)

நிலையாமையை நினைந்து நெஞ்சம் கரைந்து இறைவனைச் சிந்தித்துப் பெரியோர்கள் இங்ஙனம் மறுகியுள்ளனர்.

உண்மை கண்டவர் உறுதி காண விரைகின்றார்.

பார்த்திருந்தும் நல் உறுதி பாராமல்

என்றது மனித வாழ்க்கையின் அழிவு நிலைகளை நேரே கண்ணாரக் கண்டிருந்தும் மறுமைக்கு உரிய உறுதிநலனை உணராமல் உழலுகின்ற இழிவு கருதி. கேடு பார்த்தும் வீடு பாராமல் இருப்பது முழு மடமையான பழி படு நிலையாம்.

உலையில் ஆடிக் களிக்கின்ற ஆமைபோல்.

என்றது உவமை வாசகமாய் வந்தது.

உறுவதை உணராமல் உள்ளம் களித்துத் திரியும் மனித வாழ்க்கையின் நிலைமையைத் தெளிவுறுத்தப் பழமையில் நிகழ்ந்த ஒன்று கிழமையாய் ஈண்டு எடுத்துக் காட்ட நேர்ந்தது.

ஒரு வலைஞன் நீர் நிலையிலிருந்து ஓர் ஆமையைப் பிடித்தான். பின்பு அதனைப் பக்குவமா அவித்துத் தின்ன விழைந்தான். பெரிய மண்பானையில் நீரைப் பெய்து வைத்து அடுப்பில் ஏற்றி நெருப்பை மூட்டினான். அங்ஙனம் மூட்டிய தீ விறகில் பற்றிப் பானையில் சூடு தாக்குமுன் அந்த உலைத் தண்ணீரில் கிடந்த ஆமை பலபல எண்ணி உளம் மிக மகிழ்ந்தது. "நாம் சுகமாய் இருந்து வாழ ஈண்டு நல்ல தண்ணீர் அமைந்தது; நீண்டகாலம் நிலையாய் இதில் இனிது வாழலாம்" எனக் களித்துத் துள்ளி உலை நீரைச் சுற்றி சுற்றி உவந்து வந்தது; உடனே நெருப்புச்சுட்டது; உடல் வெந்து செத்தது; அவன் அதனை உண்டு மகிழ்ந்தான்.

மனிதனுடைய வாழ்வும் இவ்வாறே மருவி யுள்ளது. நிலைமையை யாதும் உணராமல் பல மனக்கோட்டைகளைக் கட்டிக் கொண்டு மகிழ்ச்சி மீதூர்ந்து களித்துத் திரிகின்றான்; உள்ளக் களிப்பால் உவந்து திரியுங்கால் காலன் வாய்ப்பட்டுக் கடிது தொலைகின்றான். இங்ஙனம் நிலைமை ஒத்திருத்தலால் உலை ஆமை இவனுக்கு உவமையாய் வந்தது.

*கொலைஞர் உலைஏற்றித் தீமடுப்ப ஆமை*
*நிலைஅறியா தந்நீர் படிந்தாடி அற்றே*
*கொலைவல் பெருங்கூற்றம் கோட்பார்ப்ப ஈண்டை*
*வலையகத்துச் செம்மாப்பார் மாண்பு,* (நாலடியார் 331)

*வளைத்துநின்று ஐவர் கள்வர் வந்துஎனை நடுக்கம் செய்யத்*
*தளைத்து வைத்து உலையை ஏற்றித் தழல்எரி மடுத்த நீரில்*
*திளைத்து நின்று ஆடுகின்ற ஆமைபோல் தெளிவிலாதேன்*
*இளைத்துநின்று ஆடுகின்றேன் என்செய்வான் தோன்றினேனே?*
(தேவாரம்)

மனித வாழ்வின் புலை நீர்மைக்கு உலை நீர் ஆமையை ஒப்புரைத்து மேலோர் இங்ஙனம் குறித்துள்ளனர். நிலைமைகள் நெடிது சிந்திக்கத் தக்கன.

*நெடுமணி யூபத்திட்ட தவழ்நடை யாமை நீள்நீர்த்*
*தொடுமணிக் குவளைப் பட்டம் துணையொடு நினைப்பதேபோல்*
*கடுமணிக் கயற்கண் நல்லார் காமமும் பொருளும் சிந்தித்து*
*அடுமணி ஆவி நீப்பார் அறிவினால் சிறிய நீரார்.*
(சீவக சிந்தாமணி 2878)

யாக பலிக்காகக் கொண்டுவந்து தறியில் கட்டியுள்ள ஆமை தடாகத்தையும் தனது பெட்டையையும் நினைந்து பேதுறுதல் போல் புண்ணியம் செய்யாதவர் பொருளையும் போகங்களையும் அவாவி மருளராய் மறுகிச் சாவர் என இது அறிவித்துள்ளது.

*தூமலர்த் தாமரைப் பூவின் அங்கண*
*மாயிதழ்க் குவளை மலர்பிணைத் தன்ன*
*திருமுகத்து அலமரும பெருமதர் மழைக்கண்*
*அணிவளை முன்கை ஆயிதழ் மடந்தை*
*வார்முலை முற்றத்து நூலிடை விலங்கினும்*
*கவவுப்புலந் துறையும கழிபெருங் காமத்து*
*இன்புறு நுகர்ச்சியின் சிறந்தது ஒன்று இல்லென*

அன்பால் மொழிந்த என்மொழி கொள்ளாய்!
பொருள்புரி வுண்ட மருளில் நெஞ்சே!
கரியாப் பூவிற் பெரியோர் ஆர
அழலெழு தித்தியம் அடுத்த யாமை
நிழலுடை நெடுங்கயம் புகல்வேட்டு ஆஅங்கு
உள்ளுதல் ஓம்புமதி இனிநீ முள்ளெயிற்றுச்
சின்மொழி அரிவை தோளே பன்மலை
வெவ்வறை மருங்கின் வியன் சுரம்
எவ்வம் கூர இறந்தனம் யாமே. (அகம் 361)

இது தலைவியைப் பிரிந்து பொருள் தேடச்சென்ற தலைவன் வழியிடையே தன் நெஞ்சை நோக்கிச் சொன்னது

தித்தியம்=வேள்விக்குண்டம். கயம்=தண்ணீர்த்தடாகம்.

"அழகிய மங்கையை மருவியுள்ள இன்பமே சிறந்தது என்று எவ்வளவோ சொல்லியும் யாதும் கேளாமல் பொருள்மேல் ஆசைகொண்டு மருள் மண்டி வந்த மனமே! மலைகள் பல கடந்து வெகு தூரம் அடைந்தபின் மீண்டு அவளை நினைந்து ஈண்டு நீ தவிப்பது வேள்விக்குண்டத்து ஆமை துடிப்பதுபோல் உள்ளது" என அவன் தன் உள்ளத்தை இடித்துக் கூறியிருக்கும் நிலையை இதில் விழைந்து நோக்கி உவந்து நிற்கின்றோம்.

அபாய நிலையில் உள்ள ஆமையைச் சுட்டிக் காட்டி மனித வாழ்வின் பரிதாபங்களைப் பெரியோர்கள் விளக்கியிருக்கும் பல வகைக் காட்சிகளும் புலமை மணம் கமழ்ந்து சுவை சுரந்து திகழ்கின்றன. உறுதிநலங்கள் தெளிவுற உணர்வுநலங்கள் வருகின்றன.

விளிவு கண்டு விழுமிய நிலையைக் காணுக.

---

425. நாளும் பொருள்வருவாய் நாடுகின்றீர் நல்லுயிர்மேல்
ஆளும் படியை அறியகிலீர்—வாளுடைய
மன்னர் பலர்வந்து மாண்டொழிந்தார் இவ்வுலகில்
என்னபலன் கண்டீர் இருந்து. (ரு)

இ—ள்

தம் உயிர்க்கு ஒரு நலமும் காணாமல் பொருள் வரவையே விழைந்து நாளும் மருள் கொண்டு அலைகின்றீர்! வாள்வலியுடைய

அரசர் பலர் வந்து அழிந்து போயினர்; இவ் வுலகில் இருந்து நீர் என்ன பலனைக் கண்டீர்? என்பதாம்.

இது உறுதி நலனைக் கருதுக என்கின்றது.

அறிவு இச்சை செயல் என்பன மனிதனிடம் நெறிமுறையே நிகழ்ந்து வருகின்றன. ஒரு பொருளைக் காணுகின்றான்; அங்ஙனம் கண்ட பின்பே அதன் மேல் விருப்பம் உண்டாகின்றது. விரும்பியதை அடைந்து கொள்ள வேண்டும் என்று முனைந்து முயலுகின்றான். காட்சியும் கருத்தும் மனித வுலகத்தை ஆட்சி புரிந்து வருகின்றன. வாழ்வின் வரவுகள் தாழ்வுகளில தாவுகின்றன.

தேக போகங்களையே விழைந்து எங்கும் யாவரும் ஆவல் மீதூர்ந்து திரிகின்றனர். நாசமான நிலைகளில் ஆசைகள் வளர்ந்து வருதலால் அவை அவலங்களாய் முடிகின்றன.

அசுத்தமும் துக்கமும் அழிவுமான உடல்களை ஓம்ப விரும்பிக் கடல் கடந்தும், மலைகள் ஏறியும், கடுவனங்கள் நடந்தும் படாத பாடுகள் படுகின்றனர். முடிவான பயனை ஒரு சிறிதும் உணராமல் முடிந்து போகின்றனர். அறிய வுரியதை அறிந்து, அடைய வேண்டியதை அடைகின்றவன் பெரிய பாக்கியவானுகின்றான். அவனே பிறவிப்பயனைப் பெற்ற பேரின்ப நிலையினன்.

உயிர் ஆளும் படியை அறிதல் ஆவது தூய சிந்தனைகளோடு நல்ல வினைகளைச் செய்து மேலான கதிகளின் அதிபதிகளாய் வருகின்ற ஆன்ம நலன்களை உணர்ந்து தெளிதல்.

உலக மையலில் இழிந்து ஒழியாமல் எவ்வழியும் உயிர்க்கு உய்தி காண்பவனே உண்மையான காட்சியாளனாய் உயர்ந்து திகழ்கின்றான். நான் என்னும் சொல்லுக்கு உரிய உண்மைப் பொருளை ஓர்ந்து உணர்ந்து அதனைப் புனிதமாகப் போற்றி வருபவன் புத்தேளுலகமும் போற்ற மகிழ்கின்றான்.

உண்மை நிலையை உணராமல் மருள் மண்டி யிருக்கும் அளவும் புன்மையும் துயரங்களும் குடி கொண்டிருக்கின்றன.

மன்னர் பலர் வந்து மாண்டு ஒழிந்தார்.

என்றது உலக வாழ்வின் நிலைமையை உன்னி உணரவந்தது.

பெரிய ஒரு தேசத்தை ஆளுகின்ற அதிபதிக்கு மன்னன் என்று பெயர். அறிவு திரு ஆற்றல் முதலிய பலவகை வன்மைகளை

மருவி நின்று மனுமுறைப்படி மன்னுயிர்களை இனிது காப்பவன் என்னும் மகிமையை அப்புனித நாமம் பொருந்தியுள்ளது.

அத்தகைய உயர் நிலையுடைய அரசர்கள் பல்லாயிரம்பேர் தோன்றிச் செல்வச் சீர்களோடு சிறந்து நின்று எல்லாரும் ஒருங்கே இறந்து போயினர். இருந்தவர் எவரும் இலர். யாவும் அழிந்து மறைவதே யாண்டும் இயல்பாயுள்ளது.

வந்துடன் வணங்கும் வானோர் மணிபுனை மகுடகோடி
தந்திரு வடிகள் ஏந்தும் தமனியப் பீடம் ஆக
இந்திர விபவம் பெற்ற இமையவர் இறைவர்ஏனும்
தந்திரு உருவம் பொன்றத் தளர்ந்தனர் அனந்தம் அன்றோ.

மக்களின் பிறவி யுள்ளும் மன்னர்தம் மன்னர் ஆகித்
திக்கெலாம் அடிப்படுத்தும் திகிரியம் செல்வர் ஏனும்
அக்குலத்து உடம்பு தோன்றஅன்றுதொட்டு இன்றுகாறும்
ஒக்க நின்றார்கள் வையத்து ஒருவரும் இல்லையன்றே. (2)

(யசோதர காவியம்)

வான் ஆண்ட இந்திரரும், மண் ஆண்ட மன்னர்களும் மாண்டு போனபடியை இவை வரைந்து காட்டியுள்ளன. இந்த அழிவு நிலைகளை இங்ஙனம் விழி தெரிய விளக்கியது தெளிவு கொண்டு உய்ய வேண்டும் என்று கருதி.

இவ் வுலகில் இருந்து என்ன பலன் கண்டீர்?

இந்தக் கேள்விக்குச் சரியாகப் பதில் சொல்ல நேர்ந்தால் பரிதாப நிலைகள் விழி எதிரே தெளிவாய்த் தோன்றும்.

யானை ஏறிச், சிவிகையூர்ந்து, மாட மாளிகைகளில் இங்கே மகிமையோடு வாழ்ந்தாலும் உயிர்க்கு உறுதி நலனை ஓர்ந்து கொள்ளாதவர் துயர்க்கே நிலையமாய்த் தாழ்ந்து ஒழிகின்றார். ஒழிவு நிலையை உணர்ந்து உயர் நலம் உறுக

---

426. செத்துநிதம் பாடையிலே செல்வாரைக் கண்டுமே
ஒத்துணர்ந்து சற்றேனும் ஓராமல்—இத்தரையை
என்றும் நிலையாக எண்ணி இடையிழிந்து
பொன்றுகின்றார் அந்தோ பொரிந்து. (சு)

இ—ள்

செத்துப் போவாரை நாளும் நேரே கண்டும் நலம் ஒன்றும்

காணுமல் இவ் வுலகை நிலை என்று எண்ணி அனைவரும் புலையாய்ப் பொன்றி ஒழிகின்றார் என்பதாம்

பொரிதல்=நிலை குலைந்து சிதைதல். பொன்றுதல்=அழிதல்.

வாழ்வு அநித்தியமானது; விரைவில் அழிவது; என நூல்கள் உணர்த்தி வருகின்றன. அந்தச் சுருதி மொழிகளை உணராது போயினும் அழிவு நிலைகளை நேரே கண் எதிரே கண்டிருந்தும் யாதொரு உறுதி நலமும் பேணுமல் வீணே அலைவது விளிவான அவ நிலையாம் என இது தெளிவாக உணர்த்துகின்றது.

பாடை=செத்த பிணத்தை எடுத்துச் செல்லும் தடுக்கு.

உயிர் நீங்கியவுடன் உடல் சவம் எனப்பட்டுப் புறங்காட்டுக்கு ஒதுக்கப்படுகின்றது. மன்னர் மன்னவராய் மாண்புற்றிருந்தவரும் மூச்சு நின்றதும் பிணம் என்று இழிந்து படுதலால் வாழ்வின் முடிவினை அது படியறியக் காட்டியருள்கின்றது.

நிலைமை தெரியாமல் நெஞ்சம் களித்துத் திரிவார்க்கு இந்த அழிவுக் காட்சியை விழி காண விளக்கின் ஓரளவு தெளிவடைந்து பேரின்ப நிலையை நாடுவர் என்று கருதி அநித்திய நிலைகளைப் பல வகையிலும் மேலோர் அறிவுறுத்தி வருகின்றனர்.

இன்னம் பிறக்க இசைவையோ நெஞ்சமே!
மன்னர் இவர்என்று வாழ்ந்தவரை—முன்னம்
எரிந்தகட்டை மீதே இணைக்கோ வணத்தை
உரிந்துருட்டிப் போட்டது கண்டு. (1)

மேலும் இருக்க விரும்பினையே வெள்விடையோன்
சீலம் அறிந்திலையே சிந்தையே—கால்கைக்குக்
கொட்டையிட்டு மெத்தையிட்டுக் குத்திமொத்தப்பட்டவுடல்
கட்டையிட்டுச் சுட்டுவிடக் கண்டு, (பட்டினத்தார்)

தம் உள்ளத்தை நோக்கிப் பட்டினத்து அடிகள் இப்படிப் பாடியிருக்கிறார் அந்த ஞானத் துறவியின் வாக்குகள் ஞாலத்தில் எல்லார் உள்ளங்களிலும் எதிரொலி செய்கின்றன.

மனித வாழ்வின் இறுதி நிலையை நினைந்து கொள்வது உறுதி நலனைக் கருதி ஒழுக உதவி புரிகின்றது அவ்வாறு நினையாது போவது கொடிய மடமை ஆகின்றது

நச்சுப் பொய்கையில் தருமரை நோக்கி எச்சதேவன் பல கேள்விகள் கேட்டு வருங்கால், "இவ்வுலகில் மிகவும் அதிசயமானது எது?" என்று வினவினன். "இறந்து பாடையில் போவாரைக் கண் எதிரே கண்டிருந்தும், நாமும் இப்படித்தானே போவோம்" என்று மனிதர் எண்ணுமல் இருப்பதே பெரிய அதிசயம் என அவர் பதில் உரைத்தார்.

ஒத்து உணர்ந்து ஓராமல் என்றது செத்து ஒழியும் நிலையைக் கருதி நின்று உறுதி நாடாமல் என்றவாறு.

பொருள்களை மிகுதியாகச் சம்பாதிக்கும் வழிகளையும், சுக போகங்களை அனுபவிக்கின்ற முறைகளையும், துறைகளையும் உரையாமல், "நீ செத்துத் தொலைவாய்! பாடையிலே போவாய்!" என இப்படி இழவுக் காட்சிகளை எடுத்துக் காட்டுவது அச்சத்தை ஊட்டி அயர்ச்சியை நீட்டி நாட்டின முன்னேற்றத்தைத் தடைப்படுத்தும்; மக்கள் உள்ளம் தளர்ந்து ஊக்கம் குன்றி வாழ்க்கையில் நோக்கம் மாறுவர் என்று சிலர் சொல்லநேர்வர்.

பொருள் ஈட்டங்களிலும், பொறி நுகர்ச்சிகளிலும் எல்லாரும் யாண்டும் வெறி கொண்டு திரிகின்றனர்; அவர்க்கு யாரும் யாதும் போதிக்க வேண்டியதேயில்லை. மையல் மீதூர்ந்த அந்த வெய்ய வழிகளிலிருந்து சிறிது திரும்பி நோக்கி மெய்யாக உய்யும் வழியை நாடவே நிலையாமையை நூல்கள் நினைவுறுத்தி வருகின்றன நினைப்பில் ஆக்கமும், மறப்பில் கேடும் மருவியுள்ளன.

இறபபு எனும் மெய்ம்மையை இம்மை யாவர்க்கும்
மறப்புஎனும் அதனின்மேல் கேடு மற்று உண்டோ?
(இராமாயணம், அயோத்தி, மந்திர, 21)

இறந்து போவோம் என்பதை மறந்து நிற்பதை விட மனிதனுக்கு வேறு கேடு இல்லை என இது உரைத்துள்ளது. கருத்து என்ன? இறப்பின் நினைவு பிறப்பினை நீக்குதற்குப் பெருந்துணை புரிகின்றது. ஆகவே அது இங்ஙனம் பேச வந்தது.

இருங்கடல் உடுத்தஇப் பெருங்கண் மாநிலம்
உடையிலை நடுவணது இடைபிறர்க்கு இன்றித்
தாமே ஆண்ட ஏமங் காவலர்
இடுதிரை மணலினும் பலரே; சுடுபிணக்
காடுபதி யாகப் போகித் தத்தம்

நாடு பிறர்கொளச் சென்று மாய்ந்தனரே
அதனால், நீயும் கேண்மதி அத்தை வீயாது
உடம்பொடு நின்ற உயிரும் இல்லை;
மடங்கல் உண்மை மாயமோ? அன்றே;
கள்ளில் ஏய்ந்த முள்ளியம் புறங்காட்டு
வெள்ளில் போகிய வியலுள் ஆங்கண்
உப்பிலாஅ அவிப் புழுக்கல்
கைக்கொண்டு பிறக்கு நோக்காது
இழிபிறப்பினோன் ஈயப் பெற்று
நிலம்கலன் ஆக விலங்குபலி மிசையும்
இன்னா வைகல் வாரா முன்னே
செய்ந்நீ முன்னிய வினையே
முந்நீர் வரைப்பகம் முழுதுடன் துறந்தே. (புறம், 363)

கடல் சூழ்ந்த இவ்வுலகமுழுவதையும் தமக்கே தனியுரிமையாக் கொண்டு ஆண்ட அரசர்கள் பலர் மாண்டு சுடுகாடு அடைந்தனர்; உயிரோடு இருந்தவர் ஒருவரும் இலர்; கள்ளிகள் அடர்ந்த இடுகாட்டில் பாடைகள் அயலே கவிழ்ந்து கிடக்கக் கட்டையில் வைத்து வாய்க்கரிசி இட்டுச் சுட்டு எரித்துச் சுடு சாம்பலாக்கும் காலம் வரும் முன்னே உன் உயிர்க்கு நல்ல உறுதி நலனைச் செய்து கொள்ளுக என ஓர் அரசனை நோக்கி சிறுவெண் தேரையார் என்னும் பெரியார் இவ்வாறு கூறியிருக்கிறார்.

மடங்கல்=யமன். வெள்ளில்=பாடை. இன்னாவைகல்= அழிவு நாள். இன்னா வைகல் எய்து முன் இனிய நலனை எய்துக.

சாவு நேரு முன்னே ஆவதை அறிந்து சீவர்கள் உய்ய வேண்டும் என்று போதமுடையார் போதித்து வருகின்றனர்.

சீவகன் என்னும் மன்னன் ஏமாங்கத நாட்டை ஆண்டவன். சிறந்த மதிமான். பல கலைகளிலும் வல்லவன்; நல்ல அழகன். இவனுக்கு நாற்பத்தைந்து வயது கடந்து கொண்டிருந்த போது ஒரு நாள் மாலையில் இனிய பூஞ்சோலையில் தனியே உலாவிக் கொண்டிருந்தான். அவ்வழியே இறந்த பிணத்தைப் பாடையில் வைத்துச் சிலர் எடுத்துப் போயினர். சுடுகாட்டை அடைந்து அதனை அவர் தகனம் செய்து மீண்டதை எல்லாம் இவன் கூர்ந்து பார்த்தான். நிலையாமையை நினைந்தான். உலக வாழ்க்கையை வெறுத்தான்; தவநிலையைக் கருதினன். அரண்மனைக்கு வந்தான்;

அந்தப்புரம் புகுந்தான்; தனது அருமை மனைவியரிடம் உறுதி நலன்களை உரைத்து உய்தி நாடினன். தேவியரிடம் அன்று இவன் கூறியன அடியில் வருகின்றன.

உப்பிலிப் புழுக்கல் காட்டுள் புலைமகன் உகுப்ப வேகக்
கைப்பலி உண்டு யானும் வெள்ளில்மேல் கவிழ நீரும
மைப்பொலி கண்ணின் நீரால மனையகம மெழுகி வாழ
இப்பொருள் வேண்டு கின்றீர்; இதனை நீர் கேண்மின்! என்றான்.

கொல்சின யானை பார்க்கும் கூருகிர்த் தறுகண் ஆளி
இல்எலி பாாத்து நோககி இறப்பின்கீழ் இருத்தல் உண்டே?
பல்வினை வெள்ளம் நீந்திப் பகாஇன்பம் பருகின்அல்லால்
நல்வினை விளையுள் என்னும் நஞ்சினுட் குளித்தல் உண்டே.

ஆற்றிய மக்கள் என்னும் அருந்தவம் இலார்கள் ஆகின்
போற்றிய மணியும் பொன்னும் பின்செலா பொன்னனீரே
வேற்றுவர் என்று நில்லா விழுப்பொருள் பரவை ஞாலம
நோற்பவர்க்கு உரிய ஆகும்; நோன்மினம் நீரும் என்றான். (3)

(சீவக சிந்தாமணி, முத்தி இலம்பகம்)

இந்தப் பாசுரங்களில் பதிந்துள்ள கருத்துக்களைக் கருதி யுணரவேண்டும் ஒரு முடிமன்னனுடைய எண்ணங்கள் படியறிய வந்துள்ளன. "நான் சுடுகாட்டில் பாடையில் கவிழ்ந்து விழ, நீங்கள் அரண்மனையிலிருந்து அழ அமைந்த வாழ்வு இது. இதனை நம்பி மோசம் போகலாகாது. ஆளி மதயானையைத் தின்னக் கருதுமேயன்றி எலியை விரும்பாது; மேலோர் பேரின்ப நிலையில் ஏறுவதன்றிச் சிற்றின்பத்தில் இழிந்து படார். எனது நல்வினையால் நேர்ந்த அரச போகங்களை நச்சி நிற்பது நஞ்சு குடிப்பது போல்வதாம்; பொறி வெறிகளை மறந்து அரிய தவ நிலையை மருவி என்றும் அழியாத அதிசய ஆனந்தத்தை அடைய விழைந்தேன்; தடையாதும் கூறாமல் நீவிரும் தவ சீலம் பேணி உயர் கதியைக் காணுங்கள்" எனத் தன் மனைவியர்பால் மன்னன் உரைத்திருக்கும் இந்த இனிய உணர்வு நலங்கள் உள்ளங்கொண்டு எல்லாரும் உரிமையுடன் சிந்திக்கத்தக்கன.

ஞானக்காட்சி தோன்றியவுடன் ஊனக்காட்சிகள் யாவும் ஈனங்களாய் இழிந்து கானல் நீராய்க் கழிந்து ஒழிந்து போகின்றன.

---

427. இம்பர் உலகெலாம் எய்தி அரசாகி
உம்பர் புகழ உறைந்தாலும்—பம்பியெழு
நீர்மேல் குமிழிபோல் நில்லாத வாழ்க்கையீது
பார்மேல் உயிர்க்குப் பயன். (எ)

இ—ள்

உலகம் முழுவதையும் தலைமையாய் அடைந்து ஏக சக்கராதிபதியாய்த் தேவர் புகழ வாழ்ந்தாலும் நீர் மேல் குமிழி போல் அவ்வாழ்வு விரைவில் அழிந்து போதலால் உயிர்க்கு உறுதியை உரிமையாக உணர்ந்து கொள்க என்பதாம்.

இது, என்றும் நிலையானதை நினைக என்கின்றது.

உலக வாழ்வில் அரச பதவி மிகவும் உயர்ந்தது; அரிய பல புண்ணியப் பேற்றால் அமைவது; அத்தகைய பெரிய வாழ்வும் அழிவுபாடுடையது ஆதலின் அழிவில்லாத நிலையைக் கருதியுணர்வது ஆன்ம வுரிமையாய் மேன்மை மருவியது.

பொன்னுலக வாசிகள் மண்ணுலக வாசிகளை யாண்டும் எளிதாக எண்ணுவது இயல்பு; அவமதிப்பாய் அங்ஙனம் கருதிப் பழகிய அவரும் வியந்து மதித்துப் புகழ்ந்து போற்ற என்றது உயர்ந்த சீர்மை நீர்மைகளை உணர்ந்து கொள்ள நின்றது.

வானம் புகழ என்றதனால் வையத்தில் அவனுடைய மதிப்பும் மாண்பும் வரம்பிடலரியன என்பது பெறப்பட்டது.

செல்வ வளங்கள் நிறைந்து சீர்மைகள் மிகுந்து அரச வாழ்வு பலவகை மாட்சிமைகளை அடைந்துள்ளமையால் நிலையாமையைத் தெளிவுறுத்த அது இங்கே காட்சிக்கு வந்தது.

கண்ணால் காண்பது, காதால் கேட்பது, மனதால் நினைப்பது என்னும் இவை காட்சி கேள்வி எண்ணம் என நின்று உணர்ச்சியை ஊட்டுகின்றன. உள்ளம் ஒளிபெற உணர்வு தெளிவுறுகின்றது. கல்வி கேள்விகள் நல்ல பயன்களை நல்கி வருதலால் அவை சீவ ஒளிகளாய் மேவியுள்ளன.

எனைத்தானும் நல்லவை கேட்க அனைத்தானும்
ஆன்ற பெருமை தரும். (குறள், 416)

என்றதனால் கேள்வியின் பயனும் நயனும் நன்கு அறியலாகும்.

'உள்ளத்தை உயர்த்தி, உணர்வை ஒளி செய்து, உயிர்க்கு உறுதி புரிவது எதுவோ அதுவே நல்ல கேள்வியாம்.

சேங்குட்டுவன் என்னும் சேர மன்னன் மறுபுல மன்னர் மேல் ஒருமுறை சீறி எழுந்து போர் செய்ய மூண்டான். உயிர்க்கு உறுதி நோக்காது எப்பொழுதும் உலக வாழ்க்கையிலேயே கலக நோக்கமாய்த் தலைமை காண விழைவது நலமாகாது என மாடலன் என்னும் மதிமான் அவனுக்கு நிலையாமையை நினைவுறுத்தினன். அவன் கூறிய உறுதி மொழிகள் அரிய பல உணர்வு நலங்களை உதவியருளின. அயலே வருகின்றன.

கடற்கடம்பு எறிந்த காவலன் ஆயினும்,
விடர்ச்சிலை பொறித்த விறலோன் ஆயினும்,
நான்மறை யாளன் செய்யுட் கொண்டு
மேனிலை உலகம் விடுத்தோன் ஆயினும்,
போற்றி மன்னுயிர் முறையிற் கொள்கெனக்
கூற்றுவரை நிறுத்த கொற்றவன் ஆயினும்,
வன்சொல் யவனர் வளநாடு ஆண்டு
பொன்படு நெடுவரை புகுந்தோன் ஆயினும்,
இகற்பெருந் தானையோ டிருஞ்செரு வோட்டி
அகப்பா எறிந்த அருந்திறல ஆயினும்,
உருகெழு மரபின் அயிரை மண்ணி
இருகடல் நீரும் ஆடினோன் ஆயினும்,
சதுக்கப் பூதரை வஞ்சியுள் தந்து
மதுக்கொள் வேள்வி வேட்டோன் ஆயினும்,
மீக்கூற் றாளர் யாவரும் இன்மையின்
யாக்கை நில்லாது என்பதை உணர்ந்தோய்!
மல்லல்மா ஞாலத்து வாழ்வோர் மருங்கில்
செல்வம் நில்லாது என்பதை வெல்போர்த்
தண்தமிழ் இகழ்ந்த ஆரிய மன்னரில்
கண்டனை அல்லையோ காவல் வேந்தே!
இளமை நில்லாது என்பதை எடுத்து ஈங்கு
உணர்வுடை மாக்கள் உரைக்கல் வேண்டா;
திருஞெமிர் அகலத்துச் செங்கோல் வேந்தே!
நரைமுதிர் யாக்கை நீயும் கண்டனை;
விண்ணோர் உருவின் எய்திய நல்லுயிர்
மண்ணோர் உருவின் மறிக்கினும் மறிக்கும்;

மக்கள் யாக்கை பூண்ட மன்னுயிர்
மிக்கோய் விலங்கின் எய்தினும் எய்தும்;
விலங்கின் யாக்கை விலங்கிய இன்னுயிர்
கலங்கஞர் நரகரைக் காணினும் காணும்;
ஆடும் கூத்தர்போல் ஆருயிர் ஒருவழிக்
கூடிய கோலத்து ஒருங்கு நின்று இயலாது;
செய்வினை வழித்தாய் உயிர்செலும் என்பது
பொய்யில் காட்சியோர் பொருளுரை ஆதலின்
அருமறை மருங்கின் அரசர்க்கு ஓங்கிய
பெருநல் வேள்வி நீ செயல் வேண்டும்;
நாளைச் செய்குவம் அறமெனில் இன்றே
கேள்வி நல்லுயிர் நீங்கினும் நீங்கும்;
இதுஎன வரைந்து வாழுநாள் உணர்ந்தோர்
முதுநீர் உலகில் முழுவதும் இல்லை. (சிலப்பதிகாரம் 28)

அரிய செயல்களைச் செய்து பெரிய கீர்த்திகள் வாய்ந்திருந்த மகுட மன்னர்கள் எல்லாரும் அழிந்து போயினர்; இளமையும் செல்வமும் என்றும் கழிந்து தொலையும் இயல்பின; நாளை வீண் ஆக்காமல் தம் உயிர்க்கு நல்லதைச் செய்து கொள்பவரே உய்தி கண்டு உவகையுறுகின்றனர் எனச் சேர வேந்தனுக்கு அந்த வேதியன் இங்ஙனம் போதித்திருக்கிறான். போதனையாய் வந்துள்ள இந்தப் பாடலில் பல சரிதங்கள் பொதிந்திருக்கின்றன. பொருள் நிலைகளை ஊன்றி உணர்ந்து கொள்க.

நீர்மேல் குமிழிபோல் நில்லாத வாழ்க்கை இது
பார்மேல் உயிர்க்குப் பயன்.

வாழ்வின் நிலைமையை ஓர் உவமையால் குறித்துக் காட்டி உறுதிநலனை உரிமையுடன் அடைய இது உந்தி வேண்டியது.

நில வாழ்க்கையை நீர்க் குமிழி என்றது விரைவில் அழியும் விளிவு கருதி. குமிழ் = உருண்டு திரண்ட வடிவம். குமிழ்ந்திருப்பது குமிழி என வந்தது. ஓர் உருவாய்த் தோன்றி சிறிது நின்று கடிது மறைதலின் நிலையற்ற வாழ்வுக்கு அது ஒப்பாயது.

நீரில் குமிழி இளமை; நிறைசெல்வம்
நீரில் சுருட்டு நெடுந்திரைகள் — நீரில்
எழுத்தாகும் யாக்கை நமரங்காள்! என்னே
வழுத்தாத தெம்பிரான் மன்று. (நீதி நெறி விளக்கம்)

நீர்க்குமிழி போன்றவுடல் நிற்கையிலே சாசுவதம
சோக்க அறியாமல் திகைடபேனே பைங்கிளியே! (1)

நீர்க்குமிழி பூணமைத்து நின்றாலும் நில்லாமெய்
பார்க்குமிடத்து இதன்மேல் பற்றறுவது எந்நாளோ? (2)

(தாயுமானவர்)

இவற்றுள் நீர்க்குமிழி வந்துள்ளமை காண்க.

"The earth hath bubbles as the water has,
And these are of them." (Macbeth 1-3)

'நீர்க்குமிழி போல இவை நிலத்தின் குமிழிகள்'' என உலகில் உலாவி மறையும் உருவத் தோற்றங்களை மேல் நாட்டுக் கவிஞரும் இவ்வாறு கூறியிருக்கிறார்.

படுமழை மொக்குளின் பல்காலும் தோன்றிக்
கெடுமிதோர் யாக்கைஎன் றெண்ணித்—தடுமாற்றம்
தீர்ப்பேம்யாம் என்றுணரும் திண்ணறி வாளரை
நேர்ப்பார்யார் நீணிலத்தின் மேல். (நாலடியார்)

நிலையற்ற வாழ்வின் நிலைமையை உணர்ந்து நிலையான நிலையை அடைந்து கொள்பவரே தலையான அதிசய நிலையினர் என்னும் இது ஈண்டு அறிய உரியது. உண்மை கண்டு உறுதி காணுக.

---

428 மின்னனவே தோன்றி மிகமாயும் இவ்வுடம்பைப்
பொன்னும் மணியும் புனைந்துமே—தன்னதெனக்
காத்தோம்பு கின்றார் கருதார் உயிர்நலனை
மூத்தோங்கி வீவார் முறை. (அ)

இ—ள்

மின்னலைப் போல் தோன்றி விரைந்து மாய்கின்ற உடல்களைப் பொன்னும் மணியும் புனைந்து போற்றுகின்றார்; உயிர்க்கு உரிய நலன்களை யாதும் உணராமல் யாவரும் அவமே மூத்து அழிவதே எங்கும் இயல்பாயுள்ளது என்பதாம்.

உடம்பு உயிர் நிலையமாயிருத்தலால் அதன்பால் இயல்பாகவே சீவர்களுக்கு அபிமானங்கள் பெருகி யுள்ளன. அரிய முத்தித் திருவை அடைதற்கு உரிய கருவியாய் அமைந்துள்ளமையால் மானிட தேகம் மிகவும் மேன்மையாக மதிக்கப் பட்டுள்ளது.

இந்த இனிய துணையைக் கொண்டு பெற வேண்டிய பேற்றைப் பெருமல் பிழைபாடுசெய்வது பேதைமையாய் முடிகின்றது. "கருவியைப் பொருள் என்று எண்ணிக் களிப்பவர் கயவர்" என்றபடி இழிப்புருமல் விழிப்புற வேண்டும்.

பெறுதற்கு அரிய அருமையும், விரைவில் அழியும் சிறுமையும் ஒருங்கே மருவியுள்ளமையால் மனித தேகம் பெற்றவர் அதனால் உற்ற பயனை உடனே அடையாவழி ஊனம் அடைய நேர்கின்றார். உரியவுயிர்க்கு இனியது புரிவது பெரியமகிமை ஆகிறது

ஆன்ம நாட்டம் உடையவர் ஞான சீலராய் மேன்மை அடைகின்றனர்; அங்ஙனம் அல்லாதவர் ஊன உடலையே ஓம்பி ஈனம் உறுகின்றனர். கருதி முயன்ற அளவு கதி விளைகின்றது.

சீவனுக்கு உறுதிநலம் நாடாதபோது அந்த வாழ்வு பாவ வழிகளில் படிந்து பாழாய் ஒழிதலால் கீழாய் இழிகின்றது.

தரும நலம் கருதாமல் பொறி வெறியராய் இங்கே புலையாடித் திரிபவர் மறுமையில் வறியராய் அங்கே மறுகி யுழலுகின்றார். அறம் படியாதவர் மறம் படிந்து மடிகின்றார்.

மறம்சுவர் மதிள்எடுத்து மறுமைக்கே வெறுமை பூண்டு
புறஞ்சுவர் ஓட்டை மாடம் புரளும்போது அறிய மாட்டீர்!
அறஞ்சுவர் ஆகி நின்ற அரங்கனார்க்கு ஆட்செய்யாதே
புறஞ்சுவர் கோலம் செய்து புள்கவ்வக் கிடக்கின்றீரே.

(திருமாலை)

ஆன்ம நலனை மறந்து தேக மோகிகளாய் நின்றவர் சாக நேர்ந்தபோது முடிவில் அடையும் பரிதாப நிலையை இப் பாசுரம் உணர்த்தியுள்ளது. புறம் சுவர் ஓட்டை மாடம் என்றது உடம்பை. உயிர்க்கு உறுதி தேடாமல் உடலோம்பி வந்தவர் தாம் கொழுக்க வளர்த்த சரீரத்தைக் கழுகும் காகமும் கவ்வித் தின்ன பாவச் சுவர்கள் சூழ்ந்த நரகச் சிறைக்குள் வீழ்ந்து நைந்து துடிப்பர் என்பதாம்.

என்றும் நிலைபான இனிய உயிர்க்கு இதம் புரிந்து கொள்ளாமல் பொன்றி ஒழியும் உடலையே போற்றிப் புனைந்து பொறி வெறியில் களித்து நிற்பவர் ஆன்ம வுரிமையை இழந்து மேன்மை யாவும் ஒழிந்து அவமே இழிந்து அழிந்து கழிகின்றார்.

"The man who sows to gratify his physical cravings will reap destruction from them." (Kirby Page)

"தன் தேக இச்சைகளை ஆவலாய் நிரப்பி வருகிற மனிதன் அழிவான பலனையே காண்கின்றான்" என அமெரிக்க ஆசிரியர் இவ்வாறு கூறியிருக்கிறார். ஆவதை அறியாமையால் அவலம் அடைகின்றார். நல்லதை விதைக்காதவர் அல்லல் விளைவையே பெறுகின்றார்.

உடம்பை ஓம்புகின்றார்; உயிர் நலனைக் கருதார்.

என்றது உலகர் நிலையை நோக்கிப் பரிந்து வந்தது.

உயர்ந்த மணி அணிகள் பூண்டு, சிறந்த ஆடைகள் புனைந்து, குளிர்ந்த சந்தனங்கள் பூசி, நறிய உணவுகள் உண்டு பொறி வெறிகள் மீறி மய்யல்களில் மயங்கி இருபாலாரும் ஒருபாலும் காணாமல் உருகி முயங்கி மருவி மகிழ்ந்து யாண்டும் மனம் களித்துத் திரிகின்றார். ஈண்டு வந்த பயனை யாதும் சிந்தனை செய்யாமல் செருக்கித் திரிவது உலக வாழ்வின் பொருக்காயுள்ளது.

தரும சிந்தனை, சத்தியவாக்கு, கருணைப்பண்பு, சாந்தசீலம், சித்தசுத்தி, தெய்வபத்தி, எவ்வுயிர்க்கும் இதம் புரிந்து ஒழுகல் முதலிய இனிய நீர்மைகள் தோய்ந்த புனித மனிதரைக் காண்பது பெரிதும் அரிதாகின்றது. நல்ல தன்மைகள் நாசம் அடைந்து பொல்லாத புன்மைகளே எங்கணும் பொங்கி நிற்கின்றன.

தெய்வ சம்பத்தான புனித இயல்புகள் உயர்கதி தருதலால் அந்த அருமைப் பண்புகளை யுடையவர் உயிரை ஓம்புகின்றவராய் உன்னத நிலையில் ஒளிர்கின்றார்.

தேக போகங்களையே அவாவி உழல்பவர் சீவ ஒளியை இழந்து விடுதலால் அவர் செத்த சவங்களோடு ஒத்து எண்ணப் படுகின்றார்.

ஒத்த தறிவான் உயிர்வாழ்வான்; மற்றையான்
செத்தாருள் வைக்கப்படும். (குறள்; 214)

இந்த அருமைத் திருமொழி இங்கே உரிமையுடன் உணரத் தக்கது. உயிர் வாழ்வார் இவர்; செத்தவர் இவர் எனத் தேவர் இதில் தெளிவாக நமக்குக் காட்டியிருக்கிறார். காட்டியுள்ள இனத்தையும், கருதியிருக்கும் மனத்தையும் நாம் கூர்ந்து காண்கிறோம்.

ஒத்தது அறிவான் என்றது சிறந்த மனிதனாய்ப் பிறந்து வந்தவன் அறிந்து செய்ய வேண்டிய கடமைகளை. தனது நிலைமைக்கு ஒத்ததை உணர்ந்து பிறவுயிர்கட்கு இதம் புரிந்து வரின் அது தன் உயிர்க்குச் சீவ ஊற்றும். ஒத்ததை அறியாதவன் இத்தகைய ஆன்ம நலனை இழந்து போதலால் அவன் செத்த சவம் என எண்ண நேர்ந்தான்.

செத்தபிணம் இடுகாடு சுடுகாடு என்று
 செப்புவர்கள் அறியாதார் சிலர் தன் நெஞ்சத்து
ஒத்ததுதாம் உணராது உண்டு உடுத்து வாழும்
 உயிரோடும் பிணம்பயில்காடு ஒழிய விட்டே.

(அஞ்ஞவதைப் பரணி)

மேலே குறித்த பொய்யா மொழியைத் தழுவி அதன் பொருளை விரித்தது இது வந்துள்ளது. ஒத்ததை உணர்ந்து உயிர்க்கு உறுதி செய்யாமல் உடலையே ஓம்பி வாழ்பவர் நடைப் பிணங்களேயாவர்; அவர் வாழும் இடம் சுடுகாடேயாம் எனக் கடுமையாகப் பழித்திருக்கிறார். இவ்வாறு இகழ்ந்து மொழிந்தது பிறவிப் பயனை இழந்து ஒழிகின்ற பிழைபாடு கருதி.

தன் ஊனையே வளர்ப்பவன் ஊனமாய் இழிந்து ஈனம் உறுகின்றான்; உயிர்க்கு உறுதி செய்பவன் ஞான சீலனாய் உயர்ந்து மேன்மை மிகுந்து மேலான இன்ப நிலையை மேவுகின்றான்.

பிறர்க்கிதம் புரிவது பெருகித் தன உயிர்க்கு
அறத்துணை அமுதமாய் அமையும ஆதலால
மறத்திறன் ஒருவிநல் மாண்பு செய்பவன்
நிறப்பெருந் தேவனாய் நிலவி நிற்பனே.

நல்ல கருமங்கள் உயிர்க்கு நலம் தருகின்றது; அவற்றைப் பழகிக் கொள்ளாமல் பாழாயுழல்வது பரிபவம் ஆகின்றது.

தெய்வத்திற்கு ஆலயம் போல் உயிர்க்கு உடல்.

உள்ளே இருக்கின்ற மூர்த்திக்குப் பூசை முதலியன யாதும் செய்யாமல் மாசுபடிய விட்டு வெளியே கோயிலைப் புதுக்கிப் பூசி வெள்ளையடித்து ஆடம்பரமா அலங்கரித்து வைத்தால் அது எவ்வளவு எள்ளத்தக்கதோ அவ்வளவு எள்ளற்பாடாம் உயிர்க்கு உறுதி நலனை நாடாமல் உடம்பை விழைந்து ஓம்பி வருதல்.

நடலை வாழ்வுகொண்டு என்செய்திர் நாணிலீர்!
சுடலை சேர்வது சொற்பிர மாணமே;
கடலின் நஞ்சமு துண்டவர் கைவிட்டால்
உடலினர் கிடந்து ஊர்முனி பண்டமே. (தேவாரம்)

காக்கை கவரில்என்? கண்டார் பழிக்கில் என்?
பாற்றுளிப் பெய்யில் என்? பல்லோர் பழிக்கில் என்?
தோற்பையுள் நின்று தொழிலறச் செய்தூட்டும்
கூத்தன் புறப்பட்டுப் போனஇக் கூட்டையே. (திருமந்திரம்)

என்பினை நரம்பிற் பின்னி உதிரம் தோய்ந்து இறைச்சிமெத்திப்
புன்புறம் தோலின்மூடி அழுக்கொடு புழுக்கள் சோரும்
ஒன்பது வாயிற்றாய ஊன்பயில் குரம்பை தன்மேல்
அன்பறு மாந்தர் கண்டாய் அறிவினல் சிறிய நீரார்.
(மேருமந்தர புராணம்)

புழுமலக் குடருள் மூழ்கிப் புலால்கமழ் வாயில்தேய்த்து
விழுமவை குழவி என்றும் விளங்கிய காளை என்றும்
பழுநிய பிறவும் ஆகிப் பலபெயர் தரித்த பொல்லாக்
குழுவினை இன்ப மாகக் கொள்வரோ குருடு தீர்ந்தார்.
(நாரத சரிதை)

பொல்லாத புலையுடலைப் புழுப்பொதிந்த போர்வைதனை
நில்லாத நீர் எழுத்தை நிகரிலிதன் திருவாக்கைக்
கல்லாதார் பொருள் எனவே காண்பதனைக் கலந்தறிந்து
நல்லார்கள் பொருள் ஆக ஒருகணமும் நாடாரே.
(சிவதருமோத்தரம்)

தேகியை மறந்து தேக போகிகளாய் மோகித்துள்ளவர் இவ்வாறு இகழப்பட்டுள்ளனர். தன் இன்னுயிர்க்கு நன்மை காணுதவர் ஈனம் உடையராய் இழிந்து படுகின்றார்.

உயிர் உரிமை தெரிந்த போது உடல் சுமையாய்த் தோன்றுகின்றது. உண்மை தோன்றவே புன்மையை வெறுக்கின்றார்.

விடக்கே! பருந்தின் விருந்தே! கமண்டல வீணன் இட்ட
முடக்கே! புழுவந்து உறையிடமே! நலம் முற்றுமிலாச்
சடக்கே! கருவி தளர்ந்து விட்டால் பெற்றதாயும் தொடாத்
தொடக்கே! உனைச் சுமந்தேன் நின்னின் ஏது சுகம் எனக்கே?

தம் உடம்பை நோக்கிப் பட்டினத்தார் இப்படிப் பேசி

யிருக்கிறார். உரையில் உள்ள உண்மைகளும் உருக்கங்களும் உறுதி நலங்களும் ஊன்றி உணர வுரியன. மெய்யுணர்வுடைய ஞானிகள் பொய்யைப் புறம் தள்ளி உய்தி நிலை காண்கின்றார்.

---

429. தந்தைதாய் மக்கள் தமர்தாரம் என்றுறவாய்
வந்து மகிழ்ந்து வளர்ந்தவர்—முந்தவே
சென்று மறைகின்றார் செல்லவுநீ நிற்கின்றாய்
நின்றபயன் என்னோ நினை. (௯)

இ—ள்

தாய் தந்தை மனைவி மக்கள் ஒக்கல் என உற்றவரானவரும் ஒழிந்து போகின்றார்; நீயும் அழிந்து கொண்டிருக்கிறாய்; ஆன பயனை விரைந்து உணர்ந்து கொள்க என்பதாம்.

கண்டுவந்த அனுபவ நிலைகளைக் கருதியுணர்ந்து உறுதி நலம் தெளிந்து உய்தி பெறுக என இஃது உணர்த்துகின்றது.

மனித வாழ்வு அதி விசித்திரமானது; மையல் மிகமலிந்தது; பாச நேசங்களும் பந்த வாசனைகளும் பல படியாகப் படிந்துள்ளது. புன்மைகளும் பொய்ம்மைகளும் நீண்டு நிறைந்துள்ளமையால் இதிலிருந்து உண்மை தெளிந்து நன்மை காண்பது யாண்டும் அரிதாய் நீண்டு நிற்கின்றது. இந்த மாயச் சூழல்களினின்று தப்பி உய்பவர் சீவன் முத்தர் எனச் செப்பநின்றார். பிறவித் துயர்நீங்கிப் பேரின்ப நிலை அடைவதே சிவயோகியருடைய ஆவலாயிருக்கின்றது; இருந்தும் வழி தெரிந்து விழியாமல் அழி துயரங்களிலேயே சுழன்று அவலம் அடைந்து வருகின்றன.

சீவன் தனது பரிபூரணமான தேவ சம்பத்தை அடையும்பொழுது அதன் தேக சம்பந்தங்கள் யாவும் மாய பந்தங்களாய் மாய்ந்து போகின்றன. சொந்த நிலை தெரியவே இடையே வந்த பந்த நிலை பாழாய் மறைகின்றது.

உயிர் உடலை மருவி உலகில் உருவாய் வரவே அது பலவகைத் தொடர்புகளோடு படர்ந்து நிற்க நேர்ந்தது. தாயும் தந்தையும் தேகம் தந்தவர்கள் ஆதலால் அவர் மூல காரணராய் முதல் உரிமை ஆயினர். அதன்பின் மனைவி மக்கள் ஒக்கல் முதலாயினோர் பக்கம் தொடர்ந்து படர்ந்து நின்றனர்.

இந்த உறவு நிலைகள் எல்லாம் ஓரளவு துணையாய்த் தோன்றி விரைவில் மறைந்து போதலால் அந்நிலைமையை நினைந்து தெளிவது தலைமையான தத்துவ ஞானம் ஆயது.

சென்று மறைகின்றார்; செல்லவும் நீ நிற்கின்றாய்.

என்றது சென்றதையும் செல்வதையும் நன்கு காண வந்தது. மிகவும் உரிமையாளராய் மருவி நின்ற அருமைத் தந்தை தாயரும் அகன்று போயினர்; நீயும் அழிவில் போய்க் கொண்டிருக்கின்றாய்; முடிந்து போகுமுன் முடிவான பயனை அடைந்து கொள்க என இது அறிவுறுத்தியது.

கண் எதிரே கழிந்து படுவதைக் கண்டும் தெளிந்து கொள்ளாமல் இருப்பது தீய மடமையாம் ஆதலால் தாய் தந்தையர் மாய்ந்து ஒழிவதை எனும் ஓர்ந்து உய்க என உணர்த்தநேர்ந்தது.

தந்தையார் போயினார்; தாயரும் போயினார்; தாமும் போவார்;
கொந்தவேல் கொண்டொரு கூற்றத்தார் பார்க்கிறார் கொண்டு போவார்;
எந்தநாள் வாழ்வதற் கேமனம் வைத்தியால் ஏழை நெஞ்சே!
அந்தண் ஆரூர் தொழுது உய்யலாம் மையல் கொண்டஞ்சல் நெஞ்சே!
(சம்பந்தர்)

தந்தையாரும் தவ்வையாரும் எள் தனைச் சார்வுஆகார்;
வந்து நம்மோடு உள் அளாவி வானநெறி காட்டும்
சிந்தையீரே! நெஞ்சினீரே! திகழ்மதியம் சூடும்
எந்தை கோயில் எதிர்கொள் பாடி என்பதடைவோமே. (சுந்தரர்)

தந்தையார், தாயார், உடன் பிறந்தார்,
தாரமார் புத்திரரார், தாம்தாமாரே?
வந்தவா றெங்ஙனே போமாறு ஏதோ
மாயமாம் இதற்கு ஏதும் மகிழவேண்டாம்;
சிந்தையீர்! உமக்கு ஒன்று சொல்லக் கேண்மின்
திகழ்மதியும் வாளரவும் திளைக்கும் சென்னி
எந்தையார் திருநாமம் நமச்சிவாய
என்றுஎழுவார்க்கு இருவிசும்பில் இருக்கலாமே.
(அப்பர்)

தந்தைதாய் தமர்தாரம் மகவென்னும் இவைஎலாம்
சந்தையிற் கூட்டம்; இதிலோ

சந்தேகம் இல்லை; மணிமாட மாளிகை மேடை
சதுரங்க சேனையுடனே
வந்ததோர் வாழ்வும்ஓர் இந்திரசாலக் கோலம்;
வஞ்சனை பொறாமை லோபம்
வைத்தமனமாம் கிருமி சேர்ந்தமல பாண்டமோ
வாஞ்சனை யிலாத கனவே;
எந்தநாளும்சரி எனத் தேர்ந்து தேர்ந்துமே
இரவுபகல் இல்லா இடத்து
ஏகமாய் நின்றநின் அருள்வெள்ள மீதிலே
யான் என்பது அறவும் மூழ்கிச்
சிந்தைதான் தெளியாது சுழலும்வகை என்கொலோ
தேடரிய சத்தாகி என்
சித்தமிசை குடிகொண்ட அறிவான தெய்வமே
தேசோ மயானந்தமே. (தாயுமானவர்)

தந்தைதாய் மக்கள்மனை தாரம்எனும் சங்கடத்தில்
சிந்தைதான் சென்று தியங்கி மயங்காமே
உந்தை என்போர் இல்லாத ஒற்றியப்பா உன் அடிக்கீழ்
முந்தையோர் போன்று முயங்கி மகிழ்வேனோ? (இராமலிங்கர்)

பெற்ற தாய் தந்தையர், உற்ற உறவினங்கள், உரிய செல்வங்கள், யாவும் அயலே அகன்று ஒழிவன; இவற்றுள் மயலாய் மயங்காமல் உயர் நிலை அடைபவரே உயிர்க்கு உறுதி புரிபவர் என ஞான சம்பந்தர் முதலான பெரியோர்கள் அருளியுள்ளனர். தம் நெஞ்சை முன்னிலைப் படுத்தியும், கடவுளை நோக்கியும் அவர் பாடியுள்ள பாசுரங்கள் நாடி அறிய வுரியன.

தெய்வ பத்தியும் சிவசத்தியும் ஞான சித்திகளாயுள்ளன.

சந்தையில் வந்து கூடிய கூட்டம்போல் தந்தைதாய் முதலிய பந்து சனங்கள் முந்துறப் பிரிந்து போதலால் அந்தப் போக்கை நோக்கி ஏனும் தன் உயிர்க்கு ஒருவன் ஆக்கம் காண வேண்டும்.

கேளாதே வந்து கிளைகளாய் இல்தோன்றி
வாளாதே போவரால் மாந்தர்கள்—வாளாதே
சேக்கை மரன்ஒழியச் சேணீங்கு புட்போல
யாக்கை தமர்க்கொழிய நீத்து. (நாலடியார்)

கூட்டை விட்டுப் பறவை பறந்து போதல்போல் குடியிருந்த வீட்டை விட்டுக் கிளைகள் இறந்து போகின்றார் என அழிவு நிலையை இது தெளிவாகக் காட்டி உறுதிநலனை ஊட்டி யுளது.

முன்னதாகப் போனவர் போலவே நீயும் போக நிற்கின்றாய்; பொன்றி நீங்குமுன் நன்று காணுக.

நின்ற பயன் என்னே? நினை.

உரியவராய் நின்றவர் ஒழிந்து போவதை விழி எதிரே கண்டு நிற்கின்ற நீ கைக்கொண்ட பயன் யாது? அதனைக் கருதி யுணர்ந்து உறுதி தெளிந்து உய்தி பெறுக என்பது கருத்து.

---

430. காலம் உலகநிலை கண்டிருக்கும் நீயவற்றின்
மூலம் அறிந்து முடிவுணர்ந்து—சீலம்கைக்
கொண்டு பரமன் குணநிலையைச் சிந்தித்துக்
கண்டு மகிழ்க கதி. (ம)

இ—ள்

கால வீழ்வுகளையும் உலக வாழ்வுகளையும் கண்டிருக்கின்ற நீ மூல நிலைகளை உணர்ந்து சீலம் உடையனாய் இறைவனை எண்ணி உயர்ப்தம் பெறுக என்பதாம்.

அறிவு நலங்கள் பல மனிதனிடம் அமைந்திருக்கின்றன. அவை பொய்யறிவு, மெய்யறிவு என இருவகை நிலையின. முன்னது நிலையில்லாத உலகப் பொருள்களைப் பற்றி உழல்கின்றது; பின்னது நிலையான ஆன்ம நலனைத் தெளிந்து மேன்மை மிகுந்து திகழ்கின்றது. அது பிறவித் துயரைத் தரும்; இது பேரின்ப நிலையை அருளும். கண்ட காட்சிகளிலிருந்து கதிநலம் காண்பது அதிசய ஞானமாய்த் துதி செய்யப் பெறுகின்றது.

காலநிலை கண்டு என்றது பகல் இரவாய்க் கழிந்து படுகின்ற நாள்களை வழிவகையாய்த் தெளிந்து வருதலை.

பொழுது போவது பழுது போகாதபடி பார்த்துக் கொள்வது விழுமிய காட்சியாம். காலப் போக்கையும் உலகப் போக்கையும் நேரே கண்டு வருகின்ற மனிதன் தன்னுடைய போக்கைக் கருதி நோக்கி உறுதி நலங்களை ஓர்ந்து ஒழுக வேண்டும்; அங்ஙனம் ஒழுகானாயின் வாழ்வில் தாழ்வுகள் பல நேரும். சிந்தனை

செய்து சீருடன் வாழும் அளவே ஒருவன் எந்த நிலையிலும் உயர்ந்து விளங்குகின்றான்.

மனிதனுடைய விளக்கம் எல்லாம் மதிநலத்திலும் புனித ஒழுக்கத்திலும் பொருந்தியுள்ளன. நல்ல அனுபவத்தில் பழகி வரும் அறிவே எல்லா வழிகளிலும் ஒளி மிகுந்து இன்பம் சுரந்து வருகின்றது. மெய்யை அறிவது உய்தி உறுவதாம்.

மூலம் அறிந்து முடிவு உணர்ந்து.

இந்த அறிவும் உணர்வும் அதிசய நலங்களை அருளுகின்றன. மூல காரணங்களையும் முடிவுகளையும் கூர்ந்து ஓர்ந்து கொள்ளுவது மேலான தத்துவக் காட்சியாய்ச் சிறந்து திகழ்கின்றது.

வெளி மயக்குகளில் விழிமயங்காமல் உண்மையைத் தெளிவது உயர் கதி ஆய் ஒளி புரிகின்றது. மெய்யுணர்வுடையார் பொய்யுலக நிலைகளைத் தெளிந்து கொள்ளுதலால் வைய மையல்களில் விழாமல் உய்தி பெறுகின்றனர்.

நாகநாதன் என்பவன் பெரிய செல்வன்; நல்ல அறிவாளி; எல்லார்க்கும் இனிய உபகாரி. ஒருநாள் சதானந்தர் என்னும் துறவியை அவன் தனியே கண்டான். தொழுது வணங்கினான். அவனது பண்புடைமையை நோக்கி அவர் பல அறிவுரைகள் கூறினர். நல்ல கல்விமான் ஆதலால் அவனும் சில உறுதிநலங்களை வினவி இறுதியில் துறவு நிலையைப் பற்றிப் பேசினான். "அன்புரிமையான மனைவி மக்களைத் துணைபுற விட்டுத் தன்னலங்கருதி ஒருவன் துறந்து போவது அவ்வளவு சிறந்ததாகத் தோன்றவில்லை.

"ஊரும் சதம் அல்ல; உற்றார் சதம் அல்ல; உற்றுப் பெற்ற
பேரும் சதம் அல்ல; பெண்டிர் சதம் அல்ல; பிள்ளைகளும்
சீரும் சதம் அல்ல; செல்வம் சதம் அல்ல; தேசத்திலே
யாரும் சதம் அல்ல; நின்தாள் சதம் கச்சி ஏகம்பனே!"

என இப்படி உறவினங்களை எல்லாம் எள்ளித் தள்ளி விட்டுப் பட்டினத்தார் துறந்து போனதுபோல் எல்லாரும் துணிந்து போதல் அரிது" என்று கூறினான்.

இதனைக் கேட்ட துறவி புன்னகை புரிந்து, "நீ சொன்னது உண்மைதான்; பரிபக்குவம் வந்தால் எல்லார்க்கும் எதுவும் எளிதாம்; மெய் நிலை தெரியின் பொய்மயல் ஒழியும்" என்றார்.

மிருந்த சுற்றத் தொடர்பில் பெரும் பற்றுடையவன் என்று அவனை அவர் தெரிந்து கொண்டார்; ஓர் உபாயம் செய்தார்; "இன்று மாலை உன் மாளிகையில் நீ இறந்து போனபடி பாசாங்கு செய்து படுத்துக் கொள்; மேலே பாடிய பாட்டின் பொருளை நேரே உனக்கு நான் காட்டுகின்றேன்" என்றார். அவன் அவ்வாறே அரவம் தீண்டியது என அரவமின்றிப் படுத்துக் கொண்டான். மாண்டு போனதாக எண்ணி மனைவி மக்கள் எல்லாரும் அலறி அழுதார். ஊரார் அனைவரும் கவிவந்து கூடி நின்றார். மாந்திரிகர் பலர் மந்திரித்துப் பார்த்தார்; முடிவாக முடிந்தே போனார் என்று முடிவு செய்து மறுகி யிருந்தார். அவ்வமையம் அத் துறவி அங்கே வந்தார் "பாம்பால் இறந்திருந்தால் என்பால் ஒரு மருந்து உளது; பிழைத்துக் கொள்வார்; கொஞ்சம் பால் கொண்டு வாருங்கள்" என்றார் பால்குடங்கள் விரைந்து வந்தன. அரைக்கால்படி பாலை ஒருகிண்ணத்தில் எடுத்துக் கொண்டு உள்ளே போய்விட்டு வெளியே வந்தார். "கடிவாயிலிருந்து இதில் விடம் வந்து விட்டது; இதனை யாராவது குடியுங்கள்; அவர் எழுந்து விடுவார்; குடித்தவன் இறந்து படுவான்" என மொழிந்து நின்றார். எல்லாரும் திகில் அடைந்து விலகினர். "இந்தச் செல்வச்சீமானுக்கு உரிமைத் துணையாய் இவ்வூரில் யாரும் இல்லையா?" என்று வருந்திச் சொல்லி விட்டு மனைவியிடம் பாலை நீட்டினார். "ஐயோ! என் பிள்ளைகளைத் தனியே விட்டு நான் எப்படிச் சாவேன்? மாமியாரிடம் கொடுங்கள்" என்று சாமியாரை நோக்கி அழுதாள். வயது சென்றவளாயிருந்தும் அக் கிழவியும் மறுத்தாள். இந்த உபகாரியைக் காப்பாற்ற இங்கு ஒரு நாதியும் இல்லையா? என்று உரைத்து விட்டு அப் பாலை அவரே குடித்தார். படுத்திருந்த அவன் விரைந்து எழுந்து அவரது காலைப் பிடித்துக் கொண்டு உலக நிலை கண்டேன்; உண்மை தெளிந்தேன் என்று உருகி உரைத்தான். எல்லாரும் வியந்து திகைத்து வெட்கமிருந்து வெருவி நின்றார். மனைவி மக்களை நோக்கி "எனது தனி நிலையை நீங்கள் இன்று இனிது உணர்த்தினீர்கள்; அந்த நன்றிக்காக இங்குள்ள செல்வங்களை யெல்லாம் உங்களுக்கு ஈடு செய்திருக்கிறேன்; யாதொரு கவலையுமின்றி யாவரும் சுகமாய் இருந்து வாழுங்கள்" என்று உவந்து கூறி உலகைத் துறந்து போனான்.

"தாய் நிலை அறிந்தேன்; தமர் நிலை தெரிந்தேன்;
தழுவி நின்று உரிமைமீக் கொண்டு
வாயமுது அருத்தி மகிழ்வுதந் திருந்த
மனைவியின் மனநிலை உணர்ந்தேன்;
சேய்நிலை கண்டேன்; சீ இனி இந்தப்
பேயுலகின் செயல் காணேன்;
போய் எனது உயிருக்கு இனியதே காணப்
புகுவன் என்று எழுந்தயல் போனான்."

போன அவனுடைய போக்கு அந்நாளில் யாவருக்கும் ஒரு புதுமையாய் இருந்தது. உலக மய்யலில் உண்மை கண்டபோது மனிதன் நன்மை காண நேர்கின்றான்.

மூலம் அறிந்தாலும், முடிவு உணர்ந்தாலும் சீலம் இல்லை ஆனால் அவன் மேலான நிலையை அடைய முடியாது ஆதலால் அதன் உரிமையை உறுதியாகத் தெரிய இறுதியில் வந்தது.

பரமன் குணநிலையைச் சிந்தித்து.

அல்லல் நீங்கி மனிதன் யாண்டும் இனியனாய் இன்பமுற வேண்டின் அவன் நல்ல தெய்வ சிந்தனை செய்து வரவேண்டும் என உய்தி நெறியை இது உணர்த்தி நின்றது.

உலகப் பொருள்கள் நிலையில்லாதன; நெறி கேடுடையன; களிப்பும் கவலையும் விளைத்து எவரையும் கெடுக்கும் இயல்பின.

பரம்பொருள் என்றும் அழியாதது; யாண்டும் இனியது; இன்ப நிலையமானது; அந்தப் பேரின்பப் பெரும் பொருளை உரிமையாகக் கருதி ஒழுகுபவன் உறுதி நலம்கண்டு அழிவில்லாத அதிசய ஆனந்தங்களை அடைந்து மகிழ்கின்றான்.

இவ் அதிகாரத்தின் தொகைக் குறிப்பு.

காட்சி என்பது உண்மையை உணர்வது.
இவ்வுலகம் ஒரு நாடக மேடை.
வெளி வேடமானது.
அழிவு மிகவுடையது.
தெளிவு இல்லாதது.
விளிவு அறியாதது.
ஒழிவு கண்டவன் உயர் கதி காண்கின்றான்.
காணாதவன் கடையாய் இழிகின்றான்.
உண்மைக் காட்சி உய்தி தருகின்றது.
தெய்வ சிந்தனை திவ்விய மகிமையாம்.

௩௯-வது காட்சி முற்றிற்று.

# நாற்பத்து நான்காம் அதிகாரம்

## வாழ்நாள்.

---

அஃதாவது ஆயுளின் அமைதி. உயிர் உடலோடு கூடி வாழுகின்ற நாள் வாழ் நாள் என வந்தது. இந்தச் சீவிய காலத்தின் அருமையைக் கருதி ஓர்ந்து சீவர்கள் உறுதிநலனை அடையவேண்டும் என உணர்த்துகின்றது. உண்மை கண்டவர் நன்மை காண்பர் என்னும் உரிமையால் காட்சியின் பின் இது வைக்கப் பட்டது.

431. வாழ்நாள் எனவுனக்கு வாய்த்துள்ள நாளினிய
ஊழ்நாள் எனவே உளந்தெளிந்து—சூழ்நாள்தான்
உள்ள பொழுதே உயிர்க்குறுதி ஓர்ந்துகொள்க
எள்ளல் இலதாம் எதிர். (க)

இ—ள்

உனக்கு ஆயுள் ஆய் அமைந்துள்ளதை இனிய அருமைநாள் ஆகத் தெளிந்து அது உள்ள பொழுதே உயிர்க்கு நல்லது செய்து கொள்க; அங்ஙனம் கொள்ளின் உயர்ந்த ஒளி உளதாம் என்க.

இது, காலத்தின் அருமையை உணர்த்துகின்றது.

உயிர் இனங்கள் பலவகையான வடிவங்களை மருவி உருவங்களாய் வெளியே தோன்றி உலகில் உலாவிவருகின்றன. என்றும் நிலையான நல்ல இனிய உயிர் பொன்றும் நிலையினவான புல்லிய அல்லல் உடலைப் பொருந்தி நிற்பது புதுமையாயுள்ளது. நேர்மாறான இந்தச்சேர்மானம் அதிசய விநோதமாயிசைந்துள்ளமையால் வினையின் விளைவு என்று தீர்மானிக்க நேர்ந்தது. உயிர்கள் முன்னம் பண்ணிய புண்ணிய பாவங்களுக்கு ஏற்ப உடல்களை எடுத்து ஈண்டு நண்ணியுள்ளன. கருமங்கள் மருமங்களாய்க்கனித்து நிற்கின்றன. நிலைமையை ஓர்ந்து தலைமை காணுதல் நலமாம்.

தாம் செய்த வினைப் பயன்களை அனுபவிக்க அமைந்திருத்தலால் தேகங்கள் வினைப்போகங்கள் என வந்தன. கருதி வந்த காரியம் முடிந்தவுடன் அவை மடிந்து போகின்றன.

இங்ஙனம் நேர்ந்துள்ள உடலோடு உயிர் ஒன்றி வாழும் நாள் வாழ் நாள் என வாய்ந்தது. ஆயுள் ஆயுகம் எனவும் பேர்கள்

அமைந்தன. உற்றபெயர்கள் உண்மையை உணர்த்தி நிற்கின்றன. உயிர் வாழ்வுக்கு உரிமையாக ஆகியுள்ள காலம் ஆயுள் எனக.

ஆயுகம் ஆயுள் வாழ்நாள் என்ப. (பிங்கலந்தை)

சீவிய காலத்தின் நிலைமையை இந் நாமங்கள் வரைந்து காட்டியுள்ளன. காலம் யாதொரு எல்லையும் இல்லாதது. ஆதியும் அந்தமும் இல்லாத அதிலிருந்து தனக்குச் சொந்தமாக வரைந்து கொண்டு வந்துள்ள நாள் மிகவும் அருமையுடையது. அதனை உரிமையாகப் பயன்படுத்துவோரே உயர் நிலையாளராய் ஒளி மிகப் பெறுகின்றார். கணமும் மணமாக் கழிப்பது கதி மணப்பதாம்.

வாழ்நாள் இனிய ஊழ்நாள்.

என்றது அதன் நீர்மையும் சீர்மையும் நினைந்து கொள்ள வந்தது. தனக்கு ஆயுளாக அமைந்துள்ள காலப் பகுதி போல் மேலான உரிமைப்பொருள் ஒருமனிதனுக்கு வேறுயாதும் இல்லை.

சீவிய சாரமாய் மருவி யுள்ளமையால் அது ஒரு தெய்வக் கொடையாய்க் கருத நின்றது. ஊழ்=முறை, விதி.

முன்னமே செய்த வினையின் அளவே வாழ்நாள் மன்னியுளது.

"வினையின் வந்தது; வினைக்கு விளைவு ஆயது."

என மனித தேகத்தைக் குறித்து இவ்வாறு கூலவாணிகன் சாத்தனார் உரைத்திருக்கிறார். கன்ம வசத்தால் அமைந்தது; மேலும் பல சிந்தனைகளையும் செயல்களையும் புரிந்து நல்வினை தீவினைகளை உயிர் விளைத்துக் கொள்ளுவதற்கு இந்த உடல் இடனாய் நிற்றலால் வினைக்கு விளைவாயது என நிலைமையை விளக்கினார்.

மதிநலம் மிகுந்து உயர் கதி காண உயிர்க்கு இனிய துணையாய் இசைந்திருத்தலால் மனித வுடல் மகிப்பு மிக வாய்ந்தது. உயர்ந்த பயனை அடைய நேர்ந்துள்ள இந்தக் கூட்டுறவு அதி விசித்திரமானது. இன்ன பொழுதில், இன்ன இடத்தில், இன்ன நிலையில் இது பின்னம் அடையும் என்று யாரும் முன்னுற எண்ணி யறிய முடியாது. மின்னல் போல் மறையும் என்று முன்னோர் இதனை உன்னி யுரைத்துள்ளனர்.

மின்னின் நிலையில
மன்னுயிர் ஆக்கைகள்;

என்னுமிடத்து இறை
உன்னுமின் நீரே. (திருவாய்மொழி)

தேகம் விரைவில் ஒழியும் இயல்பினது; அதன்மேல் கொண்டுள்ள மோகம் நீங்கி இறைவனை நினைந்து உய்யுங்கள் என நம்மாழ்வார் இங்ஙனம் உறுதிநலனை உரிமையுடன் உணர்த்தியிருக்கிறார். வாழ்வின் உண்மை நிலையைக் கண்டவர் உய்திகாண விரைகின்றார்.

கையில் அமைந்த கருவியைக் கொண்டு எய்த உரியதை விரைந்து அடைந்து கொள்பவர் பிறந்த பயனைப் பெற்றவராய் உயர்ந்து திகழ்கின்றார். உரிய துணையைப் பருவம் கண்டு பயன் படுத்தாதவர் அரிய பயனை இழந்து அவலம் அடைய நேர்கின்றார். எதையும் எதிர் அறிந்து பேணுகின்றவர் இனிய பலன் காணுகின்றார். அங்ஙனம் பேணாதவர் வீணாய் அழிகின்றார்.

வருமுன்னர்க் காவாதான் வாழ்க்கை எரிமுன்னர்
வைத்தூறு போலக் கெடும். (குறள், 435)

காலம் கருதிக் காவாவழி வாழ்வு பாழாம்எனத் தேவர் இவ்வாறு அருளியுள்ளார். முன்அறிந்து காப்பது நன்மை ஆகின்றது.

உள்ள பொழுதே உயிர்க்கு உறுதி ஓர்ந்து கொள்க.

ஒரு மனிதனுக்கு ஆயுளாய் அமைந்துள்ள காலம் நாளும் கழிந்து கொண்டே இருக்கின்றது. அக் கழிவு முடிவில் உயிர் அழிவாய் முடிதலால் அங்ஙனம் முடிவு நேருமுன் முடிவான பயனைக் கடிது காணுவது கதி விவேகம் ஆயது.

உயிர்க்கு உறுதி என்றது துயர்க்கு நிலையமான தொடர்புகளில் தோயாமல் உயர்கதி பெறுதலை. துயரத்திலிருந்து துயரமே விளையும் ஆதலால் அதனை எவ்வழியும் அயல் ஒதுக்கி நல்ல இயல்புகளை வளர்த்து வருவது நலமாம். அந்த நன்மையுடையவர் புன்மை யாதும் காணாமல் புண்ணிய கதிகளையே காண்கின்றார்.

மனம் மொழி மெய்களைப் புனித வழிகளில் ஒழுக்கி யாண்டும் இனிய நீர்மையனாய் எவ்வுயிர்க்கும் ஒருவன் இதம் புரிந்து வரின் அது தன் உயிர்க்குத் தனியான ஓர் இன்ப நிலையமாய்த் தழைத்து வருகின்றது. தெய்வ சிந்தனையால் மனம் மகிமை பெறுகின்றது; மெய் பேசுவதால் வாக்கு மாண்பு றுகின்றது. இதமான

உபகாரங்கள் செய்து வருவதால் காயம் தூய்மையாய் மேன்மை அடைகின்றது. உள்ளம் கனிய எல்லாம் இனிமை யாகின்றன.

மூன்று கரணங்களையும் இவ்வாறு செவ்விய நிலைகளில் செலுத்தி வருபவன் எவனோ அவன் தனது வாழ்நாளைத் திவ்விய மகிமை யாக்கிய தெய்வீக மனிதன் ஆகின்றான்.

இனிய நீர்மைகள் செழுமிப் புனித நிலையில் ஒழுகி வருபவர் மனித சமுதாயத்துள் மருவி யிருப்பினும் அவர் தனியே ஒளி மிகுந்துள்ளனர். அவருடைய எண்ணம் செயல்கள் யாவும் புண்ணிய மணம் வீசி யாண்டும் கண்ணியம் கனிந்து திகழ்கின்றன.

"உடுப்பது சீலம்; உணவு வீட்டு அமுதம்;
உவப்பது ஞானமா மடந்தை;
கொடுப்பதும் அருளைக்; கொள்வதும் அறத்தை;
இருப்பதும அருந்தவக் குகையாம்;
விடுப்பது குற்றம்; தொடுப்பது சாந்தம்;
வெல்வதும் தம்மை; மெய்க் குரவன்
அடித்தல மலரே முடிப்பது; பிறப்பை
அறுப்பவர்க் கருந்தொழில் இவையே." (மெய்மொழி)

தமது வாழ்நாளில் பிறவியை நீக்க முயலும் பெரியோருடைய இயல்புகளை இது குறித்துள்ளது. பிறவி எவ்வழியும் துன்பங்களையுடையது ஆதலால் அது மீண்டும் நேராதபடி செய்து கொள்வதே உயிர்க்கு உண்மையான நன்மை செய்த படியாம்.

பெற்ற உடம்பும் உற்ற ஆயுளும் பெரும் பயன் அடைய வுரியன. எதை அடையின் என்றும் குன்றாத இன்பநலம் கிடைக்குமோ அதை அடைவதே அறிவுடைமையாம். அரிய பெரிய சாதனங்கள் கையில் அமைந்திருக்கும் பொழுதே உரிய பலனைப் பருவமுடன் கருதிப் பெறாமல் இருப்பது பரிபவமாய் முடியும் ஆதலால் கடிதில் ஆய்ந்து கதி நலம் காண்பது மதி நலமாகும்.

உனக்கு உரிமையாய் வாய்த்துள்ள வாழ்நாளைக் கொண்டு உயிர்க்கு உறுதியை விரைவாகச் செய்து கொள்ளுக; அங்ஙனம் கொள்ளின் அது பிறவிப்பயனைப் பெற்ற பெரிய இன்பப்பேறும்.

வாழ்நாளை வாழ்நாளாச் செய்க வழுவினோ
பாழ்நாள் உயிர்க்குப் பழி.

இதனை உள்ளம் கொண்டு உண்மை தெளிக.

432. உள்ளநாள் நாளும் ஒழிந்தோட ஓர்பயனும்
கொள்ளாது நின்று குதிக்கின்றாய்—வெள்ளமெனப்
போனநாள மீளாதே பொள்ளென்று கூற்றுவனோர்
ஆனபோ தென்னும் அறி. (உ)

இ—ள்

உனக்கு ஆயுளாக அமைந்த நாள் நிதமும் கழிந்து போதலை உணராமல் உள்ளம் களித்து நிற்கின்றாய்; வெள்ளம் போல் போனநாள் மீண்டு வாராதே; கூற்றுவன் எதிரே நீ மாண்டு போவாயே! அதனை ஓர்ந்து உறுதிநலம் தேர்ந்து கொள்க என்பதாம்.

இது, தினம் கழிவதை மனம் தெளிக என்கின்றது.

மனிதனுடைய வாழ்நாள் மிகவும் சிறுமையுடையது; ஒரு நிலையும் இல்லாதது; பல துயர்கள் மருவியது. இவ்வளவு காலம் இந்த உடலோடு இருப்போம் என்று யாரும் வரைந்து கூற முடியாதது. நாளும் விரைந்து செல்லும இயலபினது. இவ்வாறு கழிந்து ஒழிந்து போகின்ற நிலையினை மனிதன் சிறிது உணர்ந்தாலும் உள்ளம் பெரிதும கலங்குவான். தினமும் இறந்து படுதலை உணர்ந்து பாராமையால் பிறந்த பயனை அடைந்து கொள்ளாமல் பேதையாய் ஒழிகின்றான்.

"பிறந்தவர் இறத்தல் பிழையாது என அறிந்தால்,
உறுந்துயர் ஒழிந்து இனிய உண்ண நினைவாரோ?
மறந்து விடயத்து மயல் உற்றிடுதல் வான்மீது
இறந்த வரையுச்சி விழுவோன் இடைகொள் இன்பம்."
(குறுந் திரட்டு)

இறந்து படுதலை மறந்துள்ளது மிகுந்த பரிதாபம் என்று பரிந்து கூறியுள்ள இது ஈண்டு அறிந்து கொள்ள வுரியது.

ஆகாயத்தை அளாவி நிற்கின்ற உயர்ந்த மலையுச்சியிலிருந்து கீழே உருண்டு விழுகின்ற ஒருவன் இடையே அனுபவிக்கின்ற கால அளவையே மனிதன் ஞாலத்தில் காண்கின்றான் என்றமையால் வாழ்வின் நிலையை ஓர்ந்து உணர்ந்து கொள்ளலாம்.

தனது வாழ்நாள் நிலைமையை ஒருவன் உண்மையாக உணர்வானாயின் அவன உணவு உண்ண விரும்புவானோ? நாளைக் காலை உனக்குத் தூக்கு என்று ஒருவனுக்கு மரண தண்டனை விதித்தால்

அந்த அழிவு நிலையை நினைந்து அவன் மனம் என்ன பாடு படும்? உணவு செல்லுமா? உறக்கம் வருமா? ஒவ்வொரு நிமிடமும் எவ்வளவு துயரம்! உடம்பை விட்டு உயிர் பிரிந்து போதலை நினைந்த போது உள்ளம் துடிதுடிப்பதை உரைகளால் உரைக்க முடியாது. அவ்வளவு பரிதாப நிலையில மனித வாழ்வு மருவியுள்ளது. நினைந்து பாராமையால் நெஞ்சம் கவலாது நிமிர்ந்து திரிகின்றார்.

கால பாசத்தை மனிதனது கழுத்தில் பூட்டித் தன் கையில் பிடித்துக் கொண்டு எமன் இமையாது நிற்கின்றான். அமையம் வந்தவுடன் விரைந்து இழுத்துக் கொள்கின்றான். அந்த அழிவு நேருமுன் இங்கே வந்த பயனை அடைந்து கொள்பவன் அழியாத இன்பநலனைக் காண்கின்றான். அவ்வாறு கொள்ளாதவன் துன்ப நிலைகளில் வீழ்ந்து ஓயாது சுழன்று மாள்கின்றான்.

மிதவையின் நோக்கு அமைத்துழலும் மீன்கொலைஞன்போல் கவரும்
பதம்இதுஎனப் பார்த்துழலும பாழ்ங்கூற்று உண்மையினல்எவ்
விதமும உடம்பு ஒழியும; அதன்மேல புரிவது ஒன்றும் இலை;
இதம அகிதமே உயிர்க்குத் துணையாக எய்திடுமே.

(திருப்பெருந்துறை)

உடம்பு எவ்வழியும் ஒழிந்து போம்; உயிர்க்கு உறுதிநாடி உய்க என இது உணர்த்தியுள்ளது. உவமையை நுனித்து நோக்குக. காலனைத் தூண்டில் காரனோடு ஒப்புரைத்தது பிறவிக்கடலில் கிடந்துழலும் மனித மீன்களைப் பிடித்து வரும் கொலைத் தொழில் கருதி. புலையான கொலை வாயின்மேலே மானிட வாழ்வு நிலையாயுள்ளது. நிலைமையை உணர்வது ஞானம்; உணராது அழிவது ஈனமாம்.

மீனும் மனிதனும் சில வகையில் நிலை ஒத்துள்ளனர். அந்நிலைமைகளை நினைந்தபோது வியந்து கொள்கின்றோம். அது நீரில் வசிக்கின்றது; இவன் நிலத்தில் வாழ்கின்றான்; அது தூண்டில் இரையை விழுங்கி மாண்டு படுகின்றது; இவன் கண்ட சுவைகளை எல்லாம் விழைந்து கதி அழிகின்றான். சின்ன மீன்களை அது தின்று விடுகின்றது; தன் இனம் என்றும் பாராமல் ஏழை எளியவர்களை இரக்கம் இன்றி இவன் அழிவு செய்கிறான். "பெரிய மீனுக்குச் சின்ன மீன் இரை" என்னும் பழமொழி வலிய செல்வர் மெலியரை நலிவு செய்யும் கொடுமை கருதி வந்தது. மனித

சாதி மீன் இனத்தை ஒத்துளது என ஈனமான இழிவு நிலையை மேல் நாட்டுக் கவிஞரும் விநயமாய்க் கூறியுள்ளனர்.

"I marvel how the fishes live in the sea."

"கடலில் வாழ்கின்ற மீன்களைக் குறித்து நான் ஆச்சரியம் அடைகின்றேன்" என்று ஒரு வலைஞன் மகன் தன் தந்தையிடம் இவ்வாறு கூறினன். அதற்கு அவன் பதில் கூறியது அயலே வருகின்றது.

"Why,as men do a-land; the great ones eat up the little ones"
(Pericles, 2-1)

"சிறியவரைப் பெரியர் விழுங்கி மனிதர் பூமியில் வாழுதல் போல் கடலில் மீன்கள் வாழுகின்றன" என அவன் இங்ஙனம் கூறியிருக்கிறான். சுய நலமும் கொடுமையும் குரோதமும் பேராசையும் பெருகியுள்ளமையால் மானிட வாழ்வுகள் ஈனங்களாய் இழிந்து நிற்கின்றன. இனிவு தெரியாமல் களி மிகுத்து விளிவுறுகின்றனர்.

சிறிய வாழ்நாளையுடைய மனிதன் அதனை இனிய வழிகளில் பயன் படுத்தி இன்பநலம் காணுமல் கொடிய செயல்களைப் புரிந்து கொடுந்துன்பங்களை விளைத்துக் கொள்வது நெடிய மடமையாம்.

அரிய காலம் உள்ள பொழுதே உரிய நலனைப் பெற்றுக் கொள்ள வேண்டும். இல்லையேல் பெருங்கேடு காண நேரும்.

வெள்ளம் எனப் போன நாள் மீளாதே.

நாளின் கழிவை விழிகாண இது காட்டியது ஏகாரம் பரிதாப நிலையை அறிவுறுத்தியது. காலம் விரைந்து கழிந்து கொண்டேயிருக்கிறது. ஆற்றில் ஓடுகிற நீர் ஓட்டம் போல் இடையறாது காலம் வேகமாய்ப் போய்க் கொண்டுள்ளமையால் அதன் பயனை அடையாவழி வாழ்வு பாழாய் மனிதன் வீழ்வுறுகின்றான்.

கழிந்து போன நீர் மீளாது; இழந்து போன காலமும் எய்தாது. உயிர்க்கு உறுதியான இனிய நலன்களைச் செய்து கொள்ளவுரிய அரிய பொழுதை வறிதே இழந்து நிற்பதினும் பெரிய இழவு வேறு யாதும் இல்லை.

"Every wasted day constitutes an irretrievable loss" (Kirby)

"வீணைகக் கழியும் நாள் மீளமுடியாத ஒரு கேடாம்" என்

னும் இது ஈண்டு எண்ணத்தக்கது. இழந்த பொருளை முயன்று பெறலாம்; கழிந்த பொழுதை மீட்டும் காணமுடியாது. பொருள் நட்டம் முதலிய எந்தக் கேட்டினும் காலத்தைப் பழுது ஆக்குவது சாலவும் தீதாம். நாள் வீண் ஆயின், ஆள் வீணே.

தனக்கு உயிராதாரமாய் வாய்த்துள்ள காலத்தை யாதும் வீண் ஆக்காமல் எவன் பயன் படுத்தி வருகின்றானே அவனே சிறந்த மதிமான்; உயர்ந்த பாக்கியவான்.

பகல் இரவு எனக் காலம் கழிந்து கொண்டே யிருத்தலால் அதனை அறிவோடு பயன் ஆக்கிக் கொள்கின்றவன் பெரும் பேறு பெற்றவனாய் வியனிலையில் விளங்கி நிற்கின்றான்.

"One secret in education is to know how wisely to lose time"

(Herbert Spencer)

"காலத்தை நல்ல பயனாகக் கழிக்கத் தெரிவதே கல்வியின் உயர்ந்த நிலையாம்" என ஹெர்பெர்ட் ஸ்பென்ஸர் என்பவர் இவ்வாறு கூறியிருக்கிறார். நாளை உணர்ச்சியோடு கழிப்பவன் உயர்ச்சியடைந்து ஒளி மிகப் பெறுகின்றான்.

காலம் ஓயாது சலித்துக் கொண்டே யிருக்கின்றது. கால சக்கரம் என்னும் உருவகத்தால் அதன் கதிவேகம் அறியலாகும். விரைந்து செல்லும் இயல்பினது ஆதலால் அதனை நிறுத்த இயலாது. கழிந்து போகின்ற பொழுதை நல்ல சிந்தனைகளால் பயன் படுத்திக் கொள்ளுகின்றவன் தன் வாழ்நாளைப் புனிதம் ஆக்கிப் புண்ணிய நிலையில் உயர்த்திக் கொள்கின்றான்.

வீழ்நாள் படாமை நன்றாற்றின் அஃதொருவன்
வாழ்நாள் வழியடைக்குங் கல். (குறள். 38)

நாளை வீண் ஆக்காமல் நல்லது செய்கின்றவன் பிறவி தீர்ந்து பேரின்பம் காண்கின்றான் எனத் தேவர் இங்ஙனம் அருளியிருக்கிறார். வீழாத நாள் மேலான கதியை அருளுகின்றது.

தனக்குக் கிடைத்த ஆயுள் காலத்தை யாதும் பாழ் ஆக்காமல் புனிதமாகப் பயன் படுத்திக் கொண்டவன் புண்ணிய மூர்த்தியாய் உயர்ந்து போகின்றான் ஆதலால் அவன் மீண்டு ஒரு ஊன உடலை எடுத்து மானுட வாழ்வில் மருவான் என்க. மறுபடியும்

உடலோடு கூடி வாழும் நாளைச் செய்து கொள்ளாமையே வாழ்நாளின் தலையாய பயனும். பிறவா நெறியைப் பெறுவதே பிறவிப் பேறும். வாழ்நாள் வழி கொடிய துயரங்களை யுடையது ஆதலின் அதனை அடை என்றார்.

ஒருபால் திருத்த ஒருபால் கிழியும்
பெருவாழ்க்கை முத்தாடை கொண்ட—திருவாளா!
வீணாள் படாமைநீ துன்னம்பெய் யேயாக
வாணாள் படுவ தறி. (அறநெறிச்சாரம்)

அல்லல் பல மிடைந்த வாழ்நாளை நல்லது செய்து கழி; பொல்லாத வழியில் பொழுதைப் போக்காதே; போக்கின் இழுதையாய் இழிந்து அழி துயரில் ஆழ்ந்து அலமந்து படுவாய்.

கூற்றுவன் நேர் ஆனபோது என்னும்?

உயிர்க்கு உறுதிநலன் ஒன்றும் கருதாமல் காலத்தை வீணே கழித்து நின்றவன் முடிவில் காணும் பரிதாப நிலையை எண்ணி யுணரும்படி இது எதிர்காட்டி நின்றது. தனக்கு வாய்த்த வாழ்நாளை நலமாக் கழித்தவன் தருமவானாய் மருவி வருதலால் எமதருமன் அவனை உவந்து போற்றி உயர்ந்த பதவியில் உய்க்கின்றான்; அல்லாதவனைக் கடுத்து நோக்கி அதோ கதியில் தள்ளி விடுகின்றான். இங்கே காலத்தை வீணாக்கழித்தவர் அங்கே காலன் எதிரே கலங்கி விழித்துக் கதி இழந்து நிற்கின்றார்.

பொழுதைப் பழுதாக்காதே; அதனைப் புகழ் புண்ணியங்களாக மாற்றி இகபரங்கள் ஆற்றி உயர் கதி யுறுக.

---

433. காலம் கழிதோறும் காலன் கடுகிநம்
மேலோடி வேகமுடன் மேவுகின்றான்—மூலம்
தெரியாமல் ஏதேதோ சிந்தித் துவந்து
வருகின்றீர் என்செய்தீர் வந்து. (௩)

இ—ள்

காலம் கழிந்து போகும் தோறும் காலன் நம்மேல் விரைந்து ஓடி வருகின்றான்; முடிவின் மூலம் தெரியாமல் நெடிய பல எண்ணி மடிகின்றீர்! அந்தோ இவ்வுலகில் வந்து என் செய்தீர்? அதனைச் சிந்தனை செய்து தெளிக என்பதாம்.

தமக்கு நேர்வதை உணராமல் மதிகேடராய் மனிதர் களித்து வாழ்வது அதிகேடாம் என இது உணர்த்துகின்றது.

மதி நலம் உடையவன் மேதை என மிளிர்கின்றான். அஃது இல்லாதவன் பேதை என இழிகின்றான். உலக நிலையிலும், கலை அறிவிலும் எவ்வளவு மேதையாயிருந்தாலும் ஆன்ம வுரிமையை இழந்து விடின் அவன் இழிந்த பேதையே ஆகின்றான்.

காட்சி, கருத்து என்னும் இருவகை நிலையிலிருந்து அறிவு பெருகி வருகிறது. கண்ணால் காண்பதும், காதால் கேட்பதும், கருதியுணர்வதும் அறிவின் பருவங்களாய் மருவி நிற்கின்றன.

மேலே வானம்; கீழே பூமி; இடையே பல வகையான சீவ கோடிகள் காணப்படுகின்றன. கண்ட இவற்றோடு அமையாமல் அண்ட கோடிகளையும் ஆதி மூலப் பொருளையும் உண்டு என்று கருதி உறுதி செய்து கொள்கின்றான். யூக விவேகங்கள் மனிதனுக்கு இவ்வாறு இனிது அமைந்திருந்தும் உண்மை நோக்கி உய்தி காண்பதில் ஊனமுற்று நிற்கின்றான். வந்த பிறவியையும் வாழ்நாள் வரவையும் யாதும் எண்ணியுணராமல் வைய மய்யலில் உழந்து வருதலால் வெய்ய துயரங்கள் விளைந்து பெருகுகின்றன. உண்மை தெரிவது நன்மை தருகின்றது.

காலம் கழிதோறும் காலன் கடுகிநம்
மேல்ஓடி வேகமுடன் மேவுகின்றான்.

என்றது நமது வாழ்வின் நிலைமையைக் கருதி உணர்ந்து உறுதி காண வந்தது. காலன் என்னும் பெயர் காலத்தைக் கவனித்து நிற்பவன் என்ற ஏதுவான் நேர்ந்தது. குறித்த காலத்துக்கு மேல் யாரையும் ஈண்டு ஒரு கணமும் அவன் வைத்திருக்க மாட்டான். நாளின் கழிவை நமன் வரவாக் கருதுக என்றது உயிர்க்கு இனிய உய்தி நிலையை விரைவில் உறுதல் கருதி.

காலம் கழிந்து போக ஆயுள் குறைந்து வருகிறது; அவ்வரவு சாவு ஆய் முடிகின்றது; ஆகவே அம் முடிவினை உணர்ந்து உறுதி நலனைக் கடிதில் கைக்கொள்ளுவது கடமை ஆயது.

நாள் கழிவதை இனிது என்று ஏமாந்து நில்லாதே; அதனை உனது உயிரின் அழிவாக நினைந்து உய்க என நிலைவுறுத்தியது

நாள்என ஒன்றுபோல் காட்டி உயிர்ஈரும்
வாளது உணர்வார்ப் பெறின். (குறள், 334)

உன் உயிரை ஈர்கின்ற வாள் என்று நாளை நினைக என நாயனர் இதில் உணர்த்தி யிருக்கிறார். ஈர்தல் = அறுத்தல். ஞாயிறு, திங்கள் முதலிய ஏழு நாள்களும் ஈர்வாளின் கூரிய பல்லுகள். அவை ஓயாமல் மென்று தின்று கொண்டேயிருக்கின்றன. வாரம் சென்று மீள்வது நீ பொன்றி மாள்வதாம். நாளின் கழிவை உயிரின் அழிவாக ஓர்ந்து உணர்பவர் அரியர் ஆதலால் உணர்வார்ப் பெறின் என்றார். உணரின் பொழுதைப் பழுதாக்காமல் விழுமிய பயனை விரைந்து கொள்வன் என்பதாம்.

ஒரு மரத்தை அடியில் ஒருவன் வெட்டும்போது அதன் மேல் உள்ள பறவைகள் தம் குடி யிருப்புக்குக் கேடு வந்தது என்று முன்னறிவுடன் அயலே நல்ல இடம் தேடி ஓடி விடுகின்றன. காலத் தச்சன் நாள் என்னும் ஈர்வாளால் ஓயாமல் அறுத்துக்கொண்டே யிருக்கின்றான்; தன் அழிவு நிலையை யாதும் உணராமல் மனிதன் மனம் களித்துள்ளது பெரிய மதி மயக்கமேயாம்.

எறிந்திடு மரத்தின் வாழும் இருஞ்சிறைப் பறவை அப்பால்
பறந்திட நினையா தாகின் பயக்கும்ஓர் நன்மை உண்டோ?
குறைந்துநாள் என்னும் கூர்வாள் அரிதரக் குன்றும் ஆக்கை
உறைந்துயர் நெறியின் எட்டா உயிர்க்கு நன்கு உறுங்கொல் அம்மா!

மானிட யாக்கை என்னும் மருவரும் பஃறி பெற்றும்
ஊனமில் குரவன் சொல்லாம் ஓடம் உய்ப்பவனோடு எம்சீர்
ஆனதோர் அனுகூலக்கால் அணுகவும் பிறவி வேலை
தான் ஒழிதர எண்ணுதான் தன்னையே கொல்வன் அன்றே.

(பாகவதம், 11-11)

உத்தவன் உன்னும் மன்னனை நோக்கிக் கண்ணன் இன்னவாறு கூறி யிருக்கிறான். பஃறி = தோணி. பிறவிக் கடலைக் கடத்தற்கு இனிய துணையான மனித தேகத்தைப் பெற்றும் உய்தி காணுமல் ஒழிவது வெய்ய பழியாம் என உள்ளம் வெதும்பியுள்ளமை உரையில் வெளியாயது. தன்னையே கொல்வன் என்றது தன் உயிர்க்கு உறுதி புரியாத ஊனம் கருதி.

காலம் கழிந்து போவது காலன் விரைந்து வருவதாம் என்றது வாழ்நாளின் நிலைமையை நினைந்து கொள்ள வந்தது.

மனிதன் நாளும் இறப்பிலேயே நடந்து கொண்டிருக்கின்றான். முடிவு நேருமுன் முடிவான பயனை அவன் அடைந்து கொள்ள வேண்டும்.

"The Spirit walkes of every day deceased.
Time flies, death urges. (Young)

"ஆவி நாளும் சாவிலேயே நடக்கின்றது; காலம் பறந்து போகின்றது; மரணம் விரைந்து வருகின்றது" என எட்வர்டு யங் என்பவர் இங்ஙனம் எழுதியிருக்கிறார்.

மெய்யறிவாளர் எவரும் காலத்தின் அருமையைக் கருதியுணர்ந்து அதனைப் பருவமதவறாமல் உறுதி செய்து கொள்ளுகின்றனர். கால பலனைப் பெறாதவர் கடையாய் இழிந்து கழிகின்றார்.

மூலம் தெரியாமல் உவந்து வருகின்றீர்

காலம் கழிவதையும் மேல் விளைவதையும் யாதும் கருதியுணராமல் மாய மோகங்களில் ஆழ்ந்து மக்கள் களித்து நிற்கும் நிலையை இது பழித்து வந்தது.

சூரியன் உதிக்கின்றான்; மறைகின்றான்; இரவு வருகின்றது; விரைவில் போகின்றது; இவ்வாறு பகல் இரவாய்த் தோன்றி வருவதில் தன் வாழ்நாள் மாய்ந்து படுவதை ஊன்றி உணராமையால் உள்ளம் உவந்து துள்ளித் திரிகின்றார்; சிறிது உணரின் பெரிதும் மறுகி உறுதி நலனை நாடி உய்தி பெறுவர்.

ஏது ஏதோ சிந்தித்து என்றது யாதொரு பயனும் இல்லாமல் பாழான எண்ணங்களை வீணாக எண்ணி விளிந்து படுதலை. உயிர் நிலையமான நாள் பழுதே கழிந்து ஒழிவதை நினைந்து கவலாமல் உவந்து வருவது முழுமூடமான இழி மடமையாம்.

நேரே எதிர்ந்து வருகிற இழவுகளை அறிந்து கொள்ளாமையால் மனங்கள் களித்து மதிகள் மருண்டு வாழ நேர்ந்தனர்.

தினங்கள் செலச் செல ஏதோ பெற்றது போல்
களிக்கும் நெஞ்சே! தினங்களோடு
கனங்கொளும் உன் ஆயுளுள் நாள் கழிவது உணராய்!
உயிர் தீர் காயம் சேரும்
வனம கடுகி வாளன்ன விளித்துன்பால
தினம நெருங்கும வணமை உன்னி
முனமகொள் அறியாமையைநீ இனங்கொள்ளாது
அறம் செய்ய முயலுவாயே. (1)

இன்று அருணோதயம் கண்டோம்; உயர்ககன
முகட்டின்மிசை இந்தப் பானு
சென்றடைய நாம் காண்பது ஐயம்; அதைக்
காணகினுமமேல்திசை யிருக்கும்
குன்றடையும் அளவுநாம் உயிர் வாழ்வது
அரிது; அதன்முன் குறுகும் கூற்றம
என்றச்சத் துடன்மனமே மறவாமல்
அறவழியின ஏகுவாயே. (நீதிநூல்) (2)

கழிந்து போகின்ற நாள்களின் நிலைகளை உளம் தெரிய விளக்கி உறுநிலையை ஓர்ந்து கொள்ளும்படி இவை உணர்த்தியுள்ளன. பொருள் உண்மைகளை நன்கு உணர்ந்து கொள்ளவேண்டும்.

என் செய்தீர் வந்து?

முன் செய்த புண்ணிய பலத்தினால் இந்த அரிய பிறவியை அடைந்து வந்திருக்கிறீர்; அங்ஙனம் வந்துள்ள நீர் இங்கே செய்து கொண்ட உய்தி நலன் என்ன? அதனை உணர்ந்து சிந்தித்து விரைந்து பயன் பெறுக என இது வேண்டி நின்றது.

காலம் சீரிய நீர்மையது; அதனை வீண் கழிக்கலாகாது.

வாழ்த்த வாயும் நினைக்க மடநெஞ்சும்
தாழ்த்தச் சென்னியும் தந்த தலைவனைச்
சூழ்த்த மாமலர் தூவித் துதியாதே
வீழ்த்தவா வினையேன் நெடுங்காலமே. (தேவாரம்)

ஒரு வில்லால் ஓங்குமுந்நீர் அடைத்துலகங்கள் உய்யச்
செருவிலே அரக்கர் கோனைச் செற்றநம் சேவகனார்
மருவிய பெரிய கோயில் மதிள்திரு அரங்கம் என்னா
கருவிலே திருவிலாதீர்! காலத்தைக் கழிக்கின்றீரே.
(திருமாலை)

தெய்வ சிந்தனையில் காலம் கழியவிடின் அது உய்தி தருவதாம் என அப்பரும், தொண்டரடிப் பொடியாழ்வாரும் இவ்வாறு குறித்திருக்கின்றனர். மனிதனாய் வந்து வாழ்ந்தவன் புனிதனை எண்ணிப் புண்ணியவானாய் உயர்ந்து போக வேண்டும் என மேலோர் உணர்த்தியுள்ளனர்.

எவ்வகையிலும் வாழ்நாளைச் செவ்விய நீர்மையில் பயன் படுத்தித் திவ்விய நிலைமையை அடைந்து கொள்ளுக.

434. எடுத்த உடம்பழியு முன்னே இவணீ
அடுத்த பயனை அடைக—விடுத்திருந்தால்
பாழாக் கழித்த பழிநாள ருய்த்துயரில்
ஆழா அழிவை அறி (௪)

இ—ள்

உடல் அழிந்து படுமுன் உயிர்க்கு உரிய பயனை அடைந்து கொள்க; அடையாயேல் பாழான பழியாளனாய் இழிந்து அழி துயரில் ஆழ்ந்து ஒழிவாய் என்பதாம்.

இது உயிர்நலன் காண்க என்கின்றது.

தேக நிலையை எதிர் அறிந்து தேகிக்கு உறுதிநலனை ஓர்ந்து கொள்ளுகிறவன் எவனோ அவனே பிறவிப் பேறு பெற்ற பெரியவன் ஆகின்றான்; அங்ஙனம் கொள்ளாதவன் உலக நிலையில் எவ்வளவு உயர்ந்தவனாயிருந்தாலும் இழிந்தவனாய்க் கழிந்தே போகின்றான். இனிய கதியை இழந்து நிற்பது கொடிய கேடாம்.

எடுத்த உடம்பு என்றது இந்தப் பிறவியில் வினைவயத்தால் மருவி வந்துள்ள மனித தேகத்தை. சரீரம் நிலையில்லாதது; அழியும் காலம் அறிய முடியாதது; ஆதலால் அது நல்ல நிலையில் உள்ளபோதே உயிர்க்கு உறுதி செய்து கொள்வது உயர் ஞானமாம். மெய்யுணர்வால் உய்தி பெறுவழி வெய்ய துயர்களாம்.

அடுத்த பயனை அடைக.

அரிய மனித உடம்பை எடுத்து வந்த ஒருவன் அதனால் அடைய உரிய உயர் பயன் யாது? எனின், வேறு ஓர் பிறவியை அடையாமையேயாம். பிறவி துன்பமுடையது; பிறவாமை இன்பமானது ஆதலின் அது வெறுக்கநேர்ந்தது; இது வேண்டநின்றது.

எவ்வளவு உயர்ந்த வாழ்வில் பிறந்திருந்தாலும் அல்லல்களும் கவலைகளும் அவலங்களுமே நிறைந்துள்ளமையால் பிறவி வேண்டாம் என்றே மெய்யுணர்வுடையார் யாவரும் யாண்டும் ஆண்டவனை நோக்கி வேண்டி நிற்கின்றனர்.

வேதநூல் பிராயம் நூறு மனிசர்தாம் புகுவரேனும்
பாதியும் உறங்கிப் போகும்; நின்றதில் பதினையாண்டு
பேதைபாலகனது ஆகும்; பிணிபசி மூப்புத் துன்பம்
ஆதலால் பிறவி வேண்டேன் அரங்கமா நகருளானே.

(திருமாலை)

பிறவியிலுள்ள அல்லல்களை எல்லாம் சுட்டிக் காட்டித் தனக்கு இனிமேல் பிறவியே வேண்டாம் என்று ஆழ்வார் இவ்வாறு சொல்லியுள்ளார். வாழ்வின் அனுபவங்கள் உணர வந்தன.

மனிதனுக்குப் பூரணமான வயது நூறு. அது முழுவதும் கிடைப்பது அரிது; கோடியில் ஒருவனுக்கும் கூடாத அது ஒருவேளை கூடினும் உறக்கம் முதலியவற்றால் முக்கால் பாகத்திற்கு மேல் வீணே ஒழிந்து போகும்; மீதமாய் எஞ்சியுள்ளது மிகவும் கொஞ்சம்; அதுவும் துன்ப மயம் என நெஞ்சம் அஞ்சியிருக்கிறார்.

மனித வாழ்வு எவ்வழியும் துயரங்கள் அடர்ந்து தொல்லைகள் தொடர்ந்திருத்தலால் யாண்டும் எள்ளி இகழ நேர்ந்தது.

"Our days begin with trouble here,
Our life is but a span,
And cruel death is always near,
So frail a thing is man." (N. E. Primer)

"நமது வாழ்நாள் துயரங்களில் தோன்றியது; உயிர்வாழ்வு மிகவும் குறுகியது; கொடிய மரணம் எப்பொழுதும் கை நீட்டியுள்ளது; மனிதனிலை மிகவும் பரிதாபமானது" என மேல்நாட்டுக் கவிஞரும் இவ்வாறு பாடியிருக்கிறார்.

ஆயுள் நாளும் கழிந்து கொண்டே இருக்கின்றது; சாவு நேருமுன் ஆவதை விரைந்து செய்து கொள்ளுவது நல்லது.

இன்றுளார் இன்றேயும் மாய்வர்; அவருடைமை
அன்றே பிறருடைமை யாயிருக்கும்—நின்ற
கருமத்தர் அல்லாத கூற்றின்கீழ் வாழ்வார்
தருமம் தலைநிற்றல் நன்று. (1)

மின்னும் இளமை உளதாம் எனமகிழ்ந்து
பின்னை அறிவென்றல் பேதைமை—தன்னைத்
துணித்தானும் தூங்காது அறம் செய்க; கூற்றம்
அணித்தாய் வருதலும் உண்டு. (அறநெறிச்சாரம்) (2)

இளமையும் நிலையாவால்; இன்பமும் நின்ற அல்ல;
வளமையும் அஃதேயால்; வைகலும் துன்பவெள்ளம்;
உளவென நினையாதே செல்கதிக்கு ஒன்றும் என்றும்
விளைநிலம் உழுவார்போல் வித்துநீர் செய்து கொண்மின்.
(வளையாபதி)

இளமையும் எழிலும் வானத்து இடுவிலின் ஈண்டைமாயும்:
வளமையும் கிளையும் வாரிப் புதியதன் வரவு போலும்
வெளியிடை விளக்கின் வீயும் ஆயுவும் என்று வீட்டுக்கு
உளபகல் ஊக்கம் செய்வர் உணர்வினல் பெரிய நீரார்,
(மேருமந்தரம்)

இவை ஈண்டு எண்ணத் தக்கன. கவிகளை ஊன்றி நோக்கிப் பொருள் நிலைகளை ஓர்ந்து கொள்ள வேண்டும். நல்ல மேதைகள் நாளின்கழிவைக் கருதியுணர்ந்து உள்ளம் இரங்கி உறுதிநலங்களை உரிமையுடன் உரைத்துள்ளனர். அவருடைய அறிவும் பண்பாடும் மறுமை நோக்கமும் உரைகளில் ஒளிர்கின்றன.

இந்த ஞாலத்தின் வாழ்வு விரைந்து கழிந்து மறைந்து போவது ஆதலால் உயிர் போகுமுன் அந்த இடத்திற்கு உயர்ந்த கருவூலத்தைச் சேர்த்து வைத்துக் கொள்ளுங்கள்; இல்லையேல் எல்லையில்லாத அல்லல்களும் இழிவுகளும் அங்கே அடைய நேர்வீர்! என நேர்வதை நெஞ்சு தெளிய மேலோர் உணர்த்தியருளி உய்தி காட்டியுள்ளார்.

ஆட்பார்த்து உழலும் அருளில்கூற்று உண்மையால்
தோட்கோப்புக் காலத்தால் கொண்டுய்ம்மின்—பீட்பிதுக்கிப்
பிள்ளையைத் தாய்அலறக் கோடலான் மற்றதன்
கள்ளம் கடைப்பிடித்தல் நன்று. (நாலடியார், 20)

காலனுடைய கொடுமையைக் கண் காணச் செய்து காலம் உள்ள பொழுதே கதி காணுங்கள் என்று இது போதித்திருக்கின்றது. மிகுந்த பிரசவ வேதனைப்பட்டு ஒருத்தி ஒரு கலைக் குழந்தையை வருந்திப் பெற்றாள்; பிறந்தவுடனே அந்தப் பிள்ளை இறந்து போயது; தாய் உள்ளம் துடித்து அலறி அழுதாள். அந்தப் பரிதாப நிலையைப் பார்த்து நின்ற புலவர் உலகலை நோக்கிப் பரிந்து பாடிய பாட்டு இது. பீள் = கரு. தோள்கோப்பு என்றது கட்டுச் சோற்றை தோளில் கோத்திருப்பது என்க.

வேற்றூருக்குப் போகின்ற ஒருவன் முன் எச்சரிக்கையாய்க் கையில் உணவு கொண்டு போனால் சென்ற இடத்தில் யாதொரு கவலையுமின்றி உண்டு மகிழ்கின்றான். இல்லையேல் பசித்துயரால் துடித்து அயர்கின்றான். இவ்வுலகை விட்டு அயலே போகின்றவர் அங்கே மறுமைக்கு உரிமையான கருமத்தை இங்கேயே கைக் கொண்டு செல்ல வேண்டும்; இல்லாவிடின் ஆண்டு அல்லலேயாம்

வேற்றுவரில்லா நுமர்ஊர்க்கே செல்லினும் வெகுண்டீர் போல
ஆற்றுணாக் கொள்ளாது அடிபுறத்து வைப்பீரே அல்லீர்போலும்
கூற்றம்கொண்டு ஓடத் தமியே கொடுநெறிக்கட் செல்லும் போழ்தின்
ஆற்றுணாக்கொள்ளீர்! அழகு அலால் அறிவு ஒன்றும் இலீரே போலும்.
(சீவக சிந்தாமணி 1550)

நல்ல உறவினர் உள்ள ஊருக்குப் போனாலும் கையில் உணவுடன் போகின்றீர்! அங்ஙனம் உணர்வுடைய நீர் யாதொரு காதியும் இல்லாத அயலிடத்துக்குப் போக நேர்ந்தபோது ஏதும் துணை கொள்ளாதிருப்பது இழி மடமையாம் என இகழ்ந்து வந்துள்ள இதன் பொருளை ஊன்றி உணர்ந்து கொள்ளுக.

மறுமைக்கு உரிய உறுதித் துணை தருமமே; அதனை விரைவில் செய்து கொள்வது நன்மையாம். காலம் அரிய பயனுடையது; அதனை வறிது கழிக்கலாகாது. நாள் செய்வது கேள் செய்யாது என்பது பழமொழி. இது விழுமிய பொருளுடையது. காலத்தை வீணாக்காமல் கருதி ஒழுகுபவன் அரிய பல உறுதி நலங்களை எளிதே அடைந்து கொள்கின்றான். பொழுதைப் பழுதாக்கினால் பின்பு அழுது அலறினாலும் அடைய முடியாது.

பழுதே பலபகலும் போயினஎன்று அஞ்சி
அழுதேன்; அரவணைமேல் கண்டு—தொழுதேன்
கடல் ஓதம் காலலைப்பக் கண்வளரும் செங்கண்
அடலோத வண்ணன் அடி. (இயற்பா)

தமது இளமையில் சில காலம் தெய்வ சிந்தனையின்றிப் பழுதானதை நினைந்து பொய்கையாழ்வார் அழுதுள்ளமையை இதில் அறிந்து உருகுகின்றோம். வாழ்நாளில் ஒரு கணம் வீணானால் அது தருமத்தையும் தெய்வத்தையும் இழந்து பாழாய்ப் பழி படுகின்றது. நல்ல நாளைப் பாழ் ஆக்குகின்றவன் பொல்லாத பாவி ஆகின்றான். உயிர் நிலையை ஊக்கி உயர் நலனை நோக்குக.

துயரில் ஆழா அழிவை.

என்றது உயிர்க்கு இனியதாய் அமைந்த நாளைப் பாழாக்கினவன் என்றும் துன்பத்தில் ஆழ்ந்து தொலைவன் என்றவாறு.

நாள் நலம் பல தருவது; அதனை வீணே கழிய விடின் வெந்துயர் விளையும்; அதன் நீர்மையைக் கூர்மையாக ஓர்ந்து சீர்மை

செய்து கொள்பவன் தெய்வீகநிலையனும் உய்திநலம் காண்கிறான்

---

435. காலன்வாய்ப் பட்ட கவளம்போல் உள்ளாய்நின்
மூலம் அறிந்துய்க முன்என்று—சீலங்கள்
எவ்வளவோ கோடி எடுத்து மொழிந்தாலும்
வெவ்வினையர் கேளார் விரைந்து. (ரு)

இ—ள்.

நீ காலன் வாயில் அகப்பட்ட கவளம் போல் இருக்கின்றாய்! உனது நிலைமையை உணர்ந்து உய்தி காணுக என எவ்வளவோ உண்மைகளை மேலோர் இரங்கி உரைத்தாலும் தீவினையாளர் விரைந்து கேளார் என்பதாம்.

தனது நிலைமையைத் தானாக உணர்ந்து கொள்பவன் உத்தமன்; பிறர் உணர்த்த உணர்பவன் மத்திமன்; உணர்த்தியும் உணராதவன் அதமன். இந்த அதம நிலைமைகள் உலகத்தில் படர்ந்துள்ள விதங்களை நினைந்து இப்பாசுரம் வருந்தி வந்துள்ளது.

சீவர்களுடைய தோற்றங்களும் மறைவுகளும் இயற்கை நியமங்களாய் யாண்டும் நிகழ்ந்து நிலவுகின்றன. பிறந்து வருகிற பிராணிகள் எல்லாம் இறந்து மறைகின்றன. இன்று இவ்வுலகில் காணுகின்ற சீவகோடிகளை நூறு ஆண்டுகள் கழித்து வந்து பார்த்தால் ஒன்றையுமே காண முடியாது. யாவும் புதியனவே காணப்படும். இறப்புகளுக்கெல்லாம் பிறப்புகள் ஈடு செய்து வருகின்றன. மேலே எறிந்த கல் கீழே விழுதல் போல் பிறந்து எழுவது இறந்து விழுவதற்கே உரிமையாய் இசைந்திருக்கின்றது.

"Our birth is nothing but our death begun." (Young)

"நம் பிறப்பு நமது இறப்பின் ஆரம்பமே அன்றி வேறு ஒன்றும் இல்லை" என்னும் இது ஈண்டு எண்ணத்தக்கது.

"Death borders upon our birth." (Bishop Hall)

"இறப்பு பிறப்பின் அருகானது" என பிஷப் ஹால் என்பவர் இவ்வாறு உரைத்திருக்கிறார். மரணத்தைக் குறித்து மேல் நாட்டார் கருதியுள்ளமை இவற்றால் அறியலாகும்.

காலன் வாய்ப் பட்ட கவளம்போல் உள்ளாய்.

என்றது மனிதனது உண்மை நிலையை உணர வந்தது.

பகல் இரவாய் நாள் கழிந்து கொண்டே வருகிறது; ஆள் அழிந்து கொண்டே வருகிறான். எமன்வாய் இரையாயுள்ளமையை அவன் உணராமையால் உள்ளம் களித்து நிற்கின்றான்.

கவளம் = வாயில் கொள்ளும் உணவுத் திரளை. வாயுள் வைத்த கவளம் உளளே விழுங்கப் படுதல்போல் மனிதன் ஆயுள் முடிந்து அழிகின்றான். காலன் வாய்க் கவளம் என்று காட்டியது தனது நிலைமையைக் கருதியுணர்ந்து விரைந்து கதிநலம் காண.

தோற்றம்சால் ஞாயிறு நாழியா வைகலும்
கூற்றம் அளந்துநும் நாளஉண் ணும்—ஆற்ற
அறஞ்செய்து அருளுடையீர் ஆகுமின் யாரும்
பிறந்தும் பிறவாதார் இல. (நாலடியார்)

உங்கள் வாழ் நாளை எமன் உண்டு வருகிறான். இந்த உண்மையைக் கண்டு உய்தி பெறுங்கள் என இது உணர்த்தியுள்ளது. சூரியனை நாழியாக் கொண்டு மக்களுடைய ஆயுளை மொண்டு கூற்றுவன நாளும் உண்ணுகின்றான எனனும் இவ் வுருவகம் தெளிவான உணர்வுக் காட்சியாய் வெளியாகி நிறைது. பகல் இரவுகள் கழிவதை உயிரழிவதாக் கருதி உணர்ந்து தருமம் தழுவி அருளுடையராய் உயர்வடைய வேண்டும் என்க.

தன்னுடைய அபாய நிலைமை உணர்ந்து உயிர்க்கு உபாயம் தேடிக் கொள்ளுகின்றவனே உண்மையுணர்வுடையவனாய் நன்மை அடைகின்றான; இம்மையும் மறுமையும் அவனுக்கு இனிமை ஆகின்றன. மெய்யுணர்வு, தத்துவ ஞானம் என்பன எவை? அவை எங்கே உளளன? அந்த நாமங்களைக் கேட்டவுடன் நாம் வியந்து கொண்டாடி மகிழ்ந்து கொள்கினறோம்.

தன் உயிர்க்கு உய்தி செய்து கொள்ளுகின்றவன் எவனோ அவனே தத்துவஞானி ஆகின்றான். பிறவித் துன்பங்கள் நீங்கி என்றும் குன்றாத இன்ப நிலையை அடைவதே சீவன்முத்தி என மேவி மிளிர்கின்றது. ஆன்ம சாந்தி மேலான ஆனந்தமுடையது.

உடல் அழிந்து விழுமுன் உயிர்க்கு ஆவதை அறிந்துகொள்ளாதவர் அவமே கழிந்து அநியாயமாய் ஒழிகினறார்.

உரிய கருவி உள்ளபொழுதே அரிய பயனை அடைந்து கொள்ள வேண்டும்; அங்ஙனம் அடையாவழி அவலங்கள் மிக அடையும் ஆதலால் ஆயுள் அளவையும், அழிவையும் விழிதெளிய நூல்கள் விளக்கியருளுகின்றன. வழி தெரிந்து போக வேண்டும்.

காலன் வாயிலிருந்து எவ்வழியும் யாதும் தப்ப முடியாத நிலையிலுள்ள மக்கள் உய்யும் வழி நாடாமல் இருப்பது ஊனமாய் முடிதலால் அது ஈன மடமையாய் இழிக்கப்பட்டது.

கொலைத் தண்டனை அடைந்த ஒருவனைக் கொல்லும் பொருட்டுக் கொலைக் களத்திற்குக் கொண்டு போயினர். குறித்த நேரம் வந்தது; அங்கே அவன் தலையை வெட்டி வீழ்த்த நிலையான கொலையாளிகள் கூரியவாள்களை ஓங்கி நின்றார். அந்தப் பரிதாப நிலையைப்பார்க்க விரும்பிய சனத்திரள் அச்சமும் திகிலும் உடையராய் அயலே திரண்டு நின்றனர். வெட்டு எப்பொழுது கழுத்தில் விழுமோ என்று விழித்த கண் இமையாமல் வெருவி நிற்குங்கால் நகரிலிருந்து ஒரு போர் வீரன் குதிரைமேல் ஏறி அதிவேகமாய்க் கடிது ஓடி வந்தான். தூர வரும்போதே வெள்ளைக் கொடியை வீசி நில நில என்று கூவி அடைந்தான். அவ் வீரன் என்னை சொல்லப் போகின்றானோ? என எல்லாரும் ஆவலோடு எதிர் பார்த்துச் செவி சாய்த்து நின்றார். "அரசனுக்கு இப்பொழுது ஆண் குழந்தை பிறந்துள்ளது; அதனால் கொலையை நிறுத்தி அவனை விடுதலை செய்தருளும்படி உத்தரவாயது" என்று அவன் உரைத்தருளினான். அவ்வாறே செய்யப்பட்டது. அவன் பிழைத்து உய்ந்த நிலையினையும விதியின் வலியினையும் வியந்து எல்லாரும் மகிழ்ந்து சென்றார். நிகழ்ந்த அந் நிகழ்ச்சியினும் நம்முடைய நிலை மிகவும் அபாயம் உடையது; அதனை உணராதிருக்கின்றோமே! என்று உள்ளம் பரிந்து ஒரு பெரியார் தம அருகே உள்ளவரிடம் அப்பொழுது உரைத்தருளினர். அயலே வருவதும் காண்க.

கோள்வலைப் பட்டுச் சாவாம் கொலைக்களம் குறித்துச் சென்றே
மீளினும் மீளக் காண்டும்; மீட்சி ஒன்றுனும் இல்லா
நாளடி இடுதல் தோறும் நம்உயிர் பருகும் கூற்றின்
வாளின்வாய்த் தலைவைப் பாக்குச் செல்கின்றும் வாழ்கின்றுமே!

(குண்டலகேசி)

கூற்றுவன் நம் உயிரைப் பருகிக் கொண்டே இருக்கின்றான்;

அவனது வாள் வாயில் நம் தலை போய்க் கொண்டே இருக்கின்றது; நாம் வாழ்கின்றேமோ? சாகின்றேமோ? நிலைமையை ஓர்ந்து உய்ய வேண்டும் என இது உணர்த்தியுள்ளது.

மனிதனுடைய வாழ்வு அவலக் கவலைகள் பல படிந்து பரிதாப நிலையில் உருவாகி யிருக்கின்றது. அந்த உண்மையைக் கருதியுணர்ந்து உறுதிநலனை விரைவில அடைந்து கொளவதே பிறவியின் பயனாய்ப் பெருகி நிற்றலால் காலக் கழிவைக் கண் காணக் காட்டி மேலோர் சாலவும் போதித்து வருகின்றனர்.

காலன் வாய்ப் படுமுன் கதியைக் கைக் கொண்டவன் அதிசய பாக்கியவானாய்த் துதி செய்யப் பெறுகின்றான்; அல்லாதவன் மதி கேடனாய் இழிந்து மாய்ந்து கழிகின்றான.

அழிவு நேருமுன்னே ஆவதைச் செய்து கொள்வது ஆன்ம ஊதியமாய் அமைதலால் அது பிறவிப் பேறாய்ப் பெரு மகிமை பெற்றது. பிறந்து வந்த நாம் நாளும் இறந்து படுகின்றோம்; அந்தப் பாடு அறிந்து பீடு பெற வேண்டும்.

சுமைத்தயிர் வேய்ந்த சோற்றின் துய்த்துஇனிதாக நமமை
அமைத்தநாள என்னும நாகம விழுங்கப பட்டு அனனதங்கண்
இமைததகண் விழித்தல் இனறி இறநதுபா டெய்து கினறும;
உமைததுழிச சொறியப பெற்றும ஊதியம பெரிதும பெறறும்.
(சீவக சிந்தாமணி 2617)

காலம் என்னும் பாம்பு நாளும் நம்மை நல்ல தயிர்ச் சாதம் போல் விழுங்கி வருகின்றது; முழுதும் விழுங்கப் படுமுன் விழி திறந்து உயக என உறுதி கூறியுளள இது ஈண்டு ஊன்றி உணர வுரியது. தினவு தினற ஆட்டத்தே சொறிந்து இனபுறுதல போல நினைவுகள ஒன்றி மன மகிழ்ந்து வருகின்றேம்; இந்த மாய வாழ்விலிருந்து தூய உயர் நிலையை விரைந்து அடையவேணடும எனக.

எவ்வளவு மொழிந்தாலும் வெவ்வினையர் கேளார்.

என்றது பாவ சன்மங்களின் பரிதாப நிலைமையைக் கருதி வந்தது. உறுதி உண்மைகளைத் தெளிவாக உரிமையுடன் உருகி உரைத்தாலும் யாதும் உணராமல் மந்த மதியினராய்ப் பலர் சிந்தை இழிந்துள்ளனர். அந்த அறிவுக்கேடு அவலத் துயர்களாம். முடிவு தெரியாமல மடிவது கொடிதாகின்றது.

எமன் வாய் இரையாய் உள்ளோம் என்பதை எண்ணி யுணர்ந்து புண்ணியம் பொருந்திப் புனிதமுற வேண்டும் என்க.

---

436\. செத்தொழிந்தார் சாவின்கட் சென்றுநின்றார் என்றுறவை
நத்திநின்று நாளும் நலிந்தழுவார்—பித்தரிவர்
தம்மழிவை எண்ணித் தயங்கார் தருக்கியுளார்
அம்மவோ என்னே அவம். (சு)

இ—ள்.

உறவினர் இறந்து போயினர்; உரியவர் சிலர் மடிந்து போக நேர்ந்தார் என்று பிறருடைய பிரிவுகளை நினைந்து அழுகின்றார்; தம்முடைய அழிவு நிலைமையை உணராமல் உளம் களித்து நிற்கின்றார்; அந்தோ! அந் நிலை எவ்வளவு மடமை! என்பதாம்.

இது, தன் இழவை எண்ணுக என்கின்றது.

மனித வாழ்வு ஓர் அதிசய விநோதமான விதி விளைவா யுள்ளது. மையலும் மயக்கமும் மாய மோகங்களும் தாய பாகங்களாய்த் தழுவி நிற்கின்றன. அல்லல்களும் அவலங்களும் நிறைந்திருந்தாலும் உல்லாசக் களிப்புகள் ஓங்கியுள்ளன. துன்பம் நேர்ந்தபோது மனிதன் உள்ளம் கலங்கி அழுகின்றான்; அது தீர்ந்தவுடன் எல்லாவற்றையும் மறந்து எக்களித்துத் திரிகின்றான். தனது நிலைமையைக் கருதியுணர்பவன் உறுதி நலனை உணர்கின்றான். கருதாதவன் விருதாவாய் விளிகின்றான்

அயல் அழிவுக்கு அழுகின்றவன் தன் அழிவை எண்ணுமல் இருப்பது இயல்பான தனி மயலாகின்றது.

பக்கம் சூழ்ந்திருந்த ஒக்கல்கள் இறந்தார் என வருந்தி அழுகின்றான்; தான் தினமும் இறந்து படுதலை நினைந்து பாராமல் நிற்கின்றான்; சாக நிற்கின்றவன் செத்தவர்க்கு அழுவது கூலிக்கு அழுத படியாய்க் கேலிக்கே இடமாய்க் கிளர்ந்துள்ளது.

"செத்துக் கிடக்கும் பிணத்து அருகே இனிச்சாம்பிணங்கள்
கத்தும் கணக்கு என்ன காண்?"

என இழவு வீட்டில் அழுவதைக் குறித்து இது வந்திருக்கின்றது. வாழ்ந்து வரும் மக்களைச் சாம்பிணங்கள் என்று சுட்டியுள்ளதில் எவ்வளவு சுவை சொட்டியுள்ளது!

காம்பிணங்கும்பணைத் தோளார்க்கும் பொன்னுக்கும் காசினிக்கும்
தாம்பிணங்கும்பல ஆசையும் விட்டுத் தனித்துச் செத்துப்
போம்பிணம் தன்னைத் திரளாகக் கூடிப் புரண்டினிமேல்
சாம்பிணம் கத்துதையோ என் செய்வேன் தில்லைச் சங்கரனே.

(பட்டினத்தார்)

பெண் ஆசை, பொன் ஆசை, மண் ஆசை என்னும் பொல்லாத ஆசைப்பிணிகளிலிருந்து விடுதலை அடைந்து உயர்ந்து போகின்ற சிலர்களை இறந்து போனார்கள் என்று வருந்தி ஈண்டு இருந்து அழுகின்ற மக்களைக் குறித்துப் பட்டினத்தார் இப்படி அழுதிருக்கிறார். சாவும் வாழ்வும் ஓவாது உருளுகின்றன.

செத்துப் போம் பிணம் என அங்கே போனவர்களையும், இனிமேல் சாம்பிணம் என இங்கே உள்ளவர்களையும் குறித்து அடிகள் உரைத்திருப்பது சிரித்து நோக்கத்தக்கது.

அல்லலான ஆசைத்தீமைகள் வசப்பட்டு மோசமாய்வாழ்ந்து வருவது நீசம் ஆதலால் அதைவிட நாசமாய்ப் போய்த்தொலைவது நல்லது என வந்தது. இருந்தால் பழிபாவங்கள் வளர்ந்து வருகின்றன; இறந்தால் அவை ஒழிந்து போகின்றன. இருப்பது நல்லதா? இறப்பது நல்லதா?

புகழும் புண்ணியமும் வளர்ந்து வர இருந்து வருவதே வாழ்வாம். அவ்வாறு அல்லாத இருப்பு பொல்லாத நெருப்பாம்.

மனம் மொழி மெய்களைப் புனிதமாக்கி இனிய நீர்மையுடன் வாழ்கின்ற வாழ்வு தெய்வீக நிலையில் சிறந்து வருதலால் அவ் வாழ்நாள் உயர்ந்த மகிமையாய் ஒளி சிறந்து திகழ்கின்றது. எய்திய நாளை ஈனப் படுத்தாமல் உய்தி காண்பவன் உத்தமன் ஆகின்றான். காணுதவன் செத்த சவமாகவே செனித்து வருகிறான்.

ஆயுள் குறைந்து தினமும் தாம் அழிந்து படுவதை நினைந்து பாராமல் பிறர் இறந்து போனார் என்று வருந்தி அழுவது பெரிய ஒரு பேதைமை ஆகும் ஆதலால் இவர் பித்தர் என நின்றார். பித்தம் தெளிந்து சித்தம் கனிந்து உத்தம நிலையில் உயர்ந்த போது அவர் முத்தர் ஆகின்றார்.

தம் அழிவை எண்ணித் தயங்கார்; தருக்கியுளார்.

என்றது மனித இயல்பின் மையல் நிலையை விளக்கி நின்றது.

உற்ற உடல் ஒழியுமுன் அது பெற்ற பயனைப் பெறுவதே பெரும் பாக்கியமாம்; அங்ஙனம் பெறாமல் இருப்பது பெருங் கேடாய் முடிதலால் பிறவிப்பயனை இழந்த பேதையராய் அவர் இழிந்து படுகின்றனர். ஞானப் பிறப்பை ஈனப் படுத்தலாகாது.

தமக்கு உரிமையான அருமை நாள் மருமமாய்க் கழிந்து கொண்டே வருகின்றது; அந்தக் கழிவைத் தமது அழிவாகக் கருதி யுணர்பவர் இரவும் பகலும் ஆன்ம சிந்தனையுடன் மேன்மை அடைந்து கொள்ளுகின்றனர்.

அரும்பெறல் யாக்கையைப் பெற்ற பயத்தால்
பெரும்பயனும் ஆற்றவே கொள்க — கரும்பூர்ந்த
சாறுபோல் சாலவும் பின்னுதவி மற்றதன்
கோதுபோல் போகும் உடம்பு.

கரும்பாட்டிக் கட்டி சிறுகாலைக் கொண்டார்
துரும்பெழுந்து வேங்கால் துயர்ஆண் டுழவார்
வருந்தி உடம்பின் பயன்கொண்டார் கூற்றம்
வருங்கால் பரிவ திலர். (நாலடியார், 34, 35)

கரும்பின் பயனான சாரத்தைக் கைக்கொண்டவர் அதன் சக்கை வேகும் போது வருந்த மாட்டார்; உடம்பின் பயனான புண்ணியத்தை அடைந்து கொண்டவர் இறந்து படுதலுக்கு அஞ்சார் என ஓர் உவமைக் காட்சியை நயமாக விளக்கி மக்கள் பிறந்த பயனை விரைந்து பெறும்படி இது போதித்துள்ளது.

எமன் வருமுன் தனக்கு ஏமம் செய்து கொள்வனுயின் அந்த மனிதன் பெரிய மகானாய் அரிய மகிமை பெறுகிறான்.

வாழ்நாளின் நிலைமையை உணர்ந்தவன் மேலே உயிர் இனிது வாழ உரிய அரிய உறுதி நலனைக் கருதிக் கொள்கின்றான்.

வரனாய் அமைந்த ஆயுள் கணமும் கழிகின்றது; மரணம் கடுகி வருகின்றது. இந் நிலைமையை நேரே தெரியாது போயினும் இளமை கழிந்து மூப்பு அடர்வதை ஏனும் தமது அனுபவத்தில் கண்கூடாய்க் கண்டு கதி காணமல் ஒழிவது மதி கேடாகின்றது.

பாலையாம் தன்மை செத்தும், பாலனாம் தன்மை செத்தும்,
காளையாம் பருவம் செத்தும், காமுறும் இளமை செத்தும்,
மீளுமிவ் வயதும் இன்னே மேல்வரு மூப்பும் ஆகி
நாளும் நாள் சாகின்றாமால் நமக்கு நாம் அழாதது என்னே?
(குண்டலகேசி)

பிறர் செத்துப் போனார் என்று அழுகின்றோம்; நாள் தோறும் நாம் செத்துக் கொண்டிருக்கிறோம்; நமக்கு நாம் அழாமல் இருப்பது வியப்பாயுள்ளது எனக் குறித்திருக்கும் இதன் கருத்தைக் கூர்ந்து பார்க்க. பாளை = பிள்ளைப் பருவம்.

அயல் இழவுக்கு அழுகின்றாய்! உன் இழவை எண்ணியுணராமல் ஏமாந்து நிற்கின்றாயே; நிலைமையைக் கொஞ்சம் நினைந்து நோக்கி உய்தி காணுக என மேலோர் இங்ஙனம் உணர்த்தி வருகின்றார். சாதலைக் காட்டியது மேல் ஆதலை அறிய.

பெற்ற பொழுதைப் பழுதாக்கிப் பேதையாய் அழிந்து போகாதே; உற்ற பயனை விரைந்து கைக்கொண்டு உயர்ந்து கொள்ளுக. நாள் வீண் கழியின் நாசமே காண நேரும்.

தனது நிலைமையைக் கொஞ்சம் உணர்ந்தாலும் ஒருவன் அழுது விடுவான். பிள்ளை அழுதால் பெற்ற தாய் உள்ளம் உருகி அணைக்கின்றாள்; மனிதன் அழுதால் தெய்வம் கருணை புரிந்து கை தருகின்றது. ஞான அழுகையால் ஊனங்கள் ஒழிகின்றன.

யானே பொய்; என் நெஞ்சும் பொய்; என் அன்பும் பொய்;
ஆனால் வினையேன் அழுதால் உன்னைப் பெறலாமே?
தேனே! அமுதே! கரும்பின் தெளிவே! தித்திக்கும்
மானே! அருளாய் அடியேன் உனைவந் துறுமாறே.

(திருவாசகம்)

இந்த அருமைப் பாசுரம் நாளும் நினைந்து சிந்திக்கவுரியது. மாணிக்கவாசகர் தினமும் உருகி அழுதிருக்கிறார் என்று தெரிகின்றது. அந்த அழுகை ஏன் வந்தது? எதை நோக்கி எழுந்தது? பிறவித் துன்பங்களை நீக்கிப் பேரின்பம் அருளுகின்ற புண்ணியக் கண்ணீராய் அது பெருகி யிருக்கிறது. அருமைத் தந்தையைப் பிரிந்துள்ள பிரிவு தெரிந்தபோது உரிமை மைந்தன் உருகி அழுதிருக்கும் பரிவும் பண்பும் இங்கு மருமமாய் உணர வந்தன.

---

437. ஆயுள் அளவை அறியார் அளவிலா
நேய நினைவில் நிமிர்கின்றார்—தீயுள்
விரைந்தோடி வீழ்கின்ற விட்டில்போல் நோயுள்
இரைந்தோடி வீழ்கின்றார் ஏன்று. (எ)

இ—ள்.

தமது ஆயுளின் அளவினைக் கருதி நோக்காமல் அளவிட

லரிய அவல நினைவுகளில் அவாவி ஓடி விளக்கில் வீழ்ந்து விட்டில் மடிவது போல் மக்கள் வீணே மாண்டு படுகின்றனர் என்பதாம்.

இது மானிடங்களின் ஊன நிலையை உணர்த்துகின்றது.

சிறிய வாழ்நாளையும் பெரிய பல அல்லல்களையும் மனிதன் உரிமையாகப் பெற்றிருக்கிறான். அவனுடைய நிலை எவ்வழியும் பரிதாபமானது; ஆயினும் அவன் யாதொரு கவலையும் இல்லாமல் உல்லாசமாய்க் களித்துத் திரிவது இயற்கை விநோதமாயுள்ளது சிந்தனைகள் வெளிமுகமாய் ஓடிக் களி புரிகின்றன; உள்முகமாய் இருளடைந்து இளிவுறுகின்றன.

தனக்கு அமைந்துள்ள ஆயுளையும் தனது நிலைமையையும் எண்ணி யுணராமையால் மனக் களிப்புடன் மையல் மீதூர்ந்து திரிகின்றான். அழிவு நிலை தலையிலிருந்தும் விழிதிறந்து பாராமல் மனிதன் களிமிகுத்து நிற்பதைக் குறித்து மேலோர் பரிவு கூர்ந்து பரிந்திருக்கின்றனர். உறுதி கூறியும் உள்ளனர்.

ஆயிரத்தெண்ணூறு ஆண்டுகட்கு முன்னர் ஒரு புலவர் கூறியுள்ளது ஈண்டு அறிய வுரியது. ஒரு ஆட்டுக்கிடா: அதனைப் பலி இடுவதற்காகக் காளி கோவில் முன் கொண்டு போய் உடையவன் நிறுத்தி யிருக்கிறான். அதன் கழுத்திலும் கொம்பிலும் மருவும் மாலையும் மருவி யுள்ளன. பூசாரி கூரிய வாளைக் கையில் ஏந்தி நிற்கின்றான். அந்நிலையில் அது தன் கழுத்தில் தொங்கு கின்ற தளிரைத் தின்று மகிழ்கின்றது; மென்று கொண்டிருக்கும் போதே வெட்டு வேகமாய் விழுந்தது; தலை துண்டாயது; முண்டம் தரையில் கிடந்து துடித்தது. அந்த ஆட்டு நிலையிலேயே மனிதன் மாட்டுப் புத்தியாய் மருண்டுள்ளான் என்று கவிஞர் பாடியிருக்கிறார். பாட்டு அயலே வருகின்றது.

வெறிஅயர் வெங்களத்து வேல்மகன் பாணி
முறியார் நறுங்கண்ணி முன்னர்த் தயங்க
மறிகுள குண்டன்ன மன்னு மகிழ்ச்சி
அறிவுடை யாளர்கண் இல். (நாலடி, 16)

மறி அன்ன மகிழ்ச்சி என்றது மனிதனது இழி நிலையை வெளிப்படுத்தி இகழ்ச்சிக் குறிப்பில் வந்தது. மறி = ஆடு. குளகு = இலை. தன் தலைமேல் உள்ள அபாய நிலையை அறிந்து

கொள்ளாமையால் மகிழ்ந்து துள்ளுகின்றான்; அறிந்தால் விரைந்து உறுதி நலனை அடைந்து கொள்ளுவான்.

நேய நினைவில் நிமிர்கின்றார்.

என்றது ஆசை வசமாய் மனிதர் மோசம் போதலை நினைந்து வந்தது. உரிய ஆயுள் சிறிய அளவினது; கொடிய பல துயரங் களை யுடையது. தினமும் கடிது கழிவது. இந்த நிலையிலுள்ள மாந்தர் முடிவு நேருமுன் தம் உயிர்க்கு ஓர் உறுதியும் காணாதி ருப்பது பெரிதும் பரிதாபமாய்ப் பிழை மிகப் படுகின்றது.

அம்புவி மாந்தர்க் கெல்லாம் ஆயுளோ சிறிது; அதற்குள்
வெம்பிணி இளமை மூப்பு விழிதுயில் சோம்பு காதல்
கம்பலை இவற்றை நீக்கிக் கற்பது எங்ஙனம்? கற்றாலும்
தம்புலம் சிறிது; ஞான சாகரம் பெரிது என்றுன்னி.

(மெய்ஞ்ஞான விளக்கம்,)

மனிதனது வாழ்வும் அவலக் கவலைகளும் இவ்வாறு பெருகி எவ்வழியும் சிறுமை படர்ந்துள்ளமையால் அவன் உரிமையை உணர்ந்து உய்தி காண்பது மிகவும் அருமை ஆகின்றது.

வாழ நேர்ந்துள்ள ஆயுள் நாள் அற்பமானது; அல்லல் பல நிறைந்தது. இன்ன நேரம்தான் சாவு நேரும் என்று யாரும் முன்னறிந்து சொல்ல முடியாதது; ஒல்லையில் ஒழிந்து படுகின்ற புலவிய நிலையிலிருந்து கொண்டு மனிதன் எல்லையில்லாத எண் ணங்களை எண்ணி எண்ணி ஆழ்ந்து அலைகின்றான்.

பிறந்து வந்துள்ளதையும், இறந்து மறைவதையும் உணர்ந்து நோக்கி உயிர்க்கு உறுதி காணாமல் ஊனமாயுழல்வது ஞான சூனியமான ஓர் ஈனமாய் முடிதலால் அம்முடிவு கொடிய கேடு ஆகின்றது. நாளும் இறந்து அழிந்து கொண்டே யிருந்தும் அந்த அழிவு நிலையை யாதும் உணராமல் சுகமாய் வாழ்ந்து வருவதாக நினைந்து களித்து நிமிர்ந்து திரிவது நெடிய மதிமயக்கமேயாம்.

பிறந்துநாம் பெற்ற வாணாள் இத்துணை என்பது ஒன்றும்
அறிந்திலம்; வாழ்தும் என்னும் அவாவினுள் அழுந்து கின்றாம்;
கறந்து கூற்று உண்ணும் ஞான்று கண்புதைத்து இரங்கினல்லால்
இறந்தநாள் யாவர் மீட்பார் இற்று எனப் பெயர்க்க லாமோ?

(சீவகசிந்தாமணி, 2613)

மனித வாழ்வின் பரிதாப நிலைமை இது உணர்த்தியுள்ளது. கூற்றுவன் வந்து நம்மை உண்ணும் போது அந்தோ உயிர்க்கு யாதொரு புண்ணியமும் செய்து கொள்ளாமல் வாழ்நாளை வீண் கழித்து வறிதே இருந்து விட்டோமே! என்று பரிந்து அழுது பதைப்பதை அறிக. கழிந்து போன நாளை மீட்ட முடியாதே! என்று இதில் காட்டியுள்ள கருத்தைக் கருதிக் காணுக. போனது மீளாது; போகுமுன் ஞானத்தை அடைந்து கொள்வது ஞானமாகும்.

சென்றநாள் எல்லாம் சிறுவிரல் வைத்து எண்ணலாம்
நின்றநாள் யார்க்கும் உணரவரிது—என்றொருவன்
நன்மை புரியாது நாள்உலப்ப விட்டிருக்கும்
புன்மை பெரிது புறம்.

கோட்டுநாள் இட்டுக் குறையுணர்ந்து வாராதால்;
மீட்டொரு நாளிடையும் தாராதால்—வீட்டுதற்கே
வஞ்சம்செய் கூற்றம் வருதலால் நன்றுஆற்றி
அஞ்சாது அமைந்திருக்கற் பாற்று.

(அறநெறிச்சாரம், 69, 109)

வாழ்நாளின் நிலைமையை விளக்கி மறுமைக்கு உரிமையை விரைவில் கருதிக் கொள்ளும்படி இவை உணர்த்தி யுள்ளன. கோட்டுநாள் = ஆயுளாக விதித்த காலம். ஆயுள் உள்ளே கரைந்து கொண்டேயிருக்கின்றது; கூற்றுவன் மேலே விரைந்து கொண்டே நிற்கின்றான்; மக்கள் பராமுகமாய் மகிழ்ந்து கொண்டே திரிகின்றார். மதிகேடான இந்த மகிழ்ச்சி கதி கேடாகின்றது. கேடு விளைவதைக் கருதாமல் மூடமாய் ஓடி உழல்வது முடிவில்லாத துயரமாம். துயர நிலையை உயர் நிலையாக் கருதி உயிர்நிலை அழிகின்றார்.

தீயுள் வீழ்கின்ற விட்டில் போல நோயுள் வீழ்கின்றார்.

என்றது மக்கள் மாய்ந்து படுகின்ற மாயம் தெரிய வந்தது.

காட்சிக் களிப்பு, நாக்குச்சுவை, பரிச இன்பம் முதலிய பொறியின் போகங்களில் வெறிகொண்டு திரிந்து யாண்டும் மாந்தர் மாண்டு ஒழிகின்றார். ஈண்டு வந்த பிறவிப்பயனை யாதும் சிந்தியாமல் அவமே அழிந்து போவது அவலமாகின்றது. நோய் என்றது தீய ஆசைகளை. மாய்வு தருவது மாய மோகமாயுள்ளது.

விளக்கின் ஒளியை விழைந்து வீழ்ந்து விட்டில் மடிவது போல் உலக மினுக்குகளில் ஆசை மீதூர்ந்து விழுந்து நாசம்

அடைதலால் விட்டில் பூச்சி மனிதப் பூச்சிகளுக்கு உவமையாய் வந்தது. இந்த மாய மோகங்கள் பல சனன வாசனைகளாய் வளர்ந்து அடர்ந்திருத்தலால் அவற்றிலிருந்து நீங்க முடியாமல் நிலை குலைந்து மாள்கின்றார்.

உடல், மனம், புவனம், போகம் என்னும் இந்நான்கும் வினைப்பயனை அனுபவிக்க நேர்ந்த சீவனுக்குச் சாதனங்களாய் அமைந்துள்ளன. இந்தக் கருவிகளையே தான் என்று மயங்கி அது மறுகி மாய்கின்றது. அம்மயக்கம் நீங்கின் பிறவி தீர நேர்கின்றது.

கண்ணுக்குக் கண்எதிரே கட்டையில் வேகக்கண்டும்
எண்ணும் திரமாய் இருப்போமென்று எண்ணுதே. (1)

மண்ஆசைப் பட்டேனை மண்உண்டு போட்டதடா!
பெண்ஆசை பொன்னாசை போகேனே என்குதே. (2)

பட்டினத்தார் இப்படிப் புலம்பியிருக்கிறார். மய்யல் தீர்ந்து உய்வது எவ்வளவு அருமை! என்பதை இதனால் எளிது அறியலாகும். தேக அபிமானங்கள் மண்டி வீணே சாகாதே; அதனினும் வேறுயுள்ள ஆன்மாவே நீ; அதனைப் புனிதமாப் பேணி மனிதனாய் வந்த பயனை விரைந்து மருவிக் கொள்ளுக.

---

438. உண்டுடுத்தி நோக்கி உவந்து களிக்கின்றீர்
தண்டெடுத்துச் சண்டனார் சார்ந்தக்கால் — கண்டெடுத்து
என்ன பலனை எதிர் ஏந்திநிற்பீர் இப்பொழுதே
உன்னி உணர்மின் உளத்து. (அ)

இ-ள்.

நல்ல உணவுகளை உண்டு உயர்ந்த உடைகளை அணிந்து உள்ளம் களித்துத் திரிகின்றீர்களே! எமன் வந்தால் அவன் எதிரே என்ன சொல்லுவீர்? அதனை முன்னதாக எண்ணி உணர்ந்து முடிவை ஓர்ந்து கொள்ளுங்கள் என்பதாம்.

இது, மனக் களிப்பு மதி கேடு என்கின்றது.

சுக போகங்களை விழைந்து சுகிப்பதும், தம்மை வியந்து கொள்வதும் சீவர்களுடைய சுபாவங்களாய் வளர்ந்திருக்கின்றன. மையல் மோகமும் மடமை நோக்கமும் வையக இயல்புகளாய் விரிந்து வெய்ய துயரங்களை விளைத்து நிற்கின்றன. அந்த நிலை

களைத் தெளிந்து ஒதுங்கி உய்வது உயர்ந்த ஞான நிலையாம்; தெளியாமல் களிமிகுந்து அலைவது இழிந்த ஈனம் ஆகும்.

உண்டு உடுத்தி என்றது உள்ளும் புறமும் கொண்டு களிக்கும் திறங்களைக் கூர்ந்து காண நேர்ந்தது. மனிதன் உள்ளே தொந்தி சரியத் தின்னுகின்றான்; மேலே பட்டு முதலிய ஆடைகளைப் புனைந்து கொண்டு வெளியே உல்லாச விநோதமாய் உலாவிச் சல்லாப சரசங்கள் புரிந்து வருகின்றான் தனக்கு விரைந்து நேர்வதை அறிந்து கொள்ளாமையால யாதும் கவலாமல் நிமிர்ந்து திரிகின்றான். நிலைமை தெரிந்தால் நெஞ்சம் கலங்குவன்.

அந்தகன் கையில் அகப்பட்டுள்ளோமே; அந்தம் அடையுமுன் வந்த பயனை அடைந்து கொள்ள வேண்டுமே என்ற சிந்தனை சிறிது தோன்றினும் உள்ளம் துடித்து உறுதி காண நேர்வன்; உண்மை உணர்வு குன்றிப் புன்மை மண்டியுள்ளமையால் தன்மை திரிந்து நன்மை இழந்து தருக்கி அலைகின்றான். உணர்ந்தவர் உள்ளம் துடித்து உறுதி காண விரைகின்றார்; உணராதவர் கவலை யாதும் இன்றிக் களித்து நிற்கின்றார்.

நன்றறி வாரிற் கயவர் திருவுடையர்
நெஞ்சத் தவலம் இலர். (குறள், 1072).

வஞ்சப் புகழ்ச்சியாய் வந்துள்ள இந்த அருமைத் திருமொழி இங்கே சிந்திக்கத் தக்கது. இம்மை மறுமைகளுக்கு உரிய புகழ் புண்ணியங்களை மருவியிருந்தும் மேலும் மேலும் புனித நிலையை அடைய விரும்பி இரவும் பகலும் மேலோர் உருகி வருகின்றனர்; உயிருக்கு உரிமையாக யாதொரு நலனும் செய்யாது நின்றும் ஒரு சிறிதும் கவலாமல் பலர் களி மிகுந்துத் திரிகின்றாரே! என்னே இது! என வியந்து நோக்கிய வள்ளுவப் பெருந்தகை உள்ளம் கொதித்தார்; அந்தக் கொதிப்பை அடக்கிக் கொண்டு நகைச்சுவை ததும்ப இந்தக் குறளை உரைத்தருளினார்.

தரும நலம் கருதி மறுமைநோக்கி நிற்கும் ஞான சீலர்களினும் ஈனமான கயவர்கள் பெரிய பாக்கியசாலிகள் என்றது எவ்வளவு நளினமான வசவு! எத்துணை விநயம்! உய்த்துணர வேண்டும். சுட்டியுள்ள திட்டில் சுவைகள் சொட்டுகின்றன.

கயமைக்கு அடையாளமாக இங்கே தேவர் குறித்திருக்கும்

இந்தக் கருவியைக் கொண்டு சோதனை செய்து பார்த்தால் எவ்வளவு கயவர்கள் இவ்வுலகில் இப்பொழுது உளர் என யாரேனும் உளவு கண்டு அளவு கூற முடியுமா? வரம்புகாதவர் வரம்பு மீறியுள்ளனர் பயனுறாதவர் பழியுற நேர்ந்தனர்.

நன்று அறிந்து நயனடைந்தவர் நயவர் ஆய் உயர்கின்றார்.

ஒன்றும் அறியாது உளங்களித்துள்ளவர் கயவர் ஆய் இழிகின்றார். உயர்ந்தவர் தேவ போகங்களை நுகர்ந்து மகிழ்கின்றார்; இழிந்தவர் பாவம் பழிகளில் படிந்து படு துயர்கள் நுகர்கின்றார்.

முடிவில் தமக்கு நேர்கின்ற முடிவை உணராமையால் மூடக் களிப்பில் நீடியுள்ளனர். உணர்ந்தவர் உள்ளம் கரைந்து ஒருமுகமாய் விரைந்து உறுதி நாடுகின்றனர்.

இளமையில் பிணியற்று ஒருகுடை நிழற்கீழ்
இருநில முழுவதும் புரக்கும்
வளமைபெற் றுடைய மகற்குமெப் பொழுது
வருங்கொல் கூற்று எனும் பயத்தானும்
உளமிகப் பறைநின்று அறையுமேல் புவிமீது
உடையரோ மற்றையர் இன்பம்
களிமிகுத் திருப்பர் தெளிவிலா மையின்மேல்
காரியம் கருதுறா நரரே. (வைராக்கிய தீபம்)

பின் விளைவதை எண்ணியுணராத மடமையே மனக்களிப்புக்கு இடமாயுள்ளது எனக் குறித்து இது விளக்கியிருக்கும் கருத்துக்கள் கருதியுணர வுரியன. விவேக விசாரணைகள் உடையவர் ஆன்ம நலனை அவாவி உருகுகின்றனர்; அல்லாதவர் உலக மோகிகளாய் அலமந்துழல்கின்றனர்.

நோக்கி உவந்து களிக்கின்றீர்.

என்றது மையல் மீதூர்ந்து மக்கள் களித்து நிற்கும் நிலைகளைக் குறித்து வந்தது. உடலை மினுக்கித் திலகம் இட்டுத் தயிலம் பூசித் தலைமயிரை வகுப்பெடுத்து வகைப்படுத்தி ஆடியில் நெடும்பொழுது தன்னைப் பார்த்து மனிதன் மகிழ்ந்து கொள்கின்றான். அந்த மனக் களிப்பு அதி விசித்திரமாயுள்ளது. தொண்டு கிழவனும் தன்னைக் கண்ணாடியில் கண்டபோது உற்று நோக்கி உவந்து களிக்கின்றான். தான் என்ற உரிமையில் ஒரு

பெரிய அபிமானம் பெருகியுளது. தேகத்தை மோகித்து மகிழ்கின்றான்; தேகியை மறந்து விடுகின்றான். எதை நோக்க வேண்டுமோ அதை நோக்காமல் குருடுபட்டு மருளுடையுள்ளமையால் ஆன்ம நிலையில் இருளடைந்து நிற்கின்றான். மயிரைத் தடவித் தடவி மானமாக இனிது பேணுகின்றான்; உயிரை ஒரு சிறிதும் நினையாது ஊனமாய்ப் போகின்றான்.

மயிரைத் தடவி மனிதன் மகிழ
உயிரைத் தடவியமன் உள்ளான்—மயிரின்மேல்
வைத்திருக்கும் ஆசையினை மன்னுயிர்பால் ஓர்சிறிது
உய்த்தானேல் உய்ந்தான் உடன்.

மயிர்மேல் கொண்டுள்ள ஆசையில் நூறில் ஒரு பங்கு தன் உயிர்மேல் வைப்பானாயின் மனிதன் உய்தி அடைவான் என இஃது உணர்த்தியுள்ளது. இதனால் அவன் பாராமுகமாய் நிற்கும் பரிதாப நிலை அறியலாகும். நாளும், நமனும் உள்ள நிலையை இங்கே ஒருங்கே காண்கின்றோம். மயிராயிழியாதே; உயிராயுயர்க.

காலன் வருகின்ற வேகத்தைக் கருதி நோக்காமல் தன் கோலத்தை நோக்கிக் குதூகலித்து நிற்பது மனிதனுடைய ஞான சூனியத்தை வெளிப் படுத்தி நிற்கின்றது.

காலன் வருமுன்னே கண்பஞ் சடையுமுன்னே
பாலுண் கடைவாய் படுமுன்னே—மேல்விழுந்தே
உற்றார் அழுமுன்னே ஊரார் சுடுமுன்னே
குற்றாலத் தானையே கூறு. (பட்டினத்தார்)

காலன் வருமுன்னே கால காலனைக் கருதிக் கொள்ளுக என இது உறுதி கூறியுள்ளது. நூலறிவின் பயன் எல்லாம் வாலறிவனை அடைவதே ஆதலால் அந்த மேலான நிலை அறிய வந்தது. கரணங்கள் கலங்கிய மரண வேளையில் யாதும் கருத முடியாது; சாவு எய்து முன்னதாகவே சீவ லூதியம் செய்து கொள்ள வேண்டும்; இல்லையேல் யாண்டும் தொல்லையே.

சண்டனார் எதிர் என்ன பலனை ஏந்தி நிற்பீர்!

இந்த வினவுக்குப் பதில் கூற நேர்ந்தால் நிலைமை தெரிய நேரும். இம்மை மறுமை என வாழ்வு இருவகையாய் மருவியுளது. உடல் ஒனறியது, ஒருவியது என அவை கருத நின்றன.

உயிர்க்குச் சேமம் செய்து கொள்பவன் மறுமையில் மகிமை அடைகின்றான். "ஆண்டவன் ஈண்டு உன்னை நல்ல மனித உருவில் அனுப்பியருளினனே; அவன் உவந்து அருளும்படி நீ என்ன நன்மை செய்தாய்?" என்று எமன் கேட்டால் அதற்குச் சரியாகப் பதில் சொல்ல வேண்டுமே! "மனைவியை மணந்தேன், மக்களைப் பெற்றேன், வீடு கட்டினேன், மாடு வாங்கினேன், நிலங்களை உழுதேன், வாணிகங்கள் செய்தேன், கடல் கடந்து மலை ஏறி உடல் வருந்தி உயர் பொருள் தேடினேன், அதிகாரங்கள் புரிந்தேன், செல்வம் திரட்டிச் சீமானாய் இருந்தேன்" என இன்னவாறு ஏதேனும் சொன்னால் அவன் இகழ்ந்து சிரித்து எள்ளித் தள்ளுவன். இவை யாவும் உலக நிலையில் உடலோடு ஒழிவன. அங்கே பயன் படா. கருணை கனிந்து தரும சீலங்கள் மருவி எவ்வுயிர்க்கும் இதம் புரிந்து பாலில் வெண்ணெய் திரட்டியது போல் வாழ்வில் ஏதேனும் புண்ணியம் பண்ணியிருந்தால் அது ஆன்ம அமுதமாய் அதிசய மகிமையை அருளும். அந்தப் புண்ணிய சீலனைக் கண்ணியமாகப் போற்றி எம தருமன் கதி நலம் காட்டியருள்கின்றான். உண்மை தெளிந்து உய்தி காணுக.

---

439. கோடிக் கரைநிமிடம் கூறிநீ கேட்டாலும்
நாடியதைக் கூற்றுவன்தான் நல்கானே—கூடிநின்ற
வாழ்நாள் அருமையினை வாய்ந்து சிறிதோர்ந்தால்
பாழ்நாள் படுமோ பகர். (௯)

இ—ள்

அரை நிமிட நேரத்திற்கு ஒரு கோடி பொன் தருவதாக மறுகி மன்றாடினாலும் எமன் இசையானே; அத்தகைய அரிய வாழ்நாளை வறிதே பாழாக்குவது பெரிதும் பரிதாபமாம் என்க.

இது பொன்னினும் நாளைப் போற்றுக என்கின்றது.

உலகம் பொருளில் உள்ளது. உண்ணும் உணவு முதலாக எண்ணும் தேவைகள் யாவும் பொருளால் உளவாகி வருதலால் யாவரும் அதனை ஆவலோடு தேடி யாண்டும் உரிமைகொண்டாடி வருகின்றனர். அத்தகைய அரிய பொருளையும் வாழ்நாளையும் ஒரு துலையில் வைத்து நிறுத்துக் காட்டி நாளின் அருமையை இது உணர்த்துகின்றது. அருமை தெரிய உரிமை உற்றது.

கோடி என்றது பெரிய தொகை நிலைக்கு ஓர் எல்லை கூறிய வாறு. நூறு ஆயிரம் கூடியது ஒரு இலட்சம்; அவ்வாறு நூறு இலட்சம் கொண்டது கோடி ஆம்.

அரை நிமிடம் என்றது காலத்தின் சிறிய அளவுக்கு உரிமையாய் வந்தது. அருவமான காலத்தின் அருமையைத் தெளிவாகத் தெரிய உருவமான ஒரு எண்ணல் அளவையைக் கண் எதிர் காட்ட நேர்ந்தது.

பொருளைப் பெருமையாகக் கருதி மனிதன் மிகவும் போற்றி வருகிறான். அதனினும் அருமையாகப் பேண உரியதை அறவே மறந்து போகின்றான். அம் மறப்பு மதி கேடாய்ப் பல கேடுகளுக்குக் காரணம் ஆகின்றது.

எல்லா நலங்களும் காலத்தால் விளைகின்றன என்னும் உண்மையை எவன் கருதி உணர்கின்றானோ அவன் அதிசய பாக்கியவானாய்க் கதி நலம் காண்கின்றான்.

மணியினும் பொன்னினும் மாண்பு மிக்கது;
துணிபொருள் யாவையும் தோற்று விப்பது;
பணி பல தருவது; பருவ காலம் போல்
அணி பொருள் அருள்வது யாதும் இல்லையே.

இங்ஙனம் உறுதி நலங்கள் மருவியிருத்தலால் காலம் கதி நலம் உடையது என மதி நலமுடையார் எவரும் அதனை அதி கவனமா மதித்துப் பேணி மாண்பயன் அடைகின்றனர்.

பயிர்க்கு நிலமும் நீரும் போல் உயிர்க்கு இடமும் காலமும். இடம் உடல் போல் உருவமானது; காலம் உயிர் போல் அருவமாயுள்ளது. அயராது சலித்து வருகிற அது அதி வேகமுடையது; எல்லாம் கால கதியில் கலித்து எழுகின்றன.

தனக்கு ஆயுளாக அமைந்துள்ள காலம் சீவ ஆகாரமாய் இருத்தலால் அதனை உரிமையோடு பேணி வருகின்ற மனிதன் இருமை நலங்களையும் காணியாக மருவுகின்றான்.

அரிய மனிதப் பிறப்பைப் பெற்றும் இனிய வாழ்நாளை அடைந்தும் உயிர்க்கு உரிய பயனை எய்தாமல் காலத்தை வீணே கழித்து ஒழிவது பழி கேடான இழி மடமை ஆகின்றது.

என்னேமற் றிவ்வுடம்பு பெற்றும் அறம் நினையார்
கொன்னே கழிப்பர்தம் வாழ்நாளை—அன்னோ
அளவிறந்த காதல்தம் ஆருயிர் அன்னார்க்
கொளவிழைக்கும் கூற்றமும் கண்டு. (நாலடியார்)

அன்புரிமையான இளைஞர் அழிந்து படுவதைக் கண் எதிரே கண்டிருந்தும் தன் உயிர்க்கு நன்மை செய்து கொள்ளாமல் வாழ்நாளை ஒருவன் வறிதே கழிப்பது முழு மூடமான பெரிய பரிதாபமாம் என்று இது பரிந்து நொந்துளளது.

சீவிய போகமாயுள்ள அருமை நாளைப் பயன் ஆக்காமல் பழுது படுத்தினவன் முடிவில் பாழாய்ப் பரிதபிக்கின்றான்.

கோடிக்கு அரை நிமிடம் கூற்றுவன் நல்கானே.

மனிதனுக்கு ஆயுளாக வாய்த்துள்ள காலத்தின் அருமையைக் கருதி உணரும்படி இது குறித்துள்ளது. அரை நிமிட நேரம் கோடி பொன்னினும் அதிக விலையுடையது. அத்தகைய காலம் அறுபது, எழுபது என ஆண்டுகளின் அளவாயக் கிடைத்திருந்தும யாதொரு பயனும்அடையாமல் மனிதன் அநியாயமாய் இழந்து போவது அவலமான பரிதாபமேயாம்.

உயிர்க்கு நலன் ஒன்றும் செய்யாமல் உள்ளம் களித்துத் திரிந்த ஓர் அரசன் மரணம் நேர்ந்த போது மறுகித் துடித்தான்; "பல கோடி பொன் தருகின்றேன்; ஒரு நிமிட நேரம் என்னை விட்டருளுங்கள்; நல்லது ஒன்று செய்யும்படி என் மகனிடம் சொல்லி வருகின்றேன்" என்று எமனிடம் மறுகி மன்றாடினான். அவன் யாதும் கேளாமல் ஒல்லையில் உயிரைக் கவர்ந்து போனான். இந்தப் பரிதாப நிலையை அறிந்து நின்ற யோக சித்தர் ஒருவர் வாழ்நாளின் அருமையையும், மனிதர் அதனைப் பயன்படுத்தாமல் பாழ் படுகின்ற நிலைமையையும் நினைந்து இரங்கி நெடு வனம் போயினர்.

"தேடப் படும்பொருளைச் சிக்கனவாகப் புதைத்துக்
கோடிக்கு ஒரு நிமிடம் கொள்ளுகினும்—கூடாத
வாணாளை வீணகழிக்கும் மானிடரைப போல்மயக்கம்
பூணுர்பொய் கண்டுதுறப் போர்." (ஒழிவிலொடுக்கம்)

அரிய வாழ்நாளை வறிதே வீண் கழிப்பவர் ஈனராய் இழிந்து

படுகின்றார்; அதனை இனிது பயன் படுத்துகின்றவர் ஞான நீரராய் உயர்ந்து திகழ்கின்றார்.

காலம் பொன்னினும் மணியினும் உயர்ந்தது; விலை மதிக்க முடியாதது; அந் நிலையினை உணர்ந்து பேணாதவர் புலையாய் அழிகின்றார். பேணிக் கொண்டவர் பெருமை பெறுகின்றார்.

சிறுகாலை யேதமக்குச் செல்வுழி வல்சி
இறுகிறுகத் தோட்கோப்புக் கொள்ளார்—இறுகிறுகிப்
பின்னறிவாம் என்றிருக்கும் பேதையார் கைகாட்டும்
பொன்னும் புளிவிளங்காய் ஆம். (நாலடியார்)

மறுமைக்கு உரிமையாக இளமையில் நல்லது யாதும் செய்து கொள்ளாத ஒரு பெரிய செல்வன் முதிர்ந்து சாக நேர்ந்தான். "ஒரு காசும் செலவழியாமல் படு உலோபமாய்ப் பெரும் பொருளைத் திரட்டினேம்; புண்ணியம் ஏதும் செய்ய வில்லை; அவ்வளவு செல்வங்களையும் விட்டுச் சாகப்போகின்றோமே! ஐயோ!" என்று ஏங்கினன். இப்பொழுதாவது சிறிது தருமம செய்து விடுவோம் என்று கருதி அருகில் நின்ற மனைவி மக்களை நோக்கிக் கொஞ்சம் பொருள் கொண்டுவரச் சொல்ல விரும்பினன்; வாய் பேச முடியவில்லை; நாவு எழாமையால கையால் சைகைகாட்டினன்; கிழவன் ஏதோ பொருள் கேட்கின்றான் என்று தெரிந்து கொண்டார்; "ஐயோ விளாங்காய்வேணடும என்கின்றாரோ; அது இப்பொழுது எங்கே கிடைக்கும்!" என்று அயலார் அறியச் சொல்லி நயமாக ஒத்து அழுதார். கிழவன் செத்தான். அந்தப் பரிதாப சரித்திரத்தை இந்தப் பாசுரம் விளக்கியிருக்கிறது.

கையால் பொதித்துணையே காட்டக்
  கயற்கண்ணாள் அதனைக் காட்டாள்;
ஐயா விளாம்பழமே என்கின்றீர்
  ஆங்கதற்குப் பருவம அன்று; என்
செய்கோ? எனச் சிறந்தாள் போல் சிறவாக்
  கட்டுரையால் குறித்த எல்லாம்
பொய்யே பொருளுரையா முன்னே
  கொடுததுணடல் புரிமின் கண்டீர்!

(சீவகசிந்தாமணி 1553)

மேலே குறித்த நிகழ்ச்சியை இதுவும் உரைத்துள்ளது. இற்றைக்கு ஆயிரத்தெண்ணூறு ஆண்டுகளுக்கு முன் நிகழ்ந்தது.

ஈண்டு நாம் காண்கின்றோம்; உலக வாழ்வில் உரிமையாளராய் அமைந்த இனங்களின் மனங்களை எண்ணியுணர்கின்றோம்.

சாங்காலேஓர் பிசுனன் பொருள் தானம் செய உன்னித்
தேங்கால் மொழி மனை மைந்தரை விளித்தான் அவர் தெரிந்தே
ஆங்காய் அவன் உரையாவிதம அவன்மேல் விழுந்து அழுதார்
தாங்காதவன் உயிர் தீர்ந்தனன் தனமபோல் பகையுளதோ?
(நீதிநூல்)

உலக உறவுகளின் நிலைமைகளை இவற்றால் உணர்ந்து கொள்ளலாம். இந்த வையமையலில் இருந்து தனக்கு உய்தி காண்பவன் மெய்யுணர்வுடையனாய் மேன்மை காண்கின்றான்.

வாழ்நாள் அருமையினை ஓர்ந்தால்
பாழ்நாள் படுமோ?

ஒரு கணப்பொழுது பல கோடி பொன்னினும் மேலானது எனத் தனது ஆயுள் நாளின் அருமையை ஒரு மனிதன் அறிவான் ஆயின் பெருவிலை மணியைப் பேணுவது போல் யாண்டும் உரிமையுடன் கருதிக் காப்பன்; அதனை எவ்வழியும் யாதும் பழுது படுத்த மாட்டான்; எண்ணிய கணங்கள் யாவும் புண்ணிய மணங்களாப் புனிதம் ஆக்கிக் கொள்வன். ஓர்ந்தால் படுமோ? என்றது ஓராமையால் கெடுகின்ற கேடு தெரிய வந்தது.

நாளும் நல்லது நினைந்து நலம் புரிந்து வருபவன் தன் உயிர் வாழ்வை உயர் கதியில் உய்க்கின்றான்; இகமும் பரமும் அவனுக்குச் சுக நிலையங்கள் ஆகின்றன. அதிசயமான தெய்வத் தேசு அவனை யாண்டும் சூழ்ந்து நிற்கின்றது.

காலத்தைக் கருதிப் பேணாமல் வீணே கழியவிடின் காலன் கையில் கொடுமையாய் அவன் அழிந்து படுவான் என்க.

தனக்கு உரிமையாக அமைந்த நாளைப் புனிதமாகப் போற்றி வாழுகின்றவன் மனிதருள் தெய்வமாய் மகிமை பெறுகிறான்.

---

440. நாளின் கழிவை நறியவுயி ரின்அழிவா
நாளும் நினைந்து நவைஓரீஇ—நீளும்
உளம்புனித மாக ஒழுகி வருக
களம்புகுந்து நிற்கும் கதி. (ய)

இ—ள்

நாள் கழிவதை உயிர் அழிவதாக நினைந்து குற்றம் நீங்கி

குணங்கள் ஓங்கிச் சித்த சுத்தியுடன் ஒழுகி வருக; முத்தி நிலை உன் முன் வந்து நிற்கும் என்பதாம்.

இது சீவிய நாள் சீவன் என்கின்றது.

தாம் சுகமாக வாழவேண்டும் என்றே சீவ கோடிகள் யாண்டும் ஆவலித்து அலைகின்றன. உயிரினங்களின் போக்கும் நோக்கும் துயரினங்களை நீக்கி உயரினங்களாகவே ஊக்கி நிற்கின்றன.

பசிப்பிணியை உணவு நீக்குகின்றது; ஆதலால் மனிதன் அதனை விழைகின்றான்; விழைந்தது கிடைத்தவுடன் உள்ளம் உவந்து கொள்கின்றான. இவ்வாறே எல்லா இன்பங்களும் துன்பங்களை நீக்கிக் கொள்ளும் அளவில் தொடர்ந்து வருகின்றன. வரவே மனித வாழ்வுகள் எவ்வழியும் அவலக் கவலைகள் அடர்ந்து படர்ந்தன என்பது விளங்கி நிற்கிறது. இத்தகைய நிலையில் சீவிய காலம் ஓவியமாய்க் கழிந்து வருகின்றது.

நாளின் கழிவு உயிரின் அழிவு.

காலம் கழிந்து போவதை உணர்ந்து கொள்வது தெளிந்த ஒரு திவ்விய ஞானமாம். உண்மை தெரிவது அரிது ஆதலால் நன்மை அடையாமல் மனிதன் புன்மையாய்ப் போகின்றான்.

ஆயுள் ஒருவனுக்கு அறுபது ஆண்டுகள் வரை அமைந்துள்ளதாக வைத்துக் கொள்வோம்; அவற்றுள் ஒருநாள் கழியின் அவன் சிறிது செத்தவன ஆகின்றான். நாள் கழிந்து போகுந்தோறும் ஆள அழிந்து வருதலால் அக் கழிவு அழிவு என வந்தது.

மனிதன் விடுகின்ற ஒவ்வொரு மூச்சிலும் உயிர் போய்க் கொண்டே இருக்கின்றது. அம் மூச்சைத் தரும சிந்தனையோடு வெளி விடுகின்றவன் மறுமையில் அழியாத இனப நலனை அடைந்து கொள்கின்றான; அங்ஙனம் செய்யாதவன் இறுதி மூச்சோடு வறியனாய் முடிந்து அடுதுயரில் வீழ்கின்றான்.

காலம் கழிவதைக் கருதியுணர்ந்து வாழ்வை மேலான இன்ப நிலையமாகச் செய்து கொள்வதே சாலவும் நன்மையாம்.

"We should count time by heart-throbs. He most lives who thinks most, feels the noblest, acts the best"

(James Bailey)

"இருதயத் துடிப்புகளைக் கொண்டு காலத்தை நாம் கணித்துக் கொள்ள வேண்டும்; நன்மைகளை நினைந்து, உயர்ந்த தன்மைகளை உணர்ந்து, சிறந்த கருமங்களைப் புரிந்து வருகிற அந்த மனித வாழ்வே மாண்புடையதாம்" என ஜேம்ஸ் பெய்லி என்னும் மேல் நாட்டுப் பெரியார் இவ்வாறு கூறியிருக்கிறார்.

கடிகாரத் துடிப்பு போல் இதயத் துடிப்பு காலக் கழிவைக் காட்டுகின்றது; அந்த உள்ளத்துடிப்புகளுள் நல்லதை மடுத்து எவ்வழியும் வாழ்நாளை நன்மையாக்கிக் கொள்க.

மனிதனுடைய வாழ்நாளின் முடிவு மரணம் எனப்படும். இளமை மூப்பு என்பன அந்த மரண யாத்திரையின் இடையே சிறிது தங்கியிருக்கும் நிலையங்களாயுள்ளன.

முதல் நிலை கழியு முன்னரே பிறவிப் பயனை அடைந்து கொள்ள வேண்டும்; இன்றேல் பிழை மிகப்படும் என்று மேலோர் பலவாறு பரிந்து எச்சரித்து நிற்கின்றனர்.

முப்பதாம் ஆண்டளவில் மூன்றற்று ஒருபொருளைத்
தப்பாமல் தன்னுட் பெறுனயின்—செப்பும்
கலையளவே யாகுமாம் காரிகையார் தங்கள்
முலையளவே யாகுமா மூப்பு. (நல்வழி 39)

முப்பது வயதுள் மனிதன் பிறவிப் பயனைப் பெறுன் ஆயின் பின்பு அவன் பிழையாய் நிற்க நேர்வன் என ஔவையார் இவ்வாறு பாடியிருக்கிறார். இந்தப் பாட்டியின் பாட்டைக் கவனித்துப் படித்துப் பாருங்கள். உவமான உவமேயங்கள் நவமான நயங்கள் படிந்துள்ளன.

காமம், வெகுளி, மயக்கம் என்னும் மூன்று குற்றங்களும் நீங்கி ஒரு பொருளான கடவுளைப் பருவமுள்ள பொழுதே உரிமையாய் மருவிக் கொள்ளுக; அங்ஙனம் கொள்ளாது விடின் உன் கல்வியறிவு புல்லிதாய் இழியும் என்று சொல்ல வந்தவர் இவ்வாறு சொல்லியுள்ளார். நூலறிவுக்குப் பயன் வாலறிவனை மருவுதலே ஆதலால் கலையும் கடவுளும் ஒரு நிலையில் வந்தன.

பரம பதியைத் தோயாதவன் கலை, தன் பதியைத் தோய முடியாத கிழவி மூலை போல் ஒரு சுவையும் இன்றி வீணே நாணமாய் விழுந்து கிடக்கும் என்பதாம். பருவத்தில் பரனை மருவினவன் தருணத்தில் கணவனைக் கூடிய பருவ மங்கை போல் பேரின்ப போகங்களை நேரே நுகர்ந்து மகிழ்ந்து திகழ்கின்றுன்.

சிவானந்தா' பரமான்மாவைச் சேர்ந்து கொள்வதே பிறவிப் பேறான பேரின்ப நிலையாம். அடைய வழியதைப் பருவம் தவறாமல் அடைந்து கொண்டவன் அமரனாகின்றான்; அடையாதவன் கடையாய் இழிகின்றான்.

"வேற்கண் மடவார் விழைவு ஒழிய யாம் விழையக்
கோற்கண் நெறிகாட்டக் கொல் கூற்று உழையதா
நாற்பது இகந்தாம் நரைத்தூதும் வந்ததினி
நீத்தல் துணிவாம் நிலையாது இளமையே.

நாற்பது வயது கழிந்தது; மரண தூதுவனைப் போல் நரையும் வந்தது; எமனும் அயலே நிற்கின்றான்; உயிர்க்குப் பயனை நாடி இனி உய்தி பெற வேண்டும் என ஒரு மெய்யுணர்வாளன் எண்ணியுள்ளமையை இச் செய்யுளில் காண்கின்றோம்.

மூப்பு வருமுன்னே சிவனுக்குக் காப்பைத் தேடிக் கொள்வது நலம். இளமையில் பழகிய பழக்கமே முதுமையிலும் தொடரும் ஆதலால் காலம் கழியுமுன்னரே ஞான சீலங்களில் ஒழுகி வருவது விழுமிய மேன்மையாய் விளைந்து வருகின்றது.

"Be wise with speed;
A fool at forty is a fool indeed." (Young)

"இளமையிலேயே ஞானம் உடையவனாகுக; நாற்பதில் மூடன் ஆயுள்ளவன் என்றும் முழு மூடனே ஆவன்" என்னும் இது ஈண்டு எண்ணத்தக்கது. பாலியத்திலேயே சிலவேலி கோலி சீவியம் பெறுகளனக் காவியங்கள்யாவும் போதித்து வருகின்றன.

உளம் புனிதம் ஆக ஒழுகி வருக.

மனம் தூய்மையே எல்லா மேன்மைகளுக்கும் மூல காரணமாயுள்ளது. சித்த சுத்தியால் கருதிய சித்திகள் யாவும் எளிதே கைகூடுகின்றன. அந்தப் புனித உளம் இளமையிலேயே அமையின் அவன் தனி மகிமை அடைகின்றான்.

களம் புகுந்து நிற்கும் கதி என்றது உள்ளம் புனிதமுடையார்க்கு உளவாம் உறுதி நலனை உணர்த்தியது.

மாசு அற்ற மனம் ஈசனுக்கு இடம் ஆகின்றது. ஆகவே கதி நிலை அவன் எதிர் வருகின்றது. களம் = இடம், மனம்.

ஆயுள் விரைந்து கழியும் இயல்பினது; பருவம் ஒருவுமுன் தரும நலம் மருவி உய்வது இருமையும் பெருமையாம். தேக

போகங்களையே நச்சிச் சாகாதே; சீவ உய்தியைச் செய்து தேவ கதியை மேவிக் கொள்ளுக.

முருந்தனைய தூமுறுவல் முற்றிழையார் சேரி
இருந்திளமைக் கள்உண்டு இடைதெரிதல் இன்றிக்
கருந்தலைகள் வெண்தலைக ளாய்க்கழியு முன்னே
அருந்தவமும் தானமும் ஆற்றுமினே கண்டீர்! (சிந்தாமணி)

பொறி வெறிகளிலேயே அழுந்தி யுழந்து வறிதே அழிந்து போகாதே; நரை வருமுன் நல்லது செய்து உய்க என இது உறுதி கூறியுளது. உரைகள் உயிர்களின் நலன்களை உணர்த்துகின்றன.

எரிபுரை எழிலதாய இளம்தளிர் இரண்டு நாளின்
மரகத உருவம் எய்தி மற்றது பசலை கொண்டு
சருகிலை ஆகி வீழ்ந்து கரிந்து மண் ஆதல் கண்டும்
வெருவிலர் வாழ்தும் என்பார் வெளிற்றினை விலக்கலாமே.
(சூளாமணி)

மரத்தில் கிளைத்த ஒரு தளிர் செந்நிறமாய்த் திகழ்ந்து பசிய இலையாய் மாறிப் பின்பு பழுத்துச் சருகாய்க் கரிந்து விழுதலைக் கண்டும் மனிதன் உறுநிலை காணாமல் தன் காலத்தை வீண்கழித்து விளிகின்றானே! என்று இது பரிந்து பகர்ந்துள்ளது.

நிலைமை தெரியாமல் வீணே மூத்து விளியாதே; பருவம் உள்ள பொழுதே உன் உயிர்க்கு நன்மையைப் பார்த்து வருக.

உனக்குச் சீவிய நிலையமாய் வாய்த்துள்ள வாழ்நாளை யாதும் பழுதாக்காமல் ஆன்ம சிந்தனையுடன் மேன்மை அடைக.

இவ் அதிகாரத்தின் தொகைக் குறிப்பு.

வாழ்நாள் என்பது சீவிய காலம்.
அது கழிந்து போகும் இயல்பினது.
காலம் கழிவது காலன் வருவதாம்.
நாளைப் பாழ் ஆக்க லாகாது.
மனிதன் எமன் வாய் இரை.
நிதமும் செத்து வருகின்றான்.
அழிவு நிலையை அறிதல் வேண்டும்.
அறியாது களிப்பது அவ கேடாம்.
அறிந்து உய்வது சிறந்த பேறாம்.
உண்மை உணர்வது உயர்கதி உறுவதாம்.

சசச-வது வாழ்நாள் முற்றிற்று.

# நாற்பத்தைந்தாம் அதிகாரம்

## ந சை ச.

---

அஃதாவது பாழான ஆசையின் பழி நிலை. ஈன இச்சைமான வாழ்வை மாசு படுத்தும் ஆதலால் அந்த இழிவில் இழியாமல் ஒழுகுக என உணர்வு கூறுகின்றது. வாழ்வின் உயர் நலனை உணர்த்துகின்றமையால் வாழ்நாளின்பின் இது வைக்கப்பட்டது.

441\. ஓசைக் கடல்சூழ் உலகில் உயிரெல்லாம்
ஆசைக் கடல்வீழ்ந் தலறுமால்—பேசரிய
துன்பம் அடைந்தும் தொடர நினைந்திலதே
இன்பம் இருக்கும் இடம். (க)

இ—ள்

அலைகளை வீசி முழங்குகின்ற கடல் சூழ்ந்த உலகில் உடல் சூழ்ந்த உயிர்கள் யாவும் ஆசைக் கடலில் வீழ்ந்து அலமருகின்றன; சொல்ல முடியாத கொடிய துன்பங்களை அனுபவித்தும் நல்ல இன்ப நிலையை நாடியுணராமல் இருக்கின்றன என்பதாம்.

உயிர் வாழ்வு பலவகை மருள்களில் படிந்து அலையிடைத் துரும்புபோல் நிலைகுலைந்து அலைந்து மயங்கி இயங்கி வருகின்றது. பசியும் காமமும் உடலையும் உயிரையும் தொடர்ந்து அடர்ந்து வருதலால் சீவ கோடிகள் ஓயாது ஓடி உளைந்து உழலுகின்றன.

"பசியும் பிணியும் பகையும் நீங்கி
வசியும் வளனும் சுரக்க" (மணிமேகலை)

என வாழ்த்தித் தெய்வத்தை வழிபாடு செய்துள்ளமையால் வையத்தவர்களின் வாழ்க்கைக் கவலைகளை நன்கு அறியலாகும்.

மனிதன் முன்னும் பின்னும் எண்ணி அறியும் இயல்பினன் ஆதலால் எண்ணரிய இச்சைகள் அவன் உள்ளத்தில் இடம் பெறலாயின. அவற்றுள் ஆசை என்பது உச்ச நிலையில் கொச்சையாய் ஓங்கியுள்ளது. அளவு மீறியது அவலமாய் மாறியது.

நினைவு, எண்ணம், விருப்பம், வேட்கை, ஆசை என்னும் இவை ஒன்றினும் ஒன்று கிளர்ந்து வளர்ந்து உயர்ந்து நிற்கின்றன.

தனக்கு ஒரு பொருள் வேண்டும் என்று மனிதன் நினைக்கின்றான். அது நினைவு என நேர்ந்தது. அந்த நினைவு தொடர்ந்து நிகழ்ந்தது எண்ணம் என வந்தது. அந்த எண்ணம் விரிந்து எழுந்தது விருப்பம் என நின்றது. அவ் விருப்பம் வீறு கொண்டு விரைந்தது வேட்கை என விளைந்தது. அவ் வேட்கை எல்லை கடந்து சென்றது ஆசை என்று சொல்ல அமைந்தது.

இது பல வகை நிலைகளில் பரவி உயிரினங்களை மருவி ஊசலாட்டி வருகின்றது. அவ் வுருவங்களுக்கும் பருவங்களுக்கும் உரிய பெயர்கள் அமைந்தன. சில அயலே வருகின்றன.

மாதர் நச்சு இச்சை ஏடை வயா நம்பு நசை நயப்புக்
காதல் வெப்பம் விருப்பம் காமமே இராகம் பற்றே
ஆதரம் பெட்பு வேட்கை ஆர்வமே மேவல் வெஃகல்
ஓதிய விழைவு மூவேழ் உறுபெயர் ஆசை ஆமே. (நிகண்டு)

ஆசையின் பரியாயமாய் இங்கே இருபத்தொரு நாமங்கள் வந்துள்ளன. யாவும் காரணப் பெயர்கள். குறிப்புகளைக் கூர்ந்து ஓர்ந்து கொள்க. மானச நீர்மைகள் மருமங்களுடையன.

ஆசையைக் கடல் என்றது தன்னுள் வீழ்ந்தவர் எல்லை காண முடியாமல் அல்லல் உழந்து ஆழ்ந்து படுதல் கருதி.

"ஆசைச் சுழற்கடலில் ஆழாமல் ஐயா! நின்
நேசப் புணைத்தாள் நிறுத்தினால் ஆகாதோ?"

ஈசனை நோக்கித் தாயுமானவர் இவ்வாறு கூவியிருக்கிறார். கடலில் விழுந்தவன் கப்பல் தலைவனை அலறி அழைத்தது போல் கதறியுள்ளார். சுழல் கடல் என்றதனால் எவரையும் சுழித்து இழுத்துத் தன்னுள் அழுத்தி ஆழ்த்தும் அபாய நிலை அறியலாகும்.

ஆசைக் கடல் வீழ்ந்து அலறுமால்.

என்றது ஆசைப் பிணிப்புகளிலிருந்து மீளமுடியாமல் சீவர்கள் பரிதபித்து உழலும் பாடு தெரிய வந்தது. மெய்யுணர்வுடையவரும் அதை ஒழித்து உய்ய மாட்டாமல் ஐயகோ! என அலறியுள்ளனர். பாசப் பிணிப்பு படுதுயர் ஆகின்றது.

ஆசைவன் பாசம் எய்தி அங்குற்றேன் இங்குற்றேனாய்
ஊசலாட் டுண்டு வாளா உழந்து நான் உழிதராமே

தேசனே! தேச மூர்த்தி! திருமறைக் காடு மேய
ஈசனே! உன்தன் பாதம் ஏத்துமாறு அருள்எம் மானே!
(தேவாரம்)

திருநாவுக்கரசு நாயனார் இறைவனை நினைந்து இங்ஙனம் மறுகியிருக்கின்றார். வலிய பெரிய இரும்புச் சங்கிலியாய் உள்ளத்தை ஆசை பிணித்துள்ளமையால் அதனைத் தள்ளி நீங்க முடியாமல் உயிர் தளர்ந்து தவிக்கின்றது.

ஆசைவன் டாசத் திரளினால் கட்டுண்டு
அரும்பிணி ஈக்கடிக்கு அணுங்கி
ஏசுறு போகக் கதைகளால் மொத்துண்டு
இச்சைமுட் கோலினால் உலைந்து
காசுறு கருமச் சேற்றிலே அழுந்திக
கடுஞ்சகக் காடடிலே சுழன்று
வீசுமா மோகத் தளிர்நிழல் துயிலும்
வீரனே சீவன்ஆம் எருது. (1)

மேவுறு துன்பப் பெருஞ்சுமை சுமந்து
மீட்சி போக்கிலை உடற்புண்ணு
ஈவறு பிறவிக் குழியில்வீழ் சீவ
எருத்தினை இக்குழி நின்றும்
ஓவலின் முயல்வால் எடுப்பதே வலியாம்;
உயர்ந்த ஞானிகள் உறவுளதேல்
நாவிகர் நாவாய் தருவபோல் ஊகம்
நல்குவர் பவக்கடல் கடக்க. (2)

எவ்விடத் தில்லை நல்ல ஞானிகளாம்
ஈர்ங்கனி மலர்குளிர் சோலை
அவ்விடம் கானல் மேடதாம்; ஆங்கே
அமர்பவர் அறிவிலாரன்றோ?
கவ்விய செல்வம் நட்புநூல் சுற்றம்
கருமமாதிகள் எலாம் உதவா;
செவ்விய மனமே உதவுறல் வேண்டும்
சீவனைச் செல்கதி ஏற. (ஞானவாசிட்டம்)

இந்தப் பாசுரங்களில் வந்துள்ள உருவக நிலைகளை ஊன்றி உணர்ந்து கொள்ள வேண்டும். சீவன் ஆகிய எருது, ஆசைக் கயிறுகளால் கட்டுண்டு, அல்லல்களாகிய ஈக்கள் கடிக்க, காம இச்சையாகிய தாற்றுக் கோலினால் அடியும் குத்தும் பட்டு, கருமச் சேற்றில் அழுந்தி, உலகக் காட்டில் அலைந்து, சிற்றின்பமான

குளிர் மா நிழலிலே சிறிது கண் அயர்ந்து எழுந்து, பெரும் பாரங்களைச் சுமந்து பிறவிக் குழியில் விழுந்து வருந்துகின்றது. திவ்விய குரு அல்லது செவ்விய மனம் துணை கிடைக்குமாயின் அது உய்தி அடையும் என இது உணர்த்தியுள்ளது.

மனித வாழ்வை இனிது சித்திரித்திருக்கும் இக் காவிய ஓவியத்தைக் கருதி நோக்கிச் சீவிய நிலைகளைச் சிந்திக்கவேண்டும்.

சீவனை மாடு என்றது ஆசைக் கயிற்றில் அகப்பட்டு உறுதி நலன் ஒன்றும் கருதாமல் ஓயாது உழைத்து வருதல் நோக்கி. பாடுபட்டு எவ்வளவு பணம் தேடி வைத்தாலும் வயது முதிர்ந்தவுடன் மனைவி மக்கள் அவனை மதியாது போகின்றனர். "கிழட்டு மாட்டைப் புழக்கடையில் கட்டு" என இந் நாட்டில் வழங்கி வரும் பழமொழியைக் கிழவர் எவரும் தமக்குக் கிழமையாச் சொல்லிக் கொள்ளுகின்றனர். பாசம்=கயிறு வன்மை அதன் தன்மையை உணர்த்தியது. திரள் என்றது ஆசைக் கூட்டங்களை.

"ஆசைக் கயிற்றில் ஆடும் பம்பரம்"

என மனித வாழ்வைக் குறித்துப் பட்டினத்தார் இங்ஙனம் பாடியிருக்கிறார். பல பிறவிகளிலும் உயிர்களை ஓயாமல் ஆட்டி வருதலால் ஆசைப் பூட்டு ஊசல் ஆட்டு என நேர்ந்தது.

ஆசையும் பாசமும் அன்பும் அகத்தடக்கிப்
பூசிப் பொதிந்த புலாலுடம்பு—ஊசல்
கயிறற்றாற் போலக் கிடக்குமே கூற்றத்து
எயிறுற றிடைமுரிந்தக் கால். (அறநெறிச்சாரம்)

உயிர் பிரிந்த போது உடல் கயிறு அற்ற ஊஞ்சல் பலகை போல் தரையில் கிடக்கும் என இது காட்டியிருக்கும் காட்சியைக் கருதிக் காணுக. உயிர் வாழ்வு துயர் வீழ்வாய் முடிகின்றது.

துன்பம் அடைந்தும் இன்பம் நினைந்திலதே!

ஆசையால் அல்லல் பல உழந்தும் அதனை ஒல்லையில் ஒருவி நல்ல சுகம் நாடாமல் மனிதன் மடமையால் மடிந்துள்ளானே! என்று மறுகி இரங்கி இது பரிவு கூர்ந்து வந்தது. உள்ளம் பரிந்துள்ள நிலைமையை ஏகாரம் உணர்த்தி நின்றது.

உணர்வை நிலை குலைத்து உள்ளத்தைச் சூறையாடுதலால் ஆசையைச் சுழல்வளி என்பர். சூறைக் காற்றில் அகப்பட்ட

செத்தைகளைப் போல் ஆசைச் சுழலில் அகப்பட்ட சீவர்கள் யாதும் அமைதியின்றி அலமந்து உழலுகின்றனர்.

ஆசையுட் பட்டவர் அல்லற் பட்டவர்;
ஆசையுட் பட்டவர் அளற்றிற் பட்டவர்;
ஆசையுட் பட்டவர் அயர்விற் பட்டவர்;
ஆசையுட் பட்டவர் அரங்கப் பட்டவர். (1)

ஆசையில் லார்களே அறவர் மேலவர்;
ஆசையில் லார்களே அருந்த வத்தினர்;
ஆசையில் லார்களே அருட்கலப் பினர்
ஆசையில் லார்களே அரிய முத்தர்கள், (காசி ரகசியம்)

ஆசை உற்றவர் நிலைமையும், அற்றவர் தலைமையும் இவை தெற்றென விளக்கியுள்ளன. ஆசை அல்லல் எனப் பழமொழியாகவும் வெளி வந்துள்ளது.

தனது விருப்பத்தை முறையான வகையில் பயன்படுத்தி நிறையோடு நிதானமாய் நடத்திவரின் அந்த மனித வாழ்வு இனிமையுடையதாம்; அங்ஙனம் இன்றிப் பேராசை மண்டி நின்றால் அது தீராத துன்பமாம்.

நெருப்பை அடுப்பில் வைத்துப் பாகம் செய்து கொள்வது போல் உன் விருப்பை அளவாக இருத்திப் போகம் செய்து கொள்க; அளவு மீறினால் கூரையில் ஏறிய தீபோல் ஆசை உன்னை மோசம் செய்து நாசம் ஆக்கி விடும்.

ஆசை வெறி மீறி நாசம் அடையாமல் வாழ்வை யோசனையுடன் வாசமா நடத்தி ஈசன் அருள் நாடித் தேசு பெறுக.

---

442. வீண நகையால் விளிவு விளையுமால்
பூண வகையும் பொருந்துமே—காணவரு
அல்லல் களையா தழிவடைதல் நல்லதோ
எல்லை தெரிக இனிது. (உ)

இ—ள்

இழி நகையால் அழிவு விளைகின்றது; பழி வருகின்றது; இவ்வாறு நிகழ்கின்ற அல்லல்களைக் களைந்து ஒழிக்காமல் அழிந்து படுதல் அவலமாம்; நிலைமையை விரைந்து தெளிந்து தலைமையான தகைமையுடன் நலம் அடைக என்பதாம்.

இது, நசை வசை என்கின்றது.

தன் தகுதிக்கு ஏற்ப விரும்பி முயன்றால் அம் முயற்சி மனிதனுக்கு உயர்ச்சி அருள்கின்றது; தகாத நிலையில் பிழையாய் விழையின் அது பேராசையாய் இழிவு தருகின்றது.

தான் கருதிய பொருளைப் பெறுதற்கு உறுதியாக முயல்வது கடமையாம். அந்தக் கடமைகளின் அளவே உடைமைகளை அடைய ஒருவன் உரிமை ஆகின்றான்.

நசை என்பது இளிவான இச்சையைக் குறித்து வரும்.

தெளிவான உணர்வு நலம் உடையவர்பால் இந்த இளிவு நேராது. உரிய முயற்சிகளைச் செய்து உயர்ந்த பலன்களைப் பெறாமல் இழிந்த நோக்கில் நச்சி நிற்பது எதுவோ அது நசை என வந்தது. இச்சகம் பேசி இழிந்து நின்று வயிறு வளர்க்கின்ற கொச்சை மக்கள்பால் பெரும்பாலும் இது குடி புகுந்திருக்கும்.

வீண நசையால் விளிவு விளையும்.

என்றது அதன் ஈன நிலை தெரிய வந்தது.

நேர்மையான முறையில் முயன்று பொருளைப் பெறுதல் மாண்பு ஆம்; அங்ஙனமின்றி மடியும் மடமையுமே மண்டிக் கரவும் கபடும் படிந்து வரவு காண விழைவது கொடிய இழிவாம். வீண என்றது அடையாமல் பாழான அதன் பழி நிலை காணலாகும்.

இந்த இளி நசை நெஞ்சு புகுந்தால் அந்த மனிதனுடைய பெருமையும் கம்பீரமும் அழிந்து போம்; சிறுமைகளே எவ் வழியும் பெருகி நிற்கும். மனிதத் தன்மையைக் கெடுத்து விடுதலால் நசை கேடு என வந்தது. விளிவு=அழிவு, கேடு

"நசையிற் பெரியதோர் நல்குரவு இல்லை" (முதுமொழிக்காஞ்சி)

நசை கொடிய வறுமை என்று இது குறித்துள்ளது.

மிகுந்த செல்வம் வாய்ந்திருந்தாலும் உள்ளத்தில் நசை தோய்ந்திருக்குமாயின் அந்த மனிதன் அவலமுடையனாய் எங்கும் இழிந்தே நிற்பன். வறுமையுடையனாயினும் நசை இலன் ஆயின் அவன் யாண்டும் மேன்மையாளனாய் மேவி விளங்குவன்.

இயன்ற வரை முயன்று அமைந்தது போதும் என்று அமைதியுடன் வாழ்பவன் உயர்ந்த பாக்கியவானாய் ஒளி மிகப்

பெறுகின்றான். மன அமைதி மனிதனுடைய வாழ்க்கையை எவ் வழியும் இனிமையாக்கிப் புனிதம் செய்கின்றது.

திருத்தி என்பது திருந்திய பண்பிலிருந்து அரும்பியுள்ளது.

நிறைவு, பூரணம், பூரிப்பு, மனரம்மியம் என்னும் மொழிகள் உயர் பொருளுடையன. நசை படிந்த நெஞ்சம் இழிந்து மெலிந்து படுகின்றது அது படியாதது உயர்ந்து சிறந்து திகழ்கின்றது. உள்ளத்தைப் பழுதாக்கி உணர்வைச் சிதைத்து விடுதலால் அது இளிவாய் இகழப்பட்டது.

திருந்திய மன நிறைவு பெருந்தகைமை ஆகின்றது.

"The noblest mind the best contentment has" (Spenser)

"நல்ல நிறைவுடையதே மேலான உயர்ந்த உள்ளமாம்" என ஸ்பென்சர் என்னும் மேல் நாட்டுப் பெரியார் இங்ஙனம் கூறியுள்ளார். இச்சை அடங்கிய அளவு உச்ச நிலையை அடைகிறான்.

எல்லை தெரிக என்றது வீணசையால் அல்லலும் இளிவுகளுமே உளவாதலால் அதனை ஒழித்து அளவாக அமைந்து வாழுக என்றவாறு. இன்பம் புண்ணியத்தால் வருதலால் தன் உள்ளத்தைப் புனித நிலையில் வைத்து மனிதன் ஒழுகிவரின் அவன் கருதியன எல்லாம் எளிதே வந்து கைகூடுகின்றன. கரும தாதாவாகிய இறைவன் தகுதியறிந்து உரியவர்க்கு உரிமைகளை உதவியருள்கின்றான். பண்பு படிய இன்பங்கள் படிகின்றன.

நசை எவ்வழியும் வசையாம்; அப் பழியுள் விழுந்து பாழாகாதே. தரும சிந்தனையோடு கருமங்களைச் செய்; உரிய பலன்கள் உன்னை நோக்கி வரும்; அவ்வளவு இருமையும் பெருமையாம்.

---

443. பேராசை பொங்கியதேல் பேயாய் மனம்திரிந்து
பாராசை எங்கும் பறந்துமே—நீராசை
கொண்டநாய் போலக் குலைந்தோடி யாண்டுமே
கண்டமே காணும் கழிந்து. (ங)

இ—ள்

கொடிய ஆசை பெருகி எழுந்தால் மனம் நிலை குலைந்து மதியழிந்து வெறி கொண்ட நாய் போல் உலகம் எங்கும் மனிதன் ஓடி உழலுவான்; யாண்டும் அபாயமே கண்டு அலமருவன் என்க.

இது, இச்சை மிகின் ஈனங்கள் மிகும் என்கின்றது.

ஆசை அளவு மீறின் பேராசை ஆகின்றது. ஆகவே மனிதனை அது பேயாக்கி நாயாக்கிப் பெருங்கேடு செய்ய நேர்கின்றது. வெறி கொண்டு விரைந்து அலைதற்கும், இழிந்து திரிதற்கும் பேயும் நாயும் இனமாய்ப் பேச வந்தன.

அறிவும் அமைதியும் நிதானமும் மனிதனை இதமும் இனிமையும் பதமும் உடையவனுச் செய்கின்றன. அகத்தில் மருவிய இயல்புகளின்படியே புறத்தில் செயல்கள் நிகழுகின்றன.

ஆசை பொல்லாதது ஆதலால் அது புகுந்தவுடனே நல்ல நீர்மைகள் எல்லாம் நாசம் அடைகின்றன. அடையவே மனிதன் பேயனுய்த் தீய வழிகளில் செருக்கித் திரிகின்ருன். பல வகை இழிவு நிலைகளுள் சில அயலே காண வருகின்றன.

"வறிய வான உரைபல கேட்பன;
மாண்டு மீண்டினி வாரா வழியினைச்
செறியலான பொருள்கள் தெரிந்துரை
செய்யும் எல்லை செவிடுகள் ஆவன, (1)

வம்பு கூறின் உடம்பெலாம் வெறும்
வாய்களாகி வடித்தற்கு வல்லன;
உம்பர் கோனடித் தாமரை போற்றி நின்று
உரைக்க என்னில் வெற்றூமைகள் ஆவன. (2)

ஆவது ஒன்றிலை யாயினும் தன்னைமேல்
ஆக வுன்னி அறக்கடை யாவன;
பாவகத்து ஒன்று இலாதமை காட்டவே
படபடத்துத் தன் பாழ்வாய் திறப்பன. (3)

உண்ண லான இடந்தொறும் மற்றவர்க்கு
உற்ற நட்டவர் போல்உறவு ஆடுவ;
கணணனுர் சிலர் ஆயினும் கைப்பொருள்
இல்லை யாகில் கழலக் கழல்வன. (4)

கண்ட மட்டின் இதுவன்றி வேறென்றும்
கண்டிலம் கதி என்னும் கருத்தினுல்
பிண்டம் இட்டவர் தம்பிறகே ஞஞ்ஞை
பிஞ்ஞை என்று பிதற்றித் திரிவன. (5)

வயிறு சாணும் வளர்த்தற் பொருட்டந்த
வானும் சென்று வரக்கா லுடையன;

கயிறும் கம்பையும் ஏடும் பிறர்க்கொரு
காட்சி போல்வரும் புத்தகக் கையன.'' (6)

(அஞ்ஞவதைப் பரணி)

உலகக் காட்டில் திரிகின்ற மனிதப் பேய்களுள் சிலவற்றைக் குறித்துத் தத்துவராயர் இப்படி வருணித்திருக்கின்றார். கூறியுள்ள அடையாளங்கள் கூர்ந்து காண வுரியன. ஆன்ம நலனை இழந்து அவல நிலையில் இழிந்து அலைந்து படுகின்ற மக்களை மாக்கள் எனவும், பேய்கள் எனவும் மேலோர் இகழ்ந்துள்ளனர். இகழ்ச்சி எல்லாம் அவர் மேல் வைத்த இரக்கத்தால் நேர்ந்தன.

ஆசை மதியைக் கெடுக்கும்; மதிப்பைத் தொலைக்கும்; ஆண்மையை அழிக்கும்; மேன்மையை ஒழிக்கும்; பான்மையைச் சிதைத்துப் படுதுயராக்கி யாண்டும் கீழ்மைகளையே விளைக்கும்; அந்த ஈன நிலையை மருவாதிருத்தலே ஞான சீலமாம்.

பேராசைக்காரனை பெரும் புளுகன் வெல்லுவான் என்னும் பழமொழி ஆசையின் அவ நிலையை வெளிப்படுத்தியுள்ளது. பொருள் இருந்தாலும் ஆசைமிகின் அவன் மருளனாய் இருளடைந்து இழிகின்றான். தலைமையான அறிவை நாசம் செய்தலால் அந்த நீசம் மனிதரை நிலை குலையச் செய்கின்றது.

''பேராசை யால் ஈனர் பின்சென்று உழன்றும்
தீராத மிடியாளர் சிலர்பாரில் உண்டே;
நேராக வரில் வாழ்வு நினையாமல் வருமால்
வாராதது ஆர் தாம் வருந்தினும் வராதே.''

(மெய்ஞ்ஞான விளக்கம்)

பேராசையுறின் மானம் இழந்து மனிதன் ஈனமாய்த் திரிய நேர்வன் என்பது இதில் அறிய வந்தது. பலவகைகளிலும் இழிவுகளை உளவாக்குதலால் அது ஒரு அழிபிசாசு என அஞ்ச நின்றது.

''ஆசைவ ராக்ஷஸீ பும்ஸாமாசைவ விஷமஞ்சரீ
ஆசைவ ஜீர்ண மதிரா திகாசாம் ஸர்வதோஷகாம்.''

''ஆசையே தீய இராட்சசி; மனிதர்க்கு அது கொடிய நஞ்சுத்திரள்; கெட்ட கள்; எல்லாக் கேடுகளுக்கும் காரணமானது. அந்தப் பொல்லாத நீசத்தை யாண்டும் தீண்டாமல் ஒழித்து விட வேண்டும்'' என்னும் இது ஈண்டுஎண்ணத்தக்கது.

பேராசை என்பது பெரும்பாலும் செல்வர்களிடத்தேதான் செல்லமாய் வளர்ந்து பொல்லாத நிலையில் பேய்க் கூத்து ஆடுகின்றது. பொருள் பெருகப் பெருக ஆசையும் பெருகி வருதலால் அங்கே பேராசை உருவாகி ஓங்கி நிமிர்கின்றது.

"Excess of wealth is cause of covetousness." (Marlowe)

"செல்வப் பெருக்கமே பேராசைக்கு மூல காரணம்" என மார்லோ என்பவர் இவ்வாறு கூறியுள்ளார்.

பொருளின் மேலுள்ள பேராசைதான் உலோபம் என வேறு ஒரு இழி பெயரை எடுத்து வெளியே தலைநீட்டி நிற்கிறது.

"பொருளானும் எல்லாம என்று ஈயாது இவறும்
மருளானும் மாணாப் பிறப்பு." (குறள், 1002)

பேராசை கொண்ட உலோபிக்குப் பேய்ப்பிறப்பு உண்டாம் என நாயனார் இங்ஙனம் வாய் மலர்ந்துள்ளார்.

பொருளாசை பெருகிய பொழுது அருள் அகலுகின்றது; மருளும் இருளும் குடி புகுந்து கொள்ளுகின்றன. கொள்ளவே எல்லாத் தீமைகளும் அங்கே இடம் பெறுகின்றன.

"The love of money is the root of all evil."

"கொடுமைகளுக்கெல்லாம் மூலவேர் பண ஆசையே" என்னும் இது இங்கே கூர்ந்து சிந்தித்து ஓர்ந்து கொள்ள வுரியது.

பொருள் வரவு பெருகி ஏறவும் நெருப்பில் நெய் வார்த்தது போல ஆசை மேலே சுழித்து எழுகின்றது.

கிடைத்த பொருளை எல்லாம் உள்ளே விழுங்கி மேலும் மேலும் தீராத பசியாய்ப் பேராசைப் பேய் வாயைப் பிளந்து கொண்டே நிற்கின்றது. தீய ஆசை தீயினும் தீயது.

பெற்ற சிறுகப் பெருத பெரிதுள்ளும்
சிற்றுயிர்க்கு ஆக்கம் அரிதம்மா—முற்றும்
வரவர வாய் மடுத்து வல்விராய் மாய
எரிதழல் மாயா திரா, (நீதி நெறி விளக்கம், 64)

பேராசை மண்டிய சீவர்களுடைய அழிவு நிலையை இது தெளிவாகக் குறித்துள்ளது. விராய் — விறகு.

மன நிறைவு இல்லாமல் பொருளை எண்ணி எண்ணி ஏங்கித் தவிக்கின்றவன் இறுதியில் பரிதாபமாய்ப் பாழ்படுகின்றான்.

விறகு ஏற ஏற தீ முறுகி வளர்தல் போல் பொருள் சேரச் சேர ஆசை பெருகி வளர்கின்றது. ஆதலால் நாசமே விளைகின்றது. ஆசையை நீள விடுவது தீயை மூள விடுவது போல் மோசமேயாம்.

ஆசைக்கு ஓர் அளவில்லை; அகிலம் எல்லாம் கட்டி
ஆளினும் கடல் மீதிலே
ஆணை செலவே நினைவர்; அளகேசன் நிகராக
அம்பொன் மிக வைத்த பேரும்
நேசித்து ரசவாத வித்தைக்கு அலைந்திடுவர்;
நெடுநாள் இருந்த பேரும
நிலையாக வேஇனும் காயகற்பம் தேடி
நெஞ்சுபுண் ஆவர்; எல்லாம்
யோசிக்கும் வேளையில் பசி தீர உண்பதும்
உறங்குவதும் ஆக முடியும;
உள்ளதே போதும்; நான்நான் எனக் குளறியே
ஒன்றை விட்டு ஒன்று பற்றிப்
பாசக் கடற்குளே வீழாமல் மனதற்ற
பரிசுத்த நிலையை அருள்வாய்!
பார்க்கும் இடம் எங்கும் ஒரு நீக்கமற நிறைகின்ற
பரிபூர ணனந்தமே. (தாயுமானவர்)

கடவுளை நோக்கித் தாயுமானவர் இவ்வாறு வேண்டியிருக்கிறார். ஆசையின் கொடுமைகளைக் குறித்துக் காட்டி அந்த நீசம் நெஞ்சு புகாதபடி காத்துப் பரிசுத்த நிலையைத் தமக்குத் தந்தருளும்படி உருகி முறையிட்டுள்ளார். இந்தப் பாசுரத்தை ஊன்றியுணர்ந்து அனுபவ நிலைகளை ஓர்ந்து கொள்ள வேண்டும்.

பேராசை பெருங்கேடு என்னும் பழமொழியை உளங்கொண்டு எவ்வழியும் அமைதியாய் நலம் கண்டு வாழுக.

---

444. தன்னை யுடையானைச் சஞ்சலத்துக் குள்ளாக்கிச்
சின்னம் பலசெய்து சீரழிக்கும்—துன்னிய
ஆசையெனும் நீசம் அணுகா தகன்றுரே
மாசகன்றார் ஆவர் மதி. (ச)

இ—ள்

தன்னை உரிமையாக் கொண்டவனை யாண்டும் சஞ்சலப்படுத்

இச் சிறுமை பல செய்து ஆசை சீரழிக்கும் ஆதலால் அதனை நீசம் என அஞ்சி ஒதுங்கினவர் மாசு நீங்கித் தேசு மிகுந்து தெளிந்த ஞானிகளாய்ச் சிறந்து திகழ்வர் என்பதாம்.

இது, ஆசை நீசம் என்கின்றது.

சின்னம் = சிறுமை, ஈனம், இகழ்ச்சி.

உயர்வும் இன்பமுமே யாண்டும் தமக்கு வேண்டும் என்று விரும்பி வருகின்ற சீவர்கள் இழிவும் துன்பமுமே கண்டு எங்கும் அலமந்துழலுகின்றன. விளைகின்ற விளைவுகள் எல்லாம் விதைத்த விதைகளின் பலன்கள் ஆகல்போல் புறத்தே அடைகின்ற அடைவுகள் யாவும் அகத்தே நினைத்த நினைவுகளின் நிலைகளேயாம்.

நெறியான எண்ணம் சரியான பலனை அருளுகின்றது; நெறி கோடியது குறி விலகி ஓடி அவகேடே தருகின்றது.

மனிதனுக்கு எல்லா நலங்களையும் இனிது அருள வல்லது அவனது நெஞ்சமே; அது பழுதுபடின் ஒளி இழந்த விழிபோல் உயிர் வாழ்வு இருளடைந்து போம். நல்ல உள்ளம் பொல்லாத இச்சைகளால் புலையாய் இழிகின்றது. மாசு படிந்த கண்ணாடி போல் ஆசை படிந்த நெஞ்சம தேசழிந்து போகின்றது.

மதியை மேகம்போல், வெண தலச் சுதையினை மைபோல்,
அதிக நன்னெஞ்சை ஆசையாம பேய் அழகழிக்கும்;
பொதியு மாலெலாம் நீகவென் பவப்பயம் போக்கி
முதிர் மனத்தின் மால் பிணிப்பறின் முத்திவேறு உளதோ?
(ஞான வாசிட்டம்)

ஆசைப் பேய் மனிதனை நீசப்படுத்தும் நிலைமையை இது குறித்திருக்கிறது. சந்திரனை மேகமும், பளிங்கை மையும் மறைப்பது போல் நெஞ்சை ஆசை அழிக்கின்றது; அந்த நீசம் நீங்கின் ஈசனது பேரின்ப முத்தி உடனே உண்டாம் என உணர்த்தியுள்ளது. அவா ஒழியின் ஒளியும் இன்பமும் வெளியாகின்றன.

தன்னை விரும்பித் தொட்டவரைப் பெரும் பித்தராக்கிப் பெருங்கேடு செய்து விடுதலால் ஆசை நீசம் என வந்தது.

செல்வம் கல்வி அதிகாரம் முதலிய நிலைகளில் எவ்வளவு உயர்ந்தவராயிருந்தாலும் ஆசைபுகின் அவர் அடியோடு இழிந்து

படுகின்றார். அவாவின் கொடுமையைக் குறித்து ஒரு பெரியார் பாடியுள்ள பாடல் அயலே வருகின்றது.

"கொடியும் முரசும் கொற்றவெண் குடையும்
பிறர்கொளப் பொறாஅன் தானே கொண்டு
பொதுநீங்கு திகிரி திசைதிசை போக்கிச்
செவியிற் கண்டு கண்ணிற் கூறி
இருநிலம் புரக்கும் ஒரு பெரு வேந்தன்
மிக்கோன் ஒருவன் வெறுக்கை நோக்குழித்
தொக்கதன் வெறுக்கை சுருங்கித் தோன்ற
இழப்புறு விழுமம் எய்தி அழுக்கறுத்து
மற்றது பெறுதற்கு உற்றன தெரீஇ
அயிற் சுவை பெறுஅன் துயிற்சுவை உறுஅன்
மாணிழை மகளிர் தோள்நலம் கொளாஅன்
சிறுகாற்று வழங்காப் பெருமூச்சு எறிந்து
கவலையுற்று அழிவதூஉம் காண்டும்; விறகு எடுத்து
ஊர்தொறும் சுமந்து விற்றுக் கூலிகொண்டு
புற்கையும் அடகும் மாந்தி மக்களொடு
மனையும் பிறவும் நோக்கி அயல்மனை
முயற்சியில் மகனை இழித்தனன் எள்ளி
எனக்குஇணை இலைஎன இனையன்மற்று ஒருவன்
மனக்களிப் புறீஇ மகிழ்வதூஉம காண்டும்; அதனால்
செல்வம் என்பது சிந்தையின் நிறைவே;
அல்கா நல்குரவு அவாஎனப் படுமே;
ஐயுணர்வு அடக்கிய மெய்யுணர்வு அல்லதை
உவாக்கடல் சிறுக உலகெலாம் விழுங்கும்
அவாக்கடல் கடத்தற்கு அரும்புணை இன்றே; அதனால்
இருபிறப் பியைந்த ஒருபிறப் பெய்தும்
நான்மறை முனிவர் மூவா யிரவரும்
ஆகுதி வழங்கும் யாக சாலையில்
தூஉ நறும்புகை வானுற எழுவது
எழுநாப் படைத்த முத்தீக் கடவுள்
கடலமிழ்து உமிழ்ந்தாங்கு அவியமிழ்துண்ண
வரும்பெருந் தேவரை வானவர் கோனொடும்
விருந்தெதிர் கொள்கென விடுத்தது கடுக்கும்
வலனுயர் சிறப்பிற் புலியூர்க் கிழவ! நின்
அருள்பெற்று உய்தற்கு உரியன் யான்எனின்,

பல்லுயிர்த் தொகுதியும் பவக்கடல் அழுந்த
அல்லல் செய்யும் அவா எனப்படும் அவ்
வறுமையின் நின்றும் வாங்கி
அறிவின் செல்வம் அளித்தருள் எனக்கே.''

(சிதம்பர மும்மணிக் கோவை 26)

இந்த அருமைப் பாசுரத்தில் அடங்கியுள்ள பொருள் நயங்களைக் கருதி நோக்குக. ஆசை உற்றவரது சிறுமையும் அற்றவரது பெருமையும் அதி நயமா விளக்கப்பட்டுள்ளன. இரண்டு வாழ்க்கைச் சித்திரங்கள் விசித்திரநிலையில் காட்சிக்கு வந்திருக்கின்றன.

## ஆசையின் அழிவு.

ஒரு அரசன்; தேசம் முழுவதும் தனக்கே தனியுரிமையாக் கொண்டு ஆளுகின்றவன்; செல்வங்கள் பலவும் நிறைந்திருந்த முடிமன்னனான அவன் ஒருநாள் மறுபுல வணிகனுடைய பெரிய திருவின் நிலைமையைக் கேள்வியுற்றான். பொன்னும் மணியும் தன்னினும் மிகுதியாக அவன்பால் உள்ளமையை அறிந்ததும் அவன் உள்ளம் எள்ளலாய் இழிந்து அல்லலுழந்தது; பொறாமையும் துன்பமும் பொங்கி எழுந்தன; எல்லை மீறியுள்ள அப்பொருளை ஒல்லையில் அடையவேண்டும் என்னும் ஆசையால் அல்லும் பகலும் அலமந்து நின்றான். எல்லையில்லாதன எண்ணி ஏங்கியுளைந்தான். உறக்கம் துறந்தான்; உணவினை மறந்தான்; மனைவியொடும் மகிழாமல் மன வேதனைகள் மிகுந்தான்; கருதியதை அடைய முடியாமையால் இறுதியில் மறுகிப் பரிதாபமாய் அழிந்தான்.

## நிராசையின் நிறைவு.

எளியவன் ஒருவன்; சிறிய தொழிலினன்; விறகுகளைத் தலையில் சுமந்து கொண்டுபோய் ஊர்களில் விற்று அந்த வரவில் தன்னுடைய சொந்த சீவனத்தை நடத்துகின்றவன்; நாள் தோறும் காலையில் எழுந்து போய் விறகு தொகுத்து அயலிடம் சென்று விற்று அவ்விலைப்பொருளோடு மாலையில் வீட்டுக்கு வருவன்; மனைவி கையில் பணத்தை மகிழ்ந்து கொடுப்பன்; அது கொண்டு சிறு தானியம் வாங்கிக் கூழ் ஆக்கிக் கீரைக்குழம்போடு அவள் இனிது படைப்பள்; அவ்வுணவை மக்களோடு ஒக்க உண்டு மனைவி அயலே மருவி இருப்ப ஓலைப் பாயில் மகிழ்ந்து

வீற்றிருந்து சல்லாப சரங்கள் ஆடி உல்லாசமாய் அவன் பொழுதைக் கழிப்பன்; அந்த எளிய வாழ்வில் எவ் வழியும் இனிமைகள் சுரந்து அமைதியும் இன்பமும் யாண்டும் பெருகியிருந்தன.

பெரிய செல்வங்கள் நிறைந்திருந்தும் ஆசை மிகுதியால் அரசன் அல்லல் அடைந்து இழிந்தான்; அந்த நீச நசை இல்லாமையால் வறியனும் பெரு மகிழ்வோடு வாழ்ந்து வந்தான். சிந்தையின் நிறைவே செல்வம் என்பதை இவனது வாழ்வு இனிது உணர்த்தி நின்றது. அவா அவலமாயது; அமைதி உவகை ஆயது.

இந்த இரண்டு நிலைகளையும் எடுத்துக் காட்டி "ஆண்டவனே! ஆசை ஆகிய கொடிய வறுமை என்னை அணுகாமல் அறிவு ஆகிய பெரிய செல்வத்தை எனக்கு அளித்தருளுக" என ஈசனை நோக்கிக் குமரகுருபரர் ஈண்டு வேண்டி யிருக்கிறார். அவாவின் தீமையைக் குறித்துச் சிவிய நிலைகளை விளக்கி ஓவியம் வரைந்து இங்கே உணர்த்தி யிருப்பது காவியச் சுவை கனிந்திருக்கிறது.

ஆசை எனும் நீசம் அகன்றாரே மாசு அகன்றார்.

தம் உள்ளத்தில் தீய ஆசை இருக்கும் வரையும் எவரும் தூயராக முடியாது. உயர்ந்த பரிசுத்த நிலைகளை நசை நாசப் படுத்தி விடுதலால் அதனையுடையவர் அசுத்தராய் இழிந்து படுகின்றார். ஆசை ஒழிந்த பொழுது யாதொரு மாசும் இன்றி அவ்வுயிர் தேசு மிகுந்து ஈசன் அருளை எய்துகின்றது.

தூஉய்மை என்பது அவாவின்மை; மற்றது
வாஅய்மை வேண்ட வரும். (குறள், 364)

இந்த அருமைத் திருக்குறள் இங்கே சிந்திக்கத்தக்கது. அவாவின்மையே தூய்மை; அதனையுடையவரே பரிசுத்தர்; அவரே முத்தி நிலையை அடைய உரியவர்; சத்தியமான நித்திய வாழ்வினர் எனத் தேவர் இங்ஙனம் அருளி யுள்ளார்.

நீசன் எனச்செய்யும் நீளாசை அஃதின்றேல்
ஈசனே ஆவன் இவன்.

நசை சீவனை நாசப் படுத்துகின்றது; அது ஒழிந்தபோது ஒளி மிகுந்து உய்தி பெறுகின்றது. உண்மை தெளிவது நன்மையாம். ஆசை நீங்கி அமலன் ஆகுக.

---

445. வாராத எல்லாம் வரும்வரும்என் றெண்ணிஎண்ணிப்
பேராசை நாளும் பெருகியே—ஆராத
உள்ளம்புண் ணாக வுளைந்து பலரல்லல்
வெள்ளம்வீழ்ந் தாழ்கின்றார் வீண். (ரு)

இ—ள்

கிடையாத பொருள்களை அடைய விரும்பி நெடிது ஏங்கிப் பேராசைமண்டித் தம் உள்ளத்தைப் புண் ஆக்கி அல்லல் வெள்ளத்தில் விழுந்து பலர் அவமே அழிகின்றார் என்பதாம்.

நெஞ்சில் ஆசை யுடையவன் பஞ்சையாய் இழிந்து படாத பாடுகள் படுகின்றான். தன் வாழ்க்கைக்குத் தேவையான பொருள்கள் தன்பால் நிறைந்திருந்தாலும் மேலும் மேலும் பலவும் விழைந்து மனிதன் நிலைகுலைகின்றான்.

உள்ளத்தின் பதைப்புகளையும் நோக்கங்களையும் ஏக்கங்களையும் அடுக்குகள் வெளியே தெளிவாக விளக்கி நின்றன. வரும் வரும் என்றது வரவின் வழிகள்மேல் தாவிய ஆவல்களை உணர்த்தியது. எண்ணி எண்ணி என்றது ஏங்கிக் கழித்த காலங்களைக் காட்டியது. நெடிய ஆவல்கள் கொடிய அவலங்களாய் விரிகின்றன.

நிலைமைக்கு மிஞ்சிய நசை பேராசை என நின்றது.

ஆசைக்கு உரோசம் இல்லை என்னும் பழமொழியால் அதனையுடையாரது நிலைமை புலனும். ஆசைவசப்பட்டவர் பேய்கொண்ட பித்தராகின்றனர். வெறி ஏறிய குரங்கு போல் நசை ஏறிய மனம் உரியது ஒன்றும் உணராமல் கண்டபடியெல்லாம் ஓடியலைந்து கடுகித்திரிகின்றது. முடிவில் பரிதாபமாய் இழிவடைகின்றது. இச்சை மனிதனை ஈனமாக்கி விடுகின்றது.

ஒரு வணிகன்; வறிய நிலையினன். சில்லறை வியாபாரங்கள் செய்து சிறிது பொருள் சேர்த்தான்; மெல்லமெல்ல முயன்றதில் மேலும் கொஞ்சம் பொருள் சேர்ந்தது; அது கொண்டு நல்ல கண்ணாடிச் சாமான்களை வாங்கினான். மறுநாள் அவற்றின் விலைகள் உயர்ந்தன; இவன் உள்ளம் உவகையில் துள்ளியது; பெரிய பெட்டிமேல் வரிசையாக அடுக்கிக் கண்டவர் எவரும் விரும்பும்படி காட்சிப்படுத்தி வைத்தான்; அதன் அருகே பெருமகிழ்வுடன் அமர்ந்தான்; பலபல கருதினான்; சிறிது சாய்ந்து கண்ணை மூடிக்கொண்டு பொருள் வருவாய்களைக் குறித்துப் பெரிதும்

எண்ணினான். "இந்தப் பண்டங்களை அதிக விலைக்கு விற்கலாம்; அத்தொகையால் வேறு பல தொழில்கள் விரைந்து புரிந்து இரண்டு வருடத்துள் பெரும் பொருள் திரட்டலாம்; பெரிய செல்வம் திரண்டபின் சிறந்த மாளிகை கட்டி உயர்ந்த குலத்தில் ஒரு பருவமங்கையை மணந்து அந்த அழகிய மனைவியோடு செல்வச்சீமானாய் உவந்து வாழவேண்டும்; இடையே ஏதேனும் ஊடல் நிகழ்ந்தால் அவள் என் காலில் விழுந்து வணங்கி வேண்டும் வரையும் பிணங்கியே நிற்பேன்; அவள் வந்து கெஞ்சாமல் தோழியை ஏவித் தொழுது வேண்டும்படி செய்தால் அப்பாங்கியைக் காலால் ஓங்கி எற்றி விடுவேன்" என்று இப்படி நினைந்து கொண்டே தன் காலை நீட்டி உதைத்தான். பெட்டி சாய்ந்தது; கண்ணாடிகள் எல்லாம் உடைந்து போயின. இந்தப்பேயன் திடுக்கிட்டு எழுந்து தன் மடத்தனத்தை நினைந்து மறுகி நொந்தான்; ஒருவரிடமும் கூறாமல் அயலிடம் போனான். மயல் உழந்தான். அந்த மனவேதனையோடே மாண்டு முடிந்தான்.

எட்டி உதைத்தான் எதிரிருந்த கண்ணாடிப்
பெட்டி உடைந்து பிதிர்ந்தது—மட்டிமகன்
வீணாசை மண்டி விளிந்தான்; இழிநசையின்
பூணாசம் கண்டு புலந்து.

ஆசை ஒருவன் உள்ளத்தில் புகுந்தால் அவனை அது என்ன பாடு படுத்தும்? என்பதை இதனால் அறிந்து கொள்ளலாம்.

அசையாத ஆண்மையாளனும் நசைவாய்ப்படின் நாய்வாய்ப் பட்ட முயலாய் அவன் நைந்து சிதைந்து நாசம் படுகின்றான்.

ஆராத உள்ளம் என்றது எவ்வளவு பொருள்கள் எய்தினும் அமைதியின்றி மேலும் மேலும் ஆவலித்து நிற்கும் அதன் இயல்புகருதி. ஆர்தல்=நிறைதல். அவா நீங்கிய மனம் தான் உவாமதிபோல் சாந்த நீர்மை சுரந்து ஆர்ந்த இன்பங்களை மாந்தி மகிழ்கின்றது.

ஆரா இயற்கை அவாநீப்பின் அந்நிலையே
பேரா இயற்கை தரும். (குறள் 370)

எவ்வழியும் நிறைவுறாமல் யாண்டும் ஆவலாய்த் தாவி நீளுகின்ற ஆசை ஒருவனிடம் ஒழியுமாயின் அப்பொழுதே என்றும் நிலையான பேரின்ப நலம் அவனுக்கு உரிமை ஆகின்றது எனத் தேவர் இவ்வாறு உறுதி கூறி உணர்வு அருளியுள்ளார்.

நசை உள்ளத்தைப் புண் ஆக்கி அல்லல்களை வளர்த்து மனித வாழ்வை மண் ஆக்கி விடும்; அந்தப் பொல்லாத இச்சையை எல்லைகட்டி நீக்கி நல்ல சுக நிலையை நாடிக் கொள்ளுக.

---

446. பெண்முதலாம் ஆசை பெருக்கிப் பெருகுகின்றாய்
உண்முதலை நாடா தொழிகின்றாய்—கண்முழுதும்
பஞ்சடைந்து மெய்வாய் பனித்தைமேல் உந்திப்பின்
நெஞ்சடைத்தால் என்னும் நினை. (சு)

இ—ள்.

பெண் ஆசை முதலாகப் பலவகை ஆசைகளிலும் பெருகி உள்முதலை உணராமல் ஒழிகின்றாய்! கண்பஞ்சு அடைந்து வாய் மெய் நடுங்கி நெஞ்சு அடைத்துச் சாக நேர்வதை நினைந்து பார்.

மண் ஆசை, பொன் ஆசைகளினும் பெண்ஆசையில் மனிதர் பிழைமிகப் புரிதலால் அது முன்னுற வந்தது. உரிய மனைவி மேலே பிரியம் கொண்டிருத்தல் தரும முறையாம். அந் நிலை மீறி அயல மாதரை விழையின் அது இச்சை ஆசை என்னும் கொச்சை மொழிகளால் குறிக்கப்படுகின்றது.

"இச்சைத் தன்மையி னிறப்பிறர் இல்லினை
நச்சி நாளும் நவையுற நாணிலன்."

இராவணன் சீதையை இச்சித்த இழிவைக் குறித்து அனுமான் இவ்வாறு அவன் எதிரே இடித்துக் கூறியிருக்கிறான். பேராசை பேர்ந்ததோ? என அண்ணன் ஆசையால் நாசமடைந்ததை நினைந்து விபீடணன் கண்ணீர் சொரிந்திருக்கிறான்.

நெறி கேடான நசை அறிவைக் கெடுத்துப் பழி கேடுகள் செய்து இழிவுகளை நீட்டி ஈனன் ஆக்கி விடுகின்றது.

"கோட்டியுள் கொம்பர் குவிமுலை நோக்குவோன்
ஓட்டை மனவன் உரமிலி." (பரிபாடல். 12)

கூட்டத்திலே பருவ மங்கையரின் கொங்கைகளை நச்சி நோக்கும் கொச்சைகளை நல்வழுதியார் இங்ஙனம் பச்சையா இகழ்ந்து சொல்லியிருக்கிறார்.

இழி நசையாளனை ஓட்டை மனத்தான் என்று காட்டியிருக்கும் காட்சி உயர் சுவையுடையது. பெண்ணாசை புகின்

மத்து ஏறி உடைதயிர் போல் மனிதன் நெஞ்சம் பித்து ஏறி உடைகின்றது. உடையவே அந்த மனிதன் ஓட்டை மனவன் என நின்றான். இந்த ஓட்டையில்லாத உள்ளங்களை நோட்டம் போட்டு நோக்கினால் உலகில் எவ்வளவு தேறும்? ஓட்டைமனிதன் இவன்; கோட்டை குலையாத குல வீரன் இவன்; என இங்கே நயமாகக் காட்டியுள்ளமை கருதியுணர வுரியது. இச்சையாளன் இழிவுறுகின்றான்; அஃது இல்லாதவன் உச்ச நிலையில் உயர் மகிமை அடைகின்றான்.

இச்சைமிகின் அந்த மனிதன் கொச்சை ஆகின்றான்

மணந்த மனைவி அளவில் நில்லாமல் மையல் மிகுந்தவன் இழிந்து படுதல் போல் அமைந்த பொருளில் அமைதியுறாமல் அதிகம் அவாவுகின்றவன் அவதியுற நேர்கின்றான்.

பொருளாசை மனிதனை மருளன் ஆக்கி விடுகின்றது.

வரவு வளர ஆசை வளர்கின்றது. பெரிய செல்வம் நிறைந்த வுடனே தன்னை ஒரு புதிய அதிசய தெய்வமாக எண்ணிக் கொள்கின்றான். தனக்கு நிகராகச் செல்வ நிலையில் எவரேனும் தலை எடுத்தபோது அவன் குலை துடிக்கின்றான். எவரையும் மிஞ்ச விடாதபடி நெஞ்சம் துடித்தலால் அல்லும் பகலும் அல்லலை அடைந்து எல்லையில்லாத இன்னல்களில் உழல்கின்றான்.

மன்னிய செல்வர் ஆகி வாழினும் வளம்மிக் கீணடித்
தன்னின் மேம பட்டார்க் கண்டு தழைத்தவா போறல் வேட்டுப்
பின்னரும் ஈட்டி ஈட்டிப் பேதுறல் அன்றிப் பெற்ற
நன்னிதி கொண்டு நீதி நடத்துதல் ஏவர் வல்லார்?

(தணிகைப் புராணம்)

செல்வர் எவ்வழியும் யாண்டும் ஈட்டமே கருதிக் கோட்டி கொண்டு திரிவர் என்று இது காட்டியுள்ளமை காண்க.

ஒரு செல்வனிடம் எழுபத்து ஏழு இலட்சம் பொன்கள் சேர்ந்திருந்தன. அப்பொழுது அவனுக்கு வயது ஐம்பது. தன கையில் பெரும் பொருள் நிறைந்திருந்தும் அவன நெஞ்சில் கொடுங்கவலைகள் குடி கொண்டு நின்றன. தன் செலவ நிலையைக் கோடி ஆக்கினால் தான் ஒரு கோடீசுவரன் என்று யாவரும புகழ வாழலாம என்னும் ஆசை அவன் உள்ளத்தில நெடிது நீண்டு நின்றது. அதனால் இரவும் பகலும் வாவில்லையே கண்ணுய் மறுகி

யுழந்தான். ஒரு சிறு காசு செலவாக நேர்ந்தாலும் பெரிய இடி விழுந்தது போல் அவன் உயிர் துடித்து அயர்ந்தான். படு பிசுன மாய் முயன்று தொகுத்தான்; ஐந்து ஆண்டுகளில் எண்பத்தெட்டு இலட்சங்கள் ஆயின. அதற்கு மேல் ஏற வில்லை. மேலும் எவ்வள வோ முயன்று பார்த்தான்; கருதியபடி யாதும் கைகூடாது போயது. பன்னிரண்டு இலட்சம் குறை என்று எண்ணி எண்ணி உடலரிய இன்னலடைந்தான். அந்த ஏக்கத்திலேயே செத்தான்.

ஈட்டி யிருந்த இரும்பொருளை எண்ணி எண்ணி
நீட்டி நிலையா நிறைசெய்து—கூட்டிஒரு
கோடியாக் கண்டு கொளவிழைந்தான் ஐயகோ!
கோடியே கண்டான் குலைந்து.

அந்த ஆசைப் பேயன் வாழ்வு இவ்வாறு முடிந்தது. இரண் டாவது கோடி என்றது இறந்து போன சவத்தின மீது போர்த் துகின்ற புதிய ஆடையை. வாழ்வில் கோடி காண விழைந்தான்; அது கைகூட வில்லை; ஆயினும் செத்தபின் கண்டான என ஒரு சித்தர் நகைச் சுவையோடு சொல்லிப் போனார்.

பொன்னையும் பெண்ணையும் மண்ணையும் வரம்பு மீறி விழை யுங்கால் அது ஆசையாய் மாறி மனிதனை இழி நிலையில் ஆழ்த்தி பழி வழிகளில் தாழ்த்தி அழிதுயர்களில் வீழ்த்தி விடுகின்றது.

இளிவும் இன்னலும் அழிவும் இச்சையில் விளைதலால் அதனையுடையவர் அச்சமும் திகிலும் அவலமும் அடைகின்றனர்.

விழைவு எனப்படு கின்றது மென்மெல
அழல அவிர்ந்த கனகத்து அரும்பி, மெல்
மழலை மாதர் மருங்கில் படர்ந்து, பைங்
குழவி மீது கொழுந்து விட்டு ஓங்குமால்; (1)

உழுது பல்வளம் உய்த்த மழவிடை
கிழவு பட்டிடின் போறறல் கெழீஇயதே
விழுமெய் யாங்கு முதிர்ந்திடின் வேட்டதன்
மழலை மாதரும மைந்தரும் போற்றிலார். (2)

இம்பர் வாழ்வுழி ஈறில தாகிய
உமபர் வாழ்வதற்கு ஒன்றும் இயற்றிலன்
ஐமபொறிக்கு இரை தேடி அலமந்து
வெம்பு கின்ற எரிவிருந்து ஆவலுல். (பாகவதம், 3, 8)

மனிதர் ஆசை வயத்தராய்த் தேக போகங்களையே நச்சி நின்று ஆன்ம உரிமையை இழந்து அவமே அழிந்து படுவது இழிந்த பழியாம் என இது இரங்கியுள்ளது.

உள் முதல் என்றது உள்ளே ஆன்ம நாயகனாயுள்ள பரம் பொருளை. நித்தியமான இனிய முதலைக் கருதாமல் அநித்திய மான சிறிய முதலையே அவாவி அழிவது பெரிய இழவாகின்றது.

கண பஞ்சு அடைந்து மெய்வாய் பனித்து ஐமேல் உந்தி.

என்றது மரண நிலையின் துயரக் காட்சிகளை நினைவுறுத்தியது. பனித்தல்=நடுங்குதல். ஐ=சிலேட்டுமம்.

கண் ஒளி மழுங்கி, மெய் நடுங்கி, வாய் அடங்கி நோயுழந்து மேல் மூச்சு வாங்கி முடிந்து படுமுன் முடிவான பயனை அடைந்து கொள்கின்றவன் பிறந்த பேறு பெற்றவன் ஆகின்றான்.

காரணங்கள் யாவும் கலங்கி அலமருகின்ற அந்த மரண வேதனை மிகவும் கொடியது ஆதலால் அது நேருமுன்னரே நிலையான உறுதி நலனைத் தலையாக மருவினவன் யாதொரு வெருவுதலும் இன்றி யாண்டும் அகம் மகிழ்ந்து அமைதி பெறுகின்றான்.

"புலன் ஐந்தும் பொறிகலங்கி நெறி மயங்கி
அறிவழிந்திட்டு ஐமேல் உந்தி
அலமந்த போதாக அஞ்சேல் என்று அருள் செய்வான்."
(தேவாரம்)

மரண காலத்தில் வந்து பரமன் அருள் புரிவான் என்று திருஞான சம்பந்தமூர்த்தி நாயனார் இவ்வாறு கருதியிருக்கிறார். எவ்வளவு உறவு, எவ்வளவு உரிமை, எவ்வளவு உறுதி இவ்வுரைகளில் மருவியுள்ளன! கருதி உணர வேண்டும்.

சூலம் பிடித்துஎம பாசம் சுழற்றித் தொடர்ந்து வரும்
காலன் தனக்கு ஒரு காலும் அஞ்சேன்; கடல் மீது எழுந்த
ஆலம் குடித்த பெருமான் குமாரன் அறுமுகவன்
வேலும் திருக்கையும் உண்டே நமக்குஒரு மெய்த்துணையே.
(கந்தர் அலங்காரம்)

அருணகிரிநாதர் இப்படித் துணிவு கொண்டு கூறியுள்ளார்.

ஆசையை நீச நிலைகளில் செலுத்தி நாசம் அடையாமல் ஈசனிடம் செலுத்தி என்றும் அழியாத விழுமிய இன்பம் பெறுக.

---

447. உள்ள அவாவொன் றொழிந்தால் உலகமெலாம்
கொள்ள அவாவும் குணத்தனாய்த்—தள்ளரிய
இன்பம் மிகப்பெற் றிறையருளும் எய்தியுயர்
முன்பனாய் நிற்பன் முதல். (எ)

இ—ள்

தன் உள்ளத்தில் ஆசை ஒன்று ஒழியுமானால் அந்த மனிதனை உலகம் எல்லாம் விழைந்து கொண்டாடும்; அரிய பல இன்ப நலங்களை அவன் எளிதே அடைகின்றான்; பரமனுடைய பரிபூரண கிருபையை முழுவதும் பெற்று விழுமிய நிலையில் யாண்டும் முதன்மையுற்று நிற்கின்றான் என்பதாம்.

இது, அவா ஒழியின் அதிசய நலங்கள் விளையும் என்கின்றது.

உள்ள அவா என்றது உள்ளத்தில் உள்ள ஆசை; உயிரில் வாசனையாய்த் தொடர்ந்து வருகின்ற நசை என இரு பொருள் மருவி நின்றது. ஆசை வாய்ப்பட்ட உள்ளம் பேய்வாய்ப்பட்ட பிள்ளையாய், நாய் வாய்ப்பட்ட கிள்ளையாய் நைந்து அழிகின்றது.

காற்றில் அகப்பட்ட பஞ்சு போல் நசையின் வசப்பட்ட நெஞ்சம் எவ்வழியும் சஞ்சலமே கொண்டு தவித்து நிற்றலால் திண்மையும் நன்மையும் இழந்து எண்மையும் புன்மையும் அடைந்து இழிந்து படுகின்றது. இழி நசை மிக அழிதுயர்கள் மிகுகின்றன.

அறிவை நிலை குலைத்து அவலம் ஆக்கி விடுதலால் ஆசை கொடிய வெறி, நெடிய புலை என மேலோர் நிந்திக்க நேர்ந்தனர்.

ஆசை நீங்கிய மனிதன் நீசம் நீங்கிய புனிதனாய் யாண்டும் தேசு மிகுந்து திகழ்கின்றான். அது நீங்காதவன் நிலை குலைந்து இழிகின்றான்.

அவா அறுக்கல் உற்றான் தளரான் அவ் ஐந்தின்
அவா அறுப்பின் ஆற்ற அமையும்—அவா அறான்
ஆகும் அவனாயின் ஐங்களிற்றின் ஆட்டுண்டு
போகும் புழையுட் புலந்து. (ஏலாதி, 11)

அவாவை அறுத்தவன் யாதும் தளராமல் மேலான நிலையில் வளர்கின்றான். அறாதவன் ஐம்புலன்களாகிய யானைகளால் மிதி பட்டு இழி கதிக்குட் புகுகின்றான் என இது காட்டியுளது. காட்சிகளைக் கருதிக் காணுக. புலன் நசை புலையாய் இழித்தலால் அதனை ஒழித்தவன் நிலையாய் உயர்ந்து நிறைசுகம் பெறுகின்றான்.

தன்னைத்தன் நெஞ்சம் கரியாகத் தான்அடங்கின்
பின்னைத்தான் எய்தா நலன்இல்லை—தன்னைக்
குடிகெடுக்கும் தீ நெஞ்சிற் குற்றேவல் செய்தல்
பிடிபடுக்கப் பட்ட களிறு. (அறநெறிச்சாரம்)

ஆசையை அடக்கி மனச்சாட்சியுடன் அமைதியாய் வாழின் அரிய பல நலங்கள் எளிதே உளவாம்; அவ்வாறின்றி மனம் போனபடி இச்சையில் உழந்துபடின் பிடியை நச்சிய மதயானை போல் கொடிய துயரங்களை அடைய நேரும் என முனைப்பாடியார் இங்ஙனம் நினைப்பூட்டியிருக்கிறார். ஆசை பற்றிய அளவு நீசம் பற்றுகின்றது; அது ஒழிந்த அளவு உயர்கதி வருகின்றது.

உள்ள அவா ஒழியின் உலகம் எலாம் அவாவும்.

இச்சை எளிதில் ஒழியாது; பல சன்மங்களிலும் தொடர்ந்து படர்ந்து வந்திருத்தலால் ஆசை நெடிது நீண்டுள்ளது. அதன் வசமாயிழிந்தே யாவரும் அலமந்து உழந்து வருகின்றனர். இந்தக் கொடிய பிடியிலிருந்து விலகி எழுவது அரிய அதிசயம் ஆதலால் அங்ஙனம் எழுந்தவர் பெரியவர் ஆகின்றார். ஆகவே உலகம் எல்லாம் அவரை உவந்து போற்றி வியந்து கொண்டாடுகின்றது. இழிவு ஒழியவே உயர்வு வெளி ஆகின்றது.

ஆசைக்கு அடியான் அகிலலோ கத்தினுக்கும்
ஆசற்ற நல்லடியான் ஆவானே—ஆசை
தனையடிமை கொண்டவனே தப்பா துலகம்
தனையடிமை கொண்டவனே தான். (நீதிசாரம்)

அனுபவ சாரமான உண்மை இதில் இனிமையாய் வெளி வந்துள்ளது. இந்தப் பாசுரம் நாளும் ஒரு முறை சிந்தித்து வர வுரியது. உயிர் மாசு நீங்க உயர் தேசு ஓங்குகின்றது.

ஆசைக்கு அடியவன் அகில உலகங்களுக்கும் அடிமை ஆகின்றான்; ஆசையைத் தனக்கு அடிமை ஆக்கிக் கொண்டவனுக்கு உலகங்கள் யாவும் அடிமைகளாய் நிற்கின்றன என்னும் இதில் அரிய மானச மருமங்கள் மருவியுள்ளன. நுணுகி உணர்க.

ஆண்டவனாய் உயர்ந்து வருதலும், அடியவனாய் இழிந்து போதலும் மனிதன் உள்ளேயே இனிது மருவியிருக்கின்றன.

நசையுடையவன் நாயாய் இழிந்து பேயாய் அலைகின்றான்; அஃது இல்லாதவன் சிங்கமாயுயர்ந்து செய சீலங்களைக் காண்கின்றான். இழிவில் வீழாமல் தெளிவு கொள்ளுக.

ஆசை நீங்கிய பொழுதே அதிசய இன்பங்கள் ஓங்குகின்றன.

448. ஆசை அறின்றே அதனால் வளர்ந்தபெரு
நீசப் பிறப்பும் நிலையறுமே—மூசிநின்ற
வித்தழியின் மேலாம் விளைவும் ஒருசேர
ஒத்தழியும் அன்றோ வுணர். (அ)

இ—ள்

வித்து அழிந்தால் விளைவு ஒழிந்து போதல் போல் ஆசை அற்றபோதல் அதனால் விளைந்து வருகின்ற கொடிய பிறவிகள் யாவும் அடியோடு அற்றுப்போம் என்பதாம்.

இது, ஆசை அறின் பிறவி அறும் என்கின்றது.

பிறவி எவ்வகையிலும் துன்பம் மிக வுடையது. பிறந்த ஒருவன் இறந்துபடும் வரையும் இழிந்த பல அல்லல்களில் உழந்து படுகின்றான்; இறந்து போன பின்னரும் வாசனை வயத்தனாய் மீண்டும் பிறந்து வர நேர்கின்றான். இவ்வாறு ஓயாது அல்லலிலேயே அலைந்து வருதலால் பிறவி துயரக் கடல் என நேர்ந்தது. எல்லை காண முடியாத இந்தத் துன்பத் தொல்லையிலிருந்து நீங்குவதே சீவன் அடைய வுரிய பேரின்ப நிலையாகக் கருதப்படுகிறது.

நீசப் பிறப்பு என்றது ஈசனைப் பிரிந்து பாசக்கடலில் வீழ்ந்து சீவன் பரிதபித்துக் கிடக்கும் நிலைமை தெரிய வந்தது. பிறவி யாண்டும் துன்பமாகவே நீண்டு வருதலால் படி ஏறிய உயிர்கள் மீண்டும் ஈண்டு வந்து பிறப்பதை அஞ்சுகின்றன; பிறவாமையையே வேண்டிப் பெருந்தவங்கள் செய்ய நேர்கின்றன.

துன்பத் தொடர்பையும் இன்ப நிலையையும் தெளிவாக அறியும்போது ஒளி மிகுந்த அந்த மெய்யுணர்வு ஞானம் என வெளியே விளங்கி நிற்கின்றது. ஞான நாட்டம் தெளிந்து வரவே ஊன நாட்டங்கள் ஒழிந்து போகின்றன.

உண்மையான பரம்பொருளை உறுதியாக உணர்ந்து கொள்ளுதலால் ஞானிகள் பெரிய மகான்களாய் அரிய மகிமைகளை அடைகின்றனர். பரமனோடு உறவுரிமை கொண்டு உள்ளம் உருகி உரையாடுகின்றனர். தமக்கு வேண்டியதைப் பிள்ளைகள் பிதாவிடம் கேட்பதுபோல் இறைவனிடம் உரிமையோடு அவர் வேண்டுகின்றனர். அங்ஙனம் வேண்டும் பொழுது பொருள் பொதிந்தமொழிகள் வெளி வருகின்றன. அயலே வருவது காண்க.

"அருள்பழுத்து அளிந்த கருணை வான்கனி
ஆரா இன்பத் தீராக் காதல்
அடியவர்க்கு அமிர்தவாரி, நெடுநிலை
மாடக் கோபுரத்து ஆடக் குடுமி
மழை வயிறு கிழிக்கும் கழுமல வாண! நின்
வழுவாக் காட்சி முதிரா இளமுலைப்
பாவையுடன் இருந்த பரமயோகி!
யான்ஒன்று உணர்த்துவன் எந்தை மேனாள்
அகில லோகமும் அனந்த யோனியும்
நிகிலமும் தோன்ற நீ நினைந்த நாள் தொடங்கி
எனைப்பல யோனியும் நினைப்பரும பேதத்து
யாரும் யாவையும் எனக்குத் தனித்தனித்
தாயர் ஆகியும், தந்தையர் ஆகியும்,
வந்திலாதவர் இல்லை; யான் அவர்
தந்தையர் ஆகியும், தாயர் ஆகியும்
வந்திராததும் இல்லை; முந்து
பிறவா நிலனும் இல்லை; அவ்வயின்
இறவா நிலனும் இல்லை; பிறிதில்
என்னைத் தின்னு உயிர்களும் இல்லை; யான் அவை
தம்மைத் தின்னாது ஒழிந்ததும் இல்லை; அனைத்தே
காலமும் சென்றது; யான் இதன்மேல் இனி
இளைக்குமாறு இலனே; நாயேன்
நந்தாச் சோதிநின் அஞ்செழுத்து நவிலும்
தந்திரம் பயின்றதும் இல்லனே; தந்திரம்
பயின்றவர்ப் பயின்றதும் இலனே; ஆயினும்
இயன்றதோர் பொழுதின் இட்டது மலராச்
சொன்னது மந்திரம் ஆக என்னையும்
இடர்ப்பிறப்பு இறப்பு எனும் இரண்டின்
கடற்படாவகை காத்தல்நின் கடனே." (பட்டினத்தார்)

பரம்பொருளைநோக்கிப் பட்டினத்தடிகள் இவ்வாறு வேண்டியிருக்கிறார். கவியின் பொருளைக் கூர்ந்து நோக்கிக் கருத்துக்களை ஓர்ந்து கொள்ள வேண்டும். "நெடுங்காலமாகப் பிறவித் துயரில் வீழ்ந்து வருந்துகின்றேன்; அந்தத் துன்பக்கடலை விட்டு என்னைக் கரை ஏற்றி அருள வேண்டும்" என அடிகள் முறையீடு செய்திருக்கும் முறையால் பிறப்பின் பெரிய அல்லல்களும் சீவனுக்கும் இறைவனுக்கும் உள்ள உறவுரிமைகளும் நன்கு உணரலாகும்.

என்றும் ஆனந்த மயமான பரமனோடு மருவி யிருக்கவுரிய ஆன்மா பிரிவினையால் பெருந் துயரங்களை அடைய நேர்ந்தது. ஆசை வசப்பட்டுப் பிறவிகளில் வீழ்ந்தமையால் ஈசனை இழந்து நீசம் அடைந்து நிலை குலைந்து நின்றது. பிறவிக்கு மூல காரணம் ஆசை ஆதலால் அது ஒழியின் சீவன் ஈசன் ஆய்ப் பேரின்ப நிலையைப் பெறுகின்றான்.

வித்து அழியின் விளைவும் அழியும்.

பிறவி நீங்க வேண்டுமாயின் ஆசை அடியோடு ஒழிய வேண்டும் என்பதைத் தெளிவாக உணர்த்த இவ்வுவமை வந்தது. வித்து அழியாத வரையும் விளைவு ஒழியாது; அவா இருக்கும் வரையும் பிறப்பும் இருக்கும்.

அவாஎன்ப எல்லா உயிர்க்குமெஞ் ஞான்றும்
தவாஅப் பிறப்பீனும் வித்து. (குறள் 361)

பிறப்பிற்கு வித்து அவாவே; அதனை ஒழித்த போதுதான் உயிர்க்கு உய்தியுண்டாம் என இஃது உணர்த்தியுள்ளது.

பிறந்தோர் உறுவது பெருகிய துன்பம்;
பிறவார் உறுவது பெரும் பேரின்பம்;
பற்றின் வருவது முன்னது; பின்னது
அற்றோர் உறுவது. (மணிமேகலை 2)

பிறப்பு பெருந்துன்பங்கள் நிறைந்தது; பிறவாமை பேரின்பம் உடையது; முன்னது பற்றால் உறுவது; பின்னது பற்றின்மையால் பெறுவது என அறவண அடிகள் என்னும் பெரியார் இவ்வாறு உலகம் அறிய உணர்த்தியிருக்கிறார்.

“அற்றது பற்று எனில், உற்றது வீடு.”
என நம்மாழ்வார் இங்ஙனம் உறுதி கூறியருளினர்.

வருத்தம் அற்று அச்சம் சோகம் மதமின்றி நன்னூற்பின்போய்
ஒருத்தரால் ஏவலின்றி உலாவுக நசிக்க வேண்டா;
அருத்தங்கள் அநர்த்தம் ஆகும்; அளவில் போகங்கள் நோயாம்;
பெருத்த ஆபத்தாம் செல்வம்; பேரின்பம் நிராசை தானே.

(ஞானவாசிட்டம்)

உலக ஆசைகளும் தேக போகங்களும் தொலையாத துயரங்களாம் எனக் குறித்து, நிராசையே பேரின்பம் என்று இது உணர்த்தியுள்ளது. உண்மை தெளிந்து ஒழுகுவது உய்தியாகிறது.

உள்ளத்தில் நசையுற்ற போது ஊனங்கள் பெருகுகின்றன; அது அற்றவுடன் ஞான சீலனாய் உயர்ந்து மனிதன் வானமும் வணங்கப் பெறுகின்றான். நிராசை ஈசனது நீர்மையாயிருத்தலால் ஆசை இல்லை ஆயின் அவன் கடவுள் ஆகின்றான்.

மாடத்துளான் அலன்; மண்டபத்தான் அலன்;
கூடத்துளான் அலன்; கோயிலுள்ளான் அலன்;
வேடத்துளான் அலன்; வேட்கை விட்டார் நெஞ்சின்
மூடத்துளே நின்று முத்தி தந்தானே. (1)

ஆசை அறுமின்கள் ஆசை அறுமின்கள்
ஈசனோடு ஆயினும் ஆசை அறுமின்கள்
ஆசை படப்பட ஆய்வரும் துன்பம்;
ஆசை விடவிட ஆனந்தம் ஆமே. (திருமந்திரம்)

ஆசையை விட்டவர் அடையும் அரிய பேரானந்த நிலையைத் திருமூலர் இவ்வண்ணம தெளிவாக உரைத்துள்ளார்.

தெளிந்த உணர்வின் பயன் இழிந்த நிலைகளைக் கடந்து உயர்ந்து போதலேயாம்; ஆசை எவ்வழியும் நீசப் படுத்தும் ஆதலால் அதனை ஒழித்தவர் ஈசனை மருவி இன்புறுகின்றனர்.

---

449. ஆசை அவலப் படுத்தும் நிராசையே
ஈசனென இன்பம் இனிதருளும்—நீசமிகு
பொல்லா அவாஒன்று போயொழியின் அப்பொழுதே
எல்லா நலமும் எழும். (கூ)

இ—ள்

ஆசை மனிதனை நீசன் ஆக்கி நிலைகுலைத்து நெடுந்துயர் செய்யும்; நிராசை அவனை ஈசன் என உயர்த்தி இன்பம் அருளும்; பொல்லாத நீச ஆசை ஒன்று ஒழிந்து போனால் எல்லாநலங்களும் எதிரே விரைந்து ஓடிவரும் என்பதாம்.

அமைதியும் சுகமும் மனித வாழ்வில் விழுமிய நிலையங்களாய் எழில் மிகுந்து திகழ்கின்றன; கவலையும் துயரமும் கொடிய இழிவுகளாய் நெடிது நிலவுகின்றன.

மனிதன் அடைகின்ற மேன்மைகளுக்கு எல்லாம் அவனுடைய இருதய பரிபாகமே காரணமாயுள்ளது. இதயத்தைப்

பண்படுத்தி வருகின்றவன் எவ்வழியும் பெரிய பாக்கியவானாய் அரிய மகிமைகளைப் பெறுகின்றான். புனிதமான நல்ல சிந்தனைகளை மருவியுள்ளமே இனிய மனமாய் உருவாகி ஒளிர்கின்றது.

ஆசை பொறாமை குரோதம் முதலிய தீமைகள் புகின் அது ஈனமாய் இழிந்து படுகின்றது. பொல்லாத வாசனைகள் ஒருமுறை படியவிடின் எல்லா நலங்களையும் இழந்து உள்ளம் ஊனம் அடைகின்றது; அடையவே அந்த மனிதன் யாதொரு மேன்மையும அடைய முடியாமல் அவமே கழிந்து அழிந்து போகின்றான்.

ஆசை அவலப் படுத்தும

என்றது மனிதனை அது பலவகையிலும் தாழ்த்திப் படுகேடுகளை விளைத்துவரும் கொடுமை தெரிய வந்தது. அவலம் = துயரம்.

நசை படிந்த நெஞ்சம் எப்பொழுதும் சஞ்சலமாகவே தவித்து உழலும் ஆதலால் அது ஒரு இழிந்த துன்ப நிலையமாய்க் கழிந்து படுகின்றது. அவா ஒழியின் அமைதி விளைகின்றது.

அவலக் கவலைகளில் ஆழ்த்தி எவரையும் அவமானப் படுத்தி விடுதலால் கொடிய பகை நெடிய நீசம் என ஆசையை மேலோர் வெறுத்திருக்கின்றனர்.

வாழ்க்கையில் ஊக்கமும் உறுதியும் ஆக்கம் தருகின்றன. அந்த உள்ளக் கிளர்ச்சி எள்ளலான வழிகளில துள்ளித் திரியின் இழி நசையாய்ப் பழிபடுகின்றது.

மேலான ஆன்ம நலனைக் கெடுத்துப் பான்மையை அழித்து படாதபாடுகள் படுத்திப் பரிசு குலைத்து வருதலால் ஆசை தீய பேய், மாய விலங்கு, கொடிய நோய் எனக் கடிய நேர்ந்தது.

"ஆசா நாம மநுஷ்யாணும் காசித் ஆச்சர்ய சிருங்கலா
யயா பந்தா: ப்ரதாவந்தி முக்தாஸ்திஷ்டந்தி பங்குவத்."

"ஆசை என்னும் அதிசய விலங்கு மனிதரை மருவியுளது. அந்த விலங்கைப் பூண்டவர் எங்கும் விரைந்து ஓடி அலைந்து திரிகின்றனர்; அதனைப் பூணாதவர் அமைதியாய் அமர்ந்திருக்கின்றனர்" என ஆசையைக் குறித்து வட மொழிக் கவிஞர் இவ்வாறு சுவையாகப் பாடியிருக்கிறார். விலங்கைக் காலில் பூட்டினால் வெளியே நடக்க முடியாது; ஆசையாகிய விலங்கு இதற்கு நேர்மாறாக இருத்தலால் ஆச்சர்ய சிருங்கலா என்று அதனை வியந்து கூறினர்.

ஆசை மூண்டபோது மனிதன் பேய் கொண்ட வெறியனாய்ப் பித்து ஏறி அலைகின்றான்; அலையவே அவன் நிலை பரிதாபமாய்ப் பாழ் படுகின்றது.

ஆன்ம சாந்தியை அடியோடு கெடுத்து விடுதலால் ஆசை நீசமான ஒரு நாசம் என்று மேலோர் நிந்திக்க நேர்ந்தனர்.

கொடிய பிறவிச் சிறையில் சீவர்களை நெடிது பிணித்து வைத்திருத்தலால் ஆசை கடினமான வலிய விலங்கு என வந்தது. பிறவித் துயரம் நீங்க வேண்டுமாயின் முதலில் இந்த விலங்கை ஒடித்து எறிய வேண்டும்.

"ஆசை நிகளத்தினை நிர்த்தூளி பட உதறி
ஆங்கார முளையை எற்றி
அத்துவித மதமாகி மதம்ஆறும் ஆருக
அங்கையின் விலாழி ஆக்கிப்
பாசஇருள் தன்னிழல் எனச்சுளித்து ஆர்த்துமேல்
பார்த்துப் பரந்த மனதைப்
பாரித்த கவளமாய்ப் பூரிக்க உண்டுமுக
படாமன்ன மாயை நூறித்
தேசுபெற நீவைத்த சின்முத்திராங்குசச்
செங்கைக்குளே அடக்கிச்
சின்மயா னந்தசுக வெள்ளம் படிந்துநின்
திருவருட் பூர்த்தி யான
வாசமுறு சற்சார மீதுஎன்னை ஒரு ஞான
மத்தகசம் என வளர்த்தாய்." (தாயுமானவர்)

இந்த உருவக நிலை உய்த்துணர வுரியது. ஆசையை அழித்து, ஆங்காரத்தை ஒழித்து, பாச பந்தங்களை நீக்கி, எங்கும் சம நோக்காய் உள்ளத்தைப் பண்படுத்தினவரே உன்னதமான பேரின்ப நிலையை அடைய வுரியவர் என இது உணர்த்தியுள்ளது. நிகளம் = சங்கிலி, விலங்கு.

ஆசையற்ற போது அந்த மனிதன் கம்பீர நிலையில் உயர்ந்து அரிய முத்தியை அடையவுரிய பெரிய உத்தமனாய் ஒளி வீசி நிற்கின்றான். கதி காண உரியவர் மதி காண வந்தனர்.

ஞான மத்தகசம் எனத் தாயுமானவர் தம்மைக் குறித்திருக்கிறார். இக் குறிப்பு கூர்ந்து சிந்திக்கத் தக்கது. ஆசை அற்றவன் ஞான மதயானையாய் மேன்மை அடைகின்றான்; அதனையுற்றவன் ஈன நாயாய் இழிந்து படுகின்றான்.

"கனிந்த நெய்க் கவளம் கையில் வைத்துடன் கழறு வாரை
முனிந்திடு களிறு போல்வார் முத்தியை விளக்கு நீரார்;
மனம்கொளத் துறந்தி டாதே வால்குழைத்து எச்சிற்கு ஓடும்
சுணங்கனைப் போலும் நீரார் பற்றிடைச் சுழலும் நீரார்."

(சாந்திபுராணம்)

நசையில்லாதவர் யானைபோல் மேன்மையாய் முத்தியைப் பெறுகின்றனர்; நசையுடையவர் எச்சிலை நச்சும் நாய் போல் இழிந்து பிறவித்துயரில் சுழல்கின்றார் என இது குறித்திருத்தலைக் கூர்ந்து நோக்குக. முத்தி அடையவுரிய சத்திநிலை துலங்கி நின்றது.

நிராசையே ஈசன் என இன்பம் இனிது அருளும்.

ஆசை எவ்வகையிலும் துன்பம் ஆதலால் இன்பம் அடைய உரிய திவ்விய நிலையை இது உணர்த்தி நின்றது. ஆசை முற்றும் அற்ற நிலை நிராசை என வந்தது.

"ஆசை நீசம் அழியின் அவ் ஆருயிர்
மாசு நீங்கிய மாமணி என்னவே
தேசு பொங்கித் திருவுடன் ஓங்கியே
ஈசனோ டிசைந்து இன்புறும் என்றுமே."

நிராசையுடையவர் இங்ஙனம் நின்மலனோடு சேர்ந்து நிறை பேரின்பத்தை நுகர்கின்றனர்.

உள்ளத்தில் இழிந்த ஆசை இருக்கும் வரையும் மனிதன் உயர்ந்து விளங்க முடியாது; அது ஒழிந்த போதுதான் அவன் திவ்விய மகிமையை அடைந்து திகழ்கின்றான்.

"We are never like angels till our passion dies."

(Thomas Dekker)

"நமது ஆசைகள் ஒழியும் வரையும் நாம் தெய்வீக நிலையை அடைய முடியாது" என தாமஸ் டெக்கர் என்பவர் இங்ஙனம் கூறியுள்ளார். சீவனது மோசமான நீசநிலை தெரிய வந்தது.

இழிநசை ஏற இழிந்த பிறவி
வழிவழி ஏறி வரும்

இதனை ஈண்டு விழியூன்றி நோக்கி விளைவு தெளிய வேண்டும்.

ஆசைகள் உணர்வு நலங்களைச் சிதைத்து உள்ளங்களைத் தாழ்த்தி ஊனங்களை விளைத்து ஈனங்களை வளர்த்து வருதலால் அவற்றை ஒழித்த வழியே உய்திகள் கிளைத்து எழுகின்றன.

450. உள்ளம் நசையுறின் ஊனமாய் ஈனமுறும்
எள்ளும் நிராசை எழிலோ—தெள்ளிய
ஞான குலவீர நாயகனாய் ஓங்கிநிற்பன்
வானம் வணங்க வரும். (ய)

இ—ள்

இழிந்த நசை புகுந்தால் உள்ளம் ஊனமாய் ஈனம் அடையும்; உயர்ந்த நிராசையுறின் தெளிந்த ஞான மூர்த்தியாய்ச் சிறந்த குல வீரனாய் மனிதன் ஒளி மிகுந்து விளங்குவான்; வானவரும் அவனை வணங்க வருவர் என்பதாம்.

இது நிராசையின் மகிமை கூறுகின்றது.

உள்ளம் ஆன்ம விழியா யுள்ளது அதனைப் புனிதமாக இனிது பேணி வருபவர் அதிசய மகிமைகளை எளிதில் அடைகின்றனர். அதனை ஊனப்படுத்தினவர் ஈனமாய் இழிந்து இருமை நலன்களையும் இழந்து விடுகின்றனர்.

உலக இச்சைகளைத் துச்சமாக இகழ்ந்து உச்ச நிலையில் உயர்ந்து நிற்பது நிராசை ஆதலால் எள்ளும் என்னும் அடைமொழியை அது எய்தி வந்தது.

நசையுடையவன் கீழாய் இழிந்து படுகின்றான்; அஃது இல்லாதவன் மேலாய் உயர்ந்து திகழ்கின்றான்.

இறலீனும் எண்ணாது வெஃகின்; விறல்ஈனும்
வேண்டாமை என்னும் செருக்கு. (குறள் 180)

ஆசை இளிவாய் அழிவு தரும்; நிராசை ஒளியாய் உயர்வு அருளும் எனத் தேவர் இங்ஙனம் தெளிவாக உணர்த்தியுள்ளார். இறல் = கேடு. விறல் = வெற்றி. நசை அற்றபோது அந்த மனிதன் அதிசய வெற்றி வீரனாய்த் துதி செய்யப் பெறுகின்றான்.

வேண்டாமை என்னும் செருக்கு விறல் ஈனும் என்றது ஊன்றி ஊன்றி உணரவுரியது. ஆசை வசமாய் இழிந்து எதையும் ஆவலித்து அலமந்துழலுகின்ற இவ்வுலகில் நிராசை யுடையவன் நிறைபெருந் திருவுடன் நிமிர்ந்து உயர்ந்த கம்பீர வீரனாய் ஒளி சிறந்து நிற்கின்றான்.

தன்னைப் பஞ்சை ஆக்கும் பாழ் நசையை நெஞ்சிலிருந்து நீக்கிய அளவு அந்த மனிதனுடைய நிலை உயர்ந்து திகழ்கின்றது.

நசைவசை ஆகும்; நசையின்மை என்றும்
அசையாத ஆண்மை அறி.

யாண்டும் நிலை குலையாத ஆண்மை நிராசையால் உண்டா கின்றது. வைராக்கியம், விராகம், உபரதி என்னும் பதங்கள் உயர்ந்த ஆன்ம நீர்மைகளை உணர்த்தி வருகின்றன. தெளிந்த ஞானமும் வைராக்கியம் இல்லையானல் ஒளி குறைந்து போகின் றது. ஒன்றையும் விரும்பாதவனை உலகம் எல்லாம் உவந்து கொண்டாடுகின்றது.

நிராசை எழினே வானம் வணங்க வரும்.

ஆசை அவல நிலையில் ஆழ்த்தி மோசம் செய்தலால் அது சிவ நாசம் என நின்றது. நிராசை எய்திய போது மனிதன் தெய்வீக நிலையை அடைகின்றான்; அடையவே வையமும் வான மும் அவனை வணங்கி வாழ்த்துகின்றன.

ஆசைஎனும் பெருங்காற்றூடு இலவம்பஞ்சு
எனவும் மனது அலையும் காலம்
மோசம் வரும்; இதனாலே கற்றதும் கேட்டதும்
தூர்ந்து முத்திக்கு ஆன
நேசமும்நல் வாசமும் போய்ப் புலனாயிற்
கொடுமைபற்றி நிற்பர் அந்தோ!
தேசுபழுத்து அருள்பழுத்த பராபரமே!
நிராசை இன்றேல் தெய்வம் உண்டோ? (தாயுமானவர்)

ஆசையில் இழிவையும், நிராசையின் உயர்வையும் இது தெளிவாக விளக்கியுள்ளது. பெருங்காற்றில் இலவம்பஞ்சு போல் ஆசையால் மனது அலையும் எனவே அதன் அவகேடுகள் அறிய லாகும். வெய்ய நசையை விலகி நிற்றலே மெய்யறிவின் மேலான பலனும். ஆசை ஒழியின் ஈசன் வெளி ஆகின்றான்.

நிராசை இன்றேல் தெய்வம் உண்டோ?

இந்தக் கேள்வியில் உள்ள உறுதியையும் தெளிவையும் ஊன்றி உணர்ந்து உண்மை நிலையை ஓர்ந்து கொள்ள வேண்டும். ஆசை ஒழிந்த பொழுது ஈசன் நேரே உதயமாகி அருள்கின்றான். கல்வி கேள்விகளால் உயர்ந்த ஞான சீலர்கள் இழிந்த நசையை நீக்கி என்றும் குன்றாத இன்ப நலனை அடைந்து கொள்கின்றனர்.

''தேநாதீதம் சுருதந்தேந தேந ஸர்வமநுஷ்டிதம்
யேநாசா: ப்ரஷ்டத; க்ருத்வா நைராச்யமவலம்பிதம்.''

''ஆசையை எவன் இகழ்ந்து தள்ளி நிராசையை உவந்து கொள்ளுகின்றானோ, அவனே கற்றவன்; அவனே கேள்வியாளன்; அவனே எல்லாச்சீலங்களையும் உடையவன்'' என இது உணர்த்தியுள்ளது. பொல்லாத புன்மை ஒழிவதே நல்ல அறிவின் பயனும்.

ஆசை எவ்வழியும் புலையான துன்பம் உடையது ஆதலால் அது ஒழிந்த போது நிலையான இன்பம் விளைந்து வருகின்றது.

இன்பம் இடையறாது ஈண்டும் அவாஎன்னும்
துன்பத்துள் துன்பம் கெடின். (குறள் 369)

அவா கொடிய துன்பம்; அது ஒழியின் நெடிய இன்பமாம் என நாயனார் இங்ஙனம் உணர்த்தியிருக்கிறார். சத்திய வாக்கு; நித்தமும் நினைந்து சிந்திக்கத் தக்கது.

உலக ஆசைகளின் நிலைமைகளைத் தெளிந்து எள்ளலான இழி நசைகள் ஒழிந்து உள்ளம் அமைதியாய் உயர்ந்து கொள்ளுக.

மனம் நிறைந்திடில் அமுதமாய் நிறைந்திடும் வையம்
தனது தாட் செருப்பு உலகெலாம் தோல்முச்சும் தரம்போல்
கன நிராசையால் நிறையுநெஞ்சு ஆசையிற் கவிழா;
தினமும் ஆசையால் நிறைமனம் குறைவு என்றும் தீரா.
(ஞானவாசிட்டம்)

இவ் அதிகாரத்தின் தொகைக் குறிப்பு.

ஆசையால் உயிர்கள் அலமருகின்றன.
வீண நசையால் விளிவு விளையும்.
பேராசை பேய் ஆக்கும்.
நீசம் மிகச் செய்யும்.
அல்லல்களில் ஆழ்த்தும்.
பெண்ணாசை பெருமயலாம்.
உள்ளத்தில் அவா ஒழியின் உலகத்தில் உயர்வாம்.
ஆசை நீங்கின் பிறவி நீங்கும்.
ஈசன் அருள் எய்தும்.
இன்பம் மிகப் பெறும்.

சரு வது நசை முற்றிற்று.

# நாற்பத்தாறும் அதிகாரம்
## வறுமையின் பெருமை.

அஃதாவது வறுமையால் விளையும் பெரிய நன்மைகள். இல்லாமையில் உளவாம் நல்ல தன்மைகளை உணர்த்துகின்றமையால் பொல்லாத நசையின் பின் இது வைக்கப்பட்டது.

451. பொறிபுலன்கள் இன்பம் பொருந்தலன் றில்லா
வறிய நிலையே வறுமை—அறிவரதை
வேண்டும் எனவே விழைந்துகொள்வர் உள்ளதையும்
வேண்டாம் எனவே வெறுத்து. (க)

இ—ள்.

மெய் வாய் முதலிய பொறிகள் நுகரவுரிய போகப்பொருள்கள் யாதும் இல்லாமையே வறுமையாம்; நல்ல அறிஞர் தமக்கு உள்ள பொருள்களையும் வேண்டாம் என வெறுத்து விடுத்து அந்த இன்மையை விரும்பிக் கொள்ளுகின்றனர் என்பதாம்.

இது வறுமையின் நிலைமையை உணர்த்துகின்றது.

உலகப் படைப்பு அதிசய விநோதம் வாய்ந்தது. எவ்வகையிலும் அளவிடலரியது. யாண்டும் எதிர் பொருள் உடையது. பகல் இரவு, பிறப்பு இறப்பு, விழிப்பு உறக்கம், ஒளி இருள், புகழ் பழி, புண்ணியம் பாவம், மெய் பொய், மேல் கீழ், நன்மை தீமை மேதை பேதை, இன்பம் துன்பம், பெருமை சிறுமை, வெற்றி தோல்வி, கல்வி மூடம், செல்வம் வறுமை, என இன்னவாறு யாவும் இரட்டைகளாய்ப் பின்னிப் பிணைந்துள்ளன.

நிலம் நீர் தீ வளி ஆகாயம் என்னும் ஐந்து பூதங்களும் தம்முள் மாறுபாடுடையன ஆதலால் அவற்றின் கூறுபாடுகளாய் வந்தனவற்றுள் வேறுபாடுகள் விரிந்திருக்கின்றன. பேதங்களாய் விரிந்துள்ளதே உலகம் என வேதங்கள் வரைந்துள்ளன. எல்லையில்லாத இந்தப் பேத விரிவுகளில் அபேத நிலையை ஓர்ந்து தெளிவதே தேர்ந்த ஞானம் ஆம். ஞாலத்தையும், காலத்தையும், கோலத்தையும், மூலத்தையும் கருதியுணருந்தோறும் அரிய அதிசயங்கள் பெருகி விரியும். குறுகிய அறிவால் அறிய முடியா.

அநுபவஅறிவும் அநுமான உணர்வும் மனித மரபுள் மருவியுள்ளமையால் இயன்ற அளவு எதையும் நுணுகி ஓர்ந்து யாண்டும் சிந்தனை செய்து தெளிந்து கொள்ளுகின்றது.

தனக்கு இதமானதை உவந்து கொள்ளுவதும், இதமல்லாததை இகழ்ந்து தள்ளுவதும் மனிதனிடம் இயல்பாக அமைந்திருக்கின்றன. உணவு உடை மனைவி முதலிய இனிய துணைகளை அவன் கனி விழைந்து நிற்கின்றான்.

உலக போகங்களை உதவி வருதலால் பொருள் மேல் பேராசை கொள்கின்றான்; அது இல்லாத நிலை பொல்லாதது என்று மிகவும் அஞ்சி அயர்கின்றான். அந்த அச்சம் உச்சநிலையில் எங்கும் பரவியுள்ளது. அது கொச்சை என வறுமையின் பெருமையை உரிமையோடு தெளிந்து கொள்ளும்படி இது தெளிவு கூறுகிறது.

வறுமை என்றால் என்ன? வறந்தது; வற்றியிருப்பது எனப் பொருள் வளம் குறைந்துள்ளமையைக் குறித்து நின்றது. இந்த வறுமைக்கு எதிர்மறையாய் நிற்பது செல்வம் என வந்தது. இதனை எல்லாரும் பேராவலோடு விரும்பி யுள்ளனர். இதனை விரும்பாதவர் மிகவும் அரியர்.

எல்லாவற்றையும் துறந்து பரம்பொருளே தஞ்சம் என்று நெஞ்சம் துணிந்து நெடுவனம் போன பெரிய துறவிகளும், அரிய தவசிகளும் செல்வத்தைக் கண்டபோது உள்ளம் மயங்கி எள்ளலையும் மறந்து அதனை விழைந்து கொள்ளுகின்றனர்.

"மண்ணாசை பெண்ணாசை மற்றுமுள்ள ஆசை எல்லாம்
ஒண்ணாது எனவெறுத்த யோகியர்கள்—பண்ணுதவ
மாண்புடையோர் ஒன்றான வத்துவைக் கண்டாலும் உன்னைக்
காண்பதிலே ஆசை கணக்கு உண்டோ!" (பணவிடு தூது)

கடந்த ஞானிகளும் பொருளில் மருள் கொண்டுள்ளமையை இது காட்டியுள்ளது. ஒன்று ஆன வத்து என்றது கடவுளை. பரமனை நேரே கண்டு மகிழ்கின்ற மவுன யோகிகளும் பணத்தைக் கண்டபொழுது வாயைப் பிளந்து ஆசை மண்டி நிற்கின்றனர் என்றமையால் அதன் மாய மயக்கம் அறியலாகும்.

செல்வத்தை இங்ஙனம் எவரும் எவ்வாறு அவாவி வருகின்றனரோ அவ்வாறே வறுமையை யாவரும் அஞ்சி நிற்கின்றனர். செல்வத்தை வேண்டாம் என்று வெறுத்து விடுபவரினும் வறுமையை வேண்டும் என்று விரும்பிக் கொள்பவர் மிகவும் அதிசயமான அரிய நிலையினர். எவரும் துதி செய்யும் நெறியினர்.

அறிவர் அதை வேண்டும் எனவே விழைந்து கொள்வர்.

எல்லாரும் அஞ்சி வெறுக்கின்ற வறுமையைத் தமக்கு உரிமையாக வேண்டும் என்று விரும்பிக் கொள்கின்ற அற்புத நீரானை இது குறித்து நின்றது. அறிவர் என்றது மெய்யுணர்வுடைய தத்துவ தரிசிகளை. உலக பந்தங்களை ஒருவி உயர்கதி அடையவுரியவர் பொருளை மருள் என்று தள்ளி வறுமையைப் பெருமையாக மருவிக் கொள்ளுகின்றனர்.

பகீரதன், சிகித்துவசன் என்னும் முடி மன்னரும் தமது பெரிய அரச செல்வங்கள் யாவும் வேண்டாம் என்று அறவே துறந்து மறுமையையும் விரும்பாமல் வறுமையை மருவி மகிழ்ந்திருந்தனர். யாதொரு பொருளும் இல்லாமல் தனியே இருக்கும் பொழுது ஏதோ ஓர் அரிய பேரின்பம் உள்ளதாக அவர் கூறியிருக்கின்றனர்.

"பற்று இன்றித் தனி இருக்கும் மனத்தைப் போல் பனி மதியும் பதுமத்தோனும், பொற்றிரள் சேர் இந்திரனும் சுகம் அடையார்" (ஞான வாசிட்டம்)

தான் அனுபவித்துள்ள ஆனந்த உண்மையைச் சிகித்துவசன் இவ்வாறு உலகம் அறிய உரைத்துள்ளான்.

"கம்பமத யானைக் கழுத்தகத்தின் மேலிருந்து
இன்பமரும் செல்வமும் இவ் அரசும் யான்வேண்டேன்"

என்று குலசேகரன் என்னும் சேர மன்னன் இவ் வண்ணம் சொல்லி அரச செல்வத்தை வெறுத்து விட்டு இல்லாமையோடு கூடி இன்பம் அடைந்திருக்கிறான்.

மாணிக்கவாசகரும், தாயுமானவரும் சிறந்த மந்திரி பதவியையும், உயர்ந்த செல்வங்களையும் வேண்டாம் என்று தள்ளி விட்டு வறுமையை உவந்து கொண்டு பெருமை பெற்றுள்ளனர். அரசு விழை திருவோடு உயர்ந்திருந்த பட்டினத்தார் அனைத்தையும் துறந்து அகிலமும் தொழுகின்றுள்ளதை நினைத்து நோக்கின் செல்வத்தின் சிறுமையையும் வறுமையின் பெருமையையும் நன்கு தெளிந்து கொள்ளலாம்.

உலகநோக்கில் கொடுமையாகத் தோன்றுகின்ற வறுமையை மதிமான்கள் சிலர் இனிமையாகத் தழுவிக் கொள்ளுகின்றனர்.

இன்மை ஒருவற்கு இளிவன்று சால்பென்னும்
திண்மையுண் டாகப் பெறின். (குறள் 988)

வறுமையுறினும் சால்புடையார் பெருமையுறுவர் என இஃது உணர்த்தியுள்ளது. இன்மைக்கும் சான்றோர்க்கும் உள்ள உறவுரிமையும் உண்மை நிலையும் இங்கே நுண்மையாக உணர வந்தது. நல்குரவு நல்லோர்க்கு நல்வரவாயுள்ளது.

பொருள் இல்லாமலே அருளுடையார் தம் உள்ளப்பண்பால் உயர்ந்த மகிமைகளையடைந்து சிறந்து மகிழ்ந்துள்ளனர்.

"My mind to me a kingdom is!
Such present joys therein I find
That it excels all other bliss
That earth affords, or grows by kind:
Though much I want which most would have,
Yet still my mind forbids to crave." (Edward Dyer)

"என்னுடைய மனமே எனக்கு ஒரு இராச்சியம்; உலக இன்பங்கள் எவற்றினும் மேலான ஆனந்தத்தை அங்கே அனுபவிக்கின்றேன்; நான் வறியன் ஆயினும் யாரிடமும் எதையும் விரும்புவதில்லை" என்னும் இது இங்கே அறிய வுரியது.

வறுமை சிறுமை தரும்; துன்பம் புரியும் என்று பொதுவாகக் கருதப்படினும் அதனைப் பெருமை ஆகவும் இன்பமாகவும் மகான்கள் மருவி மகிழ்கின்றனர்; மன நிறைவோடு எளிமை தழுவி வருகின்ற அந்த உண்மையை உய்த்துணர்ந்து நன்மை யுறுக.

---

452. இல்லாமை என்னும் இறைவியே நின்பெயரைச்
சொல்லாடின் யாரும் துளங்குவார்—பொல்லாயென்று
எள்ளுவார் நின்பெருமை எண்ணார் இறையடியை
உள்ளுவரார் நீயின்றேல் ஓது (உ)

இ—ள்

வறுமை என்னும் தெய்வமே! உன் பெயரைச் சொன்னால் யாரும் நடுங்குகின்றனர்; பொல்லாதவள் என்று இகழுகின்றனர்; நீ இல்லையானால் கடவுளைக் கருதுவார் எவர்? உனது பெருமையை ஒருவரும் உணரவில்லையே! என்பதாம்.

இது இன்மையின் நன்மையைக் கூறுகின்றது.

இல்லாமை என்பது வறுமைக்கு ஒரு பெயர். பொருள் யாதும் இல்லாத நிலைமையை அது குறித்து வந்தது. நல்குரவு முதலிய பல நாமங்களும் காரணக் குறிகளாய் அதற்கு அமைந்திருக்கின்றன.

மிசைகுறை மிடியே தரித்திரம் ஒற்கம்
இலம்பாடு இலாமை நல்குரவும் வறுமை. (பிங்கலந்தை)

குறைஇலம்பாடு மிச்சை குறுவாழ்க்கை மிடிநிரப்புச்
சிறுமையே ஒற்கம் இன்மை தீயநல் குரவே அல்கல்
வறுமையின் பெயர்பன்னொன்றும் வருதரித்திரமுமாகும்.
(நிகண்டு)

வறுமை குறித்து இவ்வாறு பெயர்கள் வந்துள்ளன. மருவிய குறிப்புகள் அதன் உருவ நிலையை உணர்த்தி நிற்கின்றன.

இல்லாமையை இறைவி என்றது அதன் அருமையும் பெருமையும் கருதி. இறைவி = பராசத்தி. இறைவனைக் காட்டியருளும் கருணைத் தாயாய் வறுமை மருவியுள்ளமையை உரிமையாய் உய்த்துணர வந்தது.

தெய்வக் காட்சி தந்து உய்வைச் செய்தருளும் உண்மையை உணராமையால் வறுமை கொடியது என்று வையம் வைய நேர்ந்தது.

பொல்லாய் என்று எள்ளுவார்.

இல்லாமையை எல்லாரும் இகழ்ந்து வருதலை இது அகழ்ந்து சொல்லியது. மனைவியைக் கணவன் கடுமையாக வையும்போது தரித்திரம் பிடித்த மூதேவி என்று திட்டுகின்றான். வறுமை பல வகையிலும் மனிதரை வாட்டி வருதலால் உலகம் அதனை வெறுத்து வருகிறது.

பசி நோய்க்கு மருந்து ஆகிய உணவையும், உலக வாழ்க்கையில் இனிய பல உல்லாச வசதிகளையும் பொருள் உளவாக்கியருளுகின்றன; அந்தப் பொருள் இல்லாத நிலை வறுமை ஆதலால் அது பொல்லாதது என எல்லாரும் அஞ்சி அதனை இகழலாயினர். வறுமை குடிபுகின் எல்லாப் பெருமைகளும் அடியோடு போய் விடும் என்று முடிவு செய்து நின்றனர்.

வடிவும் தனமும் மனமும் குணமும்
குடியும் குலமும் குடிபோகிய வா

அடி அந்தம் இலா அயில் வேல் அரசே!
மிடி என்று ஒருபாவி வெளிப் படினே. (கந்தரனுபூதி)

பெண்டிர் மதியார்; பெருங்கிளை தானது;
கொண்ட விருகா; குறுப்பின் அஃகுப;
வெண்டரை நின்று வெறுக்கை இலராயின்
மண்டினர் போல்வர்தம் மக்களும் ஒட்டார். (வளையாபதி)

கல்லானே ஆனாலும் கைப்பொருள்ஒன் றுண்டாயின்
எல்லாரும் சென்றங்கு எதிர்கொள்வர் — இல்லானை
இல்லாளும் வேண்டாள்மற்று ஈன்றெடுத்த தாய்வேண்டாள்
செல்லா தவன்வாயிற் சொல். (நல்வழி)

பிறந்த குலமாயும் பேராண்மை மாயும்
சிறந்ததம் கல்வியும் மாயும்—கறங்கருவி
கன்மேல் கழூஉம் கனமலை நன்னாட
இன்மை தழுவப்பட் டார்க்கு. (நாலடியார்)

இன்மை எனஒரு பாவி மறுமையும்
இம்மையும் இன்றி வரும். (குறள்)

வறுமையைக் குறித்து மேலோர் இங்ஙனம் எள்ளியுள்ளனர்.

உலக வாழ்வுக்கு உதவி புரியாததை நினைந்து நெஞ்சம் கனன்று இவ்வாறு அதனை வெறுத்து இகழ நேர்ந்தனர்; ஆன்ம வாழ்வுக்கு அனுகூலமாய் நிற்கும் அதன் நீர்மையைக் கூர்மையாய் ஓர்ந்துணரும்போது யாரும் உவந்து கொள்கின்றனர்.

நீ இன்றேல் இறை அடியை யார் உள்ளுவார்?

வறுமையை நோக்கி இவ்வாறு வினவியது அதன் உரிமை உண்மைகளை உலகம் கூர்ந்து உணர்ந்து கொள்ள வந்தது. யாதும் இல்லாத போதுதான் எல்லாம் உடையானைச் சீவர்கள் உள்ளி உருகுகின்றனர்.

செல்வ வளங்கள் நிறைந்து தேக போகங்களில் மூழ்கியுள்ள பொழுது மறுமையையோ, தெய்வத்தையோ மனிதன் சிந்திக்கவே மாட்டான்; துயரங்கள் நேர்ந்த போதுதான் அவற்றை நீக்கும் நிமித்தம் கடவுளை நோக்க நேர்கின்றான்.

பசிப்பிணி உணவைத் தேடச் செய்தல்போல் வறுமைத் துயரம் இறைவனை நாடச் செய்கின்றது. ஆகவே கடவுளுடைய திருவருளை அடைய விரும்புகின்றவர் தம் கையிலுள்ள பொருளையெல்லாம் விரைந்து துறந்து விட்டு வறுமையை விழைந்து கொள்ளுகின்றனர். அதில் அரிய நன்மைகளைப் பெறுகின்றனர்.

செல்வம் பல் வகையிலும் களிப்பு மிகச் செய்தலால் தெய்வ சிந்தனை முதலிய நல்ல உறுதி நலங்களைச் செல்வர் இழந்து போகின்றனர். அது வந்தபோது வருகின்ற மடமைகள் பல.

செல்வம் வந்துஉற்ற காலைத் தெய்வமும் சிறிதுபேணார்;
சொல்வன அறிந்து சொல்லார்; சுற்றமும் துணையும் நோக்கார்;
வெல்வதே நினைவ தல்லால் வெம்பகை வலிதுஎன்று எண்ணார்;
வல்வினை விளைவும் ஓரார்; மண்ணின்மேல் வாழு மாந்தர்.

(பாரதம்)

உண்மையான அனுபவ நிலைகளை இது உணர்த்தியுள்ளது.

இம்மையில் தமக்கு எல்லாச் சுகங்களும் நிறைந்திருப்பதாக இறுமாந்து கொள்ளுதலால் செல்வர்க்கு மறுமை நோக்கம் இல்லாமல் ஒழிகின்றது. ஒழியவே இழிவுகள் விளைகின்றன.

ஏசுநாதரை ஒரு பெரிய செல்வன் கண்டான். தொழுது வணங்கினான்; தனக்கு அருள் புரிய வேண்டினான். "உன் பொருளில் கொஞ்சம் ஏழைகளுக்குக் கொடு; ஏழை பங்காளன் ஆகிய கடவுள் அருள் உனக்கு உண்டாம்" என்று அப் பெரியவர் சொன்னார். சொல்லவே அச் செல்வன் மெல்ல விலகினான். பணம் குறைந்து போமே என்று மனம்கலங்கி அவன் விரைந்து மறைந்து போயினான். அவன் போக்கை நோக்கி ஏசு புன்னகை செய்தார். தம் அருகே நின்ற சீடரிடம் செல்வர் நிலையைக் குறித்துச் சுவையாக ஓர் உவமையை உரைத்தார். அயலே வருகின்றது காண்க.

"It is easier for a camel to go through the eye of a needle, than for a rich man to enter into the Kingdom of God" (Bible, Mark, 10-25)

"ஒரு ஒட்டகம் ஊசித் துளையில் நுழையினும் நுழையும் செல்வன் பரலோகராச்சியத்தில் புகுதல் அரிது" என அத் தீர்க்க தரிசி இவ்வாறு தெளிவாகக் குறித்திருக்கிறார்.

பொருளுடைமை மறுமையைக் காண முடியாதபடி மருளுடையதாய் இருளடைந்திருக்கும் என்பதை இது தெளிவித்துள்ளது. செல்வம் அறிவைக் குருடாக்கி விடுகின்றது.

வறுமை மறுமைக்கு உரிமையாய் அரிய பல நலங்களை உதவி யருளுதலால் ஞானிகளும் துறவிகளும் தமக்கு உறுதியாக அதனை உவந்து கொண்டுள்ளனர்.

பிறந்தகுலம் அழியும் என்றும் பேராண்மை
ஒழியும் என்றும் பேச நின்ற
அறந்திகழும் வறுமையே! உன்னைநான்
அடைந்தமையால் அகிலம் எல்லாம்
சிறந்தகுல முனிவன் எனத் திசைநோக்கித்
தொழுகின்றேன்; சீர்த்தியோடு
பிறந்த பெரும் பேறெய்திப் பேரின்பநிலை
கண்டேன் பேசல் என்னே!

வறுமையால் தான் பெற்றுள்ள மகிமைகளை ஒரு பெரியவர் இவ்வாறு வியந்து மகிழ்ந்து கூறியுள்ளார். உள்ளம் தூயவர் வறுமையை மருவினல் புடம் இட்ட பொன்போல் புனிதம்அடைந்து உயிர் ஒளி மிகுந்து உயர்கதி பெறுகின்றனர்.

கடவுளைக் காட்டிக் கதிநலம் அருளுதலால் வறுமை அரிய தவத்தின் உருவம் என நின்றது. உறுதி உண்மைகளைக் கருதியுணர்ந்தவர் பொருள் இன்மையை நன்மை ஆக எண்ணியுள்ளனர்.

---

453. ஈசன் அருள்எய்த எண்ணிய போதத்தே
நீசம் பொருள்என்று நீங்குவார்—பாசமென
எல்லாம் அகற்றி இனிய வறுமையே
நல்லார் உறுவர் நயந்து. (௩)

இ—ள்

ஈசன் அருளை அடைய விரும்பிய பொழுதே பொருளை நீசம் என்று இகழ்ந்து நீங்கி பற்றுக்களை எல்லாம் விட்டு வறுமையை நயந்து பெரியோர் உவந்திருக்கின்றனர் என்பதாம்.

இது வறுமை மறுமையின் உரிமை என்கின்றது.

உலகம், கடவுள், சீவன் என மூன்று பிரிவுகள் உள்ளன. முதலில் உள்ள இரண்டு நிலைகளையும் இறுதியில் உள்ளவன் உரிமையாய் மருவி நிற்கின்றான். முன்னது அநித்திய நிலையது; பின்னது என்றும் நித்தியமுடையது. தெளிவான மெய்யுணர்வு தோன்றிய பொழுது இளிவான பொய்யுலக வாழ்வு கழிவாய் ஒழிகின்றது. சீவான்மா பரமான்மாவைத் தோய்ந்து கொள்வதே பேரின்ப நிலையமாய் வாய்ந்து வருகின்றது. என்றும் நிலையான ஈசனைச் சீவன் எய்த நேர்ந்தவுடன் பொன்றும் புலையான உலகப்

பொருள் யாவும் நீசம் என நீக்கி விட நேர்கின்றான். தெய்வ ஒளி தெரியவே மையல் இருள் ஒழிந்து உய்தி நலம் வருகின்றது.

அரிய பல செல்வங்களையுடைய ஒரு பெரிய அரசன். பல சன்மங்களில் செய்து வந்த புண்ணிய பரிபாகத்தால் தெளிவான ஞானம் ஒரு நாள் அவனுக்கு உதயம் ஆயது. "உலக வாழ்வு எவ்வளவு உயர்வுடையது ஆயினும் எவ்வழியும் நிலையில்லாதது; கடவுள் ஆகிய பெரிய சோதியிலிருந்து பிரிந்த ஒரு ஒளித் துளியே சீவன் எனப் பாவ வுலகங்களில் பரிதபித்து உழல்கின்றது; பரிதாபமான இந்தப் பாசபந்தங்கள் ஒழிந்து பழைய நிலையை அடைய வேண்டும்" என்று துணிந்து தனது அரச பதவியைத் துறந்து வெளியே போனான். மந்திரி தொடர்ந்து போய் மறுகித் தடுத்தான். அப்பொழுது அமைச்சனை நோக்கி அம் மன்னன் கூறிய உறுதி மொழிகள் யாவரும் உணர வுரியன. சில அயலே வருகின்றன.

இந்த இழிவை யுடைய இந்த மாயை அசத்தே;
அந்த உயர்வை யுடைய அந்தப் பிரமம் சத்தே;
தந்தம் மனத்தில் தேர்ந்தோர் தள்ளி எதனைக் கொள்வர்
உன்றன் மனத்தில் நன்று யூகித்து அமைச்ச பாராய்! (1)

பொய்யென்று இதனை அறிந்தோர் பொருந்தி நிற்பது உளதோ?
மெய்யென்று அதனை அறிந்தோர் மேவாதிருப்பது உளதோ?
ஐயம் உளதோ இதனில் அமைச்ச! பாராய நன்றாய்
உய்ய அறிவி லாதோர் உழல்வர் நீக்க மாட்டார். (2)

பொய்யை மெய்யென்று அறிந்து போதம் இன்மை யாலே
மெய்யைப் பொய்யென்று எண்ணி மெலிந்தே உழல்வர் உலகர்;
பொய்யைப் பொய்யென்று அறிந்து போதகுருவின் அருளின்
மெய்யை மெய்யென்று அறிந்தே மெலிவு தீர்வர் உயர்ந்தோர். (3)

துன்பம் தோன்றில் எவரும் துறந்து ஏகராய்த் தனித்தே
இன்பம் தேடல் இயற்கை; இன்பம் என்றே தோன்றின்
அன்பதாக நீங்கார் அவர்கட்கு எங்ஙன் கூடும்
நன்பரம ஞான நாட்டம் அமைச்ச! சொல்லாய்? (4)

இழிவை உணர்ந்தால் உயர்வை எவரும் தேடி அடைவர்;
இழிவை உணரார் உயர்வை எய்தநோக்கார் என்றும்
இழிவை இழிவுஎன்று உணர எந்தக்காலம் வாய்க்கும்?
இழிவை யுடையோர்க்கு அமைச்ச! இதனை யூகித்துணராய்! (5)

(மகாராசா துறவு)

தத்துவ ஞானத்தால் தெளிவடைந்த மன்னன் மந்திரியிடம் இவ்வாறு கூறியிருக்கிறான். உரைகளில் பொதிந்துள்ள உணர்வு நலங்கள் ஓர்ந்து சிந்திக்கத் தக்கன. மெய்யுணர்வுவரின் வையக வாழ்வை வெய்யது என வெறுத்துத் தெய்வ கதியை எவரும் நாடி எழுவர் என்பது இதனால் தெளிய வந்தது.

இனிய வறுமையே நல்லார் உறுவர்.

இறைவன் அருளையே நாடி உருகும் ஞான சீலர்கள் உலகப் பொருள்களை வெறுத்து விடுத்து வறுமையையே உரிமையாக மருவிக் கொள்ளுதல் அரிய ஒரு அதிசயமாய்ப் பெருகியுள்ளது. அவ் உண்மையை இது உணர்த்தி நின்றது.

ஈசனை அடைய நேர்ந்தவர்க்குச் செல்வம் கொடுமையாகவும் வறுமை இனிமையாகவும் தெரிதலால் இனிய என்னும் அடையை ஈண்டு அது மருவி வந்தது. கொடியது என்று வையம் அஞ்சுகின்ற வறுமை மெய்யறிவாளருக்கு இனியதாய் உய்தி புரிந்தருள்கின்றது. உண்மையுணர்வு நன்மையை ஓர்ந்து கொள்கின்றது.

முதலில் வறியராயிருந்த குசேலர் பின்பு பெரிய செல்வங்களை அடைந்தார். அந்தச் செல்வ வளங்கள் அவர்க்கு மிகுந்த தொல்லைகளாய்த் தோன்றின. எல்லாரும் உறவினராய் யாவரும் நண்பர்களாய்ப் பல்லோரும் பெருகி வந்தனர். நாளும் நாளும் புகழ்ச்சி மொழிகள் பொங்கி வளர்ந்தன. முன்பிருந்த சித்த சாந்தத்தை இழந்து குசேலர் தத்தளித்தார். அந்தச் செல்வ நிலை கொடிய அபாயம் என்று முடிவு செய்தார்.

அடியோடு அது ஒழிந்து போக வேண்டும் என்று கண்ணனைக் கருதி வேண்டினர். பொருள் மருள் என்று வெருவி அவர் உருகி வேண்டியுள்ள நிலையை அடியில் காண்க.

அடியனேன் உய்ந்தேன் என்று அங்கைகள் இரண்டும் கூப்பி
முடிமிசை ஏற்றி நின்று மூதறிவுடையோர் கொள்ளாக்
கொடியஇச் செல்வம் ஒன்றே குணிப்பறும் பவத்திற்கு ஏது;
படியற ஆயின் இன்பம் பயப்பது எட்டுணையும் இன்றால். (1)

மனமொழி உடலம் என்ன வகுத்திடு கரண மூன்றும்
தினமுநின் திருவடிக்கே செலுத்துநா யடியேன் இந்தக்
கனவெனும் செல்வத் தாழ்ந்தோ களித்துநாள் கழியா நிற்பன்
உனது அடியவர்பூந் தாளில் உறப்பணிந் துய்தல் நீங்கி. (2)

ஆதலால் ஐய இந்த அநித்தியச் செல்வம் வேண்டேன்;
மேதக முன்னி ருந்த மிடியதே இன்னும் வேண்டும்;
காதலின் அடியார் வேண்டும் காரியம் அளித்துக் காக்கும்
நீதயை புரிந்துஎன் உள்ளக் கருத்தினை நிரப்பு கென்றான். (3)

(குசேலோபாக்கியானம்)

செல்வத்தை ஒழித்து வறுமையை அளித்தருள் என்று கண்ணனை நோக்கிக் குசேலர் இவ்வண்ணம் வேண்டியிருக்கிறார். ஈசன் அருளை எய்த ஒட்டாதபடி செல்வம் மோசம் செய்து விடுதலால் அதனை நீசம் என்று வெருவி மேலோர் ஒருவுகின்றனர்.

தெருளுடையார் பொருளை மருள் என்று வெருளுகின்றார்; வறுமையை இனிது என்று தழுவுகின்றார். ஆகவே உயிர்க்கு உண்மையான உறுநிலம் அது உதவிவரும் உரிமை உணரலாகும்.

"Adversity's sweet milk." (Shakespeare)

"வறுமை இனிய பால்" என மேல் நாட்டுக் கவிஞர் இங்ஙனம் கூறியிருக்கிறார். அரியபல நன்மைகள் அதனால் தெரிய வருதலால் வறுமையை மேலோர் மறுமையின் துணையாக உரிமை செய்துள்ளனர். ஞானமுடையவர் நன்மையை நாடுகின்றனர்.

ஈசன்பால் அன்பு பெருகவே பாசங்கள் ஒருவுகின்றன. ஒருவவே உலகில் எதையும் வேண்டாமல் சித்த சாந்தியுடன் உத்தம நிலையில் உயர்ந்து விளங்குகின்றனர்.

பூதம் ஐந்தும் நிலையில் கலங்கினும்
மாதொர் பாகர் மலர்த்தாள் மறப்பிலார்;
ஓது காதல் உறைப்பின் நெறிநின்றார்
கோதி லாத குணப்பெருங் குன்றனார். (1)

கேடும் ஆக்கமும் கெட்ட திருவினார்;
ஓடும் செமபொனும் ஒக்கவே நோக்குவார்;
கூடும் அன்பினில் கும்பிட லேயன்றி
வீடும் வேண்டா விறலின் விளங்கினார். (2)

ஆரம் கண்டிகை; ஆடையும் கந்தையே;
பாரம் ஈசன் பணிஅலது ஒன்றிலார்;
ஈர அன்பினர்; யாதும் குறைவிலார்;
வீரம் என்னால் விளம்பும் தகையதோ.

(பெரிய புராணம்)

ஈசன் அருளையே நாடி வேறு யாதொரு பொருளையும் வேண்டாத மெய்ப்படியார்களுடைய நிலைகளை இவை காட்டியுள்ளன. உலகப் பொருள்கள் யாதுமின்றி வறுமையே தமக்கு உரிமையாக மருவியுள்ளவரைத் திருவினர்; யாதும் குறைவிலார் எனக் குறித்தது அவரது ஆன்ம நீர்மையைக் கூர்ந்து ஓர்ந்து கொள்ளவந்தது.

---

454. உற்ற கிளையின் உரிமை உளமுணர்த்தி
மற்றவர் உண்மை மதிதெளித்து—பெற்ற
பிறவிப் பயனைப் பெறும்படி செய்யும்
அறவி வறுமை அறி. (௪)

இ—ள்

உறவினருடைய உரிமை இயல்புகளை உணர்த்தி, உலகத்தவரது உண்மை நிலைகளைத் தெளிவித்து, பிறந்த பிறவிப் பயனை அடைந்து கொள்ளும்படி செய்யும் தருமத் துணை வறுமையே; இதனை உறுதியாக உணர்ந்து கொள்க என்பதாம்.

உற்ற என்றது தாய்வழி தந்தை வழியாக வந்து பொருந்திய கிளைஞரின் தொடர்புநிலை தெரிய வந்தது. பக்கமாய் ஒட்டிக் கிளைத்தது கிளை என நேர்ந்தது. உறுதல்=பொருந்துதல், சேர்தல்.

மனிதன் தனியே வாழ்பவன் அல்லன்; அவனுடைய வாழ்வு பல சூழல்களைத் தழுவி இயங்குகின்றது கேளும் கிளையும் கெழுமி வருதலால் குடி வாழ்க்கை நெடிது செழித்து நிலவுகின்றது.

உலக உறவுகள் பல வகை நிலைகளில் பெருகியுள்ளன.

செல்வ நிலையில் காண முடியாத உண்மைகளை வறுமை காட்டி அருள்கின்றது. வறுமையிலிருந்து பலபடிப்பினைகளையும், உலக அனுபவங்களையும் நாம் அறிந்து கொள்ளுதலால் அது நமக்கு ஓர் உறுதியான அறிவுத் துணையாய் மருவியுள்ளது. கொடிய அல்லலாக வெளியே தோன்றினும் இனிய உணர்வு நலங்கள் உள்ளே அதனால் உளவாகின்றன.

உணர்த்தி, தெளித்து, பெறும்படி செய்யும் என்றது வறுமையின் கருமக் காட்சிகளைக் கருதிக் காண வந்தது.

செல்வம் உள்ள பொழுது நல்லஅன்பர் போல் பலர் நடித்து வருகின்றார்; அது இல்லாத போது மெல்ல ஒதுங்கி விடுகின்றார்.

அந்தக் கள்ள வஞ்சரது உள்ள நிலைமை உணர்ந்து கொள்ளுதற்கு வறுமை நல்ல உதவியாய் இருத்தலால் உரிமை உளம் உணர்த்தி என அதன் உடகார நிலை குறிக்கப்பட்டது.

கேட்டினும் உண்டுஓர் உறுதி கிளைஞரை
நீட்டி அளப்பதோர் கோல். (குறள் 796)

கேட்டிலேயும் ஒரு ஆக்கம் உண்டு என்று வள்ளுவப் பெருந்தகை காட்டியிருக்கும் அழகை இதில் கண்டு மகிழ்கின்றோம். முழம்போட்டு அளந்து பார்த்துக் கிளைஞரைத் தெளிவாகத் தெரிந்து கொள்ளுதற்குக் கேடு சரியான அளவுகோல் என்றதனால் அதன் பாடும் பயனும் நாடி அறியலாகும்.

ஒருவன்பால் உண்மையான உள்ளன்புடையவர் அவனுக்கு இடர் நேர்ந்த காலத்தும் உடனிருந்து பலவகையிலும் உதவி புரிவர்; போலியான பொய்யுறவாளர் கேடு வந்தபோது யாதும் உதவாமல் ஓடி விடுவர். உரிமையான நண்பர்போல் அளவளாவி நின்ற அந்தக் கொடிய வஞ்சரை நன்கு தெரிதற்கு வறுமை கருவியாய் நிற்றலால் மனித வாழ்க்கையில் அஃது ஓர் இனிய துணையாயது தத்துவ சோதனையின் தக்க சாதனம் புத்துணர்வு தருகிறது.

செல்வம் காட்டாத காட்சியை நல்குரவு காட்டியருளுதலால் அது நல்ல ஒரு ஊதியம் என உவந்து சொல்ல வந்தது

"Sweet are the uses of adversity." (Shakespeare)

"வறுமையின் அனுபவங்கள் இனிமையுடையன" என மேல் நாட்டுக் கவிஞராகிய ஷேக்ஸ்பியர் இங்ஙனம் கூறியிருக்கிறார்.

உண்மையை நன்கு ஓர்ந்து தெளிதற்கு இன்மையே யாண்டும் இனிய துணையாய் நேர்ந்திருக்கின்றது.

அரிய பல உணர்வு நலங்கள் வறுமையிலிருந்துதான் உதயமாயுள்ளன. பெரிய மகான்களுடைய சரித்திரங்கள் பலவற்றையும் தருவி நோக்கின் பெரும்பாலும் வறுமையே அவர்க்கு உரிமையாயிருந்து உதவி புரிந்துள்ளமை உணரலாகும்.

பிறவிப் பயனைப் பெறும்படி செய்யும் அறவி.

வறுமையை இவ்வாறு குறித்தது அதன் அருமையை நுணுகி ஓர்ந்து கொள்ள வந்தது. பிறவிப்பயன ஆவது மீண்டும் பிறவாத நிலையைப் பெறுவது. அறவி என்றது புண்ணியவதி என்றவாறு.

பாவத் தொடர்புகளில் இழிந்து படாமல் தடுத்து உயர்ந்த புண்ணிய நெறிகளில் செலுத்தி சிறந்த பேரின்ப நிலையை அடையும்படி செய்தருளுதலால் வறுமை ஒரு தரும தேவதை என அமைந்தது. உயிர் மாசு கழிய அது உயர் தேசு புரிகின்றது.

பிறவி நீங்கி முத்தி பெற விரும்புகின்றவர் துறவினை அடைகின்றனர். துறவு என்றால் என்ன? உலகப் பொருள்கள் எல்லாவற்றையும் துறந்து விடுதல். யாதொன்றும் இல்லாதிருத்தலே துறவு நிலையாம்; ஆகவே அதற்கும் வறுமைக்கும் உள்ள உறவுரிமை தெளிவாகின்றது. உண்மை நிலை வெளி வருகின்றது.

துன்பத் தொடர்பை நீக்கி என்றும் அழியாத இன்ப நிலையை இனிது அருள வல்ல துறவு போலவே வறுமையை உறவுடன் உரிமை செய்து கொண்டவர் அரிய பல உறுதி நலங்களை எளிதே அடைந்து கொள்கின்றனர்.

பொன்றும் பொருள்கள் புறத்தொழிந்து போயினோ
என்றும் அழியா இறைவனை—ஒன்றிநின்று
பேரின்பம் காணும் பெருமையால் நேர்வறுமை
ஓரின்ப மாக வுணர்.

உன்பால் வறுமையுறின் டாமனை உரிமையுடன் அருளும் பாக்கியமாக அதனைப் பதிவு செய்து கொண்டு கதிநலம் காணுக.

---

455. அடங்காமை காட்டி அகங்கரிப்பு நீட்டி
மடங்காட்டும் செல்வம்; வறுமை—அடங்கி எவர்
பாலும் பணிவே பயிற்றிப் பரனருளை
மேலும் அருளும் விரைந்து. (ரு)

இ—ள்

தடுக்கு செருக்கு மடமைகளை விளைத்துச் செல்வம் சிறுமைப் படுத்தும்; அடக்கம் பணிவு முதலிய இனிய நீர்மைகளை வளர்த்து இறைவன் அருளையும் வறுமை விரைவில் அருளும் என்பதாம்.

செல்வம் வறுமை என்பன மனித வாழ்க்கையில் யாண்டும் மருவி நிற்கின்றன. அவற்றின் நிலைகள் எவ்வழியும் நிலையில்லாதன; நேர்மாறான நீர்மைகளோடு நிலவியுள்ளன. நாளில் பகலும் இரவும் போல் வாழ்வில் அவை உறழ்ந்து வருகின்றன.

நல்லது என்று எல்லாரும் நயந்து கொள்ளுகின்ற செல்வம் பலரிடம் அல்லலே புரிந்து அவலேகடுகளே செய்கின்றன; பொல்லாதது என்று எள்ளுகின்ற வறுமை நலம் பல செய்து சிலரிடம் உயர்ந்த மகிமைகளே விளைத்தருளுகின்றன. செல்வர் பலர் பழி பாவங்களில் நடந்து இழிந்து படுவதும், வறியர் பலர் புகழ் புண்ணியங்களே அடைந்து உயர்ந்து திகழ்வதும் உலக அனுபவங்களாய் விளங்கி நிற்கின்றன.

அடங்காமை காட்டி அகங்கரிப்பு நீட்டி மடம் காட்டும்.

என்றது செல்வம் மிகுந்துள்ள இடங்களேக் கண்டு கொள்ள வந்தது. வன்மையான செல்வர்பால் புகுந்துள்ள பொல்லாத புன்மைகளுள் சில இங்ஙனம் வரைந்து காட்டப்பட்டன.

அடங்காமை ஆவது தீய வழிகளில் துணிந்து செல்லுதல்.

மனம் மொழி மெய்கள் இனியனவாய் அடங்கி ஒழுகின் அந்த அடக்கம் புனிதம் உடையதாய்ப் புகழ் மிகப் பெறுகின்றது. அங்ஙனம் இன்றித் துடுக்காய் நிமிர்ந்து மிடுக்குடன் நடந்தால் அதனுல் பழியும் இழிவும் விளேந்து அழிவே அடைகின்றது.

'அடக்கம் அமரருள் உய்க்கும்; அடங்காமை
ஆரிருள் உய்த்து விடும். (குறள் 121)

அடங்கி ஒழுகுபவர் தேவராய் உயர்வர்; அடங்காமல் திரிபவர் நரகராய் இழிவர் என இது அறிவுறுத்தியுள்ளது. அடங்காமை நரகத்தில் கொண்டு போய் விடும் என்றதனுல் அதன் தீமையைத் தெளிந்து கொள்ளலாம். நரக துன்பத்திற்கு ஏதுவான இந்தக் கொடுமையைச் செல்லப் பிளேயாகச் செல்வம் வளர்த்து விடுகின்றது. உள்ளத் திமிர் உயிர்க்குத் துயர் ஆகின்றது.

அகங்கரிப்பு என்றது நான் என்னும் அகங்காரத்தால் முனேந்து எழுகின்ற மனச் செருக்கு. இது பல வழிகளிலும் இழிவுகளே உளவாக்கி மனிதனேப் பாழ்படுத்தி விடும்.

அகங்கரிப்பு வரில்எவர்க்கும் அறம்கெடுக்கும்
கற்றகல்வி அழிக்கும் உள்ளம்
புகைந்தெழுப்பும் கனலேமிகப் புழுங்கு விக்கும்
பிறரை நகைபுகுத்தும் ஆர்க்கும்

தகைந்து சுவர்க்கத்தினையும தடுக்கும் அகற்றும்
சிறிது தவம் செய்தாலும்
சுகம் தவிர்க்கும் மீளாத நரகின் உய்க்கும்
இது நமர்க்குத் தூய்மைஅன்றே.(மெய்ஞ்ஞானவிளக்கம்)

அகங்காரத்தால் விளையும் அவலங்களுள் சிலவற்றை இது விவரமாக விளக்கியிருக்கின்றது. மமதையாக எவரையும்இகழ்ந்து பேசுவதும், எதையும் துணிந்து செய்வதும், யாண்டும் இறுமாந்து நிற்பதும் செல்வ வெறியின் இயல்புகளாயுள்ளன.

செல்வச் செருக்கு என்பது ஒரு பொல்லாத புன்மையாம். எத்தகைய மதிமான்களையும் சித்தத்தைத் திரித்து இது பித்தம் மிகச் செய்து பிழைபாடுகளை விளைத்து விடுகின்றது.

அறம் நிரம்பிய அருளுடை அருந்தவர்க்கு ஏனும்
பெறலருந்திருப் பெற்றபின் சிந்தனை பிறிதாம். (இராமாயணம்)

பொல்லாத கூனியும் செல்வத்தைக் குறித்து இப்படி நல்ல ஒரு நீதியை எல்லாரும் அறியச் சொல்லியிருக்கிறுள். அரிய தவமுடைய பெரியவர்களையும் வெறியராக்கி விடும் என்றதனல் செல்வக்களிப்பின் வீறும் வேகமும் அறியலாகும்.

கழிபெருஞ் செல்வக் கள்ளாட்டு அயர்ந்து
மிக்க நல்லறம் விரும்பாது வாழும்
மக்களிற் சிறந்த மடவோர் உண்டோ? (மணிமேகலை)

அரும்பெறற் செல்வம்வந்து அடைந்த காலையில்
திருந்திய நல்லறம் செய்து நாள்தொறும
விரிந்தநற் புகழினை விளைத்தல் வீறுசால்
புரந்தரற்கு ஆயினும் புரிய லாகுமோ? (1)

தனித்தனி முச்சுடர் இயற்றித் தங்கிய
அனைத்துலகு இருளையும் அகற்று நான்முகன்
நினைப்பரும் செல்வம்வந்து எய்தின் நீடிய
மனச்செருக்கு எனும்இருள் அகற்ற வல்லனே? (2)

ஏர்பெறும் இருநிதிச் செருக்கை எய்திடின்
தேர்செவி யுடையரும் செவிடர் ஆகுவர்;
ஓர்தரும் உரைவலோர் ஊமர் ஆகுவர்;
கூர்விழி யுடையரும் குருடர் ஆவரே. (3)

(காசி காண்டம்)

ஒப்பருநற் குணத்தவர்க்கும் கொலைகாமம்
கள்களவை உபதேசிக்கும்
அப்பனாய், நேயர்க்குள் பகைவிளைக்கும்
சத்துருவாய், அகிலத்துற்ற
செப்பரிய துயர்க்கெல்லாம் மாதாவாய்த்,
தீவினைக்கு ஓர் செவிலியாய
இப்பொருளை நற்பொருளென்று எப்படி நீ
ஒப்புகின்றாய் ஏழை நெஞ்சே! (1)

நோக்கிருந்தும் அந்தகராக், காதிருந்தும்
செவிடரா, நோயில்லாத
வாக்கிருந்தும் மூகையரா, மதியிருந்தும்
இலலாரா, வளரும் கைகால
போக்கிருந்தும் முடவரா, உயிர் இருந்தும்
இல்லாத பூட்சியாரா,
ஆக்கும் இந்தத் தனமதனை ஆக்கம் என
நினைத்தனை நீ அகக்குரங்கே. (நீதிநூல்)

செல்வம் அடைந்தபோது மனிதர் அடையும் நிலைகளை இவை தெளிவாகக் குறித்திருக்கின்றன. உலக வாழ்வுக்கு அனுகூலம் உடையதாயினும் பொருளடைவு மேலே உயர் நிலையை அடையாதபடி உயிர்களை மருளடையச் செய்கின்றது. அங்ஙனம் செய்து வருதலினாலேதான் உய்தியை நாடிய ஞானிகள் அதனை வெய்யது என வெறுத்து விலகிப் போகின்றார்.

அர்த்தம்அநர்த்தம் பாவய நித்யம் நாஸ்தி தத:ஸு²கலேசசத்யம்
புத்ராதபி தநபாஜாம் பீதி: ஸர்வத்ரைஷா விகிதா ரீதி:

"செல்வம் என்றும் அபாயமுடையது என எண்ணுக; உண்மையாக அதனால் யாதொரு சுகமும் இல்லை; பொருள்படைத்தவர் தம் உயிர்க்குக் கேடு நேருமோ? என்று தமது பிள்ளைகளிடமும் பயம் அடைகின்றனர். உலகம் எங்கும் இவ்வாறே அவலமும் கவலையும் பரவியுள்ளன" என ஆதி சங்கராச்சாரியார் இங்ஙனம் கூறியிருக்கிறார். அர்த்தம் அநர்த்தம் என்றது உய்த்துணரவுரியது.

இனியது என்று கொஞ்சுகின்ற செல்வம் இவ்வாறு இன்னல் நிலையமாய் மன்னியுள்ளது; இன்னாது என்று அஞ்சுகின்ற வறுமை மனிதனுடைய நெஞ்சில் பல பண்புகளை வளர்த்துத் தெய்வ கதியில் உய்த்து உயிர்களுக்கு உய்தி புரிந்தருள்கின்றது.

நிழலின் கீழ் உள்ள பைங்கூழ் போலச் செல்வத்தில் வாழ்பவன் மேலான விளைவு குன்றி வெளியே வெளுத்து நிற்கின்றான்; வெயிலில் வாடிய பயிர்போல் வறுமையால் வாடிய உயிர் உள்ளே உறுதியாய் வளர்ச்சியடைந்து உயர்ச்சி யுறுகின்றது.

அடக்கம் அமைதி பணிவு முதலிய இனிய நீர்மைகள் வறுமையில் வளர்ந்து வருகின்றன; வரவே மனிதன் புனிதனாய் உயர்ந்து தனி மகிமைஅடைந்து பரமன் அருளைப் பெறுகின்றான்.

---

456. அருந்தல் அகற்றி அருந்தவம் நல்கிப்
பெருந்தகை யாவும் பெருக்கி—இருந்தலம்
எல்லாம் வணங்கி எதிர்பணியச் செய்யுமே
ஒல்லா வறுமை யுணர். (சு)

இ—ள்

பொறி நுகர்வுகளை நீக்கி அரிய தவங்களை ஆக்கிப் பெரிய தகைமைகளை விளைத்து உலகம்முழுவதும்தொழுது வணங்கும்படி வறுமை செய்தருளும் என்பதாம்.

இது இன்மை தரும் நன்மை கூறுகின்றது.

வறுமை வாழ்வில் தேக போகங்கள் குறைகின்றன; குறையவே அது மறுமை நோக்கிய ஒரு தவசி வாழ்வாய் மருவி வருகின்றது. திருந்திய பண்புகள் அதனால் விளைந்து வருகினறன.

அருந்தல்=உண்ணுதல். பசியும் காமமும் சீவர்களுக்கு இயல்பாய் நேர்ந்துள்ளன. அவை அருந்தல் பொருந்தல்களால் முறையே அகன்று வருகின்றன. இந்த இரண்டையும் துறந்த போது அது சிறந்த தவம் ஆய்த் திரண்டு திகழ்கினறது. அரிய விரத சீலங்களையுடையது அருந்தவம் என அமைந்தது.

பட்டினி கிடந்து உடம்பை வாட்டி ஒருமையுடன் ஆன்ம சிந்தனை செய்து வருதலால் தவம் மேன்மையான உய்தி நிலையமாய் மேவி மிளிர்கின்றது.

"உண்ணாது நோற்பார் பெரியர்." (குறள் 160)

தவத்தின் நிலைமையையும், அதனைச் செய்பவரது தலைமையையும் இது குறித்துள்ளது. குறிப்பைக் கூர்ந்து நோக்கி நோன்பின் உறுபயையும் சிறப்பையும் ஓர்ந்து கொள்ளுக.

"ஓவாது இரண்டு உவவும் அட்டமியும் பட்டினி விட்டு
ஒழுக்கம் காத்தல் தாவாத் தவம்" (சீவக சிந்தாமணி 1547)

பொருளொடு போகம் புணர்த லுறினும்
அருளுதல் சான்ற அருந்தவம் செய்ம்மின்!
இருளில் கதிச்சென்று இனியிவண் வாரீர்
தெருள லுறினும் தெருண்மின் அதுவே. (வளையாபதி)

உடம்பும் கிளையும் பொருளும் பிறவும்
தொடர்ந்து பின் செல்லாமை கண்டும்—அடங்கித்
தவத்தொடு தானம் புரியாது வாழ்வார்
அவத்தம் கழிகின்ற நாள். (அறநெறிச் சாரம்)

தவத்தின் உருவும் உரிமையும் இவற்றால் உணரலாகும்.

உயிர்க்கு இனிய தெய்வ சஞ்சீவியாய்த் தவம் அமைந்துள்ளமையால் அதனை எய்திய அளவு உய்தி நலங்கள் உளவாகின்றன.

அரிய தவநெறியில் மருவ வுரிய பெரிய விரத சீலத்தை வறுமை இயல்பாக உதவியருளுதலால் அதனோடு இதற்குள்ள உறவுரிமை தெரிய வந்தது.

தவம் என்பது என்ன? பசியை அடக்கிப் பட்டினியிருப்பது. அந்த இருப்பை வறுமை உரிமையாக உதவி வருகின்றது. உண்ண உணவில்லாத வறிய நிலை அரிய தவ வாழ்வாக மாறிப் பெரிய மகிமையை விளைத்தருள்கின்றது. உபவாசம் தவவாசம் ஆதலால் அதன்கண் வறுமை வாசமாயுள்ளது.

அருந்தல் அகற்றி அருந்தவம் நல்கி.

என்றது வறுமை வழங்கிவரும் வரவு காண வந்தது. உயர்ந்த தவ நிலையை உதவி வருதலால் நல்குரவை மேலோர் நலமாகக் கருதிக் கொள்ளுகின்றனர்.

செல்வம் நிறைய ஆசை நிறைகின்றது; அதனால் பாசபந்தங்கள் வளர்ந்து வருகின்றன; ஈசனது சம்பந்தம் இழந்து போகின்றது. போகவே அது நீசம் என நேர்ந்தது.

வறுமை வர மறுமையுணர்வு வருகின்றது; உரிமை நிலை தெரிகின்றது; தெரியவே பிறவி தீர்ந்து பேரின்பம் பெற நேர்கின்றனர். ஆகவே அது ஆருயிர் அமிர்தமாய் நின்றது.

தழுவுறு கிளைஞர் தந்தை தாய்முதல் எவரும் நாளில்
கழிவது கண்டும் கண்டும் கண்டிலார் போல வாழ்வர்;
ஒழிவற உள்ளத் துளளே உறைபரஞ் சுடரை ஓரார்;
விழைவுஎன நின்ற துன்ப வித்தினை விளைப்பர் அம்மா! (1)

விடங்கலுழ் எயிற்றுப் பேழ்வாய் வெயில்மணிச் சூட்டு நாகப்
படங்கெழு பரவை ஞாலப் பாயல்ஒன்று உண்டு; செய்ய
குடங்கை மெல்லணை உண்டு; எங்கும் குலவு வற்கலைகள் உண்டால்
அடங்கலா ஆசைவேர் மற்று அரிந்தவர்க்கு இலதுஎன் அம்மா? (2)

திருநதித் துறைகள் எல்லாம் தீம்புனல் வறந்த வேயோ?
விரிகடல் அமுதம் ஊறும் விழுச்சுவைக் கனிய வாய
மரனெலாம் மாண்ட வேயோ? மாநிதிச் செருக்கி னர்கண்
குருடுபட்டவர்போல் என்றோ குறையிரந்து உழல்கின்றாால். (3)

(பாகவதம் 2-1)

உலக நிலை தெளிந்து, ஆசை ஒழிந்து, ஈசனது உரிமையை அடையும் முறைகளை இப்பாசுரங்கள் போதித்துள்ளன. நல்குரவு நேர்ந்தால் செல்வர் பின் இரந்து நில்லாதே; உனது மனை வாழ்வைப் புனிதமான தவ வாழ்வாக மாற்றி இனிது பேணி இன்பம் பெறுக என ஒரு முனிவர் இப்படி தமது அன்பனுக்கு உணர்த்தியிருக்கிறார். வறுமையில் பெருமைகள் பல விளைகின்றன.

துறவு, தவம், ஞானம் என்பன உலகப் பொருள்களை ஒருவி நிற்கின்றன; அந் நிலையை வறுமையும் மருவியிருத்தலால் மறுமை நலங்களை இது உரிமையாய் அருளி உய்தி புரிந்து வருகின்றது.

---

457. வெறும்பொருளை விட்ட பொழுது பரமே
உறும்பொருள் ஆகி உறவாம்—வெறும்பொருளைப்
பற்றி யிருக்கும் வரையும் பரம்பொருள்
ஒற்றி யிருக்கும் உனை. (எ)

இ—ள்

வெறுமையான செல்வப் பொருளை விட்டபொழுதுதான் அருமையான பரம்பொருள் உரிமையாய் வரும்; அதனைத் தொட்டு நிற்கும் வரையும் இறைவன் கிட்ட அணுகான் என்க.

இது உண்மையான பொருள் நிலையை உணர்த்துகின்றது.

கடவுளுக்கு பரம்பொருள் என்று ஒரு பெயர். எல்லாவற்றினும் மேலானது என்னும் ஏதுவான் வந்தது. என்றும் நிலையான

அந்த இன்பப் பொருளையே ஆன்மாக்கள் எவ்வழியும் யாண்டும் அடையவுரியன. அதனை அடையாத வரையும் துன்பம் உடையாது.

பேரின்ப நிலையமாய்ப் பெருகியுள்ள அப் பரம் பொருளை அடைய வேண்டுமாயின் பாரில் பற்றியுள்ள வெறும் பொருளை அறவே விட்டுவிட வேண்டும். கீழான இதனைத் தொட்டிருக்கும் வரையும் மேலான அதனை எட்டிப் பார்க்கவும் முடியாது.

உலகப் பொருளை ஒருவியபோது உண்மைப் பொருள் உரிமையுடன் தானாகவே ஆன்மா மருவிக் கொள்கின்றது. மெய்யான பரம்பொருளை மேவ முடியாதபடி பொய்யான புலைப் பொருள் பிணித்து நிற்றலால் மேலோர் அதனை வெறுத்துவிட நேர்கின்றார்.

வெறும் பொருள் என்றது ஆன்ம வுரிமையை அடைய ஒட்டாதபடி ஒட்டி உண்மையில் வறியனாக்கித் தன்னை யுடையானைக் கடைப்படுத்தி நிற்கும் கொடுமை தெரிய வந்தது.

"பொய்ப்பொருளைப் பற்றிப் புலையாடினார் இழிந்தார்;
மெய்ப்பொருளைப் பற்றினார் மேல் எழுந்தார்."

என்றமையால் வெறும் பொருளின் கீழ்மையும், பரம் பொருளின் மேன்மையும் தெளிவாக உணர்ந்து கொள்ளலாம்.

அல்லல்களை விளைத்து அவம் செய்து விடுதலால் செல்வம் தொல்லை என்று உள்ளம் தெளிந்தவர் ஒதுக்கி விடுகின்றனர்.

வெள்ளம் மறலி விறல்வேந்தர் தீத்தாயம்
கள்வர்என் றிவ்வா றிற் கைகரப்பத் தீர்ந்தகலும்
உள்ளில் உறுபொருளை ஒட்டாது ஒழிந்தவர்
எள்ளும் பெருந்துயர்நோய் எவ்வம் இகப்பவே. (1)

ஈண்டல் அரிதாய்க் கெடுதல் எளிதாகி
நாண்டல் சிறிதாய் நடுககம் பலதரூஉம்
மாண்பில் இபற்கை மருவில் அருமபொருளை
வேண்டாது ஒழிந்தார் விறலோ விழுமிதே. (வளையாபதி)

பொருளை வேண்டாது விட்டவர் இங்ஙனம் புகழ் அடைந்துள்ளனர். மெய்ப் பொருளைத் தெளிந்தவர் பொய்ப் பொருளை இகழ்ந்து விடுகின்றனர். எவ்வழியும் அழிவுடையதைத் தாமாகவே ஒழிய விட்டு விழுமியராய் உவகை அடைகின்றனர்.

The loss of wealth is loss of dirt,
As sages in all times assert;
The happy man's without a shirt. (Heywood)

"பொருள் அழிவது அழுக்கு ஒழிவது ஆம் என ஞானிகள் என்றும் உறுதி செய்துள்ளனர்; ஒரு கோவணமும் இல்லாமலே மனிதன் பேரின்பத்தை அனுபவிக்கின்றான்" என்று ஜாண் ஹீவுட் என்பவர் இவ்வாறு கூறியிருக்கிறார். துறவு நிலைமை எந்த நாடும் மகிமையா மதித்துள்ளமையை இதனால் உணர்ந்து கொள்ளலாம். ஆன்ம நலனை அருள்வது யாண்டும் மேன்மை ஆகின்றது.

உள்ளே பரம்பொருளை நிச்சயமாகப் பற்றி நிற்பவர் வெளியே உலகப் பொருள்களைத் துச்சமாக எண்ணி விடுகின்றனர். அங்ஙனம் விட்டவர் மேலான பாக்கியசாலிகளாய் விளங்கி அரிய பேரின்ப நலன்களை அனுபவித்து மகிழ்கின்றனர்.

பருதி சூழ்ந்தஇப் பயங்கெழு மாநிலம்
ஒருபகல் எழுவர் எய்தி அற்றே
வையமும் தவமும் தூக்கின் தவத்துக்கு
ஐயவி அனைத்தும் ஆற்றாது ஆகலின்
கைவிட் டனரே காதலர் அதனால்
விட்டோரை விடாஅள் திருவே
விடாஅதோர் இவள் விடப்பட் டோரே, (புறம் 358)

"உலகம் முழுவதும் தவத்திற்குக் கடுகு அளவும் நிகர் ஆகாது; அதனை வேண்டாம் என்று வெறுத்து விட்டவரைத் திருமகள் விரும்பிக் கொள்ளுகின்றாள்; விடாதவரை அவள் வெறுத்து விடுகின்றாள்" என வான்மீகியார் என்னும் பெரியார் இவ்வாறு பாடியிருக்கிறார். ஐயவி = சிறு கடுகு. வறுமை தரும் தெய்வ கதியை அறிய. இங்கே திரு என்றது மோட்ச லட்சுமியை.

நற்றவம் பரவை ஞாலம் நாமுடன் நிறுப்பின் வையம்
அற்றமில் தவத்திற்கு என்றும் ஐயவி அனைத்தும் ஆற்றாது;
இற்றென உணர்ந்து நிற்பின் திருமகள் என்றும் நீங்காள்;
பற்றொடே நிற்பின் என்றும் திருமகள் பற்றல் செல்லாள்.
(சீவக சிந்தாமணி 2983)

மேலே குறித்த பாட்டின் கருத்தைத் திருத்தமாக இது விளக்கி வந்துள்ளது. உலகப் பொருளைப் பற்றி நிற்பவரை முத்தித் திரு பற்றாது விடுகின்றாள்; அதனை ஒருவி விட்டவரை அவள் உரிமையுடன் மருவிக் கொள்ளுகின்றாள் என்க.

வெறும்பொருளை விடின் பரம்பொருள் உறும்பொருள் ஆம். என்னும் உண்மையை இவை உறுதியாக உணர்த்தி யுள்ளன.

நின்னையே தான்வேண்டி நீள்செல்வம் வேண்டாதான்
தன்னையே தான்வேண்டும் செல்வம்போல், மாயத்தால்
மின்னையே சேர்திகிரி வித்துவக்கோட் டம்மா!
நின்னையே தான்வேண்டி நிற்பன் அடியேனே.
(பெருமாள் திருமொழி, 5, 9)

உலகப் பொருள்களை வேண்டாமல் பரம்பொருளை வேண்டி நிற்பவர் இவ்வாறு பேரின்ப நிலையை நேரே அடைந்து மகிழ்த லால் அவர் பெரிய பாக்கியசாலிகள் ஆகின்றனர்.

வேண்டாமை அன்ன விழுச்செல்வம் ஈண்டில்லை
யாண்டும் அஃதொப்பது இல். (குறள், 363)

ஈண்டு இதன் பொருளை ஓர்ந்து உணர்ந்து கொள்ள வேண்டும். அழியும் பொருளை விழையாதவன் அழியாத திருவை உரிமையாகப் பெறுகின்றமையால் அவன் விழுமிய செல்வம் ஆய் விளங்கி மகிழ்கின்றான். அவன் எதிரே பெரிய முடி மன்னரும் சிறியராய் அடிபணிந்து நிற்கின்றார்.

இந்திரன் வெள்ளை யானையின் மேல் அமர்ந்து அரிய பல ஆடம்பரங்களுடன் பவனி வந்தான். அங்ஙனம் வருங்கால் இடையே துருவாச முனிவர் கண்டார். தேவராசன் என்ற மரி யாதையால் தமது கையில் இருந்த தாமரைப் பூவை அவனிடம் உரிமையோடு கொடுத்தார். அவன் அதனை மதியாமல் வாங்கி மதயானை மீது வைத்தான். அது கீழே வீழ்த்தி மிதித்து விட்டது. விடவே முனிவர் கொதித்தார். அவனைக் கடுத்துச் சபித்தார். அப் பொழுது அவர் துள்ளிக் குதித்து எள்ளி இகழ்ந்து இந்திரனை நோக்கிப் பேசியிருப்பது யாரும் உள்ளி உணர வுரியது.

புள்ளிய தோலாடை புனைந்தரவப் பூண் அணிந்த
வெள்ளிய செங்கண் விடையான் அடிக்கமலம்
உள்ளிய மெய்யன் புடையார் அருவருத்துத்
தள்ளிய செல்வத் தருக்கினாய் என்செய்தாய்! (1)

வண்டுளரும் தண்துளாய் மாயோன் இறுமாப்பும்,
புண்டரிகப் போதலர்ந்த புத்தேள் இறுமாப்பும்,
அண்டர்தொழ வாழ்உன் இறுமாப்பும் ஆலாலம்
உண்டவனைப் பூசித்த பேறென்று உணர்ந்திலையால். (2)

சேட்டானை வானவ! நின் சென்னி செழியரில் ஓர்
வாட்டானை வீரன் வளையால் சிதறுக; நின்
கோட்டான நாற்கோட்ட வெண்ணிறத்த குஞ்சரமும்
காட்டானை ஆகஎன இட்டான் கடுஞ்சாபம். (3)

(திருவிளையாடற் புராணம்)

இந்தப் பாட்டுகளை ஊன்றி நோக்கி உறுதியுண்மைகளை ஓர்ந்து கொள்ள வேண்டும். எல்லாச் செல்வங்களையும் உடைய இந்திரனைப் பார்த்து யாதொரு பொருளும் இல்லாத மாதவர் இங்ஙனம் மோதி முனிந்துள்ளார். "என் போன்றவர்கள் அருவருத்துக் காலால் எற்றித் தள்ளிய புல்லிய செல்வத்தைக் கைக்கொண்டு பெருஞ் செருக்கு மண்டி நிற்கின்ற ஓ இந்திரா! நீ இழிந்து தொலைவாய்" என்று மொழிந்திருப்பது எவ்வளவு அதிசயங்களைத் தெளிந்துகொள்ளச்செய்கின்றது! வெறும்பொருளைப் பற்றி நின்றவன் பரம்பொருளை ஒட்டியுள்ளவன் எதிரே பட்டிருக்கும் பாட்டை இங்கே பார்த்து மகிழ்கின்றோம். என்றும் அழியாத பேரின்பப் பொருளைப் பெற்ற போதுதான் மனிதன் பிறவிப் பேறுடையனுய்ப் பெருமகிமை அடைகின்றான்.

வெறும்பொருளை இகழ்ந்துவிட்டுப் பரம்பொருளை விழைந்து கொண்டு பெரியோர் மகிழ்ந்து வருகின்றனர். ஆகையால் உலகப் பொருள் இல்லாமையால் உனக்கு யாதொரு குறையும் இல்லை; உள்ளம் நிறைவுடன் உறுதியாய் நின்று உயர்கதி காணுக.

458. தொல்லை வறுமை துயரம் எனச் சொல்லி
ஒல்லை வெருவி ஒருவுவார்—எல்லையிலா
இன்பநலம் எல்லாம் இனிதருள வல்லதனைத்
துன்பமெனல் துன்பம் துணி. (அ)

இ—ள்

வறுமை மிகவும் துயரமுடையது என்று கூறி யாவரும் அதனை வெருவி நீங்குகின்றனர்; எல்லை இல்லாத இன்ப நலம் அருள வல்லதைத் துன்பம் என்று சொல்லுதல் தகாது என்க.

இது, இன்மையை நன்மையாகக் கருதுக என்கின்றது.

பொருளால் யாவும் பெறலாம்; எல்லாச் சுகபோகங்களையும் அனுபவிக்கலாம் என்று மருள் கொண்டுள்ளமையால் பொருள்

இல்லாத நிலையைக் கண்டபோது யாவரும் வெருண்டு வெருவு கின்றனர். மருண்ட காட்சிகள் மனித சாதியை மயக்கி வரு கின்றன. தெருண்ட மாட்சிகள் திவ்விய இனிமை காணுகின்றன.

மிகுந்த பொருளுடைய பலர் அல்லலும் பழியும் அடைந்து வருந்துகின்றனர்; யாதும் இல்லாதவராயிருந்தும் சிலர் நல்ல சுகமும் புகழும் உடையராய் அமைதியுடன் வாழ்ந்து வருகின்ற னர். இந்த உண்மைகளை ஊன்றி நோக்கின் சுகம் பொருளில் இல்லை; மனப் பண்பில் உள்ளது என்பதை எவரும் நன்கு தெளிந்து கொள்ளலாம்.

வையமையலால் சுக சாதனமாகக் கருதப் படினும் மெய்யு ணர்வுடையவர் வெய்ய துயரமாகவே பொருளைக் கருதி யுள்ளனர். உள்ள உண்மையை உலகம் தெளிய உரைத்து விடு கின்றனர்.

"செல்வம் என்னும் அல்லலில் பிழைத்தும்" (திருவாசகம்)

என மாணிக்கவாசகர் இங்ஙனம் செல்வத்தை அல்லல் ஆகவே சொல்லியுள்ளமை உள்ளி யுணர வுரியது.

"முனிவரும் மன்னரும் முன்னுவ பொன்னுன் முடியும்"
(திருக்கோவையார், 332)

என்று பொருளை முன்னம் புகழ்ந்து சொன்ன பெரியவர் பின்னர் இன்னவாறு இகழ்ந்து கூறியதனல் அதன் இருவகை நிலைகளும் தெரிய வந்தன.

உலக வாழ்வில் ஓரளவு உதவி புரியினும் உயிர் உயர் கதி அடையாதபடி மருள் புரிந்து வருதலால் பொருள் கொடிய இருள் என்று தெருளுடையார் எவரும் இகழ நேர்ந்தனர்.

இயக்குறு திங்கள் இருட்பிழம்பு ஒக்கும்
துயக்குறு செல்வத்தைச் சொல்லவும் வேண்டா;
மயக்கற நாடுமின் வானவர் கோனைப்
பெயற்கொண்டல் போலப் பெருஞ்செல்வம் ஆமே.
(திருமந்திரம்)

துப்புறு பொருளினைத் தேடத் துன்பமாம்;
கைப்பொருள் உண்டு எனின் கருத்து மோகமாம்
அப்பொருள் அழிந்திடும் போதும் அல்லலாம்;
எப்பொழுதோ பொருள் இன்பம்ஆவதே? (குறுந்தொகை)

பொருவறு பந்தம்எல்லாம் புணர்த்திடும்; தெய்வ சிந்தை
ஒருவ மேலிட்டு நிற்கும்; உறக்கமும் இறக்கச் செய்யும்;
கருவினுட் புகுத்தும்; இன்ன கரிசு கண்டதனுல் அன்றே
இருநிலத் திடைவெறுக்கை என்மனர் புலமை சான்றோர்.

இம்மைதனில்மற் றிரும்பொருளை ஈட்டல் காத்தல் இழத்தல்என
வெம்மைபுரி மூவகைத்துயரும் விளையா நிற்கும்; பாவத்தால்
அம்மை நிரயத் துயரும் உறும்; அந்தோ சீ சீ இப்பொருளைச்
செம்மையுடையோர் வேண்டும்எனச் சிந்தித்திடுவ ரோமறந்தும்
(குசேலோபாக்கியானம்)

தீயாலோ நீராலோ தேர்வேந்தர் தம்மாலோ
மாயாத தெவ்வர் வலியாலோ—யாதாலோ
இப்பொருள்போய் மாய்கின்றது என்று பொருள்வைத்தார்க்கு
எப்பொழுதும் நீங்காது இடர். (பெருந்தேவனுர் பாரதம்)

ஈட்டலும் துன்பமற் றீட்டிய ஒண்பொருளைக்
காத்தலும் ஆங்கே கடுந்துன்பம்—காத்தல்
குறைபடின் துன்பம் கெடின்துன்பம் துன்பக்கு
உறைபதி மற்றைப் பொருள். (நாலடியார்)

இன்பநலம் என்று ஞாலம் கருதி வருகின்ற செல்வம் இங்ஙனம் துன்ப நிலையமாய்த் தொடர்ந்திருக்கின்றது. என்ன நோக்கத்தோடு இன்னவாறு அதனை முன்னேர் எண்ணியுள்ளனர்?

அனுபவமான உண்மைகள் இருத்தலால் யாதும் மறுக்க முடியாமல் எவரும் மெய் என்று இசைந்து கொள்ளுகின்றனர்.

களிப்பும் காதலும் வளர்த்து போக வெறிகளை விரித்துச் சீவர்களைப் பாவ வழிகளில் திருப்பி வருதலால் செல்வத்தை அல்லல் என்று மேலோர் சொல்லியருளினுர்.

நல்லதாகத் தோன்றிய செல்வம் இவ்வாறு அல்லல் ஆயது போல் தீயதாக நேர்ந்த வறுமை தூய நலமாய் வாய்ந்தருளுகின்றது. யாதும் இல்லாமையில் எல்லா நலமும் விளைகின்றது.

இன்ப நலம் எல்லாம் இனிது அருள வல்லது.

என வறுமையை இங்ஙனம் சொல்லியது அதன் உரிமையை ஓர்ந்து கொள்ள வந்தது. பொருள் இன்மை இயல்பான துறவு நிலையை அருளுகின்றது. அதனுல் பரமனை நினைந்து பிறவி தீர்ந்து பேரின்பம் பெற அமைகின்றது.

வறுமை நேர்ந்தால் உள்ளத்தைப் புனிதமாகப் பண்படுத்தி மறுமையை மருவி மாண்பயன் அடைக என்பது கருத்து.

சுகந்தமான பொருள்கள் நெருப்பில் தோய்ந்தால் நல்ல வாசனையை அயல் எங்கும் வீசுகின்றது. நல்லவர்கள் வறுமையில் காய்ந்தால் உலகம் எல்லாம் உவந்து கொள்ளும்படி உயர்ந்து ஒளி வீசி யாண்டும் சிறந்து விளங்குகின்றனர். செல்வ வாழ்வினும் வறுமை வாழ்வு அரிய பல உணர்வு நலங்களை அருளி வருகிறது.

பட்டம் தட்டத்தட்ட வயிரம் ஒளி விடுதல்போல் வறுமைத் துன்பம் ஒட்ட ஒட்ட மனிதனிடமிருந்து பெருமை ஒளிகள் வெளி வருகின்றன. பொருள் இன்மையில் தெருள் உண்மைகள் விளைவது பெரிய அதிசயமாகின்றது.

செனிகா என்னும் இத்தாலிய தேசத்துத் தத்துவஞானி வறுமையை மிகவும் பெருமையாகக் கருதியிருக்கிறார். அவரது கருத்தை அறிஞர் பலரும் புகழ்ந்துள்ளனர்.

"The good things which belong to prosperity are to be wished, but the good things that belong to adversity are to be admired." (Seneca)

"செல்வத்தைச் சேர்ந்த நல்ல பொருள்கள் விரும்பவுரியன; ஆனால் வறுமையை மருவிய அரிய பொருள்கள் வியக்கத்தக்கன" என இவ்வாறு அப் பெரியவர் கூறியிருக்கிறார்.

செல்வம் அரசரைத் தருகின்றது; வறுமை அரிய பெரிய மகான்களை அருளி வருகின்றது. சித்தர் ஞானிகள் முதலிய உத்தமர்கள் உதித்து வருதலால் வறுமை ஓர் அற்புத நிலையமாய் நிலவியுள்ளது.

"Miracles appear most in adversity." (Bacon)

"வறுமையிலிருந்துதான் பெரும்பாலும் அரிய அற்புதங்கள் தோன்றுகின்றன" என்னும் இது ஈண்டு எண்ணத்தக்கது.

உலக இயற்கையை எதிர்த்து வருதலால் வறுமை விளைவுகள் அரிய மகிமைகளை அடைகின்றன. அருமை வரவுகள் பெருமையுறுகின்றன. அதிசய அமைதிகள் மதி தெளிய வுரியன.

உன்னை யுடைய உயர்அரசர் ஓடிவந்தே
என்னை யுடையார் எதிர்விழுந்து—பன்னித்
தொழுது வணங்கும் தொடர்பால் திருவே
பழுது நீ பேசல் பழி.

திருவை நோக்கி வறுமை கூறிய படியிது. எல்லாச் செல்வங்களையுமுடைய பெரிய முடி மன்னர்களும் யாதொன்றுமில்லாத தவசிகள் காலில் விழுந்து தொழுது வணங்குகின்றனர். உன்னைச் சேர்ந்து நின்றவரது நிலைமையும், என்னைச் சார்ந்தவரது தலைமையும் இங்ஙனம் நேரே கண்டிருந்தும் உன்னை விட நான் தாழ்ந்தவள் என்று என்னை நீ இகழ்ந்து பேசுகின்றாய்; உண்மையை உணர்ந்து கொள்ளாத மதியீனத்தால் அவ்வாறு பேச நேர்ந்தாய்; இனி அப்படி இகழ்ந்து பேசாதே! எனச் செல்வத்தைப் பார்த்து வறுமை இப்படிப் புத்தி போதித்துள்ளது.

459. ஞான நெறியை நயப்பார் நயப்பது
வான வரவு வருவது—ஊனமொன்றும்
புல்லாமல் நின்று புரப்பது இவ்வறுமை
பொல்லாத தாமோ புகல். (௯)

இ—ள்

தெளிந்த ஞானிகள் உவந்து கொள்வது; உயர்ந்த சுவர்க்கத்தை அருளுவது; யாதொரு கேடும் நேராதபடி சீவனைப் பாதுகாத்து நிற்பது; இத்தகைய நல்ல வறுமையைப் பொல்லாதது என்று இகழ்ந்து சொல்லுதல் பொருந்தாது என்பதாம்.

இது வறுமையை உரிமை செய்யும் இனங்களை உணர்த்துகின்றது. பொருளைப்பொருள் செய்யாதபடிதெருள்செய்கின்றது.

ஞானம் என்பது உண்மை நிலையைத் தெளிவாக அறிகின்ற மெய்யுணர்வு. ஆன்மா ஒன்றுதான் சத்தியம்; நித்தியமானது; இன்ப ஒளியுடையது; அதன் தொடர்பான உடல் உறவுகள் யாவும் பொய்யானவை; மாய மயக்கங்களுடையன என உறுதியாகத் தெளிந்து கொள்வதே ஞானம் என்க.

ஈன மயல்களில் இழிந்து படாமல் உயர்ந்த கதி நிலைகளை அடைந்து கொள்ளத் துணிந்து தெளிந்த மேலோர் நடந்து செல்லுவது ஞானநெறி என வந்தது. இந்த நெறியே செல்லுகின்றவர் பிறவித் துன்பங்கள் நீங்கிப் பேரின்பம் பெறுகின்றனர். இவ்வழியை விட்டு விலகினவர் இழி பிறவிகளில் அலைந்து அழி துயரங்களை அடைகின்றனர்.

சீவர்கள் யாவரிடமும் ஞானம் இயலுரிமையா யுள்ளது. இருந்தும் மண்ணில் புதைந்த மணிபோல் பலரிடம் மறைந்து

கிடக்கின்றது. சித்த சுத்தியோடு படி ஏறிய புனித மனிதரிடம் இது இனிது நிகழ்கின்றது.

எதை அறிந்தால் எல்லாம் அறிந்ததாமோ அதனை உரிமையாக அறிந்து கொள்ளுதலால் ஞானிகள் சிறந்த தெய்வீக நிலையில் உயர்ந்து நிகழ்கின்றனர். ஞானம் ஆகிய ஒளிவிழி யுடையாரே உயர் கதிக்கு வழிகாட்டிகளா யுள்ளனர்.

ஞானத்தால் தொழுவார் சில ஞானிகள்
ஞானத்தால் தொழுவேன் உனை நானலேன்;
ஞானத்தால் தொழுவார்கள் தொழக்கண்டு
ஞானத்தால் உனை நானும் தொழுவனே. (1)

முன்னை ஞான முதல்தனி வித்தினைப்
பின்னை ஞானப் பிறங்கு சடையனை
என்னை ஞானத் திருள றுத்து ஆண்டவன்
தன்னை ஞானத் தளையிட்டு வைப்பனே. (தேவாரம்)

நண்ணிய ஞானத்தின் ஞானாதி நண்ணுவோன்
புண்ணிய பாவம் கடந்த பிணக்கற்றோன்
கண்ணிய நேயம் கரைஞானம் கண்டுளோன்
திண்ணிய சுத்தன் சிவமுத்தன் சித்தனே. (திருமந்திரம்)

மட்டு வார்வன மார்ப சருமம் போல்
தொட்டுவானைச் சுருட்டுவர் உண்டெனின்
பெட்டு ஞானம் பெறாது பேரின்பமே
ஒட்டு முத்தி யுறுநரும் உண்டரோ. (சூதசங்கிதை)

அரியஇம் மானிட யாக்கை பெற்றவர்
கருமயோ கங்களால் காலம் தள்ளுவார்;
உரியமெய்ஞ் ஞானயோ கத்தினால் அரன்
துரிய ஞானத்தினைச் சோதி யார்களே. (பதிபசுபாசவிளக்கம்)

இவை ஈண்டு ஓதி யுணர வுரியன. ஞானமே பரமான்மைவக் காண்பது; பேரின்பம் பூண்பது என்றமையால் அதன் மாண்பும் மகிமையும் அறிந்து கொள்ளலாம்.

ஞானிகள் மெய்ப் பொருளை உவந்து கொள்ளுதலால் பொய்ப் பொருளை இகழ்ந்து விடுகின்றனர். தொட்டாலும் கேடு விளையும் என்றுகருதி அதனை யாண்டும்தொடாமல் நிற்கின்றனர்.

விவேகானந்தரது குருநாதராகிய இராமகிருஷ்ண பரமர் பணத்தைத் தீண்டுவதில்லை; ஒரு பெரிய செல்வன் அந்தப் பெரியாரிடம் தன் பொருள் ஏதேனும் கொஞ்சம் சேர வேண்டும் என்று நெஞ்சம் கருதினான்; நேரே கொடுத்தால் யாதும் வாங்க மாட்டார்; வெறுத்து விடுவார் என்று தெரிந்து கொண்டான்; ஆதலால் யாருக்கும் தெரியாமல் அவரது படுக்கை அடியில் ஒரு தங்கப் பவுனை வைத்துப் போனான். அவர் வந்து படுத்தார்; உள்ளம் துடித்தது; உறக்கம் வரவில்லை; படுக்கையை அகற்றிப் பார்த்தார்; பொன் காசைக் கண்டார்; ஒரு கோலால் அதனைத் தூர எற்றித் தள்ளி விட்டு அதன்பின் படுத்து உறங்கினார். இதனால் என்ன தெரிகின்றது? தூய பரம் பொருளைத் தோய்ந்தவர் மாயப் பொருளை மறந்தும் மருவார் என்னும் உண்மையை உணர்ந்து கொள்கின்றோம். பணத்தைத் தீண்டுவதை ஒரு ஈனத் தீட்டாக ஞானத் தேட்டாளர் இயல்பாகவே பேணியிருக்கின்றனர். மாய மோகங்கள் நீங்கினவர் மகான்கள் ஆகின்றனர்.

யாதொரு பொருளும் இல்லாத இன்மை நிலையே தமக்கு நன்மை என்று உண்மை தெளிந்தோர் ஒழுகியுள்ளனர்.

ஞான நெறியை நயப்பார் நயப்பது.

என வறுமையை இங்ஙனம் வரைந்து காட்டியது அதன் அருமையை விழைந்து காண. நயத்தல்—நயமாக உவந்து கொள்ளுதல். மறுமைத் துணை அருமைப் பேறுகின்றது.

வான வரவு வருவது.

சுவர்க்க போகங்களை வறுமை விளைத்தருளுதலால் அது இங்ஙனம் குறிக்க வந்தது. எளிமையில் தெளிவும் இனிமையும் செழுமி வருகின்றன. வரவே விழுமிய மகிமைகளை அவர் அடைய நேர்கின்றார். இம்மையில் இன்மை தழுவி நன்மையோடு வாழ்பவர் மறுமையில் அரிய பல பெருமைகளை இனிது பெறுகின்றனர்.

"Blessed are the poor in spirit: for their's is the Kingdom of heaven" (Bible)

"உயிர் வாழ்வில் எளியவர் பாக்கியசாலிகள்; பரலோக ராச்சியம் அவர்களுடையது" என ஏசுநாதர் இவ்வாறு கூறியிருக்கிறார். உலக வரவு ஒருவினவர் உயர்கதி பெறுகின்றனர்.

பணிவு அமைதி முதலிய பல நல்ல குணங்களை வறுமை வளர்த்து வருதலால் அதனையுடையவர் தெய்வகிருபையை மருவி உய்தி நலங்களை உரிமையா அடைந்து கொள்ளுகின்றனர்.

ஊனம் ஒன்றும் புல்லாமல் நின்று புரப்பது.

கேடு யாதும் நேராமல் மனிதனை வறுமை இனிது காத்துப் புனிதமாகப் பேணி வருதலை இது காட்டி நின்றது.

செல்வம் களிப்பை யூட்டி ஆளை இளிப்பில் வீழ்த்துதலால் அது பொல்லாத புளித்த கள் என மேலோரால் எள்ளப்பட்டது.

வறுமை அமைதியும் தெளிவும் நல்கி வருதலால் அது நல்ல தண்ணீர் போல் எவ்வழியும் இனிமையாயுள்ளது.

நகுடன் பெரிய அரசன்; தனது அரிய செல்வங்களால் நூறு வேள்விகள் செய்து இந்திர பதத்தை அடைந்தான்; உடனே காமக் களிப்பு மீறியதால் மாறி மலைப் பாம்பாகிக் கீழே வீழ்ந்தான். பொறி வெறியனாய் அழிந்த அந்த இழி நிலையைக் கண்ட முனிவர் பரிதாபம் கொண்டனர். "அறிவு இல்லாத அற்பரானவர்க்குச் செல்வம் அல்லது பகை வேறு உண்டோ?" என்று அவனது நிலைமையை நோக்கி இரங்கி இங்ஙனம் சொல்லிப் போயினர்.

நல்லார்கட் பட்ட வறுமையின் இன்னாதே
கல்லார்கட் பட்ட திரு. (குறள் 408)

கல்லாருடைய திருவினும் நல்லாரது வறுமை இனியது என்னும் இது ஈண்டு நுணுகி யுணர வுரியது.

அறிவிலிகள் செல்வம் பெறின் பழிவினைகளைச் செய்து அழிவுறுகின்றனர்; அறிவுடையார் வறுமையுறினும் உள்ளம் தூயராய் உயர்கதியடைகின்றனர்.

வறுமையில் பல உணர்வு நலங்கள் உளவாதலால் மனித வாழ்க்கையை அது புனிதம் ஆக்கியருள்கின்றது.

"It was poverty that taught more than wealth."

"செல்வத்தைக் காட்டிலும் வறுமைதான் மனிதனுக்கு நல்ல போதனையைத் தருகின்றது" என விவேகானந்தர் இவ்வாறு குறித்துள்ளார். வெய்ய மிடியில் மெய்யறிவு விளைகிறது.

நயப்பது, வருவது, புரப்பது என்னும் மூன்றும் வறுமையின் அருமை பெருமை ஆதரவுகளை முறையே குறித்து நின்றன. நல்குரவு நேரின் பல்வகையான நல்ல வரவுகளை அதில் நாடிக் கொள்ளுக.

---

460. மண்ணெடுத்து நின்ற மனிதரெலாம் தன்னையொரு
கண்ணெடுத்துப் பாராமல் காத்தருளி—எண்ணெடுத்த
எல்லார் நிலையும் எதிர்காட்டி ஈசனென
இல்லாமை செய்யும் இனிது. (ய)

இ-ள்

பூமியில் உள்ள மனிதர் எவரும் தன்னைக்காணுதபடி காத்து நின்று, எல்லாருடைய நிலைகளையும் தான் தெளிவாகக் காணுமாறு காட்டி யாவும் அறிய வல்ல ஈசன் என மனிதனை வறுமை ஆக்கியருளும் என்பதாம்.

வறுமையால் நேரும் அதிசய நிலையை இது கூறுகின்றது.

மண் என்றது பூவுலகத்தை. ஐந்து பூதங்களினும் முந்தி நிற்பது ஆதலான் அதன் முதன்மை தெரிய வந்தது.

மண்ணுலகில் வாழுகின்ற மனிதர் என்றது அவரது மன நிலைகளையும் இன முறைகளையும் எண்ணி அறிய. உலக வாழ்வில் சீவர்களுடைய சுபாவங்கள் யாதொரு நிலையும் இல்லாதனவாய் நிலைகுலைந்துள்ளன.

ஒருவனிடம் பொருள் நிறைந்துள்ள பொழுது பலரும் அவனிடம் உறவுரிமை கொண்டாடி உவந்து சூழுகின்றனர்; இல்லாதபோது எல்லாரும இகழ்ந்து விலகி விடுகின்றனர்.

இல்லாரை எல்லாரும் எள்ளுவர்; செல்வரை
எல்லாரும் செய்வர் சிறப்பு. (குறள், 752)

செல்வரை எல்லாரும் மதித்துப் போற்றுவர்; வறியவரை யாவரும் இகழ்ந்து விடுவர் என உலக நிலைமையைக் குறித்து இது உணர்த்தியுள்ளது. இல்லாரை என்றதற்கு ஏற்ப உள்ளாரை என்று சொல்லியிருக்க வேண்டும்; அங்ஙனம் சொல்லாமல் செல்வரை என்றது அவரது செழிப்பும் களிப்பும் செலவும் தெரிய. “செல்வர் யாம் என்று தாம் செல்வுழி எண்ணாத பல்லறிவாளர்” என நல்லறிவாளர் இகழினும் செல்வர் தம்மை வியந்து தருக்கி வெம்மை

புரிந்து விளிந்து போகின்றார். அங்ஙனம் அழிந்து போதற்குக் காரணம் தெளிந்த மதியின்மையேயாம். அந்த மதிகேடு எல்லா ரும் செய்யும் சிறப்பால் அவர்க்கு விளைந்து வருகின்றது. பலரும் மதி கெட்டுக் குதிக்கவே பொருளர் மருளராய் இருளடைந்து இழிந்து படுகின்றார்.

செல்வர்க்கே சிறப்புச் செய்யும் திருந்து நீர் மாந்தர் போல
அல்குற்கும் முலைக்கும் ஈந்தார் அணிகலம் ஆய எல்லாம்
நல்கூர்ந்தார்க்கு இல்லைசுற்றம் என்று நுண் நுசுப்பு நைய
ஒல்கிப்போய் மாடம் சேர்ந்தார் ஒருதடங் குடங்கைக் கண்ணார்.
(சீவக சிந்தாமணி 2535)

மார்பில் பணைத்து விம்மிய முலைகளுக்கு முத்து மாலைகளை யும் வயிர வடங்களையும் சூட்டினர்; அரைக்கு மேகலையைப் பூட்டி னர்; இடைக்கு யாதும் அணிய வில்லை; ஏன்? அது ஒல்கி ஓசிந்து மெலிந்து பேயுள்ளமையால் ஒன்றும் செய்யாமல் ஒழிந்து போயினர். கொழுத்த செல்வர்களுக்கே எல்லாச் சிறப்பு களையும் செய்து இளைத்த ஏழைகளுக்கு யாதும் செய்யாத பொல் லாத உலக நிலைமையை அவ் வண்ண மகளிர் செயல் இவ்வண்ணம் விளக்கியது எனக் கவி விளக்கியிருக்கும் அழகை நுனித்து நோக்குக. மையல் நிறைந்த வெய்ய மாந்தர் என வைய நிலையைச் சாதுரியமாய் வைத படிபிது.

"இல்லாரை எல்லாரும் எள்ளுவார் செல்வரை
எல்லாரும் செய்வர் சிறப்புஎன்னும்—சொல்லாலே
அல்குற்கு மேகலையைச் சூழ்ந்தாள் அணிமுலைமேல்
மல்கிய சாந்தொடு பூண்புனைந்து—நல்கூர்
இடை இடையே உள்ளுருகக் கண்டாள்."
(திருக்கைலாய ஞானவுலா)

மேலே குறித்த கவியும் இதுவும் திருக்குறளைக் கருத்தில் வைத்துக் கொண்டு உருப்பெற்று வந்துள்ளமை உணரலாகும். இவ்வுலா சேரமான் பெருமாள் நாயனார் பாடியது. பொருள் இல் லாதவரை மருளுலகம் ஒரு பொருளாக மதியாது என்பதை மேலோர் பரிந்து மொழிந்துள்ளனர்.

தொழுமகன் ஆயினும் துற்றுடை யானைப்
பழுமரம் சூழ்ந்த பறவையிற் சூழ்ப;
விழுமியர் ஏனும் வெறுக்கை யுலந்தால்
பழுமரம் வீழ்ந்த பறவையிற் போவ. (வளையாபதி)

ஈனமான இழிமகன் ஆயினும் பொருளுடையானைப் பலரும் சூழுவர்; ஞான நலமுடைய மேன்மையாளன் எனினும் பொருள் இல்லையானல் யாரும் அவனை அணுகார் என ஓர் உவமை காட்டி இது உணர்த்தியுள்ளது.

உண்டாய போழ்தின் உடைந்துழிக் காகம்போல்
தொண்டா யிரவர் தொகுபவே—வண்டாய்த்
திருதருங் காலத்துத் தீதிலிரோ என்பார்
ஒருவரும் இவ்வுலகத் தில். (நாலடியார்)

பணம் இருந்தால் பிணம் தின்னும் காக்கைகள் போல் சுற்றுவர்; அது இல்லை ஆனல் ஒரு வார்த்தையும் சொல்லாமல் எல்லாரும் ஒதுங்கிப் போவர் என இது உரைத்திருக்கிறது.

"எப்புடு சம்பத கலிகி நநு
அப்புடு பந்துவுலு வத்துரு; அதிஎட்லங்நங்
தெப்பலுக செறுவு நிண்டிந
கப்பலு பதிவேலு சேருகதரா." (சுமதி)

"குளத்தில் நீர் நிறைந்தபோது தவளைகள் பல்லாயிரம் சேர்தல் போல் செல்வம் வந்தபோது பந்துக்கள் பலர் வருவர்; நீர் வற்றின் அவை மறையும்; பொருள் குறையின் உறவினர் ஒழிவர்" என தெலுங்கு மொழியிலும் கவிஞர் இங்ஙனம் பாடியிருக்கிறார்.

வறுமையாளனை எவரும் நெருங்காமையால் அவன் ஒருமையாய் ஒதுங்கி நிற்கின்றான். "கேளும் கிளையும் கெட்டோர்க்கு இல்லை என்பது" வாழ்வின் அனுபவங்களாய் நாளும் விளங்கி வருகின்றது.

மனிதர் கண் எடுத்துப் பாராமல் காத்தருளி.

என்றது வறுமை புரியும் கரும நிலை தெரிய வந்தது. ஏழையைப் பார்த்தால் தன்னிடம் ஏதேனும் கேட்டு விடுவானோ என்று பயந்து மனிதர் ஒதுங்கிப் போவர்; போகவே இவன் ஏகனாய்த் தனித்து நிற்கின்றான். அந்நிலையில் ஒரு இனிப்பு விளைகின்றது. அவ் விளைவை இது நுனித்துணரச் செய்தது.

இல்லாமை ஈசன் எனச் செய்யும் இனிது.

வறுமை மனிதனைக் கடவுள் ஆக்கி அருள்கின்றது என இது காட்டியுள்ளது. யாதொரு பொருளும் இல்லாதவன் எல்லா

முடைய ஈசனும் இசைந்து திகழ்வது அதிசய விநோதமாய் விளங்கி நின்றது.

கடவுள் நிலை என்ன? அவனை யாரும் பார்க்க முடியாது; எல்லாரையும் அவன் ஒருங்கே பார்த்துக் கொள்கின்றான். இந்த இருமை நிலைகளும் வெறுமையாளனிடமும் மருவியுள்ளன. என்னே? ஏழையை யாரும் பார்க்க மாட்டார்; எல்லாருடைய நிலைமைகளையும் நேரே சென்று தனித்தனியே அவன் நன்கு தெரிந்து கொள்ளுகின்றான். தன்னைப் பிறர் கண் எடுத்துக் காணாமலும், தான் யாவரையும் எதிர் நோக்கிக் கண்டும் வருதலால் ஈசன் என வறியவன் பேச நின்றான்.

இவனுக்கும் நாதி இல்லை; அவனுக்கும் நாதி இல்லை. அவன் அநாதியாய் நிற்றல்போல் இவனும் அநாதியாய் நிற்கின்றான்.

ஏழை பங்காளன் என இறைவனுக்கு ஒரு பெயர் அமைந்திருத்தலால் வறியவரோடு அவனுக்குள்ள உறவும் உரிமையும் உணர்ந்து கொள்ளலாம்.

*அறவன் பிறப்பிலி யாரும் இலாதான்;*
*உறைவது காட்டகம்; உண்பது பிச்சை;*
*துறவுஎனும் கண்டீர்! துறந்தவர் தமமைப்*
*பிறவி அறுத்திடும் பித்தன் கண்டீரே.* (திருமந்திரம்)

இறைவனைக் குறித்துத் திருமூலர் இப்படிக் காட்டியிருக்கிறார்.

வறுமை நேர்ந்தால் உன்னை உலகம் கைவிடும்; ஆயினும் பரமன் கை கொடுத்தருளுவார்; ஆதலால் உன் உள்ளத்தைப் புனிதம் ஆக்கி உயர் கதியைச் செய்து கொள்ளுக.

பொருள் இல்லாமை உலக நோக்கில் ஓரளவு வறுமை ஆயினும் அதனால் அவ்வளவு சிறுமை நேர்ந்து விடாது; அறிவும் சீலமும் இல்லாமையே கொடிய வறுமையாம். உள்ளம் தூயவன் வறுமையை மறுமை நிலையமாக மாற்றிப் பெருமை மிகப் பெறுகின்றான். நெஞ்சம் தீயவன் நெடிய செல்வம் உடையனாயினும் கொடிய பழிகளை அடைந்து குடியோடு அழிகின்றான்.

வறுமை மறுமை நோக்கத்தை அருளி வருதலால் தெளிந்த பெரியோர் அதனை உரிமையாக உவந்து கொள்ளுகின்றனர்.

*தாரித்திரந் தவிரா அடியார்தடு மாற்றம் என்னும்*
*மூரித்திரைப் பௌவம் நீக்கு கண்டாய்! முன்னை நாள் ஒருகால்*
*வேரித்தண் பூஞ்சுடர் ஐங்கணை வேள்வெந்து வீழச்செந்தீப்*
*பாரித்த கண்ணுடையாய்! எம்மையாளும் பசுபதியே.* (தேவாரம்)

இறைவனைக் கருதி வருகின்ற அடியார்களுக்குத் தரித்திரம் மூல தனமாயுள்ளது என அப்பர் இப்படிக் குறித்திருக்கிறார். குறிப்பு நுனித்துணர வுரியது.

பொருள் உலக ஆடம்பரங்களுக்கு உரியது; பொறி வெறிகளைத் தருவது; ஆதலால் பரமனை நாடுகின்றவர் அதனை நாடாது விடுகின்றனர்; வறுமையையே பெருமையாக மருவிக் கொண்டு மறுமையை உரிமையுடன் கருதி வருகின்றனர்.

இல்லாமை நேரின் இனிய தெனமகிழ்க;
பொல்லாதென் றெண்ணிப் புலம்பற்க—நல்ல
மனமுடைய ஞானி மறுமை நினைவில்
கனமுடைய ஞான கனிந்து.

இதனை மனதில் நினைந்து கொள்க.

நல்ல மனதோடு முயன்று வாழுக; வறுமையுறின் அல்லலுறாதே; எல்லாத் தேவைகளையும் சுருக்கிக் கொண்டு உள்ளம் அமைதியாய் உவந்து ஒழுகுக. வறுமையில் செம்மை என்பது அரிய ஒரு பண்பாடாய்ப் பெருமை பெற்றுள்ளது.

எவ்வகையினும் பிறரை எதிர்பாராமல் வாழ்வாயாயின் நீயே பெரிய சீமான்; பேராண்மையாளன்; மேலான இன்ப நிலையினன்; அந்தச் சீர்மை நீர்மைகளைப் பேணி மேன்மை யுறுக.

அரிய துறவுக் கருந்துணை ஆகி
உரிய உறுதி உதவி—பெரிய
மகிமை மருவி மகானென நிற்கும்
தகைமை வறுமை தரும்.

இவ் அதிகாரத்தின் தொகைக் குறிப்பு.

பொருள் இன்மை வறுமை ஆம்.
அது இறைவனை எண்ணச் செய்கின்றது.
ஈசன் அருளை அருளுகின்றது.
உண்மை நிலைகளை உணர்த்துகின்றது.
உறுதி நலங்களை உதவுகின்றது.
அரிய தவத்தைத் தருகின்றது.
பரம்பொருளைக் காட்டுகின்றது.
பேரின்ப நலனை ஊட்டுகின்றது.
ஆன்ம வூதியமாய் அமைகின்றது.
தெய்வீகமாய் மேவுகின்றது.

சகூ-வது வறுமையின் பெருமை முற்றிற்று.

# நாற்பத்தேழாம் அதிகாரம்.

## தொழில்.

---

அஃதாவது உழைப்பின் உயர்வு. வறுமை நேர்ந்தால் உள்ளம் உடைந்து இழிந்து போகாமல் நல்ல சிந்தனைகளைச் செய்து நிம் மதியுடன் வாழ வேண்டும் என்பதை முன்னம் அறிந்தோம்; எளிமை நேராமல் விழுமியநிலையில் பிழைக்கும்வழியை உணர்த்து கின்றமையால் அதன்பின் இது இணைத்து வைக்கப்பட்டது.

461 வாழ்வின் நிலையை வளம்படுத்தி மற்றவர்முன்
தாழ்வு வராமல் தனைக்காத்துச்—சூழ்வில்
எழிலாய் விளங்கி இனிதுறலால் என்றும்
தொழிலே உயிர்க்குத் துணை. (க)

இ-ள்

மனிதனுடைய வாழ்க்கையைச் செழிக்கச் செய்து பிறர் எதிரே இழிவு நேராமல் காத்து யாண்டும் அழகும் இன்பமும் அருளி வருதலால் தொழிலே உயிர்க்கு இனிய துணை என்பதாம்.

இது தொழிலின் மகிமையை உணர்த்துகின்றது

சீவனம், சீவியம், சீவிதம் என்னும் மொழிகள் மானிட வாழ்வின் நீர்மைகளைத் தொடர்ந்து வந்துள்ளன. அருவமான உயிர் உருவமான உடலை மருவி ஒருமையாய் உலகில் நடமாடு கின்றது. குறித்த காலம் வரையும் கூடியிருந்து முடிவில் பிரிந்து மறைந்து போகும் இயல்பினது. வீழ்வு நேரும் அளவும் உடம் போடு கூடி உயிர் வாழ்ந்து வருவது வாழ்வு என வந்தது. இந்த வாழ்வு தாழ்வு படாமல் சீவகோடிகள் ஆவலோடு செய்து கொள்வது சீவனம் என நேர்ந்தது. புதியராய் ஒருவரை ஒருவர் சந்தித்தபோது உங்களுக்கு என்ன சீவனம்? என வினவி வருவதை அனுபவத்தில் அறிந்து வருகிறோம்.

உயிர் வாழ்க்கை உடல் உழைப்பால் நடைபெற்று வருதலால் அது சீவ ஆதாரமாயது. ஆகவே சீவிதம் என அது மேவி நின்றது சீவ வாழ்வைச் செய்து வருவது உய்தி டரிகின்றது.

தொழில் என்னும் சொல் கை கால் முதலிய உடல் உறுப்புக் களால் உழைப்பது என்னும் பொருளை யுட்கொண்டு வந்தது.

தொழுவர் கம்மியர் தொழில்செய் வோரே. (பிங்கலந்தை)

செயல்விதி கருமம் கன்மம் செய்தொழில் வினையும்அப்பேர் (நிகண்டு)

தொழில் நிலையைக் குறித்து இயல்கள் இங்ஙனம் விதித்து வந்துள்ளன. பெயர்கள் இயல்புகள் தழுவி எழுகின்றன.

கையால் செய்தலால் செய்தொழில் என்றார். இரண்டு கைகளையும் கூப்பி வணங்குவதைத் தொழுதல் என வழங்கி வருகின்றோம், "பத்து விரல்களாலும் பாடுபட்டுப் பசியார உண்டு வாழ்கின்றோம்" என்று பாட்டாளி மக்கள் பேசி வருவதைக் கேட்டு மகிழ்கின்றோம். வாயும் கையும் வாழ்வு புரிகின்றன.

வாழிஆதன் என்னும் சேர மன்னன் ஒருநாள் கபிலரைக் கண்டான். புலவர் பெருமான் ஆகிய அவரை அரசன் உவந்து உபசரித்து அருகிருத்தி உல்லாசமாய்ப் பேசிக்கொண்டிருந்தான். அந்தக் கவியரசரது கை மிகவும் மிருதுவாய் இருந்ததை நோக்கி மன்னன் வியந்து என்னே இது? என்று புன்னகையோடு வினவினான். செல்வச் சீமானாகிய தன் கையினும் இந்தப் புலவர் கை மென்மையாயுள்ளதே! என்று அரசன் கருதிக் கேட்டதை அவர் கூர்ந்து ஓர்ந்து கொண்டமையால் சாதுரியமாகப் பதில் உரைத்தார்: "அரசர் பெரும! நும் கைகள் வில் வேல் வாள் முதலிய படைக் கலன்கள் பயின்றன; பொன்னையும் மணிகளையும் இரவலர்க்கு அள்ளிக் கொடுத்தன; யானை ஏறி அங்குசம் கொண்டன; குதிரைகளை ஊர்ந்து கடிவாளங்களைக் கடிது ஈர்த்தன; என் கையோ சோறு தோய்ந்ததைத் தவிர வேறு யாதும் செய்து அறியாது; ஆதலால் இப்படி மெல்லிதாயுள்ளது" என விநயமாய்ச் சொல்லினார். உரைகள் உணர்வின் சுவைகள் தோய்ந்துள்ளன.

"கறிசோறு உண்டு வருந்துதொழில் அல்லது
பிறிது தொழில் அறியா; ஆகலின், நன்று
மெல்லிய பெரும! தாமே நல்லவர்க்கு
ஆரணங் காகிய மார்பிற் பொருநர்க்கு
இருநிலத் தன்ன நோன்மைச்
செருமிகு சேஎய்நிற் பாடுநர் கையே." (புறம், 14)

தொழில் என்பது கையால் செய்வது என்பதை இது காட்டி நின்றது. புலமை நலம் கனிந்த தலைமை அறிவாளிகளின் நீர்மையும், அரசர் அவரை உரிமையோடு உவந்து கொண்டாடிய சீர்மையும், பண்டைக் காலத்தின் நிலைமையும் இங்கே கண்டு மகிழ்கின்றோம். கூரிய அறிவு சீரிய நூல்களையும் ஞான போதனைகளையும் செய்யுமே அன்றி வாழ்க்கைக்கு வேண்டிய தொழில்களைச் செய்யாது ஆதலால் அந்தப் பேரறிவாளரைப் பேணி வருவது அரசரது கடமையாயது. அறிவின் அருமையை அறிந்து பேணாத அரசாங்கம் பெருமையைஇழந்துசிறுமையாய்இழிந்துபடுகின்றது.

வாழ்வின் நிலையை வளம் படுத்தி.

ஒருவனுடைய குடிவாழ்க்கை எவ்வகையினும் இனிமையாய்ச் செழித்து வருவது பொருள்களின் நிறைவினாலேயாம்; அப் பொருள்கள் தொழிலால் வருகின்றன; ஆகவே வாழ்வினை வளம் செய்தருளுகின்றது என உயிராதாரமான அதன் நீர்மை உளங்கொள்ள வந்தது

தாழ்வு வராமல் தனைக் காத்து.

என்றது தொழிலைக் கைக் கொண்டவன் எவ்வழியும் யாதும் இழிந்து படாமல் யாண்டும் உயர்ந்து வருதலை உணர்த்திநின்றது.

முயற்சியுடையவன் கருமதேவதையின் கருணையைப் பரிபூரணமாய்ப் பெற்றுக் கொள்கின்றான். கொள்ளவே எங்கும் உயர்ச்சியுடையனாய் ஒளி சிறந்து திகழ்கின்றான்.

வினையாண்மை உள்ளத்தில் வேர் ஊன்றி இருத்தலால் அவன் நினையாமலே அதிசய வலிமைகளை அடைந்து உலகம் துதி செய்யும்படி உயர்ந்து ஓங்கி நிற்கின்றான்.

ஆடு கோடு ஆகி அதரிடை நின்றதூஉம்
காழ்கொண்ட கண்ணே களிறணைக்கும் கந்தாகும்
வாழ்தலும் அன்ன தகைத்தே ஒருவன் தான்
தாழ்வின்றித் தன்னைச் செயின். (நாலடியார் 192)

மிகவும் எள்ளி இகழும்படி எளிய நிலையில் இருந்த ஒரு சிறுவன் தொழிலைத் தொடர்ந்து செய்து வருவானாயின் யாரும் உள்ளி வியக்கும்படி உயர்ந்து விளங்குவான் என்பதை ஓர் உவமம் காட்டி இப்பாட்டு உணர்த்தியுள்ளது. ஆடு கோடு = துவண்டு அசைகின்ற கொம்பு. அதர் = வழி. காழ் = வயிரம்.

காட்டு வழியில் காற்றில் அசைந்து கொண்டிருந்த ஒரு சிறு கொடி வளர்ந்து பெரிய மரம் ஆனல் கரிய மதயானையும் தன் அடியில் கட்டும்படி அது திறமாய் நெடிது நிலைத்து நிற்கின்றது; எளிய சிறுவன் ஆயினும் தாழ்வின்றித் தொழிலில் முயன்றுவரின் வலியனாய் உயர்ந்து பெரிய அரசனும் தன்னை விரும்பி நிற்கும்படி அவன் விளங்கி நிற்பான் என்க.

உள்ளே வயிரம் கொண்டு மரம் தானாகவே வளர்ந்து உயர்கின்றது; பிறருடைய உதவியின்றித் தன் முயற்சியினாலேயே உயர்ந்து வருகின்ற மனிதன் சிறந்த ஆண்மையாளனாய் உலகம் வியந்து நோக்க நிற்கின்றான். வளர்ச்சியும் உயர்ச்சியும் புறத்தில் இல்லை; உன் உள்ளத்திலேயே உறைந்துள்ளன; ஊக்கி முயன்று உயர்ந்து ஆக்கங்கள் யாவும் அடைந்து கொள்ளுக.

எழில்ஆய் விளங்கி என்றது தொழில் மனிதனுக்கு மதிப்பையும் மகிழ்ச்சியையும்அளித்து வருதல் கருதி. தொழிலில் மூண்ட பொழுதுதான் ஒருவனுடைய உணர்வு ஒளி மிகப் பெறுகின்றது. உயிர் வாழ்வு கம்பீரமாய்த் தோன்றுகின்றது. உத்தியோகம் புருட லட்சணம் என்னும் பழமொழியும் இங்கே சிந்திக்கத் தக்கது.

தொழிலே உயிர்க்குத் துணை.

உயிரின் நிலையம் ஆகிய தேகத்தைப் பாதுகாத்து, மனைவி மக்களைப் பேணி மனிதன் இனிது வாழ்ந்து வருதற்குரிய வளங்கள் யாவும் தொழிலில் விளைந்து வருதலால் அது உயிர்க்குத் துணை என வந்தது. உழைப்பின் வழியே பிழைப்பின் ஒளி என்றதனால் உயிர் வாழ்விற்கும் தொழிலுக்கும் உள்ள உறவுரிமையை உணர்ந்து கொள்ளலாம்.

பிறப்பில் இழிந்தவன் ஆயினும் தொழிலைக் கைக் கொண்டவன் பொருள் வளங்களை அடைந்து கொள்ளுகின்றான்; கொள்ளவே உயர்ந்த குலத்தவரும் அவனிடம் நயந்து வந்து பணிந்து நிற்கின்றனர். மேன்மைகள் யாவும் வினைகளால் மேவுகின்றன.

உற்ற குறைகள் யாவும் நீக்கிக் குலம் முதலிய எல்லா மாட்சிகளையும் தொழில் உளவாக்கி அருளுதலால் அது எழில் எனவும் உயிர்த்துணை எனவும் விழுமிய நிலையில் ஒளி பெற்று நின்றது

குலம் தரும்; கல்வி கொணர்ந்து முடிக்கும்;
அலந்த கிளைகள் அழிபசி நீக்கும்;
நிலம்பக வெம்பிய நீள்சுரம் போகிப்
புலம்பில் பொருள் தரப் புன்கண்மை உண்டோ. (வளையாபதி)

முயன்று பொருளைத் தேடிக் கொண்டவரிடம் உயர்ந்த நலங்கள் பல தாமாகவே ஓடி வருகின்றன என இஃது உணர்த்தியுள்ளது. புன்கண்மை = துன்பம். இன்ப வாழ்வு இருக்கும் இடத்தை மேலோர் இங்ஙனம் காட்டியருளினர். கடல் கடந்து மலை ஏறிப் போயேனும் தொழில் புரிந்து உயர் நலம் பெறுக.

---

462. மேலான மேன்மையெலாம் மெய்யான மெய்த்தொழிலின்
பாலாகி யுள்ள பயனுணர்ந்து—காலம்
தவருமல் நாளும் தகவாய் முயலும்
அவரே உலகிற்கு அரண். (உ)

இ—ள்

உயர்ந்த மேன்மைகள் யாவும் உண்மையான தொழிலின்கண் அமைந்துள்ளன; பருவம் தவருமல் கருதி முயல்பவர் உலகிற்கு ஓர் உறுதி அரணுய் ஒளி செய்துள்ளனர் என்பதாம்.

உழைத்து வரும் தொழிலாளிகளால் உலகம் தழைத்து வருகின்றது; ஆகையால் உலகிற்கு அவர் அரண் என நின்ருர். அரண் = வலி, அழகு, பாதுகாப்பு. ஏகாரம் பிரி நிலையோடு தெளிவும் தோன்ற நின்றது. உழைப்பினிடமே பிழைப்புகள் பெருகியுள்ளன.

மனிதனுடைய உயிர் வாழ்விற்குத் தொழில் துணை என்பதை முன்பு அறிந்தோம்; இதில் அதனுல் உலகம் இயங்கி வருகின்ற உண்மையை உணர்ந்து கொள்கின்ருேம்.

மெய்யான மெய்த் தொழில் என்றது யாண்டும் பொய்யாதபடி பயன் அளித்து வரும் அதன் நயன் உணர வந்தது.

தெய்வத்தான் ஆகாது எனினும் முயற்சிதன்
மெய்வருத்தக் கூலிதரும். (குறள், 619)

கடவுள் அருள் புரியாது நிற்பினும் உடல் உழைப்பு பயனை உதவி யருளும் என உறுதி கூறி இது ஊக்கியுள்ள உரிமையை நோக்கி அறிக. தெய்வம் என்றது விதியையும் குறித்து வரும்.

தெய்வத்தையும் முயற்சியையும் நேர்நிறுத்தி உயிர்க்கு உறுதியாய் உதவி வரும் உண்மையை இங்ஙனம் உணர்த்தியருளினர். கடவுள் தருவார் என்று மடமையாய் மடி கொண்டிராதே; உன் உடல் வருந்தி முயலுக என மனிதனது கடமை இங்கே காட்டப் பட்டுள்ளது.

தன்னுடைய உடலுழைப்பே கடவுள் வடிவமாய்க் கனிந்து பயன் தருகின்றது; இவ் வுண்மையை உய்த்துணர்ந்து மனிதன் யாண்டும் அயராது தொழில் செய்ய வேண்டும். கரும யோகம் என்பது முயற்சியின் புனித நாமமாய் மருவியுள்ளது.

மேலான மேன்மை என்றது மனித சமுதாயத்தில் தலை சிறந்த பெருமைகளை. உள்ளம் துணிந்து முயல உயர் நலங்கள் எல்லாம் வெள்ளம் எனப் பெருகி வருகின்றன.

அரச திரு முதலாக மனிதன் அடைந்து வருகிற செல்வ வளங்கள் யாவும் வினையின் அளவே விளைந்து வந்துள்ளன.

முன் செய்த கருமம் பரிபாகம் அடைந்து வரும்பொழுது பின்பு அது பெரிய திருவாய்ப் பெருகி எழுகின்றது. அந்த நல் வினையாளன் எல்லா நன்மைகளையும் இம்மையிலேயே அடைந்து கொள்கின்றான்.

அதிட்டம், யோகம், பாக்கியம் என்பன எல்லாம் நல்ல தொழில்களின் விளைவுகளேயாம். செய்யும் வினைகளைத் தக்க பருவங்களில் ஓர்ந்து செய்யின் மிக்க பயன்கள் நேர்ந்து வரும்.

காலம தவறுமல் நாளும் முயலும் அவர்.

என்றது தொழிலாளி விழியூன்றிப் புரியும் விதம் தெரியவந்தது.

நாளை வீண் கழியாமல் எதையும் பருவத்தோடு தொழில் செய்து வருபவர் விழுமிய நிலைமையை மேவி மகிழுகின்றனர் காலத்தை நழுவவிடின் கருதிய பலன்கள் கை கூடாமல் ஒழியு ஆதலால் வினையாளர் எவ்வழியும் அதனைத் தழுவி ஒழுகுகின் னர். நுண்ணிய நோக்கம் எண்ணிய ஆக்கமாகின்றது.

இம்மியன நுண்பொருள்கள் ஈட்டி நிதி ஆக்கிக்
கம்மியரும் ஊர்வர் களிறு ஓடைநுதல் சூட்டி
அம்மி மிதந்து ஆழ்ந்து சுரைவீழ்ந்தது; அறம்சால் கென்று
உம்மை வினை நொந்து புலந்து ஊடல் உணர்வன்றே.

(சிந்தாமணி, 495)

சிறிது சிறிதாக ஈட்டிப் பெரும் பொருள் ஆக்கித் தொழில் முயற்சியினல் கம்மியரும் உயர்ந்த யானைமேல் ஊர்ந்துவரநேர்வர் என இது காட்டியிருக்கும் குறிப்பைக் கருத்தூன்றிக் காண்க. கம்மியர் என்றது தச்சர் தட்டார் கொல்லர் முதலிய கைத் தொழிலாளிகளை. கூலி வேலைகளைச் செய்கின்றவரும் விடாமுயற்சி யுடையராயின் பெரிய அரச திருவினை அடையலாம் என்பதை இதனல் அறிவுறுத்தினர்.

உயர்ந்த குலத்தில் பிறந்திருந்தாலும் தொழில் புரியாராயின் அவர் இழிந்து படுவர்; தாழ்ந்த நிலையினராயினும் தொழிலைக் கைக்கொள்ளின் அவர் யானைகட்டி வாழும்படியான மேன்மையை அடைந்து விளங்குவர். இவ்வுண்மைகளை விளக்க உவமைகள் வந்தன. அம்மி நீரில மிதந்து வந்தது; சுரைக் கொடி அதனுள் ஆழ்ந்திருந்தது என்றது உயர்ந்தோர் செல்வத்தில் மூழ்கி நன்கு வாழாமல மேலை இழிந்து நின்றதையும தாழ்ந்தோர் செழித்து வாழும் நிலைமையையும் இங்ஙனம் உணர்த்தியருளினர். அம்மி போன்ற வலியரும் தொழிலைக் கைவிடின் மெலியராய் இழிவர்; சுரை அனைய மெலியரும் முயன்றுவரின் உயர்ந்து திகழ்வர் என்க.

முயற்சி திருவினை ஆக்கும்; முயற்றின்மை
இன்மை புகுத்தி விடும். (குறள், 616)

என்னும் உண்மை ஈண்டு ஊன்றி உணர வுரியது.

சலியாத உழைப்பு மனிதனை உன்னத நிலையில் உயர்த்து கின்றது. மடியின்றி நாளும் உறுதியோடு முயன்று வருபவனிடம் தெய்வ சகாயங்கள் பெருகி வருகின்றன.

"To the persevering mortal the blessed immortals are swift"
(Zoroaster)

'இடைவிடாத முயற்சியாளனை உவந்து நோக்கித் தெய்வங் கள் விரைந்து உதவி புரிகின்றன" என ஜொராஷ்டர் என்னும் பாரசீகதேசத்து மகான் இவ்வாறு கூறியிருக்கிருர். உழைத்தவன் உயர்ந்து வாழ்கின்ருன்; உழையாதவன் இழிந்து தாழ்கின்ருன். தாழ்ந்து படாமல் வாழ்ந்து மகிழ விரும்பின் தொழிலை எவ் வழி யும் ஒருவன் சூழ்ந்து கொள்ள வேண்டும்.

463. மூண்டு தொழிலை முயலாது நின்றாயேல்
ஆண்டகைமை குன்றும் அறிவழியும்—ஈண்டுநீ
வந்த வரவும் வசையாய் இழிவுறுமே
அந்த வகையை அறி. (ங)

இ—ள்

உள்ளம் துணிந்து தொழில் செய்யாமல் அயர்ந்து நின்றால் ஆண்மை குன்றும்; அறிவு பொன்றும்; இங்கே பிறந்த பயனும் பிழையாய் ஒழியும்; நிலைமைகளை உணர்ந்து தெளிக என்பதாம்.

தொழில் செய்யாவழி விளையும் இழிவுகளை இது உணர்த்துகின்றது. செயல் இன்றேல் இயல் குன்றி மயல் ஒன்றுகின்றது.

இவ் வுலகிலுள்ள சீவகோடிகளுள் மனிதன் தனி மாண்புடையவன். பல வகையான கடமைகளையுடையவன். தன்னைச் சார்ந்த உறவினர்க்கும், சாராத பிறவினங்களுக்கும் உதவி புரிய உரியவன். அவ்வுரிமை கருமங்களால் கனிவு பெறுகின்றது.

தன்னுடைய முன்னோர்கள் தேடிவைத்த பொருள்கள் எவ்வளவு நிறைந்திருந்தாலும் தன் கையால் உழைத்துத் தானாகவே சம்பாத்தியம் செய்து கொள்ள வல்லவனே மானமுடைய மேன் மகன் ஆகின்றான். ஆக்கம் ஊக்கம் நோக்கி உறுகின்றது.

ஆருயிர் அனைய தமது அருமை மனைவியையும் பிரிந்து நெடுந்தூரம் கடந்து போய்ப் பொருள் ஈட்டி வருவது உயர் குல மக்களுடைய இயல்பாயுள்ளது. இவ் வுண்மையைச் சங்க நூல்கள் யாவும் நன்கு விளக்கியுள்ளன. பெரிய செல்வச் சீமானாய் இருந்தாலும் தனது சுயமுயற்சியினால் பொருளீட்டத் துணிவது தலைமகனுடைய வினையாண்மையை உலகம் அறிய உணர்த்துகின்றது.

வினையேய் ஆடவர்க்கு உயிரே வாணுதல்
மனையுறை மகளிர்க்கு ஆடவர் உயிர்என
நமக்குரைத் தோரும் தாமே
அழாஅல் தோழி! அழுங்குவர் செலவே. (குறுந்தொகை)

தலைவனது பிரிவை நினைந்து மறுகி வருந்திய தலைவிக்குத் தோழி சொல்லிய படியிது. தொழில்மேல் மூண்டு நிற்கின்ற நாயகருக்கு நீ இனிய உயிர் ஆதலால் உன்னைத் தனியே விட்டுப் பிரிந்து போகார்; அம்மா! நீ வருந்தாதே; என்று இவ்வாறு அவள் உரிமையோடு உறுதி கூறித் தேற்றியிருக்கிறாள்.

சிறந்த வளம் உடையனுயினும் தானுகத் தொழில் செய்து முயன்று கொள்வதில் ஒருவனுக்குத் தனி மதிப்புண்டு என்பதை இதனுல் உணர்ந்து கொள்கின்ருேம்.

தனது சொந்த முயற்சியால் வந்தது கூழ் ஆனுலும் அது அமுதினும் இனியது என வள்ளுவப் பெருந்தகை அருளியுள்ளார். (குறள், 1065) மான வாழ்வு வான வாழ்வாம்.

போனகம் என்பது தான்உழந்து உண்டல்.

என்ருர் ஔவையாரும். போனகம்=உணவு, சோறு.

பிறர் தருவதை வாங்கி உண்பது மானக்கேடு ஆதலால் அது ஈன உணவு ஆயது. தன் உழைப்பில் வந்த உணவே எவ்வழியும் நன் மதிப்பாய் என்றும் இன்பம் தரும் என்க.

பெருமுத் தரையர் பெரிதுவந்து ஈயும்
கருனைச் சோறு ஆர்வர் கயவர்—கருனையைப்
பேரும் அறியார் நனிவிரும்பு தாளாண்மை
நீரும் அமிழ்தாய் விடும். (நாலடியார்,200)

தாம் உழையாமல் சோம்பேறிகளாயிருந்து பிறர் உவந்து தருகின்ற உணவை அருந்தி மகிழ்வர் கயவர்; நல்ல மானிகள் இங்ஙனம் யாதும் அருந்தார்; தாமே உழைத்து உண்பர்; நீராகாரமாயினும் அது தேவாமிர்தமாம் என்னும் இது ஈண்டு எண்ணத் தக்கது.

தொழிலை நம் முன்னேர்கள் எவ்வளவுபெருமையாக மதித்து வந்துள்ளனர் என்பதை இவற்ருல் உணர்ந்து கொள்ளலாம்.

பிறர் உதவியால் வாழ்வதை மேலோர் எவ்வழியும் இழிவாகவே எண்ணியிருக்கிருர். நளன் அரசிழந்த போது தமயந்தி தன் தந்தை வீட்டில் போயிருக்கலாம் என்று கணவனை உரிமையோடு அழைத்தாள். அம் மன்னன் அதனை மறுத்தான்; அதுபொழுது அந்த ஆண்டகை சொன்னது ஈண்டு உன்னி உணர வுரியது.

“புக்க வேட்டகத்தினில் உண்ணும் புன்மையோர்
மக்களுள் பதடி என்று உரைக்கும் வையமே.”
(நைடதம்)

மணம் புரிந்த மாமனுர் வீட்டில் போய் உண்பது இழிவு என நளன் இங்ஙனம் உரைத்திருக்கிருன். சிறந்த மேன்மக்களு

டைய தலைமையும் நிலைமையும் சனசமூதாயத்திற்கு இனிய போதனைகளாய் நிலவி யாண்டும் உறுதி புரிந்து நிற்கின்றன.

அன்னியரை அடுத்து வாழ்வதில் தம் மதிப்புக் குன்றும் ஆதலால் நல்ல குல மானிகள் அதனை வெறுத்துள்ளனர்.

மாமன் மனையில் மருகன்போய் வாழ்வானேல்
காமன் எனினும் கடையனே—சேமமிகு
சீவ ஒளிதேயும் திண்மை உயர்மானம்
ஓவ ஒளியும் உடன்.

என்றமையால் அவ்வாழ்வின் இழிவு தெளிவாம்.

தானாக உழைத்து வாழும் வாழ்வில் ஊக்கமும் உறுதியும் ஒளியும் பெருகி வருகின்றன. அங்ஙனம் உழையாமல் அயர்ந்து நின்றால் இழிவுகள் பல விளைந்து விடுகின்றன. உழைப்பு ஒழியவே பிழைப்பு பிழையாய் அழிகின்றது.

உழையான் உழையே உறுதுயர் எல்லாம்
பிழையான் பிழையே பெறும்.

தொழிலைக் கைவிட்ட பொழுதே மனிதன் உயிர் அற்றவனாகின்றான்; ஊனங்கள் தொடர்ந்து அடர்கின்றன.

ஆண் தகைமை குன்றும்; அறிவு அழியும்.

மூண்டு முயல்வது ஆண்டகைமை ஆதலால் அங்ஙனம் முயலாமல் சோம்பி நிற்பது மயலாய் இழிந்தது. முயற்சியில் மூண்டு புகுந்தபோது சீவனுக்குப் புதிய ஒரு விழிப்பு உண்டாகின்றது. உள்ளக் கிளர்ச்சியும் உற்சாகமும் துள்ளி வருகின்றன. தொழிலில் மூள மூள அறிவுக்கூர்மை அடைகின்றது. சீர்மைகள் பல சேர்ந்து விளைகின்றன. நீர்மைகள் நிறைந்து திகழ்கின்றன.

சீவ சந்தான தொழிலை இழந்து நின்றால் மடியும் மடமையும் குடி புகுந்து இழிவுகள் பல விளைந்து கொள்ளுகின்றன.

ஈண்டு தொழிலில் இறங்கினால் இன்பநலம்
நீண்டு நிலவி நிறையுமால்—ஆண்டு
மடிகொண்டு நின்றால் மதிகேடு துன்பம்
குடிகொண்டு நிற்கும் குவிந்து.

இதனை உள்ளம் கொண்டு உண்மையை உணர்க.

மனம் ஓயாது சலிக்கும் இயல்பினது; அதனிடம் ஏதேனும் ஒரு வேலையைக் கொடுத்தால் அதனை உரிமையோடு செய்து உயர் நலனை அடைகின்றது. தொழிலில் புகுத்தாது விடின் அது தீய வழிகளில் ஓடித் தீமைகளைச் செய்கின்றது. மாய மயக்கங்களை மருண்டு புரிகின்றது. சோம்பேறிகளுடைய கைகளிலிருந்துதான் பெரும்பாலும் தீவினைகள் விளைந்து வருகின்றன.

"Satan finds some mischief still
For idle hands to do" [Watts]

"சோம்பர்களின் கைகளைக் கொண்டே சாத்தான் சில தீமைகளைச் செய்து கொள்கின்றான்" என வாட்ஸ் என்பவர் இங்ஙனம் கூறியிருக்கிறார்; மடி கொடிய குடிகேடுகளை யுடையது.

வினையாண்மை குன்றிய பொழுதே மனிதனது ஆண்மை பொன்றி ஒழிகின்றது. ஆள்வினை இல்லாதவனைப் பேடி என்று தேவர் குறித்திருக்கிறார். (குறள், 614)

ஓடி முயலான் உதவி செயவிரும்பல்
பேடி விழைவே பிழை. (அரும்பொருளமுதம்)

முயற்சி இல்லாதவன் உலகிற்கு யாதொரு உதவியும் செய்ய முடியாது; அவன் ஒரு பேடியே என்னும் இதனால் தொழிலைக் கைவிட்டவனது இழிநிலை இனிது புலனாம்.

சிறந்த தொழில் நலனை இழந்தவன் பிறந்த பலனை இழந்து பேதையாய் இழிந்து போகின்றான்.

வந்த வரவும் வசையாய் இழிவுறுமே.

உயர்ந்த ஆண்மகனாய்த் தோன்றினவன் ஊன்றி முயன்றால் உயர்கின்றான்; இன்றேல் பான்மை சிதைந்து மேன்மை அழிந்து போதலால் அவனது கீழ்மையை இங்ஙனம் தெளிந்து கூற நேர்ந்தது.

உறவுரிமையான தொழில் செய்யின் பிறவிக்கு அது எழில் செய்கின்றது. யாதொன்றும் செய்யாமல் இருந்தால் நம் உள்ளம் தளர்ந்து மடிந்திருத்தலை அனுபவத்தில் நாம் அறிந்து வருகிறோம். ஊக்கி முயலின் உயிர் மேல் நோக்கி உயர்கின்றது.

முயற்சி இல்லை ஆனால் உயர்ச்சி குன்றுகின்றது; ஆண்மை அழிகின்றது; ஆக்கம் ஒழிகின்றது; அவலங்கள் விளைகின்றன.

"Of all wastes, the greatest waste that you can commit is the waste of labour." [Ruskin]

"எல்லாக் கேடுகளினும் ஒருவனுக்குப் பொல்லாக் கேடு ஆவது தொழில் செய்யாமல் சோம்பி இருப்பதே ஆம்" என்று ரஸ்கின் என்னும் ஆங்கில ஆசிரியர் இங்ஙனம் அறிவித்திருக்கிறார்.

மடியில் இழிவும் அழிவும் உள்ளன; அதனை அடியோடு ஒழியவிட்டு உடனே தொழிலில் முயன்று உயர்ந்து கொள்ளுக.

---

464. உண்ணும் உணவால் உயிர்களுள; அவ்வுணவு
பண்ணும் தொழிலானே பல்கிவரும்—நண்ணும்
தொழில்ஒன் றிலதேல்இத் தொல்லுலகம் எல்லாம்
ஒழியும் அதனை உணர். (௪)

இ—ள்

உண்ணுகின்ற உணவுகளால் உயிர்கள் இனிது வாழ்ந்து வருகின்றன; அவ் வுணவுப் பொருள்கள் தொழிலால் விளைந்து நிறைகின்றன; ஆகவே சீவஆதாரமான தொழில் ஒன்று இல்லையானால் உலகம் எல்லாம் நிலை குலைந்து ஒழிந்து போம் என்பதாம்.

இது உழவுத் தொழிலைக் குறித்துள்ளது.

உயிரினங்கள் உடல்களை மருவியிருக்கின்றன. அவை உணவுகளால் நிலைபெற்று வருகின்றன. உணவு இல்லை ஆனால் உடல்கள் யாதொரு தொழிலும் செய்யாமல் ஒழிந்து போம். சோற்றால் அமைந்த சுவர் என உடம்பைக் குறித்து வரும் பழமொழியும் ஈண்டு உணரத்தக்கது. அன்னமயம் பிராணன் என இன்னவாறு வருவன எல்லாம் சீவிய நிலைமையைத் தெளிவு செய்துள்ளன. உயிர் வாழ்வு உணவில் உள்ளமையால் அது அமுதம் என வந்தது.

"அருந்து உயிர் மருந்துமுன் அங்கையிற் கொண்டு
பெருந்துயர் தீர்த்தவப் பெரியோய்" (மணிமேகலை 25)

உணவை உயிர் மருந்து என்று இது குறித்திருக்கிறது.

உயிர் நிலையமான உடம்பு உணவால் நிலைத்து வருதலால் உணவின் பிண்டம் என உடலுக்கு ஒரு பெயர் அமைந்தது.

மக்கள் யாக்கை உணவின் பிண்டம். (மணிமேகலை 10)

உண்டி முதற்றே உணவின் பிண்டம். (புறம் 18)

மனிதரது உடலை உணவின் பிண்டம் என்று சாத்தனாரும், குடபுலவியனாரும் இங்ஙனம் குறித்திருக்கின்றனர். உணவு உயிராதாரமாயுள்ளமையை இவற்றால் உணர்ந்து கொள்ளுகின்றோம்.

குடி இருக்கும் வீட்டுக்குக் கூலி கொடுப்பது போல் உடலுக்கு நாளும் உணவு கொடுத்து வருதலால் அது துச்சில் என நேர்ந்தது. கூலி நின்றால் வீடு காலியாய் விடும்.

ஒருநாள் உணவைஒழி என்றால் ஒழியாய்
இருநாளுக்கு ஏல்என்றால் ஏலாய்—ஒருநாளும்
என்நோ அறியாய் இடும்பைகூர் என்வயிறே
உன்னோடு வாழ்தல் அரிது. (நல்வழி 11)

வயிற்றை நோக்கி ஔவையார் இவ்வாறு சுவையாகப் பாடியிருக்கிறார். காலம் தவறாமல் நாள்தோறும் உடம்புக்கு உணவை ஊட்டி வர வேண்டும்; இல்லையானால் அது பெரிய தொல்லையாம் என்பதை இது உணர்த்தி நின்றது.

'அன்ன விசாரம் அதுவே விசாரம்" என்றார்பட்டினத்தார்.

"உண்டவர்க்கன்றி உட்பசி ஓயுமோ?
கண்டவர்க்கன்றிக் காதல் அடங்குமோ"

என இறைவனை நோக்கித் தாயுமானவர் இவ்வாறு கூறியிருக்கிறார். பசி தீர உண்பதே பரமாயுள்ளது.

மனிதர் பட்டு வருகின்ற பாடுகள் எல்லாம் பசி தீர உண்டு வாழவேயாம். சீவனத்துக்காகப் படிக்கும் கல்வியை வயிற்றுப் படிப்பு என்கின்றோம். ஒரு சாண் வயிற்றை வளர்க்கவே எண் சாண் உடம்பும் ஏங்கி இயங்குகின்றது. பல மலைகளையும், அலை கடல்களையும் கடந்து சென்று மனிதன் அரும்பாடு படுகின்றான்.

சேவித்தும் சென்றிரந்தும் தெண்ணீர்க் கடல்கடந்தும்
பாவித்தும் பாராண்டும பாட்டிசைத்தும்—போவிப்பம்
பாழின் உடம்பை வயிற்றின் கொடுமையால்
நாழி அரிசிக்கே நாம். (நல்வழி)

போற்றியே போற்றியே என்று புதுச்செல்வம்
தோற்றியார் கண்எல்லாம் தொண்டேபோல்—ஆற்றப்

பயிற்றிப் பயிற்றிப் பலவுரைப்ப தெல்லாம்
வயிற்றுப் பெருமான் பொருட்டு (அறநெறிச்சாரம்)

மனிதனுடைய வாழ்க்கை நிலையை இவை வடித்துக் காட்டியுள்ளன. அதிவிசித்திரமான பசித்தீ வயிற்றிலிருத்தலால் அதனை அவித்து வாழும் பொருட்டு சீவர்கள் துடித்து வருகின்றனர். வயிற்றுப் பெருமான் என்று குறித்திருப்பதிலுள்ள சுவையை நுனித்து நோக்குக. இந்தப் பெருமானை இனிது பூசிக்கவே எல்லாப் பெருமான்களையும் மனிதமக்கள் பூசித்துள்ளனர்.

உண்ணும் உணவால் உயிர்கள் உள.
என்றது உயிர் வாழ்வின் உண்மை நிலையை உணர்த்தி நின்றது.

ஊண் அறின் உயிர் அறும் என்றமையால் உணவுக்கும் உயிருக்கும் உள்ள உறவுரிமை உணரலாம். உணவை உட்கொள்ளாவிடின் பசித்தீ பற்றி எரிந்து உயிரைப் பதைக்கச் செய்யும்.

“குடிப்பிறப்பு அழிக்கும்; விழுப்பம் கொல்லும்;
பிடித்த கல்விப் பெரும்புணை விடுஉம்;
நாண் அணி களையும்; மாண் எழில் சிதைக்கும்;
பூண்முலை மாதரொடு புறங்கடை நிறுத்தும்
பசிப்பிணி என்னும் பாவி” (மணிமேகலை 11)

மானம் குலம்கல்வி வண்மை அறிவுடைமை
தானம் தவமுயர்ச்சி தாளாண்மை—தேனின்
கசிவந்த சொல்லியர்மேல் காமுறுதல் பத்தும்
பசிவந்திடப் பறந்து போம். (நல்வழி 26)

பசியின் கொடுமையைக் குறித்து வந்துள்ள இவை இங்கே சிந்திக்கத் தக்கன. உண்ண உணவில்லாதபோது உயிர்கள் படும் துயரம் இவ்வாறு கொடிய பரிதாபமாயிருத்தலால் பசித்தவர்க்கு அன்னம் இடுவது புண்ணியம் என்று போற்றப்பட்டுள்ளது.

மண்டிணி ஞாலத்து வாழ்வோர்க் கெல்லாம்
உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத்தோரே. (மணிமேகலை)

அன்னதானத்தின் அதிசய மகிமை ஈண்டு உன்னி உணரவுரியது. உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத்தோரே என்றது உணவின் சீவ நிலையை உணர்த்தி நின்றது.

அற்றார் அழிபசி தீர்த்தல் அஃது ஒருவன்
பெற்றான் பொருள்வைப் புழி. (குறள் 226)

ஒருவன் அருமையாக ஈட்டிய பொருளை உரிமையுடன் வைக்க வேண்டிய இடத்தைத் தேவர் இங்ஙனம் காட்டியருளினர்.

பசியை நீக்கி உயிரை இனிது பாதுகாத்து வருதலால் உணவு உயிர் அமிர்து என உயர் மகிமை பெற்றது.

இத்தகைய உணவை உழவுத் தொழில் உளவாக்கி அருள்கின்றது. பயிர்களை வளர்த்து உயிர்களைப் பேணி வருதலால் உலகிலுள்ள தொழில்கள் எவற்றினும் உழவு தலைமையாய் நின்றது. இதன் பயனையும் பண்பையும் வியந்து மேலோர் எவரும்புகழ்ந்து போற்றியுள்ளனர்.

உழுவார் உலகத்தார்க்கு ஆணி. (குறள் 1032)

உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார். (குறள் 1033)

உழுதுண்டு வாழ்வதற்கு ஒப்பில்லை கண்டீர்
பழுதுண்டு வேறோர் பணிக்கு. (நல்வழி 12)

தொழுதூண் சுவையின் உழுதூண் இனிது.
(கொன்றை வேந்தன் 46)

உழவர்க்கு அழகு இங்கு உழுதூண் விரும்பல். (நறுந்தொகை 7)

உழுவான் உலகுக்கு உயிர். (வெண்பாமாலை 165)

யானை நிரையுடைய தேரோரினும் சிறந்தார்
ஏனை நிரையுடைய ஏர்வாழ்நர்—யானைப்
படையோர்க்கும் வென்றி பயக்கும் பகட்டுஏர்
உடையோர்க்கு அரசரோ ஒப்பு. (பெரும் பொருள்)

நன்புலத்து வையடக்கி நாளுநாள் ஏர்போற்றிப்
புன்புலத்தைச் செய்துஎருப் போற்றியபின்—இன்புலத்துப்
பண்கலப்பைப் பாற்படுத்து வானுழவன் என்பவே
நுண்கலப்பை நூலோது வார். (சிறு பஞ்ச மூலம் 59)

உழவின் பெருமையைக் குறித்து நூல்கள் இவ்வாறு உரைத்துள்ளன. உரைகளிலுள்ள பொருள் நிலைகளை ஊன்றி உணர வேண்டும். பயிரின் தொழில் உயிரின எழிலாய் ஒளி வீசியுளது.

உயிரினங்கள் உண்டு வாழுதற்குரிய உணவுகளை விளைத்தருளுதலால் உழவு உலகிற்கு உயிர் என அமைந்தது. புகழும் புண்ணியமும் பொருந்தியிருத்தலால் இத்தொழில் மனிதனுக்கு

ஓர் எழில் என வந்தது. இவ்வுண்மையை ஏர் என்னும் சொல் உணர்த்தியுள்ளது. பேரின் அமைதி கூரிய நோக்குடையது.

ஏர் = அழகு, உழவுத் தொழில், கலப்பை, நன்மை, எழுச்சி. இந்தப் பெயர் உரிமையால் உழவின் உயர் நிலையையும், உயிர்களுடைய செயல் நிலைகளையும் உணர்ந்து கொள்ளலாம்.

சீரைத் தேடின் ஏரைத் தேடு.
மேழிச் செல்வம் கோழை படாது.

என ஔவையார் இங்ஙனம் மேன்மையாகக் குறித்துள்ளார். எவ்வளவு ஆர்வத்தோடு உழவைப் புகழ்ந்திருக்கிறார்! இதிலுள்ள உழைப்புக்கு அஞ்சி வேறு வழியால் பிழைப்பை நாடி ஒதுங்குகின்றவர்களை இவர் மிகவும் இகழ்ந்து பேசியுள்ளார்.

சென்று உழுது உண்பதற்குச் செய்வ தரிதென்று
மன்றுழுது உண்பான் மனைவாழ்க்கை—முன்றிலின்
துச்சில் இருந்து துடைத்தழுகண் ணீராலேழ்
எச்சம் இறுமேல் இறு. (ஔவையார்)

உழவின் மீது இக் கிழவி கொண்டுள்ள பிரியமும் மதிப்பும் இதனால் அறியலாகும். ஏர் இல்லை ஆனால் சீர் இல்லை என்று அப் பேரிலிருந்தே பார் அறியச் செய்தார்.

ஏர்என்னும் பேரே இனிய தொழில்எழிலைப்
பார்எங்கும் காணப் பகர்ந்துள தால்—சீர்என்றும்
வேண்டின் அதனை விழைந்துகொள்க மேன்மையறம்
காண்டி அதனகண் கனிந்து.

தனக்கும் பிறர்க்கும் உலகிற்கும் உயிராதாரமாய் ஒளி புரிந்துள்ளமையால் உழவு தொழில் மனிதனுக்கு எவ்வழியும் புனிதமாயது. புண்ணியமான அது யாண்டும் கண்ணியமாகின்றது.

இதன் சீர்மை நீர்மைகளைக் குறித்து எழுபது பாடல்களால் கம்பர் ஒரு நூல் செய்திருக்கிறார். அதற்கு ஏர் எழுபது என்று பேர். அதிலிருந்து சில கவிகள் அயலே வருகின்றன.

வாழிநான் மறையோர்கள் வளர்க்கின்ற வேள்விகளும்
ஆழியால் உலகளிக்கும் அடல்வேந்தர் பெருந்திருவும்
ஊழிபேரினும் பெயரா உரையுடைய பெருக்காளர்
மேழியால் விளைவதல்லால் வேறொன்றால் விளையாவே. (1)

நீற்றோனும் மலரோனும் நெடியோனும் என்கின்ற
தோற்றுளர் இவராலே தொல்லுலகம் நிலை பெறுமோ?
மாறாத காவேரி வளநாடர் உழுங்கலப்பை
ஊற்றாணி உளதாயின் உலகநிலை குலையாதே. (2)

ஊட்டுவார் பிறருளரோ உலகுதனில் உழுபகடு
பூட்டுவார் புகழன்றிப் பிறர்புகழும் புகழாமோ?
நாட்டுவார் சயதுவசம் நயப்பாரை இவர்க்கு நிகர்
காட்டுவார் யார்கொல்இந்தக் கடல்சூழ்ந்த வையகத்தே.

பார்பூட்டும் திசையனைத்தும் பகடுகளும் பரம்பூணு
போர்பூட்டும் காமனும்தன் பொருசிலைமேல் சரம்பூட்டான்
கார்பூட்டும் கொடைத் தடக்கைக் காவேரி வளநாடர்
ஏர்பூட்டின் அல்லது மற்று இரவியுமதேர் பூட்டானே.(4)

முதிராத பருவத்தும் முற்றியநற் பருவத்தும்
கதிராகி உயிர்வளர்ப்பது இவர் வளர்க்கும் கதிர் அன்றோ?
எதிராக வருகின்ற எரிகதிரும குளிர் கதிரும்
கதிராகி உயிர்வளர்ப்பது உண்டாயின் காட்டீரே. (5)

பார்வேந்தர் பெருஞ்செல்வம் பழுதுபடாது ஒருநாளும்
ஏர்வேந்தர் பெருஞ்செல்வம் அழிவுபடா திருத்தலினால்
தேர்வேந்தர் போர்க்களத்துச் சிலர்வெல்வர் சிலர்தோற்பர்
ஏர்வேந்தர் போர்க்களத்துள் இரப்பவரும் தோலாரே. (6)

விற்பொலியும் பெருங்கீர்த்தி வேளாளர் விளைவயலில்
நெற்பொலியுண்டாமாகில் நிலமகளும் பொலி உண்டாம்;
பொற்பொலிவுண்டாம்;உலகம் புகழ்ப்பொலிவுண்டாம்;புலவோர்
சொற்பொலிவுண்டாம்; கலியின் துயர் பொலிய மாட்டாதே. (7)

(ஏர் எழுபது)

இந்தக் கவிகளைக் கருதி நோக்கிக் கருத்துக்களை உணர்ந்து கொள்ளுந்தோறும் உவகை சுரந்து திகழும். கவியரசருடைய உரைகள் எங்கணும் சுவைகள் பெருகியுள்ளன. எரி கதிர், குளிர் கதிர் என்றது சூரிய சந்திரர்களை. உலகம் உழவாலேயே நிலை பெற்று வருதலைப் பல வகையிலும் உறுதி செய்துள்ளார் உழவுத் தொழிலைக் குறித்து வரும் வேளாண்மை என்னும் சொல்லுக்கு உபகாரம் என்றே பொருள். அத்தொழிலைச் செய்து வருபவர் வேளாளர் என நின்றார். உயிர்கள் வாழ உழைத்தருள்பவர் ஆதலால் அவர் உபகாரிகள் என உயர் புகழ் கொண்டார். "உழவினார் கைம்மடங்கின்" உலகம் உய்யாது என்றது பொய்யா மொழி. உழவின் உளவறிபவர் கிழமை புரிகின்றனர்.

"சீர்படைத்த பூபாலர் செங்கோல் பிடிப்பதற்குப்
பேர்படைத்த மேழி பிடிக்குங் கை—கார்படைத்த
மிஞ்சுமதி கீர்த்தியைப் போல் மேதினிஎல்லாம் தழைக்கச்
செஞ்சாலி நாற்றைத் தெளிக்குங் கை—எஞ்சாமல்
வெள்ளைக் களைகளைந்து வீறும் பயிர்தழைக்கக்
கள்ளக்களை களைந்த கற்பகக் கை" (திருக்கைவழக்கம்)

வேளாண்மை புரிபவரது கையைக் குறித்து இப்படி ஒரு நூல் வந்துள்ளது.

வேளாண் மாந்தர்க்கு உழுதூண் அல்லது
இல்லென மொழிப பிறவகை நிகழ்ச்சி.
(தொல்காப்பியம், மரபியல்)

உயர்ந்த உபகாரிகளுக்குச் சிறந்த உரிமையாக உடையது உழுந்தொழிலே என ஆசிரியர் தோல்காப்பியனார் இங்ஙனம் அருளியிருக்கிறார்.

பல்லுயிர்க்கும் பல வகையிலும் உதவியாகவுள்ளமையால் உழவினை எல்லாரும் விழுமிதாக விழைந்து கூறியுள்ளார்.

"வேளாளன் என்பான் விருந்திருக்க உண்ணுதான்" என நல்லாதனார் என்னும் சங்கப் புலவர் இங்ஙனம் குறித்திருக்கிறார். இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னதாகவே இந்த நாட்டில் வேளாண்மை இருந்துள்ள சீர்மையும் வேளாளரது நீர்மையும் வியந்து நோக்க நின்றன. அந் நிலைமையும் தலைமையும் கால வேற்றுமையால் இந்நாளில் சீர் குலைந்துள்ளன.

"உழுங்குலத்தில் பிறந்தாரே உலகு உய்யப் பிறந்தாரே"

என்று கம்பர் உள்ளம் உருகித் துதித்திருப்பது ஈண்டு உணர்ந்து மகிழவுரியது.

தொழில் ஒன்று இலதேல் இத்தொல் உலகம் எல்லாம் ஒழியும்.

உழவு ஒன்றினாலேயே உலகங்கள் எல்லாம் நிலைத்துள்ளன என இஃது உணர்த்தி நின்றது. உழவு தொழில் இல்லையேல் பயிர்கள் விளையா; உணவுகள் ஒழியும்; அவை ஒழியவே உயிர்கள் அழியும்; உலகம் பாழாம். நிலைமையைக் கூர்ந்து ஓர்ந்து கொள்க.

உழவின் வழியே உலகம் வாழ்ந்து வருதலால் இதற்கு அது உயிர் என வந்தது.

உணர் என்றது உழவின் உண்மை நிலைகளைக் கூர்ந்து உணர்ந்து இத்தொழிலை எவ்வழியும் செவ்வையாக ஓர்ந்து செய்து உயர்ந்து வாழுக என்பதாம்.

"Plantations are amongst ancient, primitive, and heroical works." (Bacon)

"பயிர்த் தொழில் பழமையும் தலைமையும் பெருமையும் உடையது" என பேக்கன் என்னும் ஆங்கில ஆசிரியர் இங்ஙனம் கூறியிருக்கிறார். எந் நாடும் உழவை ஏத்தியுள்ளது.

இந்நாளில் இந் நாட்டில் விவசாய நிலைமைகள் பல வகையிலும் தாழ்வடைந்துள்ளன. தாழ்வுக்குக் காரணங்கள் பல. அறிவைக் கூர்ந்து செலுத்தாமல் உடலளவில் மாட்டுப்பாடு பட்டு வருவதே உழவுத் தொழிலாய்த்தொடர்ந்து வருகின்றது. உழுது உண்பது இழிவு என்று கருதி அறிவாளிகள் தொழுது உண்பதில் சுவை கண்டு விட்டனர். காணவே உழவில் நல்ல பலன்கள் காணாமல் போயின. வினைகள் மாற விளைவுகள் மாறின.

ஐரோப்பா, அமெரிக்கா முதலிய மேல் நாடுகளில் ஒரு ஏக்கருக்கு ஆயிரத்து இருநூறு ரூபாய் விளைவுகள் வருவாய்களாய் எழுகின்றன. நிலம் உரம் பருவம் உழவு முதலியவைகளை மிகவும் கவனமாய்க் கருதி வருதலால் அந்நாட்டு உழவர்கள் அவ்வளவு பெரிய வருவாய்களை எளிதே பெறுகின்றனர்.

The taste of the English in the cultivation of land is unrivalled. (Rural life in England)

"நிலத்தைத் திருத்திப் பண்படுத்துவதில் ஆங்கிலேயருடைய ஆர்வம் அதிசயமுடையது" என்னும் இது இங்கே அறியவுரியது.

"The rudest habitation, the most unpromising and scanty portion of land, in the hands of an Englishman of taste, becomes a little paradise" (W. Irving)

"பயன் அற்ற பொட்டலான வறண்ட நிலமும் ஒரு ஆங்கிலேயன் கையில் சிறிய சுவர்க்கமாய் மாறி விடுகின்றது" என வாஷிங்டன் இர்வின் என்னும் அமெரிக்க ஆசிரியர் இவ்வாறு எழுதியிருக்கிறார். கூரிய நோக்கம் சீரிய ஆக்கமாகின்றது.

உழவுத் தொழிலில் மேல்நாட்டார் அடைந்திருக்கும் மேன்மையை இதனால் அறிந்து கொள்கின்றோம். பெரிய சுக சீவிகள் என்று கருதப்பட்டுள்ள அவர் தொழில் முறைகளில் இவ்வளவு விழுமியராய் முன்னேறி யுள்ளனர். இது எவ்வளவு வியப்பு! யூகமாய் உழைக்கின்றவர் யோகமாய்ப் பிழைக்கின்றனர்.

உழுது வாழ்வது யாண்டும் எவ்வகையினும் உயர்வு; அதனைச் செவ்வையாகச் செய்து திவ்விய போகங்களை எய்துக.

*நிலந்தரு திருவினை நெடிது பேணியும்,*
*கலந்தரு திருவினைக் கருதி நாடியும்,*
*புலந்தரு திருவொடு பொழுது போக்கியும்,*
*வலந்தரு திருவொடு வாழ்ந்து வந்தனர்.*

உன் சீவிய வாழ்வை இவ்வகையில் செய்து கொள்ளுக.

---

465. *ஆளென வந்துளநாம் ஆள்வினையை ஆற்றினால்*
*நீள்புகழ் எய்தி நிலவுவோம்—நாளும்*
*வினையின் அளவே வியனும் பயனும்*
*நினைக நிலையை நிதம்.* (ரு)

இ—ள்

ஆள் என்று தோன்றியுள்ள நாம் ஆள்வினைச் செய்த போது தான் நீள் புகழ் எய்தி நெடிது திகழுவோம்; வினையின் அளவே மேன்மையும் இன்பமும் விளைகின்றன; இவ் வுண்மையை உணர்ந்து உயர்க என்பதாம்.

இது ஆள்வினையின் அமைதி கூறுகின்றது.

மனிதனுக்கு ஆள் என்று ஒரு பெயர் அமைந்துள்ளது. உயர்ந்த நிலைமையை அது உணர்ந்து கொள்ள வந்தது. எதையும் ஆளும் திறமுடையவன்; சிங்கம் யானை முதலிய பெரிய வன விலங்குகளையும் தன் வசமாக அடக்கி ஆள உரியவன்; வில் வேல் முதலிய கருவிகளைக் கையாள வல்லவன் என இன்னவாறான உறுதி நலங்களை உணர்த்தி ஆள் என்னும் பதம் நீளமாய் ஒளி செய்து நிற்கின்றது.

ஆண்மை, ஆண்மகன், ஆண்டகை என்பன ஆளின் தரத்தையும் திறத்தையும் குறித்து வந்தன. மனிதன் உறுதியாய்

ஊக்கிச் செய்யும் முயற்சியை ஆள்வினை என்று முன்னோர் குறித்திருப்பது கூர்ந்து சிந்திக்கத் தக்கது. ஆள்வினையுடைமை என நாயனார் ஓர் அதிகாரம்வகுத்தருளியதுஇங்கே பகுத்தறியவுரியது.

வாழ்வினை வளம்படுத்தி மனிதனை மாண்புறுத்தி வருதலால் ஆள்வினையை யாவரும மேன்மையாகப் போற்றியுள்ளனர். எவன் தொழில் செய்து வருகிறானோ அவனே ஆள் என்னும் பெருமைக்கு உரியவனாகின்றான்; அது செய்யாதவன் ஆண்மையை இழந்து சோம்பேறியாய் இழிந்து படுகின்றான். முயற்சி மனிதனை மகிமைப் படுத்துகின்றது; சோம்பல் அவனைச் சிறுமைப் படுத்திச் சீரழித்து விடுகின்றது. உயர்ச்சியும் தாழ்வும் உளத்தில் உள.

உள்ளம் ஊன்றி உழைத்து வரின் பலவகையான பலன்களும் வெள்ளமாய் விளைந்து வருகின்றன. அவ் வரவால் இம்மை மறுமைக்கு உரிய எல்லா நலன்களும் எய்தப் பெறுகின்றன.

ஆள்வினை ஆற்றினால் நீள்புகழ்.

முயற்சியினாலேதான் மனிதன் உயர்ச்சியடைய முடியும் என்பதை இது உணர்த்திநிற்கின்றது. இனிய போகங்களை அனுபவிப்பதும் அரிய புண்ணியங்களை விளைப்பதும் இருமைப் பயன்களாய் முறையே மருவியுள்ளன. இவை எவ்வழியும் பொருளால் பொலிவு பெற்று வருகின்றன. இங்ஙனம் இன்ப சாதனமான அந்தப் பொருள் தொழில் முயற்சியால் உளவாகின்றது; ஆகவே ஈதல் துய்த்தல் முதலிய எல்லா நிலைகளுக்கும் தொழில் உயிர் நிலையமாய் நின்று உய்தி புரிந்தருள்கின்றது.

ஆள்வினை நீள்புகழ் என்றதனால் அஃது இல்லை ஆனால் சூழ் பழியாளனாய் மனிதன் வீழ்நிலை அடைவான் என்பது விளங்கி நின்றது. புகழும் புண்ணியமும் போகங்களும் நல்கி மனித வாழ்வை எவ்வழியும் செவ்வையாகப் பொருள் இனிமை செய்தருளுதலால் அதனை எவரும் பெருமையாக மதித்துப் போற்றி வருகின்றனர். பொருள் இன்றேல் வாழ்வு இருள் அடைகின்றது.

அருள் அமைதி முதலிய பெரு சீர்மைகள் அமைந்து மனிதன் எவ்வளவு நல்லவனாயிருந்தாலும் பொருள் இல்லை ஆனால் பிறர்க்கு உபகாரம் செய்ய இயலாது; ஆகவே ஈந்து மகிழ்கின்ற இன்பநலனையும் உபகாரி என்னும் உயர் புகழையும் அவன் இழந்து விடுகின்றான். நன்மைகள் யாவும் இன்மையால் மறைகின்றன.

தாளாண்மை என்னும் தகைமைக்கண் தங்கிற்றே
வேளாண்மை என்னும் செருக்கு. (குறள், 613)

உபகாரம் செய்தல் என்னும் உயர்ந்த மேம்பாடு முயற்சியின் கண்ணேயே தங்கியுள்ளது எனத் தேவர் இங்ஙனம் அருளியிருக்கிறார். செயலுடையவர் உயர்நலமடைகின்றார்.

தாளாண்மை = முயற்சி. வேளாண்மை = உபகாரம்.

கருங்கடல் கடந்தும், அருஞ்சுரம் புகுந்தும், மலை வனங்கள் தாண்டியும், மறுபுலங்கள் அடைந்து மூண்டு முயன்று பொருள் திரட்டி மீண்டு வருதலால் முயற்சி தாளாண்மை என வந்தது. மனிதன் கால் ஓடிச் செய்வது என்னும் குறிப்பில் இது வந்திருக்கின்றது. குறிக்கோளைக் கூர்ந்து ஓர்ந்து கொள்க.

கால் இல்லாதவன் முடமாய் மடிந்து கிடக்கின்றான்.
தாள் இல்லை ஆயின் ஆளும் இல்லையாய் அவலம் அடைகின்றான்.

"தாள் உளாள் தாமரையினாள்." (குறள் 617)

முயற்சியின் உள்ளேயே இலட்சுமி வசித்திருக்கிறாள் என நாயனார் குறித்திருக்கும் இந்த அழகைக் கூர்ந்து பார்க்க. தாள் = முயற்சி. தாளாளன் மேலாளனாய் மிளிர்கின்றான்.

திருமகள் மனம் உவந்து வாழும் இனிய நிலையம் என முயற்சியைக் குறித்தது எல்லாச் செல்வங்களையும் அது நல்கி வருதல் கருதி. திருவின் திருமகனாய் வினையாளன் மருவி ஒளிர்கிறான்.

நடந்தவன் காலில் சீதேவி; கிடந்தவன் காலில் மூதேவி என்னும் பழமொழி முயற்சியாளனது உயர்வையும், சோம்பேறியின் இழிவையும் தெளிவாக விளக்கி நிற்கின்றது.

பொருள்களை நீட்டி, இன்பங்களை ஊட்டி, புகழ்களை ஆட்டி, புண்ணியங்களைக் காட்டி மன்பதையை மாண்புறுத்தி வருதலால் தொழில் விழுமிய மகிமை நிலையமாய்க் கெழுமியுள்ளது.

திருவின் கருவூலமாய் இங்ஙனம் மருவியிருத்தலால் தொழிலை யாவரும் ஆவலோடு மேவி வருகின்றனர்.

வினையின் அளவே வியனும் பயனும்.

தாம்செய்கின்ற கருமங்களுக்குத் தக்கபடியே மேன்மையும் செல்வமும் மனிதர்க்கு உளவாகின்றன. பழி பாவங்கள் கலவாத தொழில்கள் என்றும் விழுமிய நிலையில் விளங்கி நிற்கின்றன.

பொருள் வருவாய் பெரிதும் தருவதாயினும் தொழில் பழுது ஆயின் அது இழிவேயாம். கள் ஊன் முதலிய ஈனங்களை விற்றுப் பெரும்பொருள் திரட்டிப் பெரிய செல்வர் எனப்பெருகி நின்றாலும் அந் நிலை பெருமை ஆகாது; சிறுமையாகவே கருதப் படும். இனிய ஈட்டமே இன்பம் நீட்டுகின்றது

நல்ல வழியில் வருகின்ற பொருள்களே வழி முறைகளுக் கெல்லாம் உரிமையாய்த் தொடர்ந்து நலம் புரிந்து வருகின்றன.

பொருள் நிலையாய் நெடிது நின்று இனிது பயன் தர வேண்டின் புலையான நிலைகளில் அதனை ஈட்டலாகாது.

பிறர் நலமுறப் பேணி ஈட்டுவோரே யாண்டும் நீண்ட திரு வின் காணியாளராய் நிலைத்து வருகின்றனர். தான் நுகர்ந்து மகிழ்வதைக் காட்டிலும் பிறர்க்கு உவந்து உதவவே பொருளை விழைந்து ஈட்டுவது உயர்ந்த மேன்மக்களுடைய இயல்பாய் அமைந்திருக்கின்றது.

ஈதலும் துய்த்தலும் இல்லோர்க்கு இல்எனச்
செய்வினை கைம்மிக எண்ணுதி அவ்வினைக்கு
அம்மா அரிவையும் வருமோ?
எம்மை உய்த்தியோ உரைத்திசின் நெஞ்சே!

(குறுந்தொகை 63)

புதிதாய் மணம் புரிந்த ஒரு குலமகன் தொழிலை விழைந்து நின்ற தனது உள்ளத்தை நோக்கிச் சொல்லிய படியிது.

"ஈதலும் அனுபவித்தலும் பொருளுடையவர்க்கே அமை யும்; அந்தப் பொருளை அதிகமாக ஈட்டி வரவுரிய தொழிலையே மேற்கொண்டு வெளியே போக வேண்டும் என்று ஓயாது எண்ணி வருகின்ற ஓ மனமே! எனது இனிய மனைவியும் உடன் வருவா ளா? அரிய துணைவியைப் பிரிந்து தனியே ஏகும்படி என்னை வருத்துகின்றாயே! புது மணமான இன்பச் சுவையையும் மறந்து பொருளை விழைந்து புரிந்து வரும்படி போராடுகின்றாயே! உனது பேராசைதான் என்னே! இன்னும்சின்னாள் கழித்துப்போவோம்; பொறுத்திரு" எனத் தன் நெஞ்சுடன் தலைமகன் ஒருவன் இவ் வாறு பேசியிருக்கிறான். ஈதலை முதலில் குறித்ததனால் நல்ல உப காரி; பிறர்க்கு என வாழும் பெருந்தகையாளன்; திருந்திய பண்பினன் என்பது தெரிந்து கொள்ள வந்தது.

இணை பிரியாத துணைவியையும் பிரிந்து வினையாண்மையில் இவன் மூண்டுள்ளமையால் தொழிலில் மனம் சென்றபோது மனிதன் எதையும் மறந்து விடுவான் என்னும் உண்மை ஈண்டு வெளியாய் நின்றது. ஒளியும் சுகமும் தொழில் தருகின்றன.

---

466. கையால் புரிகின்ற கைத்தொழிலும் காணறிவின்
மெய்யால் விளைகின்ற மெய்த்தொழிலும்—செய்ய
உடலும் உயிரும் உயர்நிலையில் ஓங்கி
மிடலுற்று நிற்கு மிடைந்து. (சு)

இ—ள்

கைகளால் செய்கின்ற கைத்தொழில்களும்; அறிவால் ஆற்றுகின்ற மெய்த் தொழில்களும் உடல் உயிர் என்னும் இருவகை நிலைகளுக்கும் முறையே உறுதி நலன்களை அருளி வருகின்றன.

இது தொழிலின் வகைகளை உணர்த்துகின்றது.

மக்கள் பலவகை நிலையினர். அளவிடலரிய எண்ணங்களை யுடையவர். முகங்கள் எவ்வாறு வேறுபட்டிருக்கின்றனவோ அவ்வாறே அகங்களும் மாறுபட்டுள்ளன. தங்கள் சுபாவங்களின்படியே தொழில்களும் மொழிகளும் மாந்தரிடமிருந்து வெளி வருகின்றன. இருந்த இடம், தெரிந்த முறை, சார்ந்த நிலை, நேர்ந்த நிமித்தம், பழகிய பழக்கம் என்னும் இவ் வழிகளிலேயே எவரிடமும் செயல்கள் எழுகின்றன; அவை தொழில்கள் எனத் துலங்கி நிற்கின்றன.

உடல் உழைப்பு, உள்ளத்தின் உழைப்பு, உணர்வு உழைப்பு என உழைப்புகள் பல படிகளாய்ப் படிந்துள்ளன. எல்லா உழைப்புகளும் உலகிற்கு விழிப்பையும் செழிப்பையும் விளைத்து வருகின்றன. தம் நிலைமைக்குத் தக்கவாறே கருமங்கள் காரியங்கள் ஆகின்றன. இயல்பின் அளவே எவரும் முயல நேர்கின்றனர்.

இளமையிலேயே கல்வி நலனை இழந்து நின்றவர் பின்பு நல்ல அறிவுத் தொழிலைச் செய்ய இயலாதவராகின்றார்; ஆகவே தேக உழைப்பில் அவர் மேவி விளங்குகின்றார்.

எந்தத் தொழில் ஆயினும் மனிதன் உள்ளம் ஊன்றி உண்மையாக உழைத்தால் அவனைக் கரும தேவதை உவந்து நோக்கு

கின்றது; நோக்கமே அரிய பல பாக்கியங்களை அவன் எளிதே அடைந்து கொள்ளுகின்றான்.

உழவு நெசவு முதலிய தொழில்கள் உணவு உடைகளை முறையே உதவியருளுகின்றன. உண்ண உணவும் உடுக்க உடையும் மனித வாழ்வில் முன்னதாக வேண்டிய அவசிய தேவைகளாய் மூண்டு நிற்கின்றன.

உலக வாழ்க்கைக்கு மிகவும் உரிமையான இப் பொருள்களை தொழில்கள் விளைத்தருளுதலால் அவை சீவ ஆதாரங்களாய்ச் சிறந்து திகழ்கின்றன. தேகப் பாதுகாப்பை நன்கு செய்து வருதலால் கைத்தொழில் முதன்மையாகக் கருத வந்தது.

உண்டு வாழ மட்டும் மனிதன் ஈண்டு வரவில்லை; அரிய பல நிலைகளை அடைய வந்துள்ளான். உண்டி உடை அளவில் உல்லாசமாய்க் களித்து நின்று விடுவான் ஆயின் அந்த மனிதன் வாழ்வு மிருக வாழ்வாய்ப் பரிதாப நிலையை அடைகின்றது.

காட்டு விலங்குகளும் காமக் களிப்போடு
பேட்டுகளைக் கூடிப் பெருகின்று—ஈட்டமுடன்
குட்டிகளைக் கண்டு குலாவுகின்ற அவ்வளவே
முட்டிகளும் வாழ்கின்றார் வந்து.

உணர்ச்சியுடன் உயிர்க்கு உறுதி நாடாமல் உடலை மாத்திரம் ஓம்பி மடமையாய் உழல்வது மாட்டு வாழ்வு என இது காட்டியுள்ளது. உரிய தகுதி குன்றியபொழுது அரிய பிறவியும் அவலமாகின்றது மதிநலமுடையதே கதிநலம் காணுகின்றது. அல்லாதது இழி நிலையில் ஆழ்ந்து பழி மிகுந்து படுகின்றது.

மாடு தட்டை தின்னுகின்றது; பெட்டைகளைக் கூடுகின்றது; குட்டிகளைப் போடுகின்றது. இந்த அளவிலேயே உண்டு களித்துப் பெண்களைத் தோய்ந்து பிள்ளைகளைப் பெற்று மேலே ஒரு நலமும் பெறாமல் வறிதேயுள்ளவர் இருகால் மிருகங்களே என மேலோர் வெகு காலங்களாக எண்ணியுள்ளனர். உணவு உண்ணுவதோடு அமையாமல் உணர்விலும் உயர்ந்த போதுதான் பிறவி பெருமகிமை பெறுகின்றது.

கையால் செய்கின்ற கைத்தொழிலால் உடலைப் பேணுக.
அறிவால் செய்கின்ற மெய்த் தொழிலால் உயிரை ஓம்புக.

என்றது இருவகையான தொழில்களும் மனித சமுதாயத்திற்கு உறுதி பயந்து வரும் உண்மை தெரிய வந்தது.

கைத்தொழில் தேக போகங்களை உதவுகின்றது.

அறிவுத் தொழில் ஆன்ம இன்பங்களை அருளுகின்றது.

மதியூகங்களால் விளைந்து வருதலால் அறிவுத் தொழில் உணர்வின் சுவையாய் உயிர்க்கு இனிய உறுதிநலங்களைப் பயந்து வருகின்றது. கைத்தொழில் கண்ணுக்குத் தெரியும்படியான பருப் பொருள்களை விளைத்தருளுகின்றன. அறிவின் மெய்த் தொழில் மானசிகமான அரிய நுண் பொருள்களை இன்புறும்படி இனிது தந்தருளுகின்றன.

கவி சங்கீதம் காவியம் கலை ஞானம் முதலியன யாவும் மேலான அறிவின் தொழிலாய் விளைந்து வந்திருத்தலால் அவை யாவருக்கும் உணர்வும் உவகையும் ஒளியும் உதவி யாண்டும் ஆன்ம போகங்களாய் மேன்மை எய்தியுள்ளன.

அன்புறு பத்தி வித்தி ஆர்வநீர் பாய்ச்சும் தொண்டர்க்கு
இன்புறு வான ஈசன் இன்னருள் விளையுமா போல்
வன்புறு கருங்கால் மள்ளர் வைகலும் செவ்வி நோக்கி
நன்புல முயன்று காக்க விளைந்தன நறுந்தண் சாலி.

(பரஞ்சோதி முனிவர்)

இதில் வந்துள்ள உவமானத்தையும் பொருளையும் ஊன்றி நோக்க வேண்டும். அறிவுத் தொழிலையும் கைத்தொழிலையும் ஒரு முகமாய் நோக்கி உரிமைநிலைகளை ஓர்ந்து உவந்து கொள்கின்றோம்.

இறைவனை நினைந்து உருகி அன்பு செய்யும் பண்புடையாளருக்கு அவன் அருள் பெருகி வருதல் போல் வயலைப் பண்படுத்தி நன்கு பாதுகாத்து வந்த உழவர்க்கு விளைவு மிகுதியாய் வந்தது என இரு வகை வரவு நிலைகளைத் தெளிவுறுத்தியுள்ளார்.

சாலி=நெல். உழவுத் தொழிலை உரிமையோடு செய்து உணவுப் பொருள்களை மிகுதியாக விளைத்து உலக வாழ்க்கையை இனிது நடாத்துக; அவ்வளவோடு ஒழிந்து போகாமல் பரம் பொருள்பால் அன்பு செலுத்தி உயர்ந்த கதி நிலையை அடைந்து கொள்க எனச் சிவிய நிலைகளை விளக்கிப் புனிதமான இனிய உணர்வு நலனை அதி விநயமாக இது உணர்த்தியுள்ளது.

உலக வாழ்வும் உயிர் வாழ்வும் ஒளி பெற உழைத்து எவ்வழியும் செவ்வையாய் உயர் நிலை பெறுக என்பது கருத்து.

---

467. செய்யும் தொழிலைநீ செய்யாது நின்றாயேல்
மெய்யின் வலிகள் மிகமழுங்கி—உய்யும்
வழியும் மறையும் வருவ தெளிந்து
தொழிலில் விரைக துணிந்து. (எ)

இ—ள்

செய்கின்ற தொழில்களை நீ செய்யாது நின்றால் உடல்வலி இழந்து உணர்வு ஒளி மழுங்கும்; உயிர் வாழ்வு தேய்ந்து போம் ஆதலால் தொழிலை விரைந்து செய்க என்பதாம்.

இது முயற்சியை மூண்டு செய் என்கின்றது.

உழைப்பே எவ்வழியும் செவ்விய பிழைப்பாய்ச் சிறந்துள்ளது. அதனைச் செய்து வந்த அளவே உய்தி நலங்கள் உளவாகின்றன. சீவ ஆதாரமாய்ச் செல்வங்களின் ஊற்றாய்க் கருமம் மருவியிருத்தலால் அதனை உரிமையோடு செய்து வருபவர் இருமையும் பெருமை பெறுகின்றனர். செய்யாது விடுகின்றவர் வெய்ய மடியராய் இழிந்து வையம் இகழப் படுகின்றனர்.

செய்யும் தொழில் என்றது செய்ய உரிய கருமம் என வினையாண்மையின் உரிமையும் உறுதியும் தெரிய வந்தது.

அறிவு இச்சை செயல் என்னும் இம் மூன்றும் மானிட சாதியிடம் இயல்பாய் மருவியுள்ளன. முதலில் ஒரு பொருளை அறிகின்றான்; அதன்பின் அதனை அடைய விரும்புகின்றான்; தான் விரும்பிய பொருளைப் பெறுதற்கு வேண்டிய முயற்சிகளைச் செய்கின்றான். அச் செயலே வினை கருமம் விதி என நின்று கருதிய பயன்களை உறுதியாக உதவி அருளுகின்றது.

தானே தொழில் செய்து அதன் வழியாக வருகின்ற ஊதியத்தைக் கண்டபொழுது ஒரு மனிதனுக்கு உண்டாகின்ற இன்பம் தனி மகிமை யுடையது. அரிய ஊற்றிலிருந்து வருகின்ற இனிய நீர் போல் உரிய முயற்சியிலிருந்து வருகிற பொருள் பெரிய ஆனந்தம் ஆகின்றது.

தொழிலில் பழகிச் சுவை கண்டபொழுது அந்த மனிதனிடம் ஒரு புதிய எழிலும் அதிசய ஆண்மையும் அறிவின் தெளிவும் ஒளி வீசி உலாவுகின்றன. தான் பிறந்த நாட்டிற்கு அவன் ஓர் சிறந்த மனிதனாய் உயர்ந்து திகழ்கின்றான். அவனோடு பழகியவரும் தொழில்களில் முயன்று விழுமிய நிலைகளை அடைய நேர்கின்றனர். ஒரு கரும வீரனால் பல பெருமைகள் உளவாகின்றன.

வினையாண்மைகளில் ஊன்றி முனைந்து நீண்டு வருகின்ற மக்களை எந்த நாடு வளமாகப் பெற்றிருக்கின்றதோ அந்த நாடே எல்லாச் செல்வங்களிலும் சிறந்து யாண்டும் உயர்ந்து விளங்குகின்றது.

"Industrious habits in each bosom reign,
And industry begets a love of gain." (Traveller)

"தொழில் முறைகள் எல்லாருடைய இதயங்களிலும் குடிகொண்டிருந்தன; பொருள் ஊதியத்தில் யாவருக்கும் ஓர் ஆவலை அவை விளைத்து நின்றன" என ஹாலந்து தேசத்து மக்களைக் குறித்து இங்ஙனம் உரைத்துள்ளனர். உழைப்பாளிகளையுடைய தேசம் என்றும் உயர்ந்த மதிப்பை அடைந்து கொள்கின்றது.

உயர்ச்சி எல்லாம் முயற்சியில் உள்ளன.

உள்ளம் துணிந்தே உறுதி யுடன்முயன்றார்
வெள்ளம் துணிந்தபொருள் மேவுகின்றார்—உள்ளம்
மடிந்திருப்பார் ஆயின் அம் மாக்கள் குடியும்
இடிந்திருக்கு மன்றே இழிந்து.

செயல் இழந்த போதே மனிதன் உயர் விழந்து ஈனம் அடைகின்றான். முயல முயல உயர்வும் ஒளியும் உளவாகின்றன. அயர அயர இழிவுகளும் துயரங்களும் நிறைகின்றன.

தொழிலில் விரைக துணிந்து,

என்றது உழைப்பின் உரிமை உணர வந்தது.

எந்தத் தொழிலும் பழகினால் அன்றி யார்க்கும் அது எளிதில் அமையாது; பழகப் பழக எதுவும் எளிமையாய் இனிமை புரிந்து வரும். மனிதன் பழகிக் கொண்ட அளவே தொழிலில் உயர்ந்து கரும வீரனாய்ப் பெருமை பெற்று நிற்கின்றான்.

நல்ல தொழிலாளி என்று பெயர் எடுப்பது ஒரு மனிதனுக்குச் சிறந்த புகழாம். தன் உழைப்பும் ஊதியமும் பலர்க்கும் பயன்பட்டு வருதலால் உழைப்பாளி உயர்ந்த புண்ணியங்களை அடைந்து சிறந்த கண்ணியங்களைக் கண்டு உய்தி பெறுகின்றான்.

உரிமையுடன் செய்கின்ற கருமங்கள் யாவும் தருமங்களாய்த் தழைத்து வருகின்றன; வரவே அவ் வினையாளன் நினையாமலே எல்லா உறுதி நலங்களையும் எளிதே மருவி மகிழ்கின்றான்.

சிறந்த ஞானிகளும் கருமங்களைக் கைவிடாமல் செய்து வந்திருத்தலால் உலக வாழ்வுக்கும் தொழிலுக்கும் உள்ள உரிமையும் உறவும் தெளிவாக உணர்ந்து கொள்ளலாம்.

கர்மணைவ ஹி ஸம்ஸித்திம் ஆஸ்திதா ஜநகாதய;
லோகஸங்கரஹமேவாபி ஸம்பச்யந் கர்துமர்ஹஸி. (கீதை, 3-20

"ஜனக மன்னன் முதலிய ஞானிகளும் கருமங்களைச்செய்தே சித்தியை அடைந்துள்ளனர்; அதனை உணர்ந்து நீயும் உன் தொழிலை உலக நன்மையின் பொருட்டுச் செய்க" என அருச்சுனனை நோக்கிக் கண்ணன் இவ்வாறு கூறியிருக்கிறான்.

கரும பூமியாகிய இவ் வுலகில் பிறந்துள்ள மனிதன் தனக்கு உரிய ஒரு தொழிலைச் செய்தே தீர வேண்டும்; அங்ஙனம் செய்த போதுதான் பிறவியின் பயனை ஓரளவு அவன் எய்தினவன் ஆகின்றான். பொன்னும் புகழும் வினையில் மன்னி எழுகின்றன.

தன் கடமையைக் கருத்து ஊன்றிச் செய்தவனுக்கே கடவுள் தன் உடைமையை உவந்து அளிக்கின்றார்; பாடுபட்ட அளவே கூலி வருகின்றது. பாட்டாளி தேட்டாளியாய்ச் சிறந்து தன் நாட்டுக்கு நலம் பல செய்கின்றான்.

மானிடன் ஒருவன் தனக்கரும் செல்வம்
வாய்க்க என்று அனுதினம் முயற்சி
தானுஞற்றுவனேல் கடவுளும் அதனைத்
தந்தளிக்குவன்; அதால் அன்றோ
ஆனபே ரறிஞர் திருவினை முயற்சி
ஆக்கும்; அம் முயற்சியில்லாமை
ஈனமார் இன்மை புகுத்திடுமாலென்று
யாரும் நன் குணர்தர நவில்வார்.
(குசேலோபாக்கியானம்)

முயற்சியின் மூலமாகவே தெய்வம் மனிதனுக்குக் கருணை புரிகின்றது என இஃது உணர்த்தியுள்ளது. செல்வம் புகழ் தெய்வத் திருவருள் முதலிய எல்லா நன்மைகளும் கருமத்தால் வருகின்றன. அந்த மருமத்தை யுணர்ந்து உரிமையோடு தொழில் புரிந்து இருமையும் பெருமையாய் இன்பம் பெறுக.

---

468 மானுடங்கள் யாவும் மருவு பசியுடைய
ஊனுடம்பு தாங்கி உறுதலால்—மானமுடன்
உண்டு மகிழ உரிய தொழிலொன்றைக்
கண்டு புரிதல் கடன். (அ)

இ—ள்

இயல்பாகவே பசி தாகங்களையுடைய ஊன் உடம்புகளை மானிடர்கள் பெற்றிருக்கின்றனர்; அங்ஙனம் உற்றவர் சுகமாய் உண்டு வாழும்படி உரிய தொழில்களைக் கண்டுகொள்ளவேண்டும்.

இது தொழிலின் உரிமையை உணர்த்துகின்றது.

மனித வாழ்வு பல அல்லல்களையுடையது. எல்லா வழிகளிலும் இடர்கள் சூழ்ந்துள்ளன. கடலில் அலைகள் மோதுதல்போல் பிறவிக் கடலில் துயர்கள் மோதிக் கொண்டே யிருக்கின்றன. துன்பங்களைக் கடந்து வருவதிலேயே மனிதன் இன்பங்களை அடைந்து வருகிறான். உள்ளே பசித்தீ நிலையாகப் பற்றி எரிந்து கொண்டேயிருக்கின்றது; அதனைத் தணித்து வாழ்வதே தணியாத பாடாய்த் தழைத்து நிற்கின்றது.

மானுடங்கள் யாவும் மருவு பசியுடைய.

என்றது இந்த மனித வாழ்க்கையின் நிலைமையை நுனுகி நோக்க வந்தது. பசி என்னும் சொல் புசி என்பதை நினைவுறுத்தி அதன் நீர்மையைத் துலக்கியுள்ளது.

பசி தீர உண்டு வாழ வேண்டிய வகையில் வாழ்வு அமைந்திருத்தலால் நாளும் மனிதன் உழைக்க வேண்டியவனாய் உரிமை கொண்டுள்ளான். உழையாமல் உண்பது பிழை ஆகின்றது. நெற்றியில் வியர்வை தோன்ற எவன் உழைக்கின்றானோ அவனே உண்ண உரியவன்; அங்ஙனமின்றி வீணே சோம்பேறியாய்த் திரிந்து விட்டு உண்ணவரின் அவன் உலக சமுதாயத்தின் நிலையைக் குலைத்தவன் ஆகின்றான்.

பிறர் உழைப்பால் வருவதைத் தான் யாதும் உழையாமல் நுழைந்து உண்ணுவது ஈனம் ஆதலால் அதனை மானமுடையவர் வெறுத்து இகழ்ந்து விடுகின்றனர்.

எவ்வழியும் உழைத்து உண்பதே திவ்விய போகமாய்ச் செழித்து வருகின்றது. அவ்வாறு உண்பவனே உலகத்திற்கு நன்மை செய்யும் நண்பன் ஆய் நலம் பல புரிகின்றான்.

"In the sweat of thy face thou shalt eat bread."

"உன் நெற்றி வேர்வையில் நீ உண்பாயாக" என மேல் நாட்டில் இப்படி ஒரு முதுமொழி மதிதெளிய வெளிவந்துள்ளது.

உழைத்து உண்ணும் உணவே கண்ணியம் ஆனது என்று யாவரும் எண்ணியிருத்தலால் அதன் மதிப்பும் மாண்பும் உணர்ந்து கொள்ளலாம். கருமம் வாழ்வின் தருமமாயது.

உணவு உழைப்பால் வருதலால் அதனை உண்ண உரியவன் தொழில் பண்ணவுரிய கடமையை மருவினன்.

"Everybody that eats ought to assist in procuring food"

"உண்ணுகின்ற ஒவ்வொருவரும் உணவைப் பெறுவதில் துணை புரிய வேண்டும்" என்னும் இது ஈண்டு உணரவுரியது. பார்லோ (Barlow) என்ற மேல்நாட்டு ஆசிரியர் தம்முடைய மாணுக்கருக்கு இவ்வாறு ஒருமுறை புத்தி போதித்திருக்கிறார்.

மனிதன் உணவால் உயிர் வாழ்கின்றான்; அது தொழிலால் உளவாகின்றது; ஆகவே தொழில் சீவ ஆதாரமாய் மேவியுள்ளமை தெளிவாதலால் அதனைச் செய்து வருபவன் சீவ கோடிகளுக்கு இதம் செய்தவன் ஆகின்றான்.

அந்நாத் பவந்தி பூதாநி பர்ஜந்யாத் அந்நசம்பவ:
யஜ்ஞாத் பவதி பர்ஜந்யோ யஜ்ஞ: கர்மஸமுத்பவ: (கீதை, 3-14)

"உயிர்கள் அன்னத்தால் வாழுகின்றன; அன்னம் மழையால் உண்டாகின்றது; மழை தருமத்தால் வருகிறது; தருமம் கருமத்தால் அமைகின்றது" என்னும் இது இங்கே கருதத் தக்கது. காரண காரிய நிலைகள் பூரண வுரிமைகளையுடையன.

எப்படியும் ஏதாவது ஒரு தொழிலை மனிதன் செய்து வர வேண்டும் எனக் கண்ணபிரான் கீதையில் வலியுறுத்தியிருக்கிறார்.

கர்ம யோகம் என ஒரு அத்தியாயம் தனியே அமைத்திருத்தலால் தொழிலின் மகிமையை உலகம் தெளிய அவர் உணர்த்தியுள்ளமை உணரலாகும்.

உண்டு மகிழ உரிய தொழில் ஒன்றைக்
கண்டு புரிதல் கடன்.

தொழில் செய்யும் கடமையில் மனிதன் மருவியுள்ளமையால் அதனை உரிமையுடன் அவன் செய்து வர வேண்டும் என்பதைக் காரணத்தோடு இது காட்டி நின்றது. உணவில் உணர்வு காண்பது உயர் மகிமை ஆகின்றது.

மானமுடன் உண்டு மகிழ என்றது உண்ணும் உணவின் உண்மையை நுண்மையாக உணர்ந்து கொள்ள வந்தது. பிறரை எதிர்பாராமல் தான் உழைத்துத் தழைத்து வருதலிலேயே மதிப்புகள் கிளைத்து வருகின்றன. ஆள் வினையில் மூளும் ஆண்மையே நாளும் மேன்மையாம்.

தொழில்கள் பல உள்ளன; அவற்றுள் சீவ ஆதாரமானது உழவுத் தொழிலேயாம். உயிர் அமுதம் ஆகிய உணவுகளை உளவாக்கியருளுதலால் உழவு யாண்டும் உயர் நிலையில் ஓங்கியுள்ளது.

சுழன்றும்ஏர்ப் பின்னது உலகம்; அதனால்
உழந்தும் உழவே தலை. (குறள், 1031)

எவ்வழியும் உழவே தலைசிறந்த தொழில் என நாயனார் இங்ஙனம் நிலை நாட்டியுள்ளார். உழந்தும் என்றது மாடும் மனிதனும் அதில் பாடுபட்டு வரும் பீடு தெரிய வந்தது.

வருந்தி முயன்ற அளவே நிலம் பயன் அருளி வருதலால் அந்தக் கருமத்தின் வழி வருவது தருமமாய்த் தழைத்து நின்றது.

"உலகில் நிலவும் தொழில்கள் பலவினும்
பயிர்த் தொழில் ஒன்றே உயிர்த்தொழில்"

என உழவினை இங்ஙனம் புகழ்ந்து கூறியது உயிரினங்கள் அதனால் உளவாகி வருதல் கருதி. முன்னாளில் இத் தொழில் இந் நாட்டில் மிகவும் உன்னத நிலையில் ஓங்கியிருந்தது.

உரம் உழவு பருவம் பக்குவம் முதலிய கருமங்களில் எவரும் கைதேர்ந்து நின்றனர். எங்கும் விளைவுகள் பொங்கி எழுந்தன.

ஏருச் செய்வது இனத்தான் செய்யான்.
கலப்பை கண்டான் கலப்பை கொண்டான்.
அகல உழுவதினும் ஆழ உழு.
உழவின் அளவே விழவும் விளைவும்.
சித்திரை மாதத்தின் உழவு பத்தரை மாற்றுத் தங்கம்,
ஆடிப் பட்டம் தேடி விதை
கட்டும் காவலும் பெட்டிப் பொருள்கள்.
மண்ணைத் திருத்தி மதியோடு உண்ணுக.

என இன்னவாறு வரும் பழமொழிகள் எல்லாம் முன்னம் இங்கே உழவு இருந்த நிலைமையை உணர்த்தியுள்ளன.

கோசலம் விராய்க்குளம் பழுந்திச் சேறதாய்
மாசென வழித்தெறிந்து உலர்ந்த ஆப்பியும்
பூசலோடு உழவர்கள் போதர்வார் பழி
ஆசிலார்க்கு அடுப்பினும் ஆய்ந்துளோர் விடார்.

(தணிகைப்புராணம்)

நட்டதோர் குழுவினை நடாதது ஓர்குழு
ஒட்டலர் போல நின்று ஒறுத்தல் உன்னியே
அட்டனர் ஆமென அடாத வான்களை
கட்டனர் வேற்றுமை உணரும் காட்சியார், (1)

ஏயின செயல் எலாம் இயற்றி வேறு வேறு
ஆயிடை வேண்டுவது அமைய ஆற்றியே
மாயிரும் புவிமிசை மகவைப் போற்றிடும்
தாய்என வளர்த்தனர் சாலி யீட்டமே. (கந்த புராணம்)

வரம்புவயற் செந்நெலுக்கு வாழ்வேலி வான்கரும்பு;
கரும்பினுக்கு நறுங்கதலி; கதலிகட்குக் கமுகவனம்;
அருங்கமுகுக்கு உயர்தாழை அணிவேலி; அதன்புறத்துக்
குரம்பையுடை நீர்க்கரும்பும் கொங்குவளை செங்குவளை.

கொல்லைவாய் ஏனலுக்குப் பொன்கொழிப்பர் குறமகளிர்;
நெல்லில் ஆரம்கொழிப்பர் நீலவிழிக் கடைசியர்கள்;
மெல்லியலார் பால்அளப்ப மீன்அளப்பர் நுளைமாதர்;
முல்லையார் மோர்அளப்ப முத்து அளப்பர் அளத்தியரே.

(திருக் குற்றாலத் தல புராணம்)

பயிர்த்தொழிலின் பழங்கால வழக்கங்களைக் குறித்து இங்ஙனம் பாடல்கள் பல விளைந்திருக்கின்றன. அரிய பல காட்சிகளைக்

கவிகள் சுவையாகக் காட்டியுள்ளன. ஆவின் சாணம் கீழே இழிந்து சிதைந்து கிடந்தாலும் உழவர்கள் அதனை ஆவலோடு வாரிப் போவர் என்றது உரம் சேர்ப்பதில் அவர் கொண்டிருந்த ஊக்கமும் உறுதியும் உணர வந்தது. ஆப்பி = சாணம்.

நட்டகுழு என்றது பயிர்களை; நடாதகுழு என்றது களைகளை; வயல்களில் நிகழ்ந்த தொழில்களையும் வளங்களையும் உளம் களி கூர்ந்து காண்கின்றோம். இவ்வாறு எவ்வழியும் உயர்ந்து யாண்டும் செழித்திருந்த தொழில் ஈண்டு இன்று இழி நிலையில் உள்ளது.

உள்ள நிலத்தை உரஞ்செய்து நன்குழுது
வெள்ளம் எனவிளைவை மேவாமல்—உள்ளுவந்து
மேலும் நிலமுறவே வேண்டல் மிகுநீர் ஒண்
பாலுறழ்ந்த பாடே படும்.

சுருங்கிய நிலத்தில் மிகுந்த விளைவுகளை விளைத்துக் கொள்ளாமல் நில விரிவை விழைந்து உழவர் நிலை குலைந்து படுகலை இது விளக்கியுள்ளது. கருதிச் செய்யாத கருமம் விருதாவாய் விளிந்து படுகின்றது. கூர்ந்து ஓர்ந்து செய்யின் ஆர்ந்த பயன்களமைகின்றன.

முன்னே நாலுகால் மாடு போகின்றது; பின்னே இரண்டு கால் கூடு போகின்றது என்றபடி வினை குருட்டுப் பாடுபடாமல் யாண்டும் விழிப்போடு மதியைச் செலுத்தி மாண்பயன் பெற வேண்டும். வினை நலம் நாடி வியனிலை தேடுக.

உயிரினங்களை ஊட்டி உலகத்தை இயக்கி வருதலால் உழுந் தொழில் என்றும் உயர்ந்த நிலையில் ஒளி செய்துள்ளது.

## உழவும் உலகமும்.

உடலெடுத்த உயிர்களெலாம் உணவுகளால்
உளவாகி உலாவுகின்ற
அடலெடுத்த படைவீரர் அரசாளும்
அதிவீரர் அரிய ஞான
மிடலெடுத்த மெய்வீரர் மேலான
கொடைவீரர் மேலோர் யாரும்
குடலெடுத்த பசியெடுக்கக் கோலங்கள்
பல எடுத்தே குலாவுகின்றார். (1)

உண்ணுகின்ற உணவுகளால் உயிர்களுள;
அவ்வுணவு உழவன் கைகள்
பண்ணுகின்ற பயிர்களிலே பரவியுள:
ஆதலினால் பாரில் யாரும்
எண்ணுகின்ற தொழில்களெல்லாம் ஏருடையான்
தொழில் எதிரே இரவி முன்னே
நண்ணுகின்ற ஒளிகளென நாணிஒளி
யிழந்தயலே நடந்து போமே. (2)

வில்வீரர் வாள்வீரர் வேல்எடுத்துப்
போர் தொடுக்கும் வெற்றி வீரர்
மல்வீரர் சொல்வீரர் மதிவீரர்
கதிவீரர் மதித்து மேலே
சொல்வீரர் எல்லாரும் சோராமல்
சோறழித்துத் தொடர்ந்து நின்று
ஒல்வீரர் ஆக்கியிந்த உலகத்தைக்
காத்து நிற்போர் உழவரன்றே. (3)

கடலோடி மலையேறிக் கான்கடந்து
வான்பறந்து கருதிச் சூழ்ந்து
மிடலோடு பொன்பொருளை மிகத்தேடி
வந்தவரும் மேவிநின்ற
உடலோடும் உயிர்வாழ உழவனருள்
உணவின்றேல் உய்தியுண்டோ?
அடலோடும் அறத்தோடும் அவனியெலாம்
வாழ்வதவன் அருளால் அம்மா! (4)

கைத்தொழிலைச் செய்தாலும் கலைஞானம்
கற்றாலும் கருதி ஓர்ந்து
சித்திரங்கள் புனைந்தாலும் திரைகடல் போய்
வாணிபங்கள் சிறக்கச் செய்து
ஒத்தபொருள் பெற்றாலும் உலகமெலாம்
ஆண்டாலும் உழவன் கையால்
வைத்தபொருள் இல்லையெனில் வையம்உய்ய
வழியுண்டோ வண்மை என்னே! (5)

உழவினால் உலகம் நிலை பெற்று வருதலை இக் கவிகள் உணர்த்தியுள்ளன. பொருளின் நயங்களையும் உண்மைகளையும் ஊன்றி உணர்ந்து உரிமைகளை ஓர்ந்து கொள்ள வேண்டும்.

நல்ல தொழிலை நாடிச் செய்க.

---

469. ஒருவன் உழைக்க உலகம் தழைக்கும்
அருவ நிலையை அறியின்—திருவின்
நிலையமாய் நின்று நிலவும் தொழிலின்
தலைமை தெரியும் தனி. (௯)

இ—ள்

இறைவன் ஒருவன் உழைத்து வர எல்லா உலகங்களும் தழைத்து வருகின்றன. ஆகவே தொழிலின் அருமை பெருமைகளை உணர்ந்து அதனை உரிமையோடு எவரும் செய்து வர வேண்டும் என்பதாம்.

ஊக்கம், உழைப்பு, உறுதி, முயற்சி என்னும் மொழிகள் சீவர்களுடைய உயர்ச்சி நிலைகளை உணர்த்தி வருகின்றன. கடலில் எழுகின்ற அலைகள் போல் எழுச்சிகளும் இயக்கங்களும் உடலின் இயற்கைகளாய் ஓங்கியுள்ளன. தொழிலில் இயங்கி வரும் அளவே மனிதனிடம் எழிலும் இன்பமும் விளங்கி வருகின்றன.

தொழில் செய்யவே மனிதன் தோன்றியுள்ளான் என்பதை அவனுடைய உடலுறுப்புக்கள் நன்கு உணர்த்தி நிற்கின்றன. உலகம் நடைபெற்று வருதலை ஓர்ந்து நோக்கின் உயிர்களின் இயல்புகளும் தொழில்களின் தொடர்புகளும் வழி முறைகளும் தெளிவாகத் தேர்ந்து கொள்ளலாம்.

உலகம் எப்பொழுதும் சுழன்று கொண்டே யிருக்கின்றது. இயற்கை என்றும் அதிசய நிலையில் இயங்கி வருகின்றது அதன் கதி வேகங்கள் மதியூகங்களாய் மருவி மிளிர்கின்றன.

கதிரவன் உதயமாய் ஒளி செய்கின்றான்; காற்று வீசுகின்றது; கடல் ஒலிக்கின்றது. எல்லாம் இயற்கை நியமங்களாய் யாண்டும் இயங்கிச் செயற்கை நிலைகளை விளக்கி வருகின்றன.

படைத்தல் காத்தல் அழித்தல் என்னும் மூன்று தொழில்களையும் கடவுள் இடையறாது செய்து வருதலை உலக நடையால் நாம் ஓர்ந்து வருகின்றோம்.

கடவுளை இங்கே ஒருவன் என்றது எங்கும் என்றும் தனி முதல் தலைவனாய் நின்று வருதல் கருதி. இறைவன் ஏகன் ஆய் நின்று சீவ கோடிகளையும் அண்ட கோடிகளையும் இயக்கியருளுகின்றான். அவன் ஆட்ட உலகம் ஆடி வருதலால் நாடகத்தொழிலன் எனப் பாடல் மிகப் பெற்றான்.

முத்தொழிலின் வினைமுதல் நீ; மூவர்க்கும் முழுமுதல் நீ;
எத்தொழிலும் இறந்தோய் நீ; இறவாத தொழிலினை நீ.
(சிதம்பரச் செய்யுட் கோவை)

கடவுள் என்றும் உயர்ந்த தொழிலாளி என்பதை இங்கே உணர்ந்து கொள்கின்றோம். யாதொரு குறையுமின்றி எல்லாம் நிறைந்துள்ள ஆண்டவனே இவ்வாறு தொழில் செய்து வருதலால் தொழிலுக்கும் உலகிற்கும் உள்ள உறவுரிமை யுணரலாகும்.

ஒருவன் உழைக்க உலகம் தழைக்கும்.

என்றது இவ்வுலகம் யாதும் நிலை குலையாமல் யாண்டும் வளமாய்ச் செழித்து வரும் நிலைமை தெரிய வந்தது.

அருவமான பரமனே தொழில் செய்யும் பொழுது உருவமுடைய உயிரினங்கள் எவ்வளவு உரிமையோடு கருமங்களைச் செய்யக் கடமைப் பட்டுள்ளன! என்பதை உறுதியுடன் ஓர்ந்து கொள்ள வேண்டும்.

"நமே பார்த்தாஸ்தி கர்த்வ்யம் த்ரிஷு லோகேஷு கிஞ்சந
நாநவாப்தம் அவாப்தவ்யம் வர்த்த ஏவ ச கர்மணி."
(கீதை, 322)

"அருச்சுன! எனக்கு மூன்று உலகங்களிலும் யாதொரு கடமையும் இல்லை. எல்லாச் செல்வங்களையும் பெற்றுள்ளேன்; எனினும் தொழிலை நான் உரிமையோடு புரிகின்றேன்" எனக் கண்ணன் இவ்வண்ணம் விசயனிடம் கூறியுள்ளார்.

தனக்கு உரிய கருமத்தை விசயன் உறுதியாகச் செய்ய வேண்டும் என்று கருதி அவனுக்கு இவர் யுத்திகளை விரித்துக் காட்டிப் புத்தி போதித்து வரும் நிலை உய்த்துணரத் தக்கது.

கருமத்தைக் கைவிடின் அவன் தருமத்தை இழந்தவனாய்த் தாழ்ந்து படுகின்றான். அரசனாய்ப் பெரிய திருவினை அடைந்திருந்தாலும் அவனும் உரிய தொழிலைச் செய்து வர வேண்டும்; செய்யாமல் சோம்பியிருந்தால் தன பதவியை இழந்து அவன் பாழ்பட நேர்கின்றான். செயல் விளைந்து வரும் அளவே பயன் வளர்ந்து வருகின்றது.

திருவின் நிலையம்.

என்றது தொழில் இலட்சுமிக்கு உறைவிடம் என்னும் உண்மையை உணர்ந்து கொள்ள வந்தது. செல்வத்தை எல்லாரும்

விரும்புகின்றனர்; ஆனால் அது விரும்பி ஒளிந்திருக்கும் இடத்தைத் தெளிவாக அறிந்து கொள்ளாமையால் கருதிய பலன் கைகூடாமல் வறிதே அலைந்து திரிகின்றனர்.

நல்ல தொழிலைக் கைக்கொண்டு அதனைக் கண்ணும் கருத்துமாய்ச் செய்துவரின் அவனிடம் எல்லாச் செல்வங்களும் கண்ணோடி வந்து சேர்கின்றன. கரும வீரன் தரும வீரனாய் வருதலால் அவனிடம் அரிய மகிமைகள் பெருகி நிறைகின்றன.

ஊக்கி உழைப்பவனுக்கே தெய்வம் பாக்கியங்களைக் கொடுத்து எவ்வழியும் செவ்வையாகப் பாராட்டி வருகின்றது.

"His hidden meaning lies in our endeavours;
Our ualours are our best Gods." [Bonduca]

"கடவுள் கருணை நம்முடைய முயற்சிகளில் இருக்கிறது; நம் வினையாண்மைகளே நமது மேலான தெய்வங்களாம்" என்னும் இது இங்கே அறியவுரியது. (Fletcher) பிளேச்சர் என்ற மேல் நாட்டுக் கவிஞர் இங்ஙனம் கூறியிருக்கிறார். இதனால் மனிதனுடைய உறுதி ஊக்கங்களையும் தொழில் முயற்சிகளையும் குறித்து அவர் கருதியுள்ள உண்மை தெரியலாகும்.

திருவின் நிலையமாய், தெய்வத்தின் உருவமாய்த் தொழில் மருவியுள்ளது; அதனை உரிமையோடு தழுவி உயர் நலம் பெறுக.

---

470. மனித உலகம் மதிப்புறுவ தெல்லாம்
இனிய தொழிலின் இயல்பால்—மனிதன்தான்
செய்யும் தொழிலளவே சீர்மை மழைமுகில்நீர்
பெய்யும் அளவே பெறும். (ம)

இ—ள்

மனித உலகம் மதிப்பாய் மாண்புறுவது எல்லாம் இனிய தொழிலின் இயல்பினாலேயாம்; மழை பெய்யும் மேகங்கள் மேன்மையுறுகின்றன; அவ்வாறே தான் செய்யும் தொழிலின் அளவே எவனும் சீர்மை பெறுகின்றான் என்க.

கடவுளும் ஒரு தொழிலாளியாய் நின்று ஒழியாமல் வேலை செய்து வருகிறார்; மனிதன் அதனைச் செய்த போதுதான் புனிதமுடையனாய் இனிய பயனை அடைகின்றான். செய்யாது நின்றால்,

வையம் அவனை வைய நேர்கின்றது; தெய்வ கோபமும் சேர்கின்றது. வெய்ய துயரங்கள் விளைந்து விடுகின்றன.

உண்ணுகின்ற எவனும் உழைக்க வேண்டும் என்பது இயற்கை நியமம். இந்த விதியை மீறி உண்டு வருகின்றவன் முடிவில் கரும தேவதை முன்னிலையில் உறுதியாகத் தண்டனைக்கு வருகின்றான். உறுவதை உணர்ந்து உயிர் வாழ்வு புரிக.

நாளும் நாம் உண்ணுகின்றோம்; அவ்வுணவு எங்கிருந்து வருப? எப்படிக் கிடைக்கும்? எவ்வாறு பெறுகின்றோம்? இவ்வாறு ஒவ்வொருவரும் சிறிது உசாவ நேர்ந்தால் உழைக்க வேண்டிய கடமையையும் உரிமையையும் உணர்ந்து கொள்வர்.

உழைக்கும் ஒருவனே உண்ண உரியன்;
அழைக்கும் அவனை அறமும்—பிழைக்கும்
வழிதெரிந்து வாழ்வதே வாழ்வாம்; வழுவின்
பழிவிரிந்து பாபம் படும்.

இதனை விழி திறந்து நோக்கிப் பொருளமைதிகளை உரிமையோடு உணர்ந்து கொள்ள வேண்டும். உழையாமல் உண்பது பழியாய் வருதலால் அவ்வழியில் இழிவது அழிவாகின்றது. தன் கடமையை உணர்ந்து செய்கின்ற மனிதன் புனிதனாய் உயர்ந்து கொள்கின்றான்; உணராமல் மடிந்திருப்பவன் பழியனாய் இழிந்து கழிகின்றான். செயல்கள் ஒழியின் மயல்கள் விளைகின்றன.

கண்கள் காண்கின்றன; காதுகள் கேட்கின்றன; கால்கள் நடக்கின்றன; கைகள் வேலை செய்கின்றன. தத்தமக்குரிய தொழில்களை இவ்வாறு செய்து வந்த போதுதான் உறுப்புக்கள் சிறப்பும் சீர்மையும் தெளிவும் தேசும் பெறுகின்றன. செய்யாது நின்றால் குருடு செவிடு நொண்டி முடம் என அவை இழிந்து படுகின்றன.

தனக்கு உரிய கடமையைக் கருதிச் செய்த அளவுதான் மனிதன் மதிப்பும் மாண்பும் பெறுகின்றான். செய்யாது ஒழியின் சீர்மை குலைந்து போகின்றான்.

பல கருவிகளும் உரிமையாகத் தொழில் செய்த போதுதான் ஒரு எந்திரசாலை அரிய பொருள்களை அற்புதமாக விளைத்து அதிசய மகிமையோடு துதி செய்யப் பெறுகின்றது. அவ்வாறே மக்

களும் தத்தம் கடமையை உணர்ந்து ஒக்க நின்று தொழில் செய்து வரின் உலகம் உயர் வளங்கள் நிறைந்து ஒளி மிகுந்து விளங்கும்.

பாட்டாளி மக்களைக் கண்ட போதுதான் தன் பிள்ளைகள் என்று பூமிதேவி உள்ளம் உவந்து கொள்ளுகின்றாள்.

தச்சன் மரவேலை செய்கிறான், கொல்லன் இரும்பு வேலை புரிகின்றான், சிற்பி கல்வேலை செய்கின்றான், கன்னான் பாத்திரங்களை வார்க்கின்றான், சேணிகன் ஆடைகளை நெய்கின்றான், உழவன் உழுது பயிரிடுகின்றான் இன்னவாறு தொழிலாளர்கள் யாண்டும் உரிமையோடு ஊக்கி உழைத்து வருதலினாலேதான் இவ்வுலகம் பெருமையோடு செழித்து வருகின்றது.

உழைப்புகள் உலகை உயிர்ப்பித்து வருகின்றன.

தனக்கும் பிறர்க்கும் பயன்படும்படி தொழில்கள் தோய்ந்து வருதலால் அவை மனிதனுக்கு எவ்வழியும் இசையும் இன்பமும் ஈந்து வருகின்றன. சேவை பணி தொழில் தொண்டு என்பன பல பண்பாடுகளையுடையன. பயனுடைய செயல் மனிதனை நயனுடையனாக்கி வியனுறச் செய்கின்றது.

மேகம் மழை பெய்வதால் மேன்மை யுறுகின்றது.

மனிதன் தொழில் செய்வதால் மகிமை யுறுகின்றான்.

தொழில் செய்யாதவன் மழை பெய்யாத வறண்ட மேகம் போல் மதிப்பிழந்து போகின்றான். தொழிலாளியை மழை முகிலோடு ஒப்ப வைத்தது உலகம் நலம் உற உதவி வருதல் கருதி.

### மேகத்தின் நீர்மை.

"மாரி வழங்குதல் மாறாமே, கைம்மாறு
காரியம் என்று கருதாமே,—பாரில்
துளிக்கின்ற தண்ணந் துளியமுதம் நல்கி
அளிக்கின்ற கொண்மூ அரசே!—களிக்கின்ற
மேலுலகம் ஏறி விரிஞ்சன் நாமம் படைத்து
நாலு திசைமுகமும் நண்ணுதலால்,—மாலுமாய்
நீல நிறமாகி நின்றகமலக் கண்ணுகிக்
கோல வளையாழி கொள்கையால்—சூலம்
விரவிய பாணியாய் பின்னை இடம் தாங்கி
அரவம் அணியும் அழகால்—வரமளிக்கும்

எத்தே வருக்கும் இறைவராய் மேலாய
முத்தே வருசிகரா மூர்த்தியே!—மைத்தகன்ற
வானத்து ளேபிறந்து வானத்துளே தவழ்ந்து
வானத்து ளேவளரும் வானமே!—வானத்து
வேலைவாய் நீர்அருந்தி வெற்பில் அரசிருந்து
சோலைவாய்க் கண்படுக்கும் தோன்றலே!—ஞாலமிசைத்
தானமும் மெய்யும் தருமமும் கல்வியும்
மானமும் தானமும் மாதவமும்—நானக்
கருங்கொண்டை மங்கையர்தம் கற்பும் நிலைநிற்பது
அருங்கொண்டலே உனைக்கொண்டன்றோ - நெருங்கும்உவர்
ஆழிநீர் துய்ய அமுதநீர் ஆனதுவும்
வாழிநீ யுண்ட வளமன்றோ—தாழுமடி
ஆவும் சிந்தாமணியும் அம்புயமும் சங்கமும்
காவும் பணியவுயர் கார்வேந்தே!" (மேகவிடுதூது)

மேகத்தின் பான்மை மேன்மைகளைக் குறித்து வந்திருக்கும் இந்தப் பாசுரம் இங்கே கூர்ந்து சிந்திக்கத் தக்கது. பல வகையிலும் பயன்பாடுடையதாய் உலகம் நலமுற உதவி வருதலால் மழை முகிலை விழுமிய அமுதம் என யாவரும் போற்றி வருகின்றனர். இனிய நீர்மைகள் எங்கும் இசை பெறுகின்றன.

உரிய தொழிலைச் செய்து வருகின்றவன் உலகிற்கு இனிய நீரனாய் இசைதலால் நீர் பொழியும் புயலோடு ஈண்டு நேர் எண்ண நேர்ந்தான். கருமம் மனிதனைத் தருமவான் ஆக்கிக் கதிகாணச் செய்கின்றது. கடமையை எவ்வழியும் கருதிச் செய்க.

---

### இவ் அதிகாரத்தின் தொகைக் குறிப்பு.

தொழில் உயிர் வாழ்க்கைக்குத் துணை.
அதனை உடையவர் உயர்ந்து திகழ்கின்றார்.
இழந்தவர் இழிந்து கவல்கின்றார்.
தொழிலால் உலகம் நடந்து வருகின்றது.
வினை செயல் அளவே வியனும் பயனும்.
உடலும் உணர்வும் உழைக்க உயரும்.
எவ்வழியும் தொழில் செய்ய வேண்டும்.
கருமம் புரியின் தருமம் விளையும்.
கடவுளும் தொழில் செய்கின்றார்.
உரிய தொழிலை உவந்து செய்க.

௪௭-வது தொழில் முற்றிற்று.

# நாற்பத்தெட்டாம் அதிகாரம்.

## சோம்பல்.

அஃதாவது யாதொரு முயற்சியும் செய்யாமல் அவமே அயர்ந்திருப்பது. தொழிலின் உயர்வை முன்னர் அறிந்தோம்; அதனை வழுவ விட்டு இழிவாய் மடிமண்டி யிருக்கும் பழிநிலையை உணர்த்துகின்றமையால் அதன்பின் இது வைக்கப்பட்டது.

471. உண்ண உணவும் உடுக்க உடையுமயல்
பண்ண அமர்ந்து படிந்துண்டு—திண்ணமுடன்
ஓர்தொழிலும் செய்யாமல் உள்ளம் மடிந்திருத்தல்
பாரிழவே யாகும் பழி. (க)

இ—ள்

தமக்கு உரிய உணவும் உடையும் பிறர் உழைப்பால் வர அவற்றை உண்டு உடுத்து ஒரு தொழிலும் செய்யாமல் சோம்பி யிருப்பவர் இவ் வுலகிற்குப் பெரிய பாரம் ஆவர் என்பதாம்.

இது சோம்பல் தீப்பு என்கின்றது.

எண்ணமும் பேச்சும் செயலும் மானிட உரிமைகளாய் மருவியுள்ளன. சிலர் எண்ணத்தால் வாழுகின்றனர்; சிலர் பேச்சால் வாழுகின்றனர்; பலர் செயலால் வாழுகின்றனர். இவை யாவும் நல்ல முறையில் தொழிற்படும்போது நலம் பல காண்கின்றன.

தம்முடைய சீவிய வாழ்வை நடத்தச் சீவ கோடிகள் எவ் வழியும் உழைத்தே வருகின்றன. அந்த உழைப்புகள் பல வகைகளாய் விசித்திர நிலைகளில் விரிந்து நிற்கின்றன.

மனிதன் பிறந்துள்ள இந்த உலகத்திற்குக் கரும பூமி என்று பெயர். உழைத்து வாழவே அவன் இங்கே வந்துள்ளான் என்பதை இப் பெயர் நன்கு உணர்த்தியுள்ளது.

தன்னிடம் தோன்றினவன் தனக்கு உரிய கருமத்தைச் செய்யவில்லையானால் அவனை அன்னியனாக வெறுத்து இவ் வுலகம் அவனுக்கு இன்னல் பல விளைத்து இழித்து விடுகின்றது.

தினமும் உண்ணும் இயல்பில் மனிதன் தோன்றியிருப்பது நாளும் அவன் உழைக்க உரியவன் என்பதை உணர்த்தி நிற்கின்றது.

உணவும் உடையும் மனிதனுக்கு உயிரும் உடலும் போல் தொடர்புற்றிருக்கின்றன. அவை உழைப்பால் வருகின்றன. அந்த உழைப்புகளை நேரே செய்யாது போயினும் வேறே எவ்வகையி லாவது அவன் செய்ய வேண்டும். அவ்வாறு செய்யவில்லையானல் அவன் பெரிய கடனாளி ஆகின்றான். உரிய கடமையை இழந்து விட்டு நெடியகடனாளியாய் இழிந்து படுவது கொடிய மடமையாம்.

தான் பாடுபடாமல் இருந்து கொண்டு பிறர்பாட்டால் வரு வதை ஓடி உண்பது பெரிய கேடு ஆதலால் அந்தக் கேட்டாளன் பாட்டாளி மக்களுக்குப் படு ஊழியனாய் முடிகின்றான். முடிவை உணராமல் மூடக் களிப்பு மூடி நிற்கின்றது.

ஓர்தொழிலும் செய்யாமல் உள்ளம் மடிந்திருத்தல்
பாரிழவே ஆகும் பழி.

ஒரு தொழிலும் செய்யாமல் இருப்பவனைப் பல இழிவுகள் பற்றிக்கொள்கின்றன. அந்தப் படுகுழிகளிலிருந்து வெளி வர இயலாமல் அவன் விளிந்தே போகின்றான்.

சோம்பல் உள்ளத்தில் புகுந்தவுடனே உணர்வும் உயிரும் ஒளியிழந்து போகின்றன. போகவே பழி வழிகளில் புகுந்து சோம்பேறி பாழ்பட நேர்கின்றான். மடியின் வழியாகவே எல் லாக் கேடுகளும் குடி புகுகின்றன.

"Idle man's brain is Satan's workshop."

"சோம்பேறியின் மூளை தீமையின் நிலைக்களம்" என இது குறித்துள்ளமையால் மடியால் விளையும் குடி கேடுகளைக் கூர்ந்து ஓர்ந்து கொள்ளலாம். உரிமைகள் ஒருவின் கொடுமைகள் மருவு கின்றன.

நல்ல தொழில்களில் செல்லாதபோது மனிதனுடைய மனம் பொல்லாத வழிகளில் போக நேர்கின்றது; நேரவே பழியும் பாவ மும் சேருகின்றன; சேரவே அவன் இழிவாய் அழிவுறுகின்றான்.

தானும் இழிந்து பிறர்க்கும் இடையூறாயிருத்தலால் மடியன் வாழ்வு உலகிற்குக் கொடிய கேடாய் மூண்டு நெடிய சுமையாய் நீண்டுள்ளது. மாண்டு மடிந்து போன சவங்களினும் மடியில் மூண்டுள்ளவர் ஈண்டுப் பெரிய அவங்களாய் நெடிது நீண்டுள்ளனர்.

ஊர்வம்புகள் பேசல், ஊமைக் குறும்புகள் காட்டல், கோள் மூட்டல், குத்திரங்களை நாட்டல், குரோதங்களை நீட்டல் முதலிய கொடிய புலைகள் எல்லாம் மடியர் வாயிலிருந்தே விளைந்து வருகின்றன. மடியன் கொடிய குடிகேடன் ஆகின்றான்.

ஒரு சோம்பேறி இருந்தால் அந்த ஊர் பாம்பேறிய புற்றைப் போல் பாழுடைய நேர்கின்றது. தன்னைப் பிடித்த சோம்பல் பிறரையும் பிடிக்கும்படி செய்து விடுதலால் சோம்பேறி ஒரு கொடிய தொத்து நோய் போல் சமுதாயத்திற்குத் துயரை விளைத்து வருகிறான் என அயர்லாந்து தேசத்து அறிஞர் ஒருவர் அரச சபையில் ஒருமுறை பேசியிருக்கிறார்.

வருவாய்க்குரிய துறைகளை விரித்துப் பொருள் வளங்களைப் பெருக்கி நாட்டை எல்லா வழிகளிலும் உயர்த்த வேண்டும் என்று ஊக்கியுணர்கின்ற அரசியல் நிபுணர்கள் சோம்பர்களை இழிந்த தீம்பர்களாகவே யாண்டும் எண்ணி இகழ்ந்துள்ளனர்.

வேலை செய்கின்ற தொழிலாளியிடம் ஒரு சோம்பேறி காலையில் வந்து சேரின் அன்று அவன் வேலை தொலைந்தது. வீண் பேச்சுகளைப் பேசித் தொழிலாளியின் கவனத்தைச் சிதைத்து விடுவன் ஆதலால் அவன் உழைப்பு ஒழிந்தது; பிழைப்பும் பிழையாயது. ஒரு மடியனால் பலர் மிடியர் ஆக நேர்கின்றனர்.

கொடியநோய் குட்டம் கொலைபுலையில் தீதே
மடியன் நிலைமை மதி.

பிறந்த நாட்டுக்குப் பெரும் பாரமா யிருத்தலால் மடியன் இருந்து வாழ்வதினும் இறந்து போவது நல்லதாயது.

சிறந்த மனிதனை இழிந்த நடைப்பிணமாக்கி எவரும் வெறுக்கும்படி பல வகையிலும் இழிவு செய்து வருதலால் அந்த ஈனச் சோம்பலை ஒழித்து யாண்டும் ஊக்கமும் உறுதியும் கொண்டு மேல்நோக்கி முயன்று ஆனவரையும் மானமுடன் வாழவேண்டும் என்பது கருத்து. சீர்மையுடைய வாழ்வு சிறப்படைகின்றது.

எண்ணி முயலும் இயலளவே எவ்வுயிரும்
கண்ணியம் காணும் கனிந்து.

சோம்பி நில்லாதே; துணிந்து முயன்று உயர்ந்து செல்லுக.

---

472. தந்தை முதலானோர் தாம்படைத்து வைத்த நிதி
எந்த அளவில் இருந்தாலும்—சொந்தமுடன்
தானே முயன்றுண் ணும் தன்மை யுடையானே
மான முடைய மகன். (உ)

இ—ள்

தன்னுடைய முன்னோர்கள் தேடிவைத்த பொருள்கள் எவ்வளவு நிறைந்திருந்தாலும் தானாகவே முயன்று வருகின்ற அவனே உயர்ந்த குலமகன் ஆவன் என்பதாம்.

இது உழைத்து உண்பதே உயர்வு என்கின்றது.

சோம்பி நில்லாதே; யாண்டும் ஊக்கி முயல் என்று சொல்லவே ஏழைகள் தாம் பாடுபட வேண்டும்; செல்வ வளம் உள்ளவர்கள் சும்மா இருந்து சுகமாக வாழலாம் என்பாரை நோக்கி இவ் வெண்பா வந்துள்ளது.

மானமும் ஞானமும் மனிதனுக்கு உயர்வையும் ஒளியையும் உதவியருளுகின்றன. உணர்ச்சியுடன் ஒழுகி வரும் அளவே மதிப்புகள் தழுவி வருகின்றன தன கடமையை உணர்ந்து செய்யாத பொழுது எவனும் மடமையாய் இழிந்து படுகின்றான். தேக யாத்திரையில் தெரிந்து நடந்து கொள்ள வேண்டிய உரிமைகள் பல செறிந்திருக்கின்றன. உரிய தெளிவு இனிய ஒளி ஆகின்றது.

தனக்குரிய கருமங்களை நாளும் கருதிச் செய்துவரின் அந்த மனிதனை நாடிப் பெருமையும் இன்பமும் ஓடி வருகின்றன.

முன்னோர் ஈட்டிய பொருள்கள் எவ்வளவு நிறைந்திருந்தாலும் தனக்கும் ஈட்டத்தெரியும் எனத் தன் ஆண்மையை உலகம் தெரியக் காட்டி ஒழுகும்போதுதான் அவன் சிறந்த குல மகனாய் உயர்ந்து விளங்குகின்றான்.

உரிய தந்தை வழி வந்தது ஆயினும் அப்பொருளும் ஓரளவு அன்னியமே. அது வீணே சிதைந்து போகாமல் பாதுகாத்து அறநெறிகளில் பயன்படும்படி ஆற்றி வருவதே ஏற்றமாகும்.

தந்தை உரிமையோடு தந்த பொருளுக்குத் தான் ஒரு தரும கருத்தாவே என்று எந்த மகன் கருதி ஒழுகுகின்றானோ அந்த மைந்தனைத் தரும தேவதையும் கரும தேவதையும் விழைந்து நோக்கி உவந்து கொள்ளுகின்றன; உதவிகள் செய்கின்றன.

தான் உழையாமல் இருந்து கொண்டு பிறர் உழைத்து வந்ததை உண்டு களிப்பவனை உலகம் இளிப்பாய்க் கண்டு பழிக்கின்றது. மான உணர்ச்சியின்றி உண்பது ஈன விலங்கின் செயலாய் இழிந்து படுகின்றது. ஓராத வாழ்வு தீராத தாழ்வாகின்றது.

உழை! உண்! என்னும் இந்த இரண்டு மொழிகளும் இயற்கை அன்னையின் இனிய ஏவல்களாய் என்றும் ஒலித்து வருகின்றன. உழைப்பவனே தனக்குரிய அருமைப் பிள்ளை என உலக மாதா அவனை உவந்து நோக்கி உள்ளம் களிக்கின்றாள்.

கருவிலே திருவுடைய அரசரும் உழைக்க வேண்டும் என்பதே இயற்கை விதி ஆதலால் உழைப்போடு மனிதனுக்கு அமைந்துள்ள உறவுரிமையை உணர்ந்து கொள்ள வேண்டும்.

இயற்றலும் ஈட்டலும் காத்தலும் காத்த
வகுத்தலும் வல்ல தரசு. (குறள் 385)

இத்தகைய செயல்களையுடையவனே உத்தம அரசன் என இந்நூல் உணர்த்தியுள்ளது. எவ்வளவோ செல்வங்கள் நிறைந்திருந்தாலும் அரசன் இவ்வாறு தொழில் செய்ய வேண்டியவனாகின்றான். இயற்றல் என்றது பொருள்கள் நிரந்தரமாய்ச் சுரந்து வருதற்குரிய வழிகளை உளவாக்கிக் கொள்ளுதல். தொழில் துறைகளில் அரசன் என்றும் விழிப்புடையனாய் இருக்க வேண்டும் என விதித்துள்ள நியமங்கள் நுனித்துணரத் தக்கன. பொருளை ஆக்கவும் தொகுக்கவும் காக்கவும் வகுக்கவும் வல்லவனே அரசன் என்றதனால் அவனது வன்மையும் தன்மையும் உண்மையும் ஓர்ந்து கொள்ள வந்தன. எல்லாப்போகங்களையும் உண்டு களித்து உல்லாசமாய் அரியணையில் வீற்றிருப்பதுதான் அரச பதவி என்று எண்ணாதே; இவ்வளவு கடமைகளைச் செவ்வையாகச் செய்வதே என அவனது தொழில் மாட்சிகள் காட்சிக்கு வந்துள்ளன. கரும நிலை அளவே பெருமைகள் நிலவுகின்றன.

தான் வருந்திச் சம்பாதித்த பொழுதுதான் பொருளின் அருமையை ஒருவன் நன்கு உணர்வான்; உணரவே உரிமையோடு பேணுவான்; அருமை பூணுவான்; பெருமையும் காணுவான்.

“தான்தேடாப் பொன்னுக்கு மாற்றும் இல்லை; உரையும் இல்லை” என்பது ஒரு பழமொழி. பல பொருள்களை அதி விநயமாய் இது விளக்கிக் கொண்டிருக்கின்றது.

தானாக உழைத்து ஈட்டாதவரே பொருள்களை வீணாகச் செலவு செய்ய நேர்கின்றனர். களவு கொள்ளைகளில் கவர்ந்தவற்றைக் கள்ளர்கள் கையாளுவது போல் பிதிரார்ச்சிதமாய் வந்த பொருள்களைப் பிள்ளைகள் செலவழிக்கின்றார். பொருளின் இயல்டையும் உழைப்பின் உயர்வையும் உணராமையால் செல்வைப் பிழை வழிகளில் பெருக்கிப் பழிகளை யீட்டிக் கொள்ளுகின்றனர்.

உழையாமல் சோம்பியிருக்கும் ஏழையினும் செல்வமுள்ள சோம்பேறி மிகவும் தீயவனாகின்றான். குடி கூத்தி பழிபாவங்கள் யாவும் அவனிடம் குடி கொண்டு நிற்கின்றன. ஏழை சோம்பியிருப்பதினும் செல்வன் சோம்பி யிருப்பது கொடிய தீமையாம்.

தொழில் செய்யாமல் இருப்பதிலேயே எல்லாப் பிழைகளும் வந்து ஏறுகின்றன. அந்தப் பொல்லாத நிலைமையை விழியூன்றி நோக்கி வழி தெரிந்து கொள்வது பழி நீங்கியபடியாம்.

தானே முயன்று உண்ணும் தன்மையுடையானே
மானம் உடைய மகன்.

நல்ல மனிதனின் இயல்பை இது உணர்த்தியுள்ளது.

முயலாமல் அயர்ந்து சோம்பேறியா யிருப்பது ஈனம் ஆதலால் முயன்று உண்பது மானம் என வந்தது.

உண்ண வேண்டிய உணவு நிலையையும் உயிர் வாழ்க்கை வகையையும் எண்ணி யுணர்ந்தவன் கண்ணியம் பெறுகின்றான்; எண்ணாது அயர்ந்தவன் மண்ணாயிழிகின்றான்.

ஆண்மையாளனாய்ப் பிறந்திருந்தும் வினை செயல் வகையை மறந்து மனம் மழுங்கியிருப்பதால் மனிதன் மாண்பிழந்து போகின்றான்; பொருள் இருந்தாலும் மருளுடையனாய் இருள் அடைந்து நிற்கின்றான். அந்த இழிவு நிலையை விழி தெரியாமையால் தானும் ஒரு பெரியவனாகவே கருதி அவன் களி மிகுத்துள்ளான். உணர்ச்சியுள்ளவன் உறுதியுண்மைகளை உணர்கிறான்.

தான் உழையாமல் உண்பது உணவு ஆகாது என்க.

ஒரு பெரிய செல்வன்; நிலபுலங்களும் பொருள் வளங்களும் நிறைய வுள்ளவன். எல்லாம் தந்தை வழி வந்தன. தான் யாதும் உழையாமல் போக போக்கியங்களை அவன் ஏகமாய் அனுபவித்து வந்தான் வருங்கால் அங்கே ஒரு புலவர் வந்தார். அவர் சிறந்த

கவிஞர். எல்லாருக்கும் நல்ல உறுதி நலங்களை இனிது போதிக்கும் இயல்பினர். தன்னலம் கருதாதவர் ஆதலால் மன்னரையும் மதியாதவர்; யாண்டும் இதமே சொல்பவர்; அவரை அச்செல்வன் கண்டான். உவந்து உபசரித்து விருந்துக்கு அழைத்தான். அவர் இசைந்தார். விருந்து நடந்தது. தனியே அமர்ந்து பேசிக் கொண்டிருந்தார். யாதும் உழையாமல் சுக சீவியாயிருந்து வருகின்ற அவனது நிலைமையைத் தெரிந்து புலவர் விநயமாக அறிவு கூற நேர்ந்தார். அவர் கூறிய முறை சீரிய நிறையும் கூரிய சுவையும் உடையது. அயலே வருகின்றது.

புலவர்:- தாங்கள் எப்பொழுதும் உண்பது பழையதுதானோ?

செல்வர்:- இல்லை; இரண்டு நேரமும் சமையல் உண்டு; எப்போதும் சுடுசாதமே சாப்பிடுவது வழக்கம்.

புலவர்:- அப்படித் தெரியவில்லையே.

செல்வர்:- ஏன்? இப்பொழுது நாம் உண்டது சுடுசாதம் இல்லையா?

புலவர்:- இல்லவே இல்லை; பழையதே.

செல்வர்:- என்ன இப்படிச் சொல்லுகிறீர்கள்!

புலவர்:- நான் உள்ளதை உள்ளபடியே சொல்லுகிறேன்.

இதைக் கேட்டதும் அச்செல்வன் திகைத்தான். புலவர் நகைத்தார். நீர் ஒரு தொழிலும் செய்யாமல், நும் முன்னோர் தேடி வைத்ததைச் செலவழித்து வருகிறீர்; உமது முயற்சியால் புதிதாக யாதும் ஈட்டாமல் அந்தப் பழையதையே உண்டு வருதலால் பழையது எனப் பழமையின் கிழமை தெரியச்சொன்னேன்; அந்த உண்மையைக் கண்டு தெளிந்து நீர் ஏதேனும் ஓர் முயற்சியைக் கைக்கொள்ள வேண்டும் என்று அவர் உணர்த்திப்போனார்.

பழையதே உண்ணும் படியில் படிந்து
பிழையதே என்பதும் பேணாய்—உழையதே
நீண்டு வருகின்ற நீசம் தெரியாமல்
பூண்டு வருதல் புலை.

என அக் கவியரசர் இவ்வாறு போதித்துப் போகவே அச்செல்வன் சோம்பல் ஒழிந்து தொழிலில் முயன்று ஒளி பெற்று நின்றான். தன் மானமுடையவன் தனிமகிமை அடைகின்றான்.

473. ஊக்கி முயல்வான் உயர்ந்து புகழ்சிறந்து
பாக்கியவான் ஆகும் படிபார்த்தும்—தூக்கமுற்றுச்
சோம்பித் திரியும் சுமடன் புவிச்சுமையாய்க்
கூம்பி யிருத்தல் கொடிது. (ங)

இ-ள்

உள்ளம் ஊக்கிமுயல்கின்றவர் உயர்ந்த பாக்கியவான்களாய்ப் புகழ் சிறந்து நிற்டதைப் பார்த்திருந்தும் சிலர் தூக்கமாய்ச் சோம்பித் திரிவது துயரம் என்பதாம்.

இது பாக்கியவானின் பான்மை கூறுகின்றது.

புகழும் பொருளும் மனித வாழ்வில் உயர் நிலையினவாய் ஒளி புரிகின்றன. அவை வினையாண்மைகளால் விளைந்து வருகின்றன. எண்ணி முயன்றவர் ஏற்றம் மிகப் பெறுகின்றார். எண்ணாது அயர்ந்தவர் எவ்வழியும் இழிந்து படுகின்றார்.

வாழ்வும் தாழ்வும் மனிதனுடைய சூழ்வின் கண்ணேயே தோய்ந்து நிற்கின்றன. சூழாது சோம்பி நின்ற அளவு வாழ்வு தாழ்வாகின்றது. கருதி முயன்ற வழியே உறுதி நலங்கள் ஒளி பெற்று வருகின்றன ஏதாவது ஒரு தொழிலில் தோய்ந்த போது தான் உயிருணர்ச்சி எழுச்சியாய் உயர் நிலையை அடைகின்றது.

ஊக்கம் என்னும் சொல் உயர்ந்த நோக்கங்களை உணர்த்தியுள்ளது. சீவ ஒளியாய் உள்ளிருந்து சிறந்த நலங்களை விளைத்து வருதலால் அது மனிதனுக்கு ஒரு தேவ சம்பத்தாய் அமைந்திருக்கின்றது.

தூக்கம் என்பது தொழில் செய்யாமல் சோம்பியிருப்பது.

மடி மண்டி அசதியாயிருக்கும் இந்த இழி நிலைதான் மனித வாழ்வைப் பழியில் ஆழ்த்திப் பாழ்படுத்தி விடுகின்றது.

ஊக்கம் உயிர் வாழ்வாய் ஆக்கம் அருள்கின்றது.

தூக்கம் செத்த வாழ்வாய் ஏக்கம் தருகின்றது.

சோம்பித் திரியும் சுமடன்.

தொழில் செய்யாமல் சோம்பி அலைகின்றவன் இவ்வாறு பழி நிலையனாய் இழி பெயர் அடைகின்றான். சுமடன் = மூடன், அறிவு இல்லாதவன். உயர்வுக்கு உரியதொழிலை ஒழியவிட்டு மடிய

ளுய் இருப்பவனை மடையன் என்றது மனிதத்தன்மையை இழந்து கடையன் ஆதல் கருதி.

சோம்பர் என்பவர் தேம்பித் திரிவர். (ஔவையார்)

என்றதனால் மடியரது இழிநிலை தெளிவாய் நின்றது. தேம்புதல் = வருந்துதல், வாடுதல். வாடி வருந்தும்படியான கெடு நிலைகளைச் சோம்பல் விளைத்து விடுதலால் அது கேடு என வந்தது.

தன்னை மருவினவரைப் பழி கேடுகளில் அழுத்தி இழிவு படுத்துகின்ற மடியினை எவன் குடிகேடு என்று தெளிந்து கொள்கின்றானோ அவனே உயர்ந்த தொழிலாளியாய் ஒளி சிறந்து விளங்குகின்றான்.

இரவும் பகலும் கருமமே கண்ணாய் உழைத்து வந்தவரே பல துறைகளிலும் உயர்ந்து தலைசிறந்து நிற்கின்றார். உழையாமல் அயர்ந்து ஒடுங்கினவர் ஒளியிழந்து இழிந்து கெடுகின்றனர்.

புவிச் சுமை என்றது பூமி பாரங்கள் என்றவாறு.

சோம்பேறி ஒரு தொழிலும் செய்யாமல் உண்டு திரிதலால் உலக சமுதாயத்திற்கு அவன் ஒரு கொடிய நோயாய் முடிவாகி நின்றான். ஒன்றுக்கும் உதவாமல் ஊனமுறுதலால் ஈனமாயினான்.

"சோற்றுக்குச் செலவு; பூமிக்குப் பாரம்." என்னும் இப் பழமொழி சோம்பேறிகளை நோக்கி எழுந்தது.

ஆண்மையான நல்ல மனிதனைக் கீழ்மையாக்கிக் கெடுத்து விடுதலால் சோம்பல் பயங்கரமான ஒரு கொடிய நீச நோயாய் நீண்டு நிற்கின்றது. இனிமை காட்டி இழி துயரில் ஆழ்த்துகின்ற அந்த மாயப் பேயை யாண்டும் அணுகலாகாது; அணுகின் அவ கேடுகளே பெருகி வாழ்வு பாழாகி விடும்.

கூம்பி இருத்தல் கொடிது.

உள்ளம் மழுங்கிச் சோம்பியிருப்பதில் எள்ளல்கள் பல எய்தும் ஆதலால் அது கொடிது என வந்தது.

ஈன மடியில் இழியின் இருமையும்
ஊன மடைய வுறும்.

இதனை ஞானமுடன் நயந்து தெளிக.

அறிவு மழுங்கி அயர்ந்து நில்லாதே; ஆள்வினையுடையனாய் வாழ்வினை உயர்த்தி நீள்புகழ் ஆற்றி நிலவரை நிலவுக.

474. ஆண்மகனுய்த் தோன்றியுமே ஆண்மை புரியாமல்
வீணமகனுயச் சோமபி விளிகின்ருய் —மாணமரத்தில்
புல்லுருவி போலிந்தப் பூதலத்தில் சோம்பேறி
வல்லுருவம் அல்லல் வசை. (சு)

இ—ள்

சிறந்த ஆண்மகனுய்ப் பிறந்திருந்தும் ஆண்மையாய் வினை செய்யாமல் அவமே சோம்பி அயர்ந்திருப்பது நல்ல மரத்தில் ஓர் புல்லுருவி போல பொல்லாத புன்மையாம் என்க.

ஆண் பெண் என்னும் இருவகைக் கூறுபாடுகளும் சீவ கோடிகள் எங்கனும் பரவியுள்ளன. பறவை மிருகம் முதலிய தாழ்ந்த பிறவிகளிலும் ஆணினுக்கு ஓர் மேன்மையுள்ளது. அதிகார ஆற்றல்கள் எல்லாம் ஆணின் இடமே காணியாய்க் கலந்திருக்கின்றன. மானிட மருமம் மாண்பு மிகவுடையது.

உயிர்கள் இயங்கி வருதலால் உலகம் வழங்கி வருகின்றது. சமுதாயம் பெருகி ஞாலம் விளங்கி வருதற்கு உரிய மூல வித்துக்களை ஆண்களிடமே கடவுள் அமைத்து வைத்திருக்கிருர். வித்தின் விளைவுகள் வியததகு நிலையின.

சீவ தாதுக்களை மேவியிருத்தலால் ஆண்மை யாண்டும் மேன்மையாய் வியனிலையில் விளங்கி நிற்கின்றது. பெண்மையை மருவிச் சந்ததிகளை கல்கி உலக விருத்திக்கு உரிமையாயுள்ள ஆண்மகன் தனது தலைமையையும் நிலைமையையும் கருதி நோக்கி அரிய பல காரியங்களை ஆற்ற நேர்ந்துள்ளான். வினையாண்மை எனனுமமொழியினுல் வினை செயல் வகைக்கும் மனிதனுக்கும் உள்ள இனவுரிமை இனிது தெளிவாம்.

தான் செய்து வருகின்ற கருமங்களே ஒருவனுடைய தகைமைகளை மருமங்களாய் வெளிப்படுத்தி விடுகின்றன. வினைகளின் வழியே யாவும் விளைந்து வெளி வருகின்றன. அகத்தின் நினைவுகள் புறத்தே வினைகளாய் விரிந்து வருதலால் வாழ்வுகள் நினைப்பின் வண்ணங்களாய் நிகழ்ந்து திகழ்கின்றன.

மனிதப் பிறவி சிறந்தது ஆயினும் உயர்ந்த எண்ணங்களை யுடையனுய்த் தகுந்த வினைகளைச் செய்து கொள்ள விலலை ஆயின் அவனை தோற்றம் ஏற்றம் இழந்து இழிந்து படுகின்றது.

"Unless above himself he can
Erect himself, how poor a thing is man!" (Daniel)

"தானே முயன்று தன்னை உயர்த்திக் கொண்டால் ஒழிய மனிதன் எவ்வளவு இழிந்த பொருள்!" என்னும் இது ஈண்டு எண்ணத்தக்கது. இழிவும் உயர்வும் விழி தெரிய நின்றன.

எண்ணி வினை செய்கின்றவன் பொன்னும் மணியும் போல் உன்னத நிலையில் உயர்ந்து ஒளி வீசி மிளிர்கின்றான்; வினைசெயல் ஒழிந்து மனம் மடிந்திருப்பவன் மண்ணும் கல்லும் போல் மாண் பிழந்து கழிகின்றான்.

செல்வங்களைத் தந்து சிறப்புகளை அருளுகின்ற முயற்சியை ஒருவன் இழந்திருப்பின் அவனிடம் இகழ்ச்சிகள் பல அடைந்து கொள்கின்றன. ஆண்மையாய் உழைப்பவன் ஆண்மகன்; அங்ஙனமின்றி வீணே சோம்பித் திரிபவன் வீண் மகன் என்க.

எழிலுடையனாயினும் தொழில் இலன் ஆயின் அவன் இழி மகனாய்ப் பழி நிலையை அடைகின்றான்.

புல்லுருவி என்றது மரத்தில் இடையே வீணாகக் கிளைத்திருக்கும் ஒருவகைப் புல்லிய கிளையை. யாதொரு பயனுமின்றி வறிதே புன்மையாய் முளைத்திருத்தலால் அது புல்லுருவி என நேர்ந்தது. பயனற்ற பிறவி பழியுற்றிழிகின்றது.

சோம்பேறி வல்லுருவம் புல்லுருவி போல் வசை.

நல்ல மனிதப் பிறப்பும் பொல்லாத சோம்பலால் புலைப் பட்டுப் போம் என்பதை இது உணர்த்தி நின்றது. உலகிற்கு ஒரு பயனுமின்றி வீணே தோன்றி நிற்றலால் மடியனுக்குப் புல்லுருவி உவமையாய் வந்தது.

சிறந்த குடியில் ஒரு சோம்பேறி பிறந்திருப்பது நல்ல மரத்தில் புல்லுருவி முளைத்திருப்பது போலாம். தனக்கும் பிறர்க்கும் பயன்படும் அளவே மனிதன் மாண்படைந்து வருகிறான். பயனில்லாத தோற்றம் பாழாய்ப் பழிக்கப் படுகின்றது.

கோங்கரும் பீன்ற திரள்கால உளையலரி
தேங்கமழ் நாற்றம் இழந்தா அங்கு—ஓங்கும்
உயர்குடி யுட்பிறப்பின் என்னாம் பெயர்பொறிக்கும்
பேராண்மை இல்லாக் கடை. (நாலடியார்)

ஆண்மையோடு முயன்று மேன்மையடையாதவன் உயர்ந்த குடியில் பிறந்திருந்தாலும் கரும்பின் நுனியில் பூத்துள்ள கழை போல் இழிந்தே போவன் என்று இது காட்டியுள்ளது. தொழில் முயற்சியுடையவன் சுவையுடைய கரும்பு போல் யாண்டும் உயர் வடைந்து நிற்கின்றான்; சோம்பேறி அதன் தோகைபோல் எவ ராலும் இகழ்ந்து தள்ளப்படுகின்றான்.

முயற்சி மனிதனை நல்ல சாரமுடையவனாக்கி எங்கும் சீரும் சிறப்பும் அவனுக்கு அருளி வருகின்றது. சோம்பல் அவனை வறி யனாக்கி வசையும் கேடும் வளர்த்து விடுகின்றது. பழி கேடான அந்த இழிவினை ஒழித்து உறுதியுடன் முயன்று உயர்ந்துகொள்க.

---

475. மானமுடைமை மரபுடைமை மாட்சியுறு
ஞானமுடைமை நலமுடைமை—ஆன
உயர்வுடைமை எல்லாம் உறினும் ஒழியும்
அயர்வுடைமை ஒன்றின் அறி. (ரு)

இ—ள்

மானம் மரபு மாண்பு ஞானம் நன்மை முதலிய நலங்கள் பல நன்கு பெருகியிருந்தாலும் சோம்பல் ஒன்று புகின் அவை யாவும் இழிந்து ஒழிந்து போம் என்பதாம்.

மனிதன் குணங்களால் உயர்கின்றான். நல்ல நீர்மைகள் அமிர்த தாரைகளாய்ச் சீவர்களுக்கு உறுதியும் ஒளியும் உதவி வருகின்றன. இயல்புகள் இனியனவாய் அமைந்த பொழுதுதான் அந்த மனிதன் புனிதமான உயர் நிலையை அடைகின்றான்.

ஈனமும் ஊனமும் அடையாதபடி மனிதனை இனிது பேணி வருவது எதுவோ அது மானம் என வந்தது. மனம், மானிடன் என வழங்கி வரும் மொழிகளுக்கும் மானம் என்னும் சொல்லுக் கும் நெருங்கிய உறவுரிமை உண்டு.

உள்ளம் மழுங்காத உயர்ந்த நல்ல உணர்ச்சியே மானம் என வெளியே மருவியுள்ளது. இந்த நீர்மை சிதையாத அளவு மனிதன் சீர்மையுறுகின்றான். அது சிதைந்து விடின் அவன் இழிந்து படு கின்றான். அரிய மாண்பின் நிலை அறிய வுரியது.

சிவ ஒளியாய் நின்று எவ்வழியும் மேன்மை புரிந்து வருத லால் மானத்தை மேலோர் உயிரினும் இனிதா ஓம்பி வருகின்ற னர். அது குலைய நேரின் உயிர் உலைய நேர்கின்றார்.

மானக் கவரிஎன மானக் குலமக்கள்
ஈனமுற வாழார் இழிந்து.

மானம் உடையவர் ஈனம் அடைந்து உயிர் வாழார் என இது உணர்த்தியுள்ளது. மயிர் கெட நேரின் உயிர் விடும் இயல் பினது ஆதலால் கவரிமா மானிகளுக்கு இங்கே உவமையாய் வந் தது. ஈன விலங்கும் மான நலம் காண மருவியுளது.

"வான்மயிர் துடக்கின் தான் உயிர் வாழாப் பெருந்தகைக் கவரியன்ன பீடு" (பெருங்கதை 1-35) உதயணன் என்னும் மன் னனுடைய மான சீர்மை இன்னவாறு காண வந்துள்ளது.

மானம் நோக்கின் கவரிமா அனைய நீரார். (இராமாயணம்)

தசரதனுடைய மந்திரிகளை இங்ஙனம் குறித்திருக்கிறார்.

சிறந்த மனிதர்கள் உயர்ந்த மானிகளாய் ஒளி செய்துள்ள னர். தம் பிறப்பை மகிமைப் படுத்தி வருகின்றமையின் மானம் உயிரினும் சிறப்பாக உயர்ந்தோரால் மதிக்கப்பட்டுள்ளது.

Mine honour is my life; both grow in one;
Take honour from me. and my life is done.

(King Richard II-1-2)

"மானம் எனது உயிர்; இரண்டும் ஒன்றாய் வளர்ந்துள்ளன; மானம் கெடின், என் உயிர் முடிந்தது" என ஓர் குல மகன் இங் ஙனம் கூறியிருக்கிறான். எந்த நாட்டிலும் மானம் இந்தவாறு போற்றப் பட்டுள்ளமையால் அதன் தலைமையும் நிலைமையும் நன்கு புலனும்.

இத்தகைய சிறந்த மானமும், உயர்ந்த தானமும், அரிய ஞானமும், பெரிய மேன்மையும், உரிய பான்மையும் சோம்பல் ஒன்றால் ஒழிந்து போம் ஆதலால், அந்த இழிந்த ஈனத்தை மறந்தும் மருவாமல் மதியோடு ஒழுகி வர வேண்டும் என்க.

சிவ ஒளிகளை மழுக்கிப் பாவ வழிகளில் அழுத்தி மனித வாழ்வைப் பாழாக்குகின்ற கொடிய தீமையாக மடியை முடிவு

செய்துள்ளமையால் அதனை அடியோடு கடிய வேண்டும் என்று நூலோரும் மேலோரும் பல படியாகப் போதித்து வருகின்றனர்.

உள்ளம் மடிந்தான் உயிர்மடிந்தான்; எல்லாரும்
எள்ள முடிந்தான் இழிந்து.

வெளியே உருவோடு உலாவித் திரியினும் உள்ளே மடியுடையவன் செத்தவனே என்னும் இது ஈண்டு உய்த்துணர வுரியது.

அயர்வுடைமை ஒன்றின் உயர்வுடைமை எல்லாம் ஒழியும்.

என்றது பொல்லாத சோம்பல் ஒன்றால் எல்லா நலங்களும் அழிந்து படுதலைத் தெளிந்து கொள்ள வந்தது. ஒன்றின் என்பதில் இரு பொருள்கள் ஒன்றி நின்றன. ஒன்றல் = பொருந்தல்.

அயர்வு ஒன்றின் உயர்வு பொன்றும். பொன்றவே இழிந்த பேதையாய்ச் சோம்பேறி கழிந்து நின்று ஒழிந்து போகின்றான்.

மடிமடிக் கொண்டொழுகும் பேதை பிறந்த
குடிமடியும் தன்னினும் முந்து. (குறள் 603)

சோம்பேறி பிறந்த குடி அவன் இறந்து படுமுன்னரே கண் எதிரே அழிந்து போம் என இது உணர்த்தியுள்ளது. அறிவாகிய ஒளியை இழந்து மடி இருள் மண்டிக் குடிகேடனாய்ப் பழிகள்பல படிந்து பாழ் படுதலால் மடியன் பேதை என நின்றான். அழிவு நிலை தெரியாமல் விழிகண் குருடனாய் இழிவுறுவது கொடிய பரிதாபமாகின்றது.

சோம்பல் தூக்கம் மந்தம் மடமை என்பன நிந்தனைக் குரியன. இந்த இழி நிலைகளை எந்த மனிதன் மிகவும் சொக்கமாகத் தழுவி நிற்கின்றானோ அந்த மனிதன் யாதொரு உயர் நலனையும் அடையாமல் அவமே உலகில் இழிந்து திரிகின்றான்

தொழிலில் நுழையாதவனிடம் தூக்கம் நுழைந்து கொள்கின்றது. தூங்குவதில் சோம்பேறி மிகவும் சுவை கண்டுள்ளான். உறங்கினான் இறங்கினான் என்பது பழமொழி. கழிந்த உறக்கம் மனிதனை இழிந்த நிலையில் இறக்கி விடும் என்பதை இம் முதுமொழி உணர்த்தியுள்ளது.

பாழான இந்தத் தூக்கத்தை மடியன் கேளாக உவந்து கொள்கின்றான். மடி, துயில் என மருவி வருதலால் அவற்றின் உறவுரிமையும் இயல்பிழிவும் எளிது புலனாம்.

"You have waked me too soon, I must slumber again.",

"நீ என்னை விரைவில் எழுப்பி விட்டாய்! நான் மறுபடியும் உறங்க வேண்டும்" என்றே சோம்பேறி படுத்துக் கொள்ளுவான் என ஒரு ஆங்கில ஆசிரியர் இவ்வாறு குறித்திருக்கிறார்.

மடிமண்டித் தூங்குகின்றவன் எல்லா நலங்களையும் இழந்து விடுகின்றான். விடவே ஆக்கம் கெட்ட தூக்கம் என அது இகழப்படுகின்றது.

"plough deep while sluggards sleep." (Benjamin)

"சோம்பேறிகள் தூங்கும் பொழுது ஆழ உழுது கொள்ளுங்கள்" என்னும் இது மடியின் உரிமைகள் வழியே பறிபோதலை உணர்த்தியுள்ளது. சோம்பேறிகளை மேல் நாட்டார் மிகவும் வெறுத்திருக்கின்றனர்.

"Idle creatures, go out."

"சோம்பேறிப் பிராணிகளே வெளியே ஓடிப் போங்கள்" என்று மடியரை இளிவாக வெறுத்து விரட்டியிருத்தலால் அந் நாட்டவர் தொழிலாளிகளை உவந்து பேணிவரும் திறம் உணரலாகும் எவ்வழியும் பயனுடையவர் பாராட்டப் படுகின்றார்.

உழைக்கின்றவரே உலகில் வாழ உரியவர்.

உழையாதவர் நுழைவது பிழையாகின்றது.

---

476. பிறந்த குடிநிலையைப் பேணிப் பெருக்கிச்
சிறந்த படிதலைமை செய்யா—துறைந்து
மடிகொண் டிருக்கும் மடமகன் இல்லம்
இடிகொண்ட புல்லா யிறும். (ச)

இ—ள்

தான் பிறந்த குடியைப் பேணிப் பெருமை மிகச் செய்து உயர்ந்த நிலையில் வையாமல் ஒருவன் மடிமண்டி இருப்பின் இடி விழுந்த மரம்போல் அவன் குடிவாழ்வு அடியோடு அழிந்து போம் என்பதாம்.

தனது பிறப்பினால் ஏதாவது ஒரு சிறப்பினை மனிதன் அடைந்து கொள்ள வேண்டும். அங்ஙனம் அடைந்த போதுதான் பிறந்த பயனை ஓரளவு அவன் பெற்றவன் ஆகின்றான்.

"தோன்றின் புகழொடு தோன்றுக" எனத் தோற்றத்திற்கு ஓர் ஊற்றத்தைத் தேவர் இவ்வாறு உரிமையாக உணர்த்தியிருக்கிறார். தோன்றினால் இப்படித் தோன்றுக; இல்லையானால் தோன்றாமல் இருப்பது நல்லது என வள்ளுவத் தோன்றல் சொல்லியுள்ளது உள்ளம் ஊன்றி உணரவுரியது.

தோன்றல் ஏந்தல், செம்மல், குரிசில் என வரும் பெயர்கள் அரிய வரிசைகளுடையன. தன்னுடைய செயல் இயல்களால் உயர் நிலைபடைந்து எங்கும் எவரும் என்றும் தெரியத் தலைமையோடு தோன்றி நிற்பவன் தோன்றல் என நேர்ந்தான். சிறந்த குலமகனைத் தோன்றல் என்று சொல்லி வருவது அவனது தோற்றத்தின் ஏற்றம் கருதி.

"சுதனும் தலைவனும் தோன்றல் ஆகும்." (பிங்கலந்தை)

தலைமையான நிலைமையில் அமைந்த இந்தப் பெயர் இராமனுக்கு மிகவும் உரிமையாய் வந்துள்ளது. இராமாயண காவியத்துள் இந் நாமம் தோன்றியுள்ள இடமெல்லாம் இராமனின் மாண்பினை ஊன்றி யுணரச் செய்துள்ளது.

"பூவினுட் பிறந்த தோன்றல் புண்ணியன் அனைய நம்பி." (சிந்தாமணி 316) சீவகனை இவ்வண்ணம் காவிய நாயகன் குறித்திருக்கிறார். தந்தை இழந்து போன அரசினை இம் மைந்தன் பிறந்து மீட்டி மகிமைகள் பல நாட்டினான்.

தோன்றிய குடியை வானம் தொடுகிரி எனத்துலக்கி
ஊன்றிய புகழால் வையம் ஒளிமிகச் செய்து நின்றான்.

என்றபடி சிறந்து நின்றான் ஆதலால் பிறந்த குலமும் பெற்ற நாடும் உயர்ந்த தலைமகனாக இவனை உவந்து கொண்டாடின.

பிறந்த குடி நிலையைப் பேணி.

என்றது ஆண்மகனாப் இவ்வுலகில் பிறந்தவன் முதலில் செய்யவுரிய கடமையை இது தெளித்து நின்றது. தனனை ஈன்று அருளிய அன்னைக்கும் பிதாவுக்கும் குடிக்கும் நாட்டுக்கும் உதவி செய்ய வேண்டிய கடமைகளை ஆடவன் மருவியிருத்தலால் அவனுடைய பாடும் பயனும் பரிசும் பதவியும் நாடி அறிய வுரியன.

செல்வம் கல்வி முதலியவற்றால் தன் குடி இயல்பாகவே சிறந்திருந்தாலும் தான் பிறந்து வந்தபின் அதில் ஓர் உயர்ந்த

நிலைமையைப் புதிதாய்ப் பொலிந்து வரச் செய்யின் அவன் ஒரு நல்ல தலைமகனாய் உலகம் புகழ ஒளி பெற்று நிற்கின்றான்.

திவிட்டன் என்பவன் சிறந்த குலமகன்; வாகுவலி வமிசத்தில் பிறந்தவன். பிரசாபதி என்னும் அரசனுடைய அருமைத் திருமகனாய்ப் பிறந்திருந்த இவன் பல கலைகளையும் பயின்று பருவம் எய்தி நின்றான். அங்ஙனம் இருக்குங்கால் அயல் நாட்டு மன்னனிடமிருந்து தூதுவர் இருவர் வழக்கம் போல் வந்து இவனுடைய தந்தையிடம் திறை கேட்டனர். அதனை இக் குமாரன் கேட்டான். பிறன் ஒருவனுக்கு அடங்கி வரி செலுத்தி வாழ்வது தன் குடிக்குப் பெரிய வசை என்று இவன் மறுகி மறுத்தான். திறை பெறும் பொருட்டு மறுபுலமிருந்து வந்தவர்களை நோக்கி அதுபொழுது இவன் உரைத்த மொழிகள் உள்ளத்தின் உறுதி நிலைகளை உணர்த்தியுள்ளன.

உழுதுதம் கடன்கழித்து உண்டு வேந்தரை
வழிமொழிந்து இன்னணம் வாழும் மாந்தர்போல்
எழுதிய திறை இறுத்து இருந்து வாழ்வதே
அழகிது பெரிதுநம் அரச வாழ்க்கையே. (1)

நாளினும் திறைநுமக்கு உவப்பத் தந்து நாடு
ஆளுதும் அன்றெனில் ஒழிதுமே எனின்
தோளினும் தொடுகழல வலியினும் இவ்
வாளினும பயன்எனை? மயரி மாநதர்காள்! (2)

விடமுடை எரிக்கொடி விலங்கு நோக்குடை
அடலுடைக் கடுந்தொழில் அரவின் ஆரழற்
படமுடை மணிகொளக் கருதிப் பார்ப்பதோர்
மடமுடை மனத்தன் அம் மயரி மன்னனே. (3)

பாழியால் மெலிந்தவர் திறத்துப் பண்டெலாம்
ஆழியால வெருட்டி நின்று அடர்த்திர் போலுமஃது
ஏழைகாள்! இனி ஒழிந்திட்டுச் செவ்வனே
வாழுமாறறிந்து உயிர்காத்து வாழ்மினே. (4)

(சூளாமணி, சீயவதைச் சருக்கம்)

திவிட்டனது மன நிலையும் மான வுணர்ச்சியும் இதனால் இனிது புலனும். இங்ஙனம் திறை மறுத்துப் பொருது வென்று தனி அரசாய்த் தழைத்து நின்றான். தேசம் முழுவதும் இக் குல

மகனைப் புகழ்ந்து போற்றியது. தான் பிறந்த குடியைச் சிறந்த தலைமையில் ஒளிபெறச் செய்து வழிவழியெல்லாம் விழுமிய நிலையில் விளங்க விளக்கி உலகம் புகழ உயர்ந்து நின்ற இவன் சரிதம் ஓர் காவியமாய் வெளி வந்துள்ளது.

மடியின்றி ஊக்கி முயல்கின்றவர் எவரோ அவரே தம் குடியை உயர்த்திப் படியில் உயர்ந்த நெடிய புகழுடையராய் நிலவி நிற்கின்றார். எண்ணங்கள் பெருக ஏற்றங்கள் பெருகி எழுகின்றன. கருதி முயல்பவர் அரிய பல பெருமைகளை மருவி மகிழுகின்றனர்.

உயர்ச்சி நிலை உள்ளத்தில் தோன்றின் அயர்ச்சி அடியோடு ஒழிகின்றது; முயற்சிகள் முன் வந்து நிற்கின்றன. மனவுறுதியின் படியே மனிதன் உயர் நிலைகளை அடைந்து கொள்கின்றான்.

பிரான்சு தேசத்து வீரனை நெப்போலியன் என்பவன் சாதாரணமான குடியில் பிறந்தவன். தனது மன வலியினால் அதிசய மனிதனாய் உயர்ந்து அந்நாட்டுக்கு அரசன் ஆயினான். அவனது இயல்பினை வியந்து உலகம் இன்றும் துதிசெய்து வருகிறது.

"He always wanted to be first in everything."

"அவன் எப்பொழுதும் எவ்வழியும் முதன்மையாயிருக்கவே அவாவி நின்றான்" என (Nepoleon) நெப்போலியனைக் குறித்து இவ்வாறு கூறியுள்ளனர்.

"உள்ளுவது எல்லாம் உயர்வு உள்ளல்" (குறள் 596)

என்ற வள்ளுவர் வாய்மொழியை இயல்பாகவே அவன் உள்ளம் கொண்டு உன்னத நிலையை அடைந்துள்ளமை ஈண்டு உன்னியுணர்ந்து கொள்ள வேண்டும்.

மடியின்றி ஊக்கி யுழைக்கும் மக்களால் குடியும் குலமும் நலம் பல பெறுகின்றன; மடியுடைய மாக்களால் அவை இழிவும் அழிவும் அடைகின்றன.

இடி கொண்ட புல்லாய் இறும்.

என்றது மடி கொண்டிருக்கும் மடமகனுடைய குடி அடியோடு அழியும் படியறிய வந்தது. புல்=மரம். மடி பாய்ந்த குடி பழி வறுமைகள் பாய்ந்து பாழ்படும் ஆதலால் இடி வீழ்ந்த மரம் என அது எதிர் காண நேர்ந்தது.

ஊக்கி உழைத்து ஆக்கங்களை விளைத்துத் தன் குடியை உயர்த்துகின்றவனே நல்ல குலமகன் ஆகின்றான்; அங்ஙனமின்றிச் சோம்பித் திரிபவன் இழிமகனாய் இழிந்து பழிபல காண்கின்றான்.

மடியில் விழுந்து மடிந்து போகாதே; படியில் எழுந்து முடி மன்னரும் வியந்து காண உயர்ந்து கொள்ளுக.

---

477. தீதான சோம்பல் சிறிதே குடிபுகின்
சீதேவி அன்றே சினந்தகல்வாள்—மூதேவி
வந்து மகிழ்ந்து வதிவாள் பழிமிடி
முந்து வளரு முனைந்து. (எ)

இ—ள்

தீமையான சோம்பல் சிறிது புகுந்தாலும் சீதேவி உடனே சினந்து விலகிப் போவாள்; மூதேவி விரைந்து புகுந்துகொள்வள்; அந்தக் குடி பழியும் மிடியும் படிந்து அழிந்து போம் என்பதாம்.

தீது ஆன சோம்பல் என்றது அதனால் விளைகின்ற ஏதங்களையும் இன்னல்களையும் கருதியுணர வந்தது. நல்லது தீயது என்பன மனிதனுடைய சுக துக்கங்களுக்கு முறையே மூல காரணங்களாயுள்ளன. சுகத்தையே யாவரும் எப்பொழுதும் உவந்து விரும்புகின்றனர்; துக்கத்தை எல்லாரும் எவ்வழியும் இகழ்ந்து வெறுக்கின்றனர். துன்பங்கள் கோரதபடி அஞ்சுகின்ற அலமால்களே சீவர்களுடைய நெஞ்சங்களில் எங்கும் நிலைத்திருக்கின்றன.

பெரிய அரச திருவில் இருப்பவரையும், அரிய பதவியில் உள்ளவரையும் இந்த அச்சம் துச்சமாக ஆட்டி வைக்கின்றது. பயமின்மை எவனுடைய உள்ளத்தில் இருக்கின்றதோ அவன் ஒரு பெரிய அதிசய மகானாய்த் துதி செய்யப் பெறுகின்றான். அபயம் என்பது ஒரு தெய்வத் திருவாய் உய்வைத் தருகின்றது. எந்த உயிருக்கும் யாதும் அச்சத்தைச் செய்யாமல் யாண்டும் இதமே கருதி வருகின்ற புனித மனிதனே இனிய அபயன் ஆய் எளிது திகழ்கின்றான்.

நல்ல உணர்வு நலமுடையவன் தன் உயிர்க்கு எவ்வழியும் உறுதி நலன்களை ஓர்ந்து அறிவாய் உரிமை செய்து கொள்ளுகின்றான். இம்மை வாழ்விலும் மறுமை வாழ்விலும் உண்மையாக நன்மை காண்பவன் செம்மையாளனாய்ச் சிறந்து மிளிர்கின்றான்.

உறுதி நலனைக் கருதி முயலுகின்ற முயற்சி எவ்வகையிலும் உயர்ச்சியாய் உவகை தருகின்றது. அங்ஙனம் கருதாமல் சோம்பியிருப்பதில் பரிதாபங்கள் பாய்ந்து வருகின்றன.

சோம்பல் குடிபுகின் சீதேவி அகல்வாள்; மூதேவி வதிவாள்.

ஒரு குடியில் மடி புகுந்தால் அங்கே இலட்சுமி விலகிப் போய் விடுவாள்; மூதேவி வந்து புகுந்து கொள்வாள் என்றது நேர்கின்ற நிலைமைகளை நினைந்து கொள்ள வந்தது.

செல்வமும் சீர்மையும் இழந்து, வறுமையும் அல்லலும் உழந்து சோம்பேறி இழிந்து படுகின்றான்; அந்த அழி நிலையை இது விழி தெரிய விளக்கியது. மடி புகுந்த குடி இன்ப ஒளி மறைந்து துன்ப இருள் நிறைந்து எவ்வழியும் அல்லலாய் இழிந்து படுகின்றது.

சோம்பலால் உள்ளம் கூம்பி இழிகின்றது; முயற்சி ஒழிகின்றது; ஒழியவே உயர் நலங்கள் யாவும் ஒழிந்து போகின்றன; துயர் நிலைகள் எல்லாம் தொடர்ந்து அடர்ந்து கொள்ளுகின்றன.

பழி மிடி வளரும் என்றது மடியினால் விளையும் குடிகேடுகளை உணர்த்தி நின்றது. தொழில் செய்யாமல் சோம்பியிருப்பவன் இழி நிலையாளனாய்க் கழிந்து படுதலால் பலரும் அவனை இகழ்ந்து பழித்து எள்ளி வெறுக்கின்றார்.

இடிபுரிந்து எள்ளுஞ்சொற் கேட்பர் மடிபுரிந்து
மாண்ட உஞற்றி லவர். (குறள், 607)

உள்ளத்தில் மடி கொண்டவரை உலகம் எள்ளி இகழும் என வள்ளுவப் பெருந்தகை இங்ஙனம் குறித்திருக்கிறார். யாரும் இடித்துப் பழிக்க இழிந்து நிற்பர் என்றதனால் அவரது ஈன நிலை தெளிந்து கொள்ள வந்தது.

ஊக்கமும் உணர்வும் குன்றி ஆக்கம் கெட்டிருத்தலால் மடியரை எவரும் எள்ளி நோக்கித் தள்ளிப் போகின்றார்.

வறுமையும் பழியும் வளர்த்துச் சிறுமை பல செய்து இருமையும் கெடுக்கும் இயல்பினது ஆதலால் சோம்பல் கொடிய தீமையாய் முடிவாகியுள்ளது. குடிகேடு புரிகின்ற அக் கொடு மடியை அடியோடு ஒழிக்க வேண்டும்.

இருள் நீங்கிய அளவில் ஒளி ஓங்குகின்றது; மடி ஒழிந்த பொழுது மனிதன் தெளிவடைந்து சிறந்து திகழ்கின்றான்.

---

478. மடியின்றி யூக்கி மதியூன்றி நின்றான்
குடிகுன்றம் என்னக் குலவும்—மடிகொண்டு
மாறி யிருந்தான் வருகுடியும் குன்றவசை
ஏறி யழியும் இழிந்து. (அ)

இ—ள்

சோம்பல் இன்றி மதியூகமாய் முயன்று வருகின்றவன் குடி பொருளும் புகழும் சுரந்து உயர்ந்த மலைபோல் சிறந்து விளங்கும்; சோம்பி நின்றவன் குடி இழிவாய் அழியும் என்பதாம்.

ஒருவனுடைய சீவிய வாழ்வு வளமாய்ச் செழித்து விளங்குவதற்குப் பலவகை அனுகூலங்கள் தேவையா யிருக்கின்றன. வெளியே மருவி மிளிர்கின்ற பொருள் நிலைகள் யாவும் சரியான காரண வுரிமையைக் கருதி நிற்கின்றன. மூல காரணங்களை முன்னிட்டே ஞால வாழ்வுகள் யாண்டும் இயங்கி வருகின்றன.

செல்வ வளங்கள் கல்வி நலங்கள் அதிகார அமைதிகள் முதலிய உயர் நிலைகள் எல்லாம் கருமங்களின் வழியாகவே மருமமாய்க் கனிந்து ஒளிர்கின்றன. வித்திலிருந்து விளைவுகள் எழுதல் போல் வினைகளிலிருந்து போகங்கள் எழுகின்றன. வினைப் போகமே ஒரு தேகம் என்றது அரிய பல நுண் பொருள்களை நுனித்துணர வந்தது. உயிர்கள் செய்துள்ள நல்வினை தீவினைகளின் பயன்களை அனுபவிக்கவே உடல்களைத் தாங்கி உலகில் அவை உலாவுகின்றன. தான் செய்த குற்றத்தின் பயனை அனுபவித்துக் கழித்தற்கு ஒருவனுக்குச் சிறைக் கூடம் அமைந்திருத்தல்போல் வினைப்பயன்களைத் துய்த்துக் கழிக்க உயிர்களுக்கு உடல்கள் அமைந்திருக்கின்றன. பிறவிச் சிறை என மனித தேகத்தை இனிது குறித்திருப்பது கருதி யுணர வுரியது.

"இச்சிறை பிழைப்பித்து இனிச் சிறை புகாமல்
காத்தருள் செய்ய வேண்டும்"

என்று கடவுளை நோக்கிப் பட்டினத்தார் உருகி வேண்டியிருக்கிறார்; ஆகவே மானிட வாழ்வின் துயர நிலைகளை அறிந்து கொள்ளலாம். உண்மை தெரிய உரிமை தெரிகின்றது.

தீய வினைகள் துன்பங்களை விளைத்து வருதலால் அவை பாவங்கள் என அஞ்ச நேர்ந்தன. நல்ல கருமங்கள் யாண்டும் இன்பங்களை நல்கி வருகின்றன. தருமம் தானம் தவம் வேள்வி என்பன எல்லாம் மனம் மொழி மெய்களால் இனிது மருவி வருகிற புனித கருமங்களேயாம். கருதிய எதையும் உறுதியாக உதவி வருதலால் கருமம் கற்பகதரு என வந்தது.

நல்வினை என்னும் நன்பொற் கற்பகம் மகளிர் என்னும்
பல்பழ மணிக்கொம்பு ஈன்று பரிசில் வண்டு உண்ணப்பூத்துச்
செல்வப் பொற் சிறுவர் என்னும் தாமங்கள் தாழ்ந்து நின்றது
ஒல்கிப்போம் பாவக்காற்றின் ஒழிகஇப் புணர்ச்சி என்றான்.

(சிந்தாமணி, 2728)

சிறந்த மனைவி, உயர்ந்த மக்கள், நல்ல செல்வங்கள், இனிய போகங்கள் யாவும் நல்வினையாகிய கற்பகம் நல்கியருளும் என இது உணர்த்தியுள்ளது. யாண்டும் இன்ப மணம் வீசிக் குளிர் நிழல் விரிந்து பசுமை சுரந்து செழித்துப் பூத்துப் பழுத்துத் தழைத்திருக்கும் அந்த நல்ல குடி வாழ்வில் பாவக் காற்று படின் பரிசு குலைந்து போம் என்றதனால் தீமையால் நேரும் இழிவு நிலைகள் எளிது தெளியலாம்.

புனிதமான நல்ல கருமமே மனித வாழ்வை மகிமைப்படுத்தி வருகின்றது. செயல் இழந்து இழிந்திருந்தவன் மயலுழந்து ஒழிந்து போகின்றான்.

ஊக்கமும் உணர்ச்சியும் உழைப்பும் உயர்ச்சிகளின் உயிர்ப்புகளாயுள்ளன. உயர்ந்தவர்களாய் உலகில் சிறந்து விளங்குகின்றவர்பால் இந்தத் தன்மைகள் நன்கு சுரந்திருக்கின்றன.

மடியும் மடமையும் மறதியும் மனித வாழ்வை இழிவுபடுத்தி விடுதலால் அவை குடிகேடுகள் என முடிவாகியுள்ளன. படியேறி மேலே போகின்றவர் இப்பழி நிலைகளை அடியோடு நீக்கி எவ்வழியும் ஊக்கி முயன்று ஒளி புரிந்து மிளிர்கின்றார்.

மடி இன்றி ஊக்கி மதியூன்றி என்றது உயர்ந்த முயற்சியாளனுடைய சிறந்த நீர்மை சீர்மைகளைக் கூர்மையாக ஓர்ந்து கொள்ள வந்தது. உணர்ச்சியோடு ஊக்கி முயல்பவர் அரிய பல செல்வங்களையடைந்து உயர்ந்து விளங்குவர் ஆதலால் அவர் பிறந்த குடியும் பெருமை மிகப் பெற்றது.

குடி குன்றம் என்னக் குலவும்.

மடியின்றி மதியூன்றி முயன்று வருபவனுடைய குடி பல வகைகளினும் உயர்ந்து நெடிது ஓங்கி நிலவும் என்பதை இந்த உவமை உணர்த்தி நின்றது. குன்றம் = மலை.

சோம்பலின்றி முயன்று வருபவனிடம் செல்வம் பெருகி வரும் ஆதலால் மடியிலான் குடி வளங்கள் பல சுரந்து அதிசய நிலையில் உயர்ந்து எவரும் துதி செய்யும்படி துலங்கி நிற்கின்றது.

"மடியிலான் செல்வம்போல் மரன்நந்த; அச்செல்வம்
படியுண்பார் நுகர்ச்சி போல் பல்சினை மிஞிறு ஆர்ப்ப"
(கலி, 35)

வசந்த காலத்தில் மரங்கள் குளிர்ச்சியாய்த் தழைத்து நின்ற நிலைகளை இது உணர்த்தியுள்ளது. சோம்பல் இல்லாதவனிடம் செல்வ வளங்கள் பெருகி மிளிர்தல் போல மரங்கள் பலவகை மலர்கள் பூத்துச் செழித்து நின்றன; அந்த உழைப்பாளி செல்வத்தை எல்லாரும் உண்டு மகிழ்வது போல் வண்டுகள் அங்கே ஒலித்து உலாவின என விளக்கி யிருக்கும் இதன் அழகை நுனித்து நோக்குக. மடியின்மையோடு ஊக்கமும் கலந்தபோது தான் ஆக்கம் பெருகி வரும் ஆதலால் அது அயலே மருவி வந்தது.

"ஊக்க வேந்தன் ஆக்கம் போல
வீக்கம் கொண்டு வெம்மைய வாகி
இலைப்பூண் திளைக்கும் ஏந்திள முலையள்."
(பெருங்கதை, 3-5)

ஓர் அரசகுமாரியின் தனங்களைக் குறித்து வந்துள்ள இதில் ஊக்க வேந்தன் ஆக்கம் உவமையாய் வந்துள்ளது. ஒப்பின் நுட்பம் ஓர்ந்து உணரத்தக்கது. காவியக் கவிகளுடைய சொல்லும் பொருளும் சீவிய நிலைகளைத் துலக்கி ஓவியக் காட்சிகளாய் ஒளி புரிந்து எவ் வழியும் சுவை சுரந்து வருகின்றன.

யாரும் மடிமண்டி யிருக்கலாகாது; எல்லாரும் ஊக்கி உழைக்க வேண்டும்; யூகமாய் முயன்று ஆக்கங்கள் பல அடைந்து யாவரும் பாக்கியசாலிகளாய்ப் பாரில் வாழ வேண்டும் என்பதை நூல்கள் பல வழியாகப் போதித்திருக்கின்றன.

சிறிய பிராணிகளும் உரிமையோடு உழைக்கின்றன. சோம்பலின்றி உழைப்பதில் எறும்புகள் தலை சிறந்து நிற்கின்றன.

தமக்கு வேண்டிய இரையைப் பருவ காலத்தில் சேமம் செய்து வைத்துக் கொள்கின்றன. உழைப்பிலும் பிழைப்பிலும் சீர்மை யடைந்துள்ளமையான் சீவிய வாழ்வுக்கு அவற்றின் நீர்மை எடுத்துக் காட்டாக வந்துள்ளது.

வேலை செய்யாமல் சோம்பியிருக்கும் ஒரு மடியனுக்கு எறும்பின் நிலைமையைச் சுட்டிக் காட்டி ஒரு பெரியவர் அரிய நீதியை இனிது போதித்திருக்கிறார்.

"Go to the ant, thou sluggard: consider her ways, and be wise." (Bible)

"சோம்பேறியே! எறும்பினிடம் போய் அதன் தொழில் முறைகளை நோக்கித் தெளிவடைந்து கொள்" என்று சாலமன் என்னும் யூத மன்னன் ஒரு மடியனைப் பார்த்து இவ்வாறு கூறி யிருக்கிறார். மடி மனிதனை எறும்பினும் இழிஞனுக்குகின்றது.

மடியுள் மிடியும் மடியின்மை யுள்ளே
முடியும் குடியாய் முடியும்—படியை
இனிது தெளிந்தே இளிவில் இழியா
மனிதன் மகிமை பெறும்.

மடியன் மிடியனாய் இழிகின்றான்; மடியின்றி முயல்பவன் முடி மன்னனாய் உயர்கின்றான். இந்த உண்மையை யுணர்ந்து உய்தி பெறுக.

---

479\. மாரி எனவழங்கும் வள்ளல் உறவெய்தி
நேரில் இருந்தாலும் நீள்வறுமை—தீரும்
வழியின்றி அந்தோ மடியார் அடியோடு
அழிகின்றார் என்னே அது (௯)

இ—ள்

மேகம் போல் வழங்குகின்ற உயர்ந்த உபகாரிகள் உரிமை யோடு உதவி புரிந்தாலும் மடியர் மிடி தீர்ந்து வாழார்; குடி தாழ்ந்து அடியோடு அழிந்தே போவர் என்பதாம்.

சோம்பல் ஒரு கொடிய நோய்; அதற்கு இடங் கொடுக்க லாகாது; கொடுத்தால் குடியைக் கெடுத்தே விடும். மடியோடு சிறிது நேரம் பழகினும் உணர்வு குடி போய் உள்ளம் பழுதாக நேர்கின்றது. உயிர் நிலை பாழாகின்றது.

மடிகொண்ட மனம் மடமை மண்டி இழி நிலைகளில் அழுந்தி விடுதலால் சோம்பேறி ஒன்றுக்கும் உதவாமல் ஊனமாய் ஒழிந்து போகின்றான். யாதொரு முயற்சியுமின்றி உள்ளம் கூம்பி ஒடுங்கி யிருக்கும் நிலையைச் சோம்பல் என்று சொல்லுகின்றோம்.

தூங்கல் அசைதல் அலசுதல் சோம்பே;
சடம் மடி தள்ளா வாரமும் தகுமே. (பிங்கலந்தை)

சோம்பலுக்கு இவ்வாறு பேர்கள் வந்துள்ளன. சடம் என்று குறித்தது உயிருணர்ச்சி குன்றி மூடமாய் முடங்கி யிருத்தல் கருதி. ஊக்கி முயல்வது உயிர் நிலையாயுள்ளது; அஃது இல்லாது அயர்வது உயிரற்ற சவ நிலையாகின்றது.

சிற்றெறும்பு ஆதியாச் சீவ கோடிகள்
முற்றுமெய் யுழைத்துயிர் முறையிற் காக்குமால்
சற்றுமெய் அசைவிலாச் சழக்கர் ஆருயிர்
அற்றஓர் சவம்கொலோ? அசரமே கொலோ? (1)

விடக்குறுஞ் சடம்பல வேலை செய்தற்கா
நடக்கவும் ஓடவும் நனி யுறுப்புகள்
மடக்கவும நீட்டவும் வாய்ந்ததால் சும்மா
கிடக்குமெய்ச் சோம்புளோர் கேடுளார்களே. (நீதி நூல்)

சோம்பலுடையவர் பல வகையிலும் இழிந்து பாழ்படுதலால் அந்தப் பரிதாப நிலைகளை நினைந்து மேலோர் பரிந்து இரங்குகின்றனர். மடி விழைய மிடி விளையும் என்னும் பழமொழியால் வறுமையும் துயரமும் வசையும் பெருகிச் சிறுமை யடைந்து மடியர் மறுகி அலைவர் என்பது அறியலாகும்.

மடியர் அடியோடு அழிகின்றார்.

என்றது அவரது குடிகேடு தெரிய வந்தது.

மடி புகுந்த போதே அறிவொளி இழந்து மனிதன் இருளடைந்து போகின்றான்; போகவே எவ்வகையிலும் உய்வின்றி அவன் இழிந்து கழிந்து அழிந்து ஒழிகின்றான்.

செத்த சவத்தை எழுப்ப இயலாது; அதுபோல் மடியில் மடிந்தவரைப் படியில் எழுப்பி வாழ வைக்க முடியாது.

படியுடையார் பற்றமைந்தக் கண்ணும் மடியுடையார்
மாண்பயன் எய்தல் அரிது. (குறள், 606)

உலகம் முழுவதும் ஆளுகின்ற அரசருடைய திரு அமைந்தாலும், உறவு நேர்ந்தாலும் மடியுடையார் அவற்றால் யாதொரு பயனும் அடையார்; என்றும் அவர் மிடியராய் இழிந்தே போவர் என நாயனர் இங்ஙனம் உணர்த்தியுள்ளார். படி=பூமி. சீவ கோடிகள் படிந்திருப்பது என்னும் ஏதுவான் வந்தது. படி முழுதும் கிடைத்தாலும் மடியுடைய இழுதையர் மாண்பயன் எய்தார் என்றதனால் அவரது ஊனமான ஈன நிலையை உணர்ந்து கொள்ளலாம். உள்ளம் மடிய உயர்வு மடிந்தது.

கண் ஒளி இழந்து குருடனயிருப்பவன் எதிரே கதிரவன் ஒளி வீசி நின்றாலும் அதனால் அவன் யாதொரு பயனும் பெறான்; அதுபோல் எண் ஒளி இழந்து மடியனயுள்ளவனுக்கு எவர் உதவி செய்தாலும் அவன் உயர் நிலையை அடையான் என்க.

உள்ளம் ஊன்றி உழைப்பவன் ஒளி மிகுந்து உயர்ந்து வருகின்றான்; அங்ஙனம் உழையாமல் மடிந்திருப்பவன் எள்ளல் அடைந்து இழிந்து கெடுகின்றான். தன்னை மருவினவனை மானம் மரியாதைகளை அழித்து மனிதத் தன்மையை ஒழித்து ஈனன் ஆக்கி விடுதலால் மடி எவ்வளவு இளிவுடையது! எத்துணை அழிவினது! என்பது எளிது தெளியலாகும்.

பொல்லா மடியின் புலைவாய் புகினிலைகள்
எல்லாம் மடியும் இடிந்து.

சோம்பலில் ஒருவன் சுவை கண்டான் ஆனல் அவன் பின்பு யாண்டும் நவைகளே கண்டு நாசம் அடைகின்றான். அந்த நீசத்தை நேராமல் நெஞ்சம் தேறி நெறியே முயன்றால் அரிய பேறுகள் அவனிடம் உரிமையோடு பெருகி வருகின்றன.

---

480. நெஞ்சில் மடிபுகின் நீசம் குடிபுகுந்து
பஞ்சில் எரிபடிந்த பாடாகி—மிஞ்சும்
குடியும் குலமும் குலைந்து சிதையும்
படியறிந் துய்க பரிந்து. (ம)

இ—ள்

நெஞ்சில் மடி புகுந்தால் பஞ்சில் எரி புகுந்தது போல் மனிதன் கரிந்து குடியும் குலமும் அழிந்து ஒழிவான் என்பதாம்.

ஒருவன் உயர்ந்து வாழ்வதும் இழிந்து தாழ்வதும் அவனுடைய உணர்வு நிலைகளால் உளவாகின்றன. நல்ல உணர்ச்சிகள் நலம் பல தருகின்றன; தீய எண்ணங்கள் தீங்குகளை விளைத்து விடுகின்றன. இன்பமும் புகழும் எய்த விரும்புகின்றவன் துன்பமான இழி நினைவுகளை அடியோடு ஒழித்து விட வேண்டும்.

மனிதனுடைய எல்லா நிலைமைகளுக்கும் நெஞ்சமே தஞ்சமாயுள்ளது. கண்ணில் மாசுபடின் அது குருடு பட்டு ஒன்றும் தெரியாமல் குன்றி விடுகின்றது; அவ்வாறே நெஞ்சில் தீமை புகின் அது நிலை குலைந்து பாழ்படுகின்றது.

நெஞ்சில் மடிபுகின் நீசம் குடி புகும் என்றது சோம்பலால் விளையும் இழி நிலைகளையும் பழி கேடுகளையும் விழிதெரிய விளக்கி நின்றது. அரிய பல மேன்மைகளை விளைத்தருள உரிய உள்ளத்தில் மடி புகுந்தால் அது புல்லிதா யிழிந்து புலையுறுகின்றது; உறவே அந்த மனிதன் எந்த வழியிலும் ஈடேறாமல் இழிந்தே போகின்றான். சிந்தனை குன்றவே நிந்தனைகள் நேர்கின்றன.

குடி மயக்கம் போல் மடி மயக்கமும் அறிவைக் கெடுத்து, ஆள்வினையைத் தொலைத்து வாழ்வினைப் பாழாக்கி விடுதலால் மடி ஒரு கொடிய தீமை ஆகின்றது.

மடி ஒன்று உளதேல் வல்விரைந்து
　　வகுக்கும் தொழிலை நீட்டிக்கும்;
கடியு மறவி துயில் விளைக்கும்;
　　கலதிதனைச் சேர்த்திடும்; பகைவர்க்கு
அடிமை புகுத்தும்; குடி கெடுக்கும்;
　　அதனை விடுப்பின், ஆண்மையினும்
குடிமை யிடத்தும் வேறுளவாம்
　　குற்றம் பலவும் ஒழிக்குமே. (விநாயக புராணம்)

சோம்பலால் விளையும் கேடுகளையும், அதனை ஒழித்தபோது உளவாம் நன்மைகளையும் இது உணர்த்தியுள்ளது. கலதி=மூதேவி.

மடி மூதேவியைச் சேர்த்து விடும் என்றதனால் அதன் குடி கேடுகளைக் கூர்ந்து ஓர்ந்து கொள்ளலாம். வேலைகளை விரைந்து செய்யாதபடி காலத்தைக் கடத்தும்; மறவியில் தள்ளி மயக்கத்தில் ஆழ்த்தும்; உறக்கத்தில் வீழ்த்தும்; சூம்படைந்து கூம்பி

யிருக்கச் செய்யும்; மூதேவியைக் கூட்டும்; பிறர்க்கு அடிமை ஆக்கிப் பிழை மிகக் காட்டும்; குடியைக் கெடுத்துக் குலத்தை அழித்து விடும் என மடியின் இயல்புகள் இதில் விளக்கப் பட்டுள்ளன.

இத்தகைய கொடிய மடியைக் கடியாமல் களித்திருப்பது நெடிய மடமையாம். இனியது என்று தழுவின் இன்னுமையில் ஆழ்த்தி இழிபழிகளில் வீழ்த்தி விடும் ஆதலால் அதனை அஞ்சி ஒழிக்க வேண்டும்.

பஞ்சில் எரி படிந்த பாடு.

என்றது நெஞ்சில் மடி புகுந்தபோது அந்த மனிதனுக்கு நேருகின்ற அழிவு நிலையை இது தெளிவுறுத்தியது.

சோம்பலால் எல்லாத்தீமைகளும் விளைகின்றன. முயற்சியில் ஊக்கி மேலெழுகின்ற நல்ல உணர்ச்சிகளை அது ஒழித்து விடுகின்றது; அவை ஒழியவே மனிதன் நவையுள் இழிந்து நாசம் அடைய நேர்கின்றான்.

ஒரு குடியில் தலைவனுயிருக்கின்றவனை மடி மருவிக் கொண்டால் அந்தக் குடியிலுள்ளவர் அனைவரும் நிலைகுலைந்து படு துயரங்களை அடைகின்றனர். தீய ஒரு மாயநோயாய் மடி மருவியுளது.

படி அறிந்து உய்க என்றது மடியினல் விளையும் குடிகேடுகளை உணர்ந்து அதனைக் கடிது களைந்து நெடிது முயன்று நிலையில் உயர்க என்றவாறு. கருதி உயராதவன் கதி யழிகின்றான்.

மனம் ஏதாவது ஒன்றைப்பற்றிச் சலித்துக் கொண்டே யிருக்கும். அந்த அந்தக்கரண விருத்திகளைத் தொழில் முயற்சிகளில் செலுத்தின் உயர் பலன்கள் உளவாம்; அங்ஙனம் செலுத்தாதுவிடின் வறிதே பாழாம். எண்ணங்களை நல்ல வழிகளில் பயன் படுத்தாமல் பாழாக்குவது அரிய மனித வாழ்வை அநியாயமா நாசம் செய்த படியாம்.

ஒரு தொழிலும் புரியாமல் வறிதே இருப்பது மடி என வந்தது. அவ்வாறு மடிந்திருப்பவரைச் சோம்பேறிகள் என்று உலகம் இகழ்ந்து கூறுகின்றது. இங்கே ஓர் உண்மையை நாம் நுண்மையாக ஓர்ந்து உணர்ந்து கொள்ள வேண்டும்.

வெளியே யாதொரு கருமமும் செய்யாமல் ஆன்ம சிந்தனை யோடு அடங்கியிருக்கும் சாதுக்களும் உளர். இந்த நல்ல சாதுக் களை அந்தப் பொல்லாத சோதாக்களோடு சேர்த்து எண்ணி விட லாகாது. அரிய தன்மையை உணர்வது பெரிய நன்மையாம்.

ஞான நிலையில் அடங்கியுள்ள இனிய அமைதிக்கும் ஈனச் சோம்பலுக்கும் எவ்வளவோ வேறுபாடுண்டு. ஒளியும் இருளும் என முறையே அவை தெளிவும் இளிவும் மருவியுள்ளன.

உலக காரியங்களை எல்லாம் ஒழிய விட்டுப் பரமன் ஒருவ னையே பற்றி அமைதியாய் இருப்பவர் உலகக் காட்சியில் சோம் பர் போல் தோன்றினும் உணர்வுக் காட்சியில் அவர் அரிய பெரிய அதிசய நிலையினர். எவரும் துதி செய்யுந்திருவினர்.

மேம்பொருள் போகவிட்டு மெய்ம்மையை மிகவுணர்ந்து
ஆம்பரிசு அறிந்து கொண்டு ஐம்புலன அகத்தடக்கிக்
காம்பறத் தலைசிரைத்துன கடைத்தலை இருந்து வாழும்
சோம்பரை யுகத்திபோலும் சூழ்புனல் அரங்கத்தானே.

(திருமாலை 38)

எல்லாக் கருமங்களையும் கைவிட்டு இறைவன் திருவருளையே நாடியிருக்கும் துறவிகளைச் சோம்பர் என இதில் சுட்டியிருக்கிறார். இட்டுள்ள பெயரில் சுவை சொட்டியுள்ளது. தெய்வம் உவந்து காணும் என்றதனால் அவரது திவ்விய மகிமை தெரியலாகும்.

ஈனமாய்ச் சோம்பியிருப்பவர் வெளியே சும்மா இருப்பது போல் தோன்றினும் அவருடைய உள்ளம் இழிவான பழிவழி களிலேயே உழலும்; அல்லது பாழாய் மடிந்து கிடக்கும். இருண்டு மருண்டு இழிந்துள்ள அது தெருண்டு தெளிந்து உயர்ந் துள்ள அடக்கத்தோடு எவ்வழியும் யாதும் ஒவ்வாது.

சிந்தையை அடக்கி ஞானமாய் ஒடுங்கியிருப்பது மிகவும் அரிய செயலையாம். இந்த அமைதியில் ஆன்ம ஒளி மிகுந்து பேரானந்தம் பெருகி எழுகின்றது. உலக நாட்டம் ஒருவிப் பரம் பொருளோடு மருவியுள்ளமையால் உயிர் அதிசய இன்பமாய்த் துதி செய்ய நின்றது. யோகம் தியானம் சமாதி என்னும் பதங்கள் பரமான்வோடு ஆன்மா கலந்து மகிழும் விதங்களைக்காட்டியுள்ளன.

சும்மா இருக்கச் சுகம்சுகம் என்று சுருதி எல்லாம்
அம்மா நிரந்தரம் சொல்லவும் கேட்டும் அறிவின்றியே
பெம்மான் மவுனி மொழியையும் தப்பிஎன் பேதைமையால்
வெம்மாயக் காட்டில் அலைந்தேன் அந்தோ என் விதிவசமே.

சும்மா இருக்கச் சுகமுதய மாகுமே
இம்மாயா யோகமினி ஏனடா—தம்மறிவின்
சுட்டாலே யாகுமோ சொல்லவேண் டாங்கன்ம
நிட்டா சிறுபிள்ளாய் நீ. (2)

சும்மா இருப்பதுவே சுட்டற்ற பூரணமென்று
எம்மால் அறிதற்கு எளிதோ பராபரமே. (தாயுமானவர்)

சும்மா இருப்பதில் விளைகின்ற சுக போகங்களைத் தாயுமான வர் இவ்வாறு ஆர்வ மீதூர்ந்து கூறியிருக்கிறார். அரிய அனுபவங் கள் தெரிய வந்துள்ளன. உறுதியுண்மைகள் கருதியுணரவுரியன.

செம்மான் மகளைத் திருடும் திருடன்
பெம்மான் முருகன் பிறவான் இறவான்
சும்மா இரு சொல்அற என்றலுமே
அம்மா பொருள் ஒன்றும் அறிந்திலனே. (கந்தரனுபூதி 12)

சும்மா இரு என்று அருணகிரிநாதருக்கு முருகன் அருள் புரிந் துள்ள அதிசய நிலையை இது அறிவுறுத்தியுள்ளது. மனம் மொழி மெய்கள் அடங்கி ஒருமை எய்திப் புனித மகான்கள் தனிமையில் அனுபவிக்கும் ஆனந்த நுகர்வுகளை உரைகளால் உணர இயலா. மோன நிலையில் ஞான போகங்கள் விளைகின்றன.

சோம்பர் இருப்பது சுத்த வெளியிலே;
சோம்பர் கிடப்பது சுத்த ஒளியிலே;
சோம்பர் உணர்வு சுருதி முடிந்திடம்
சோம்பர் கண்டார்அச் சுருதிகண் தூக்கமே. (1)

தூங்கிக் கண்டார்சிவ லோகமும் தம்முள்ளே;
தூங்கிக் கண்டார்சிவ யோகமும் தம்முள்ளே;
தூங்கிக் கண்டார்சிவ போகமும் தம்முள்ளே;
தூங்கிக் கண்டார்நிலை சொல்வது எவ்வாறே? (2)
(திருமந்திரம்)

ஞான யோக நிலையில் தோய்ந்து பேரின்ப போகங்களை நுகர்கின்ற மோன சீலர்களைத் திருமூலர் இவ்வாறு காட்டி யிருக்

கிறார். சோம்பர் என இங்கே குறித்திருக்கும் பேரையும் சீரையும் கூர்ந்து ஓர்ந்து கொள்ளுகின்றோம்; உள்ளம் தேர்ந்து உவந்து நிற்கின்றோம்.

சிவ போதம் சிவமயமாய்க் கலந்த போது பிறவி தீர்ந்து போகின்றது; பேரானந்தம் ஆகின்றது.

வெளிநோக்கான உலகவாழ்வில் உரிய கருமங்களைச் செய்து பொருளும் புகழும் பெறுதலும், பருவம் வந்து பக்குவம் அடைந்தபொழுது பரமான்மாவைத் தோய்ந்து வர மானபதம் அடைதலும் மனித உரிமைகளாய் மருவியுள்ளன.

இம்மை மறுமை அம்மை என்னும் மும்மை நிலைகளும் செம்மையான கருமங்களினாலேயே சேர வருகின்றன. தக்க முறைகளில் கருதி முயல்பவர் மிக்க பயன்களை மருவி மகிழ்கின்றனர்.

இரவில் உறங்குவது பகலில் வேலை செய்பவே; இளைப்பு ஆறுவதும் களைப்பு மாறுவதும் உழைப்பில் ஏறவே ஆதலால் அந்த ஆறுதலும் மாறுதலும் இனிய பேறுகளாய் இசை பெற்றுள்ளன. வாழ்வின் அனுகூலங்களைச் சூழ்வோடு பயன் படுத்தாமல் வீணே பாழாக்கலாகாது.

உரிய கருமமே மனித தருமமாய் மருவியுளது.

பிறப்பின் உரிமையாய் அமைந்துள்ள கருமங்களை எவன் அறிவோடு கருதிச் செய்கின்றானோ அவன் திருவும் தேசும் பெறுகின்றான்; அங்ஙனம் செய்யாதவன் சிறுமையடைந்து சீரழிகின்றான். உற்ற கடமையை உணராதிருப்பது குற்றம் ஆகின்றது.

எவ்வழியும் ஈன மடியில் இழியாமல் ஞானமுடன் முயன்று மாணவர் திரளில் மகிமை பெறுக.

"Life without industry is guilt, and industry without art is brutality." (Ruskin)

"தொழில் இல்லாத வாழ்வு குற்றமாய்ப் பழி படுகின்றது; அறிவில்லாத உழைப்பு மாட்டுப் பாடாய் இழிவடைகின்றது" என ரஸ்கின் என்னும் ஆங்கில அறிஞர் இங்ஙனம் கூறியிருக்கிறார். உள்ளம் ஊன்றி உணர்ச்சியோடு முயற்சிகளைச் செய்துவரின் அந்த மனித வாழ்வு எவ்வழியும் உயர்ச்சியாய் ஒளி வீசி வருகிறது.

கருதி வருகின்ற அளவே மனிதன் உறுதியும் உரமும் பெறுகின்றான். கருதாது நின்று விடின் அவனுடைய நிலை விருதாவாய் விளிந்து போகின்றது. முயற்சி உயர்ச்சியாய் ஒளி புரிகின்றது; அயர்ச்சி இகழ்ச்சியாய் இளிவு தருகின்றது.

"The hand of the diligent shall bear rule; but the slothful shall be under tribute." (Bible)

"முயற்சியாளன் கை உலகத்தை ஆளும்; சோம்பேறி கை ஊழியம் புரியும்" என்னும் இது இங்கே அறிய வுரியது.

மடி புகுந்த பொழுதே மனிதன் ஒன்றுக்கும் உதவாதவனாய் ஒழிந்து போகின்றான். யாதொரு பயனும் அடையாமல் அவமே அவலமுறுதலால் அவனது நிலை துயரமாகின்றது.

"The soul of the sluggard desireth and hath nothing; but the soul of the diligent shall be made fat."

"சோம்பேறி விரும்பினும் ஒன்றும் கிடையாது; முயற்சியுடைய சீவன் என்றும் வளமாய்ச் செழித்திருக்கும்" என சாலமன் என்னும் யூத ஞானி இவ்வாறு கூறியிருக்கிறார்.

நீச மடியர் நிலைகுலைந்து நேர்ந்தகுடி
நாச மடைய நவையுறுவர்—தேசுடைய
சாந்த மதியர் தருமம் தவமருவி
ஏந்த லுறுவர் எதிர்.

அயர்ந்து இழியாமல் முயன்று உயருக.

---

இவ் அதிகாரத்தின் தொகைக் குறிப்பு.

தொழில் செய்யாமல் சோம்பியிருப்பது இழிவு.
உழைத்து உண்பதே உயர்வாம்.
உழைப்பில் உயர்ச்சிகள் உளவாகின்றன.
உழையாது ஒழிவது பழியாகின்றது.
அதனால் மேன்மைகள் ஒழிகின்றன.
மடி மண்டின் குடி குன்றும்.
வறுமையும் சிறுமையும் வந்து பெருகும்.
பழியும் துயரும் எவ்வழியும் எழும்.
சோம்பேறி தீம்பனாய் இழிகின்றான்.
நெஞ்சில் மடிபுகின் நீசம் குடிபுகும்.

௪அ வது சோம்பல் முற்றிற்று.

---

# நாற்பத்தொன்பதாம் அதிகாரம்

## மறதி.

அஃதாவது மறப்பினால் விளையும் இழிவு. மடியைப் போல் மறதியும் கெடு நிலையுடையது ஆதலால் அதனை ஒழித்து ஒழுக வேண்டும் என இது உணர்த்துகின்றது. குடி கேடாக மதிகேடு புரிவதில் மடியும் மறதியும் ஒரு படியின என்பது அதிகார முறைமையான் அறிய வந்தது. கடிய உரியன மருவி நின்றன.

481. நெஞ்சத் தொருமறதி நேரின் பலதுயர்கள்
அஞ்ச வருமென் றறிமினோ—தஞ்சமென
நின்ற நினைவொழியின் நேர்ந்த நலமெல்லாம்
ஒன்ற ஒழியும் உடன். (க)

இ—ள்

உள்ளத்தில் ஒரு மறதி நேரின் பல துயர்கள் நேருகின்றன; உறுதியான நல்ல நினைவு ஒழியின் எல்லா நலங்களும் உடனே ஒழிந்து போகின்றன என்பதாம்.

இது, மறவியால் விளையும் பிழைகளை உணர்த்துகின்றது.

ஒருவனுடைய உயர் நிலைகள் அவனது இயல் நலங்களால் இசைந்து வருகின்றன. புறத்தே தோன்றுகின்ற தோற்றங்களுக்கு உரிமையான காரணங்கள் அகத்தே ஊற்றமாய் உறைந்துள்ளமையால் மனிதனது ஏற்றம் இறக்கங்களுக்கு நெஞ்சம் நிலைக்களமாயுள்ளது.

நெஞ்சம் நன்கு திருந்திய பொழுது அந்த மனித வாழ்வு பெருந்தன்மைகள் நிறைந்து எங்கும் சிறந்து திகழ்கின்றன. ஊற்று நீர் போல் இனிய நினைவுகள் ஊறிவரும் அளவு அரிய மகிமைகள் ஏறி மிளிர்கின்றன. நினைவு மாறி இழிந்தால் எல்லா நிலைமைகளும்வேறாய் இழிந்தொழிந்து போகின்றன. நினைப்புஒருவனை வளம் பெறச் செய்கின்றது; மறப்பு வறப்பாக்கி விடுகின்றது.

மறதி என்றது மறப்பினை. நினைப்பிற்கு மாறானது மறதி என வந்தது. சிறிய ஒரு மறதியால் வாழ்க்கையில் பெரிய பிழைகள் பல நேர்ந்து விடும்ஆதலால் அது கொடிய வழு நெடிய பழி, கடிய துயர் என முடிவாகி நின்றது.

வழுக்கும் மறவியும் அயர்ப்பும் இவறலும்
மறப்பென் கிளவி மறலும ஆகும். (பிங்கலந்தை)

"இழுக்கும் சோர்வும புன்மையும் இகழ்ச்சியும்
வழுக்கும் கீழும் மறவியும் பொல்லாங்கும்
பொச்சாப்பு என்பதும் புகலுமப் பெயர்க்கே."

குற்றத்தின் பெயர்கள் இங்ஙனம் குறிக்கப்பட்டுள்ளன. மறப்பு மதிகேடாய் மூண்டு வாழ்வைச் சிதைத்துத் தாழ்வைச் செய்கின்றது. அதனால் அது குற்றம் என நேர்ந்தது.

உரிய காலத்தில் உரிய கருமத்தைக் கருதிச் செய்யாமல் மறந்திருப்பது மறதியாகின்றது; ஆகவே கரும வரவு கழிந்து போகின்றது; சிறுமை யிழிவுகள் செறிந்து கொள்ளுகின்றன.

தன் கருமத்தில் கண்ணும் கருத்துமாயுள்ளவன் முன்னுக்கு வருகின்றான்; அங்ஙனம் முன் எண்ணிச் செய்யாது மறந்து நின்றவன் பின்பு இன்னலுழந்து இழிந்து வருந்துகின்றான்.

பல துயர்கள் அஞ்ச வரும் என்றது நெஞ்சில் மறவியுற்றவனது நிலை தெரிய வந்தது. சிறிய மறப்பு பெரிய காரியக் கேடுகளாய் நெடிய துயரங்களை விளைத்து விடுகின்றது.

வாழ்வின் சூழல்களைக் கவனமாக் கருதி முன்னும் பின்னும் விழிப்போடு எண்ணிச் செய்கின்றவன் யாண்டும் ஆண்மையாளனாய் மேன்மை பெறுகின்றான்; அங்ஙனம் செய்யாமல் அயர்ந்து நின்றவன் காரியக் கேடனாய் இழிந்து பரிதாப நிலையை அடைகின்றான்.

முன்னுறக் காவாது இழுக்கியான் தன்பிழை
பின்னூ றிரங்கி விடும். (குறள், 535)

முன் அறிந்து காவாமல் மறந்திருந்தவன் பின்பு தன் பிழையை நினைந்து வருந்தி அயர்வான் என்னும் இது இங்கே அறிந்து கொள்ள வுரியது. இரங்கி விடும் என்றது இடையூறுகள் எதிர்ந்த பொழுது "ஐயோ! அப்பொழுதே செய்யாது போனேனே!" என்று பிற்பொழுது வெப்போடு வெய்துயிர்த்து நோதலை விழி எதிரே காட்டியது. மறதி மரண வேதனை யாகின்றது.

மறந்து விட்டவன் இறந்து பட்டவன் என்னும் பழமொழியால் மறப்பு மீட்ட முடியாத கேட்டை யுடையது என்பது தெளிவாம். வழுக்கியது இழுக்காய் இழிந்தே போகின்றது.

நினைப்பு விழிப்பாய் மேன்மை தருகின்றது.
மறப்பு இறப்பாய்க் கீழ்மை புரிகின்றது.

நினைவின் ஆற்றல் பெருகியுள்ளவர் உலக நிலையிலும் கலையறிவிலும் தலைமையாளராய் நிலவி நிற்கின்றனர்; அந்த ஆற்றல் குன்றினவர் யாண்டும் மங்கி யுள்ளனர்.

நினைந்து நோக்கும் தன்மை இன்மையினாலேதான் ஆடு மாடுகள் இழிந்த பிராணிகளாய்க் கழிந்து போயுள்ளன.

எதையும் விரைந்து மறந்து விடுகின்றவர் உயர்ந்த நிலைகளை அடைந்து கொள்ள முடியாது. ஞாபக சத்தி அறிவின் திருவாய் மருவியுள்ளது. அதனை உரிமையாக வுடையவர் அதிசய மேதைகளாய்த் துதிகொண்டு திகழ்கின்றனர்.

"Memory, the warder of the brain." (Macbeth)

"நினைவு, அறிவின் பாதுகாவலன்" என இது குறித்துளது.

"Dear son of memory, great heir of fame." (Milton)

"நினைவின் அருமை மகன்; கீர்த்தியின் தனி உரிமையாளன்" என மில்ட்டன் என்னும் ஆங்கிலக் கவிஞர் ஷேக்ஸ்பீயரைக் குறித்து இவ்வாறு கூறியிருக்கிறார்.

மன நிலையை மாண்புறுத்தி மதியை வளர்த்து மனிதனை உயர்த்தி வருதலால் நினைவு இனிய பாக்கியமாய் இசைந்திருக்கிறது. அதனை இழந்துள்ள அளவு மனிதன் இழிந்து நிற்கின்றான்.

மறதி பெரும்பாலும் மடி குடிகளால் நேர்கின்றது; செல்வக் களிப்பாலும் சிறுமைச் செழிப்பாலும் சேர்ந்து விடுகின்றது.

அகங்காரம் செருக்கு களிப்பு மமதைகளை யுடையவர் நிலைமைகளை மறந்து நெடுங்களியராய் நீண்டு நிற்றலால் மறதி மமதையின் மனைவி என வந்தது. மதக் களிப்பை உருவகம் செய்து வந்திருக்கும் பகுதி கலையுலகில் சுவை மிக வுடையது; உணர்வு நலங்களைத் தெளிவாக ஊட்டியருளுகின்றது. அயலே வருகின்றது.

நெடிய செல்வ முடைமை கொண்டு நெஞ்சிடைக் களிப்பதே
வடிவ மாகும் யானும், அம் மயக்கையே வளர்ப்பதாம்
கடிய தேவி மறதியும் கலந்த போதில் யாவரே
படியில் வானில் வெற்றியம் பதாகை நாட்ட வல்லரே? (1)

அஞ்சு சென்னி யுண்மையால் அரற்கு யானும் ஒப்பு என
நெஞ்சில் உன்னி மெய்மதத்த நீர்மையைக் கொடல்லவோ
கஞ்ச மன்ன கண்ணன்நாபி யுட் பிறந்த கடவுள் தான்
நஞ்சமுண்ட கண்டனால் ஓர் நான் முகத்தன் ஆனதே. (2)

ஆசுரூத செல்வமோடு அடுத்த வச்சி ராயுதன்
வாசநா றலங்கலைத் துர்வாசன் நல்க வாங்கி முன்
வீசுரூ எறிந்தது ஏறும் வேழமா மதம் கொலோ
ஏசுரூத தன்மதம் கொல் எம்மதம் கொல் என்பதே. (3)

நிகரில் அற்பர் சிந்தையூடு நின்று தூயர் நெறியையும்
இகழு விப்பன்; என்னொடே இறந்து போம்இவ் வுலகெனப்
புகலு விப்பன்; எவரொடும் புகுந்து போர் செய் விப்பன்; இவ்
அகலிடத்தை மேருவோடு ஓர் அணுவும் ஆக்குவிப்பனே. (4)

வந்தடர்த்தொர் சேதிராசன் மாலைஅன்று வைததும்,
அந்த வத்துவைச் சுயோத னாதி யோர் இகழ்ந்ததும்,
நந்தியைப் பழித்திலங்கை நாயகன் நவின்றதும்,
முந்து சத்த முனிவர் தம்மை நகுடன் அன்றுதைந்ததும்; (5)

அன்று வேலை எற்றி மாலை அடுசமர்க் கழைத்து நேர்
கன்று போர்ரிரந்து காளகண்டன் வெற்பலைத்து மேல்
சென்று வாலி தன்னொடும் செருத்திறம் புரிந்து சீர்
துன்று காயம் அன்று மாய்தல் துந்துபிக்கு வந்ததும்; (6)

பின்னும் இன்ன தன்மை செய்த பேரனந்த கோடியான்
மன்னுமிந்த மண்ணகத்தும வானகத்தும் அவையெலாம்
என்னையன்றி யாவரே இயற்றினோர்? இதன்றி என்
பன்னி என்னு மறதி மேன்மை எவருணர்ந்து பகர்வரே? (7)

அறிவு கற்ற கல்வி வாய்மை அன்பு முன்பு அடுத்த நல்
உறவு நட்பு ஒழுக்கம் மேன்மை ஒருவர் செய்த உதவி சீர்
பிறவும் இன்ன செய்கை மற்றது எவையும் நெஞ்சு பேர்வென
மறதி யுற்ற போது யாவர் மனிதர் தேவர் மதியுளார்? (8)

பிரகலாதன் மாயனோடு பின்புபோர் புரிந்ததும்
சரத வாழ்வு சுக்கிரீவர் தாமியைந்து இராமர்பால்
வரவு தாம தித்ததும் துரோணர் நட்பும் வாய்மையும்
துருவ தேயன் மாற்றிவந்த போதிகழ்ந்து சொன்னதும்; (9)

மகிழ்ந் தணைந்து நாளை நின்கண் வருதும் என்ற வாய்மையைச்
சகுந்தலைக்கு மகிணனர் தவிர்ந்தயர்த்த தன்மையும்
புகுந்தது எத்திறத்தில்? என்னோர் பூவையால் உளம் நினைத்து
இகந்த புத்தி யோரை இன்னம் எண்ணில் எண்ணிலோர்களால்

மதுவி னுள்ளும் அவினியாதி யானபன் மருந்தினும்
கதுவு புல்லர் வாழ்வினும் கலந்து வைகி உலகெலாம்
பொதுவினின் வசத்தினில் பொருத்தும் எம்மை யாவரே
எதிர் புகுந்து வெல்லவல்லர்? என்றிவ்வாறு இயம்பினான். (11)

(மெய்ஞ்ஞான விளக்கம்)

மோகன் என்னும் அரசனிடம் தனது ஆற்றலைக் குறித்துக் காட்டி மமதன் இவ்வாறு பேசியிருக்கிறான். தன் வலிமையும், தன்னுடைய மனைவியாகிய மறதியின் நிலைமையும் அவன் வியந்து கூறியதாகப் புனைந்து வந்துள்ள இந்தக் கவிகளில் பொதிந்துள்ள பொருள் நிலைகள் நினைந்து சிந்திக்கத்தக்கன.

மமதையாலும், மறதியினாலும் இழிந்து அழிந்தவர்களைத் தெளிவாக உணர்ந்து கொள்ள இவ் உருவகம் எளிதாய் அமைந்துள்ளமையால் எவர்க்கும் உரிமையோடு உவகை புரிந்து வருகின்றது. கூறியுள்ள குறிப்புகள் கூர்ந்து ஓர்ந்து கொள்ளவுரியன.

கடமைகளை மறந்து விடின் கடையனாக நேரும் ஆதலால் அந்த மடமையை மருவவிடாமல் மதியோடு வாழுக.

நினைந்தவன் நிதி பெற்றான்;
மறந்தவன் மதி கெட்டான்.

என்பது பழமொழி. நினைப்பு மறப்புகளால் மாந்தர் அடையும் நிலைகளை இதனால் இனிது ஓர்ந்து கொள்ளலாம்.

---

482. உற்ற கருமம் உரிய பருவத்தே
முற்ற வுணர்ந்து முடியாமல்—சற்றே
மறந்து விடினே மதிகேடு துன்பம்
நிறைந்து விடுமே நிலத்து. (உ)

இ—ள்

செய்ய வேண்டிய கருமத்தை உரிய பருவத்தில் கருதிச் செய்யாமல் சிறிது மறதியாயிருப்பின் பெரிய கேடுகள் பல நிலையாய்ப் பெருகி விடும் என்பதாம்.

பருவம் பக்குவம் என்னும் மொழிகள் அரிய இனிய பொருள்களுடையன. யாதொரு எல்லையும் இல்லாமல் எப்பொழுதும் காலம் ஓடிக் கொண்டேயிருக்கின்றது. யாராலும் அணை கோலி நிறுத்த முடியாத அந்தக் காலத்தைத் தக்க சமயத்தில் தனக்கு உரிமையாகப் பயன்படுத்திக் கொள்ளுகின்றவன் மிக்க பயனை அடைந்து மேன்மையாய் விளங்குகின்றான்.

கருத்தும் கவனமும் வாழ்வை வளம்படுத்தி வருவாயை விருத்தி செய்து வியனான பலன்களை விளைத்தருளுகின்றன. கூர்மையாக ஓர்ந்து செய்த பொழுதுதான் கருமங்கள் சீர்மையாய்ச் சிறந்து திகழ்கின்றன.

உரிய பருவத்தில் செய்கின்ற எதுவும் பெரிய சுவையாய்ப் பேரின்பம் தருகின்றது தக்க தருணத்தில் செய்கின்ற உழவன் மிக்க விளை பொருள்களை அடைகின்றான்; அங்ஙனம் சமையம் அறிந்து செய்யாதவன் வருவாய் குன்றி அவலமடைந்து நிற்கின்றான். கவலையுடைய அவன் பின்பு தன் பிழையை உணர்கின்றான். பருவம் தவறி விட்டது என்று பருவரலுறுகின்றான்.

காற்று உள்ள போதே தூற்றிக் கொள் என்னும் முதுமொழி காலத்தைப் போற்றி ஒழுகும்படி மனிதனுக்குப் புத்தி போதித்துள்ளது.

"Time and tide waits for no man"

"காலமும் அலையும் யாருக்கும் காத்து நில்லாது" என்னும் இது எல்லாருக்கும் நல்ல ஒரு நீதியைத் தெளிவாக உணர்த்தி நிற்கின்றது. பொழுது வழுவின் பழுது வழியும்.

அலை அடிக்கும் பொழுதே தலை முழுகிக் கொள்ளுக என்பது பழமொழி. காலம் வாய்க்கும் போதே காரியத்தைச் செய்து கொள்ளுகின்றவன் வீரியவானாகின்றான். மறந்தோ, அயர்ந்தோ நிற்பவன் சிறந்த பயனை அடையாமல் இழிந்தே போகின்றான்.

"There is a tide in the affairs of men,
Which, taken at the flood, leads on to fortune;
Omitted, all the voyage of their life
Is bound in shallows and in miseries"

[Julius Ceasar 4-3]

"உலக மக்களுக்கு ஒரு பருவ அலை உளது; அதனை உரிமையாகத் தழுவிக் கொண்டவர்களைப் பெரிய செல்வ நிலைகளில் அது இனிது சேர்த்தருளுகின்றது; தழுவாது நழுவவிட்டவர் வாழ்நாள் முழுவதும் வறுமைத் துயர்களில் மறுகி யுழல்கின்றனர்" என ரோமாபுரி வீரனை புருட்டஸ் இவ்வாறு ஒரு முறை கூறியிருக்கிறான். இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னரிருந்த ஒரு இராச தந்திரி பருவம் தவற விடின் படுதுயராம் என்று பதறியிருத்தலால் மறதியின் கொடுமை எளிதே புலனுகின்றது.

மறந்து விடின் துன்பம் நிறைந்து விடும்.

உற்ற சமையத்தை உரிமையாகப் பயன்படுத்தாமல் ஒருவன் மறந்து விட்டான் ஆனல் பின்பு அவன் இருந்து அழும் படியான கொடிய துயரங்கள் பெருகி விடும் என்க.

உரியதன் கருமத்தை ஓர்ந்து செய்பவன்
பெரியவன் எனவரும் பெருமை காண்கின்றான்;
கரியபுன் மறதியான் கடையன் ஆகியே
அரியநன் னலமிழந்து அவலம் ஆர்கின்றான்.

மறதியால் மனித வாழ்வு பாழ்படுகின்றது; அதனை மருவ விடாமல் மதி நலம் பேணுவது கதிநலம் காணுவதாம்.

உயிர் வாழ்வின உயர் நலங்கள் எல்லாம் ஊன்றிய உணர்வு நிலைகளால் உளவாகி வருகின்றன; இவ் வுண்மையை ஓர்ந்து நன்மையை மறவாமல் நாடிக் கொள்க.

---

483. நினைப்புநிலை எல்லாம் நெடிய திருவாய்
வனப்பு மிகுந்து வருமால்—நினைப்பிழந்து
நின்ற நிலையில் நிலையான கேடுபழி
என்றும் இழிவே எழும். (௩)

இ—ள்

மனம் தெளிந்து நினைக்கின்ற நினைவுகள் எல்லாம் நெடிய செல்வங்களாய் எழில் மிகுந்து வருகின்றன; நினைப்பு இழந்து நின்றால் பழிகளும் கேடுகளும் இழிவுகளும் எழும் என்பதாம்.

இது, விழித்து வேலை செய் என்கின்றது.

மாட மாளிகைகள், கூட கோபுரங்கள், கோவில்கள், வாவிகள் முதலாக இவ்வுலகில் காணப் படுகின்ற விழுமிய நிலைகள் எல்லாம் மனிதனுடைய நினைவின் விளைவுகளாகவே வெளியே தோன்றி ஒளி வீசியுள்ளன.

மானச சிருட்டிகளை நோக்கி வானகமும் வியந்து நிற்கின்றது. அகத்தின் எண்ணங்கள் புறத்தே எண்ணரிய வண்ணங்களாய் எதிரெழுந்து திகழ்கின்றன.

நினைவின் கூட்டங்கள் வாழ்வின் நீரோட்டங்களாய்ப் பெருகி வருகின்றன. எண்ணம் வறண்டால் எல்லாம் வறண்டு போகின்றன; போகவே வாழ்வு பாழாய்ச் சூனியமடைகின்றது.

இனிய நினைவுகள் அரிய காமதேனுக்களாய் இன்பம் சுரந்தருளுகின்றன. தான் கருதியதையே மனிதன் உரிமையாகப் பெறுகின்றான்.

உள்ளியது எய்தல் எளிதுமன் மற்றுந்தான்
உள்ளியது உள்ளப் பெறின். (குறள், 540)

இந்த வேத மந்திரத்தை ஈண்டு உள்ளம் கொண்டு ஊன்றியுணர வேண்டும். ஒருவன் எண்ணியதை எண்ணியபடியே யாண்டும் எளிதாக எய்தலாம்; ஆனால் அந்த எண்ணம் இன்ன வண்ணம் இருக்க வேண்டும் என இதில் உணர்த்தி யிருக்கும் உண்மையை உணருந்தோறும் மனத்தின் இயல்பும் நினைப்பின் நிலையும் வியப்பாய் வெளிப் படுகின்றன. விழித்து நோக்கிய கண் வெளியே ஒளியைக் காணுகின்றது; நினைத்து ஊக்கிய மனம் நேரே சீரைப் பெறுகின்றது.

உள்ளியது உள்ளப் பெறின் உரிய பொருள் ஓடி வரும்; மறந்து விடின் எல்லாம் இறந்து படும் என்க. மறப்பு கேடு ஆகின்றது; நினைப்பு ஆக்கமாய் நிலவுகின்றது.

நினைப்பு நிலை எல்லாம் நெடிய திரு

என்றது நினைவுக்கும் திருவுக்குமுள்ள உறவுரிமையை உணர்த்தி நின்றது. அரிய பெரிய செல்வங்கள் எல்லாம் மனிதன் கருதி முயன்றதிலிருந்தே பெருகி வந்திருக்கின்றன.

வறியனான ஓர் இளைஞன் ஒருநாள் மாலையில் மலைச் சாரல் வழியே நடந்து போனான்; அங்கே வானுற ஓங்கி வளர்ந்து நிற்

கின்ற நெடிய மரங்களைக் கண்டான்; குளிர் நிழலில் தங்கி உளம் மிக உவந்தான். சாரமான தரையில் வேரூன்றி யிருத்தலினாலே தான் அவ்வளவு செழிப்பாய் அவை சிறந்துள்ளன என்று தெரிந்தான். ஆண்டு ஒரு பெரிய நிலப் பகுதியை வளைந்து கொண்டு அரிய கனி மரங்களை வைத்து இனிய விளை பொருள்களை விளைத்தான். நல்ல விளைவுகள் வளமாய் உளவாயின; நாட்டு மக்களுக்கு ஊட்டமாய் உதவின; அதனால் அவன் பெரிய செல்வன் ஆயினான். வறியனாயிருந்தவன் ஒரு சிறிய நினைவினால் அரசரும் மதிக்கும் படியான உயர்ந்த திருவினை அடைந்து சிறந்து விளங்கினான்.

நெஞ்சைத் திறந்து நினைந்தவனுக்குப் பஞ்ச பூதங்களும் பரிந்து உதவி புரிகின்றன. மறந்திருந்தவனுக்கு யாதும் உதவாமல ஏதமாய் அவனை இகழ்ந்து விடுகின்றன. மறந்தவன் மண்ணாயிழிந்து மடிந்து போகின்றான்; நினைந்தவன் பொன்னாய் உயர்ந்து பொலிந்து விளங்குகின்றான்.

நிலைமையை நினைந்து பார்க்கின்ற எவரும் தலைமையில் உயர்ந்து கொள்ளுகின்றார். பாராதவர் பழி குருடராய்ப் பாழ்படுகின்றனர். பார்த்து வாழ்வது சீர் கதி ஆகின்றது.

மனித உருவில் பிறந்திருந்தாலும் நினைவு நலனை இழந்தவர் மிருகங்களாகவே இழிந்து மறுகியுழலுகின்றார்.

---

484. பாலப் பருவம் படியா திருந்தமையால்
வாலப் பருவம் வளரவே—ஞாலத்து
இருகால் விலங்காய் இழிமரமாய் நின்றாய்
ஒருகால் உணர்க வுடன். (௪)

இ—ள்

இளமையில் படியாமல் மறந்து இருந்தமையால் பின்பு இரு கால் மிருகமாய் இழிந்த மரமாய்ப் பெருகி நின்று பிழைபட நேர்ந்தாய்! இதனை உடனே உணர்ந்து திருந்துக என்பதாம்.

மனிதன் பல பருவங்களையுடையவன். உருவ நிலையில் ஒருவனாய்த் தோன்றினும் பருவ வரவுகளால் பிரிவினைகளும் பெயர்களும் மருவியுள்ளன. பிள்ளை, குழந்தை, மதலை, பாலன், சிறுவன், குமரன், காளை, மீளி, விருத்தன், கிழவன் என இவ்வாறு மனிதன் வெவ்வேறு நிலைகளில் விளங்கி நிற்கின்றான். கால வேற்றுமைகளால் பல வகையான கோலங்கள் தோற்றுகின்றன.

ஐந்து வயதிலிருந்தே நெஞ்சில் நினைவுகள் நிலை பெறுகின்றன. அறிந்து கொள்ள வேண்டியவைகளை அறிய உரிய பருவமாய் அது மருவியுள்ளமையால் பள்ளிப் பருவம் என உலகம் அதனைப் பாராட்டி வருகிறது. பாலன் படிக்கப் போகின்றான். அந்தச் சிறுவன் அறிவு பெருகி வரப் பெற்றோர்கள் வழி கோலி விடுகின்றனர். அந்த வழியே விழி திறந்து நோக்கி அவன் ஒளி பெற்று வருகின்றான். உள்ளத்தில் உறைந்து கிடக்கின்ற அறிவு மெல்ல மெல்ல விரிந்து அவனுக்கு மேன்மை புரிந்து வருகின்றது.

அங்ஙனம் கல்லாது நின்றவன் கல்லாய் இழிந்து புல்லாகின்றான். மடையன், மூடன் என்னும் இழி பெயர்கள் படியாதவனுக்கு உரிமையாகின்றன. ஆகவே அவனது பரிதாப நிலைகள் அறியலாகும். உயர்ந்த மனிதப் பிறவியில் பிறந்திருந்தும் உரிய பருவத்தில் படியாமல் மறந்து போனமையால் இழிந்து பட நேர்கின்றான். கலையறிவு கழிய நிலை இழிவாயது.

பாலப் பருவம் கல்விக்கு உரிமையான காலம் ஆதலால் அதனைப் பயன் படுத்தாமல் பழுதுபட விட்டவன் இழுதையாய் இழிந்தே போகின்றான். உரிய பருவம் நழுவவே பெரிய இழிவும் நெடிய பழியும் நிலையாய்த் தொடர்ந்தன.

இளமையில் கல் என்று ஒளவையார் இவ்வாறு சொல்லியருளியது அதன் செவ்வி கருதி. படிப்புக்கு உரிய பருவத்தைப் பயனுறத் தழுவிக் கொண்டவன் பெரிய மதிமானாய்ப் பெருமகிமையுறுகின்றான்; தழுவாது அயர்ந்து நின்றவன் இழிமடையனாய்ப் பழியடைகின்றான்.

"Time is not on our side unless we grasp it."

"உற்ற காலத்தை உரிமையாப் பற்றிக் கொண்டால் ஒழிய அது நமக்குப் பலன் தராது" என்னும் இது இங்கே நன்கு சிந்திக்கத் தக்கது.

கடவுளைப் போல் காலம் எல்லார்க்கும் பொதுவாயுள்ளது; அந்தப் பொழுதைக் கிழமையோடு தழுவி நின்றவன் விழுமிய பயன்களை அடைந்து கொள்கின்றான்.

இளமைப் பருவத்தில் கல்லாமல் பொழுதைப் பழுதே கழித்து வந்தவன் பின்பு பொல்லாதவனாய்ப் புலையுறுகின்றான்.

இருகால் விலங்கு: இழி மரம்.

என்றது பருவ காலத்தில் படியாமையால் விளையும் பழி நிலைகளை விழி தெரிய விளக்கியது. கல்வி மனிதனைத் தெய்வம் ஆக்குகின்றது; கல்லாமை அவனை மிருகம் ஆக்கி விடுகின்றது.

"கல்லாத மூடரைக் காணவும் ஆகாதே" (திருமந்திரம்)

என்று திருமூலர் இவ்வளவு கோபமாய் வெறுத்துக் கூறியது கல்லாமையால் நேரும் பொல்லாமைகளைக் கருதியே. எல்லாரும் கற்றுக் கொள்ள வேண்டும் என்னும் ஆத்திரத்தால் இவ்வாறு வார்த்தைகள் வெளி வந்துள்ளன.

முகத்தில் இரண்டு கண்கள் இருந்தாலும் கல்லாதவர் குருடரே; பொல்லாத மிருகங்களே என நாயனார் உள்ளம் நொந்து உரைத்திருக்கிறார். கல்வி கண்ணினும் இனியது.

தக்க கல்வியை இழந்தமையால் மக்கள் உருவினரேனும் மாக்கள் என நின்றனர். விதி நலங்களை விலகினவர் விலங்குகள் ஆயினர். இனிய கலை குறையக் கொடிய நிலை பெருகியது.

உணர்வு நலம் சுரந்து உள்ளத்தை ஒளி செய்து வருகின்ற கல்வியைப் பிள்ளைப் பருவத்திலிருந்தே பழகியுள்ளவன் பெரிய பாக்கியசாலியாய் அரிய மகிமைகளை அடைகின்றான்; பழகாதவன் பிறவிப் பெருமையையும் இழந்து வறிதே பிழைபடுகின்றான்.

ஒரு முறை பயின்றால் எழுமையும் தொடர்ந்து இதம் புரிந்தருளுகின்ற கல்வியை ஒருவன் மறந்திருப்பது பெரிய இழவாம். அங்ஙனம் இழந்து வளர்வதினும் இறந்து மறைவது மிகவும் இனிதாம். ஒளியுடன் வாழ்வதே உயர்ந்த வாழ்வாம்.

முழு மூடன், விழி குருடன், இழி மிருகம் என்னும் பழி மொழிகள் படியாதபடி இளமையிலேயே படித்து வருபவன் பிறவிப் பயனைப் பிடித்தவன் ஆகின்றான். அவ்வாறு படியாமல் மறந்து விட்டவன் பெருமடையனாய் இழிந்து படுகின்றான்.

சிவ ஒளி குன்றி நின்றதால் கல்லாதவனை மரம் விலங்கு என எல்லாரும் இகழ்ந்து சொல்ல நேர்ந்தனர்.

கல்லாது நீண்ட ஒருவன் உலகத்து
நல்லறி வாளர் இடைப்புக்கு—மெல்ல

இருப்பினும் நாயிருந் தற்றே இராஅது
உரைப்பினும் நாயகுரைத் தற்று. (நாலடியார்)

கவையாகிக் கொம்பாகிக் காட்டகத்தே நிற்கும்
அவையல்ல நல்ல மரங்கள்—சபை நடுவே
நீட்டோலை வாசியா நின்றான் குறிப்பறிய
மாட்டா தவன்நல் மரம். (மூதுரை)

கல்லாதவன் இவ்வாறு பொல்லாத இழிவுகளை அடைகின்றான். காலம் உள்ள பொழுதே கற்று மேலோராய் வருவோரையே ஞாலம் உவந்து கொள்கின்றது.

பருவம் அறிந்து ஒருவன் படியாமல் நின்றால் அவனுடைய வாழ்வில் பல இழிவுகள் படிந்து கொள்ளுகின்றன. எவ்வளவு செல்வங்களை எய்தினாலும் கல்லாத மூடன் என்ற அந்தப் பொல்லாத பழி அவனிடம் புகுந்து கொள்கின்றது. அவன் மகன் அவனும் வழி வழியாகவே படிப்பு வாசனை படியாது போகின்றது. போகவே அது ஒரு மூடக் கூட்டமாய் முடிந்து காட்டுள்ளே காட்டு மிருகங்களாய்க் கழிந்து நிற்கின்றது. பின்பு அக் கூட்டத்திற்குக் கல்வியை யூட்ட நல்லறிவாளர் பாடுபட்டாலும் பயன் படுவதில்லை.

வெள்ளம் மிகுதியாய்ப் பெருகி ஓடுகின்ற பெரிய நதியில் முதிய வேதியன் ஒருவன் ஒருநாள் நழுவி விழுந்தான். நீத்தம் அவனை ஈர்த்துப் போயது. அயலே ஆற்றங்கரையில் ஆடு மேய்த்துக்கொண்டு நின்ற ஒருவன் அதனைக் கண்டான்; விரைந்து நீரில் பாய்ந்து நீந்திப் போய் அந்த மறையவனைப் பிடித்துக் கரையில் கொண்டு வந்து சேர்த்தான்; ஆற்றித் தேற்றினான். தனக்கு உயிர் உதவி புரிந்த அந்த மேய்ப்பனை உவந்து நோக்கி "அப்பா! நான் உனக்கு என்ன கைம்மாறு செய்வேன்?" என்று கிழவன் உள்ளம் கரைந்து உரிமையோடு உரைத்தான். அப்பொழுது நிகழ்ந்த உரையாடல்கள் அயலே வருகின்றன.

மேய்ப்பன்: என் பையனுக்குப் படிப்புச் சொல்லிக் கொடுங்கள்.

வேதியன்: அவனுக்கு வயது என்ன?

மேய்ப்பன்: பதினாறு வயசு ஆகின்றது.

வேதியன்: என்ன படித்திருக்கிறான்?

மேய்ப்பன்: ஒன்றும் படிக்க வில்லை.

வேதியன்: ஏன்! பள்ளிக்கு அனுப்பவில்லையா?

மேய்ப்பன்: அந்த வழக்கம் இல்லை.

வேதியன்: என்ன இது! நீ படித்திருக்கிறாயா?

மேய்ப்பன்: நான் படிக்க வில்லை.

வேதியன்: உன் தந்தை படித்திருக்கிறாரா?

மேய்ப்பன்: அவரும் படியாதவரே.

வேதியன்: உன் பாட்டனாராவது படித்திருந்தாரா?

மேய்ப்பன்: அதுவும் கிடையாது.

வேதியன்: அப்படியானால், என்னை இந்த வெள்ளத்திலேயே தள்ளி விட்டுவிடு அப்பா!

இப்படி அம் முதியவன் சொல்லவே அவன் ஒன்றும் தெரியாமல் திகைத்து நின்றான். கல்வி வாசனை தன் தலைமுறையிலும் இல்லாத ஒருவனுக்குக் கற்பிப்பது மிகவும் கடினம்; அவனுக்குப் படிப்பு ஏறாது; அந்த மடையனுக்குச் சொல்லிக் கொடுக்க நேர்வது மரண வேதனையாம்; அதை விடச் செத்துப் போவது நல்லது என்பதை இங்ஙனம் சொல்லாமல் சொல்லியுள்ளான்.

ஒரு முறை படித்தது உயிருடன் கலந்து என்றும் உறுதி புரிந்தருளுகின்றது; அத்தகைய கல்வியை உரிமையோடு பயின்று கொள்ளாமல் மறந்து விடுவது என்றும் தீராத அல்லலேயாம்.

ஒருமுறை தொட்டது ஊழியும் ஒட்டி
வருமுறை யுடையது; வழிவழி வளர்வது;
தேவ ஒளியாய்ச் சீவஒளி தருவது;
கல்வி அமுதம் கையிகந்து விடினோ
அல்லல் இருளில் அழுந்தி
எல்லையில் காலம் இழிவுற வருமே.

ஒருகாலும் நீங்கா உயர்கல்வி இன்றேல்
இருகால் விலங்காய் இழிந்து—வருகாலம்
எல்லாம் பழியாய் இளிவுறலால் கல்லாமை
ஒல்லாமை செய்க உடன்.

மறதி புகாமல் உறுதி செய்து கொள்ளுக.

485. மறவாமல் நின்று மதித்துன்னைப் பேணின்
இறவாமல் என்றும் இனிதாய்ப்—பிறவாத
பேரின்பம் எய்தும் பெருமை மிகப்பெற்றுச்
சீரின்பம் காண்பாய் சிறந்து. (ரு)

இ—ள்

— உனது உண்மை நிலையை மறந்து விடாமல் உணர்ந்து பேணி உரிமை புரிந்து வரின் என்றும் நிலையான பெருமையும் தலையான பேரின்பமும் நேரே காண்பாய் என்பதாம்.

நினைப்பது மதிப்பது பேணுவது என்னும் இவை மனத்தின் செயல்களாய் மருவியுள்ளன. மனம் வாய் தேகம் ஆகிய இம் மூன்றின் வழியாகச் செயல்கள் நிகழ்ந்து கொண்டேயிருக்கின்றன. கரணங்கள் சலித்து வருதலால் கருமங்கள் விளைந்து வருகின்றன. பழுதான நினைவுகள் பழி பாவங்களாய் விளைகின்றன; புனிதமான எண்ணங்கள் புகழ் புண்ணியங்களாய்மிளிர்கின்றன. தூய நினைவுகள் அமுத பானங்களாய் இன்பம் தருகின்றன; தீய சிந்தனைகள் நஞ்சுத் துளிகளாய் நாசம் புரிகின்றன. எங்கும் பொல்லாத சூழல்களே பெருகியுள்ள இவ்வுலகில் நல்ல சிந்தனைகளில் பழகி வருபவன் நலம் பல காண்கின்றான்.

மனிதன் எல்லாவற்றையும் அறிய விரும்புகிறான்; தன்னை அறியாது போகின்றான். வெளி நோக்கில் களி மிகுத்துத் திரியும் வரையும் உள்நோக்கில் ஒளி யிழந்து நிற்கின்றான்.

உலக மயக்குகளில் துள்ளி ஓடுகின்ற மனத்தை மெல்ல மெல்ல நிறுத்தித் தன் உள்ளே எவன் உள்ளி நோக்குகின்றானோ அவன் பேரின்ப வெள்ளத்தை அள்ளி நுகரும் பாக்கியவான் ஆகின்றான். உண்மை தெரிய நன்மை பெருகுகின்றது.

மதித்து உன்னைப் பேணின் என்றது தன்னை இன்னான் என்று இனிது தெரிந்து உரிமையோடு பேணி வருதலைக் காணியாகக் காட்டியது. காணவுரியதைக் காணாதவன் வீணாகின்றான்.

உன்னை என்பது ஆன்ம நிலையை. அதன் பான்மை மேன்மைகளை உன்னியுணரின் உண்மைதெளிந்து உய்திகாண்கின்றான்.

சீவான்மா, பரமான்மாவின் திவ்விய ஒளி ஆதலால் அது எவ்வழியும் அதிசய ஆற்றல்களுடையது; அதன் அற்புத நிலையை

உணர்ந்து தெளிந்தவன் நித்திய முத்தன் ஆகின்றான்; உணராமல் ஒழிந்தவன் இழிந்த துயர்களில் விழுந்து ஈனமாய் உழல்கின்றான்.

தன்னை அறிவதே தத்துவ ஞானம் ஆம்.

தனது உண்மை நிலையை உணர்ந்த பொழுது புன்மை மயல்கள் பொன்றி ஒழிகின்றன. நான் என்னும் சொல்லுக்கு ஆன்மாவே உரிமைப் பொருளாயுள்ளது. அந்த அருமைப் பொருளை மறந்திருப்பது பெரிய மருளாய் நிற்கின்றது.

நித்தியமான பரிசுத்த சோதி என்று தன்னை உணர்ந்து ஆன்ம சிந்தனை செய்துவரின் அது பேரானந்த போகமாய்ப் பொங்கி வருகின்றது இந்தத் தத்துவ நிலையில் உள்ளவரே உத்தம ஞானிகளாய் உயர்ந்து திகழ்கின்றனர்.

தன்னை மறந்திருப்பதில் இன்னல்களும் இழிவுகளும் நிறைந்திருக்கின்றன. மறப்பு கொடிய கேடாய் மூண்டு நெடிய பிறவிகளுக்கு நிலையாய் முடிகின்றது. அவ்வாறு மறந்து மடிந்து போகாமல் நினைந்து தெளிந்தவர் நிரதிசய இன்பத்தை உரிமை செய்து கொள்ளுகின்றனர்.

"மறக்கின்ற தன்மை இறத்தலொப் பாகும்; மனமது ஒன்றில்
பிறக்கின்ற தன்மை பிறத்தலொப் பாகும்; இப் பேய்ப் பிறவி
இறக்கின்ற எல்லைக் களவில்லையே! இந்தச் சன்ம அல்லல்
துறக்கின்ற நாள்எந்த நாள்பரமே நின் தொழும்பனுக்கே.

நீயென நான்என வேறில்லை என்னும் நினைவருளத்
தாயென மோன குருவாகி வந்து தடுத்தடிமைச்
சேயெனக் காத்தனையே பரமே! நின் திருவருளுக்கு
ஏயென்ன செய்யுங்கைம மாறுளதோ சுத்த ஏழையனே. (2)

நான்என்று ஒருமுதல் உண்டுஎன்ற நான்தலை நாண என்னுள்
தான்என்று ஒருமுதல் பூரணமாகத் தலைப்பட்டு ஒப்பில்
ஆனந்தம் தந்துஎன் அறிவையெல் லாம்உண்டு அவசநல்கி
மோனம் தனைவிளைத் தால்இனி யாது மொழிகுவதே." (3)

(தாயுமானவர்)

தாயுமான சுவாமிகளுடைய ஆன்ம அனுபவங்களை இவ்வுரைகள் உணர்த்தி நிற்கின்றன. தாம பெற்ற பேரின்ப நுகர்வுகள் ஞான சீலர்கள் வாய்மொழிகளில் வான அமுதங்களாய்

வெளி வந்துள்ளன. பெரிய மகான்களுடைய உரைகள் அரிய பயன்களை அருளுகின்றன; அவை உரிமையோடு கருதியுணர வுரியன. ஆன்ம வுணர்வு ஆனந்த நிலையமாகின்றது.

தூய பரமனுடைய சேய் நீ. மாய வழிகளில் வழுவி வந்துள்ளாய்; உனது பழமையை நினைந்து கிழமையை உணர்ந்துகொள்க.

---

486. உள்ளத் தொதுங்கி உணர்வு நலங்களை
மெள்ளக் கவர்ந்து விரைந்தொளியும்—கள்ள
மறப்பென்னும் தீயோன் மருவாமல் காத்தால்
பிறப்பென்ப துண்டோ பிறகு. (சு)

இ—ள்

உள்ளத்தில் வந்து மெள்ளப் புகுந்து நல்ல அறிவுப் பொருள்களைக் கவர்ந்து கொண்டு விரைந்து மறைந்து போகின்ற மறதி என்னும் கள்வனைக் கடிந்து காத்தால் பின்பு பிறவி இல்லை.

இது, மறதி கொடிய கள்ளன் என்கின்றது.

அறிவு பெரிய பாக்கியம். அரிய பல உறுதி நலங்களை அது அருளி வருகின்றது. அதனை யுடையவனே எல்லாம் உடையவனாய் உயர்ந்து திகழ்கின்றான்; அஃது இல்லாதவன் யாதும் இல்லாதவனாய் யாண்டும் இழிந்து படுகின்றான்.

இத்தகைய அற்புதத் திருவை மறதி அதி சாதுரியமாய்க் கவர்ந்து கொள்கின்றது. சூரியனை மேகம் மறைத்தல் போல் அறிவை மறதி மறைத்துக் கொள்கின்றது.

"மதியை விழுங்கும் அரவென்ன என்றன்
மதியை மறதி விழுங்கிக்—கதியை
இழந்து திரிய இழைத்ததே இன்னல்
உழந்து தெளிந்தேன் உணர்ந்து."

"சந்திரனை விழுங்கிய பாம்புபோல் என் அறிவை மறதி விழுங்கிக் கொண்டது; கொள்ளவே நான் கதியை இழந்து கடுந் துயர் உழந்தேன்; பின்பு தெளிந்து உய்ந்தேன்" என உதங்கர் என்னும் முனிவர் இங்ஙனம் உரைத்திருக்கிறார்.

இறைவனோடு தமக்கு உள்ள உறவுரிமையை மறந்து உலக மயக்கில் விழுந்து பலகாலமும் உழந்து திரிந்து முடிவில் உண்

மையை உணர்ந்து உய்தி கண்டபோது அம் மாதவர் மகிழ்ந்து கூறிய வாசகமாய் இப் பாசுரம் ஈண்டு வந்துள்ளது.

தன்னுடைய உண்மை நிலையை மறந்திருக்கும் வரையும் இன்னல் நிலைகளில் இழிந்து பிறந்து அழிந்து அலைந்து அலமந்து உழல்வர் என்றதனால் சீவர்களுடைய பரிதாப நிலைமைகளைத் தெரிந்து கொள்ளலாம். ஒளிபுகும் அளவும் இருள் பெருகியுளது.

உயிர்க்கு உறுதியான அறிவை மறதியால் இழந்து விடுவது பெரிய இழவு ஆகின்றது. அந்தக் கேடு நேராதபடி விழிப்போடு நாடிக் காப்பவர் நலம் பல காண்கின்றார்.

கள்ள மறப்பு என்னும் தீயோன்.

என இங்ஙனம் உருவகம் ஆக்கி உரைத்தது மறதியின் இயல்பும் செயலும் கருதியுணர. யாரும் அறியாதபடி மெல்லப் புகுந்து அருமைப் பொருள்களைக் கவர்ந்து கொண்டு மறைந்து போகின்ற கள்ளர் போல நல்ல அறிவைக் கவர்ந்து மறதி ஒளிந்து போதலால் அது கள்ளன், தீயோன் என எள்ளி இகழ நேர்ந்தது.

"அதிமதி நுட்பமோடு அதிகலை கற்பினும்
விதியது வசத்தால் விதிவிலக்கு அயர்ப்பார்;
ஆகையால அளவிடல் அரிதே அன்றியும்
சொல்லின் கூட்டமும் பொருளின் கூட்டமும்
அவ்விரண் டனையும் அளவிடப் படாவே;
இந்நால் வகையினுள் என்னால் இயன்றது
சிறப்பா யுள்ளன சில தேடினன்; அவை
மறப்பு எனும் பகைவன் வாரிக் கொண்டனன்;
அவன் கையில அகப்படாதடங்கின அவற்றுளும்
சிறிதினைச் சிறியேன் சிறிய சிறார்தமக்கு
உரைததனன் அன்றியீது ஒருநூல் அன்றே;
இவ்வழக்கு அறிந்தோர் இகழ்தல வழக்கே?
இவ்வழக்கு அறியார் இகழ்தல் வழக்கே.'"

(இலக்கணக் கொத்து)

சுவாமிநாத தேசிகர் என்னும் பெரிய புலவர் தாம் செய்துள்ள நூலுக்கு அவையடக்கமாக இவ்வாறு பாடியிருக்கிறார்.

முயன்று பயின்று தாம் கற்று அறிந்த பொருள்களுள் பலவற்றை மறப்பு என்னும் பகைவன் வாரிக் கொண்டான்; அவன்

லகயில் அகப்படாமல் எஞ்சியுள்ளதை நெஞ்சிலிருந்தபடி சொல்லுகின்றேன் என்று அவர் சொல்லியிருத்தலால் மறதியின் கொள்ளை நிலையும் கொடிய தீமையும் உள்ளியுணர வந்தன.

வருந்தி யீட்டிய பொருளை இழந்து விடுவதினும் பரிந்து கற்ற கல்வியை மறந்து விடுவது மிகுந்த துயரமாம்.

நெடும்பகற் கற்ற அவையத்து உதவாது
உடைந்துளார் உட்குவருங் கலவி—கடும்பகல்
ஏதிலான் பால்கண்ட இல்லினும் பொல்லாதே
தீதென்று நீப்பரி தால். (நீதிநெறி விளக்கம்)

பல காலமும் கற்ற கல்வி அவையில் பேச நேர்ந்த போது அச்சத்தாலோ மறதியாலோ உதவாது போய்விடின் அது கொடிய மன வேதனையாம் என இது உணர்த்தியுள்ளது.

அவமான அல்லலின் எல்லை தெரிய உவமானம் வந்தது. பட்டப் பகலில் தன்னுடைய மனைவி அயலானோடு மருவியிருக்கக் கண்டால் அந்தக் கணவன் உள்ளம் எவ்வாறு கொதிக்குமோ, அவ்வாறு உரிமையுற்றிருந்த கல்வி மறதி வசப்பட்டுக் காவு புரியின் அக் கல்விமான் உயிர் நெடிது பதைக்கும் என்க.

அரும்பாடுபட்டுத் தேடிக் கொண்ட அரிய உரிமைகளைப் பறித்துக் கொள்ளுதலால் மறதி எவ்வளவு கொடிய விரோதி என்பது எளிது தெளிவாம்.

மடியை முயற்சியால் மாற்று.

மறதியை உணர்ச்சியால் நீக்கு.

மறப்பு மருவாமல் காத்தால் பிறப்பு உண்டோ?

தனது உண்மை நிலையை மறந்துள்ளமையினாலேதான் மனிதன் பிறவிச் சுழலில் ஓயாது சுழன்று வருகிறான். மறப்பு நீங்கினால் அன்றே பிறப்பு நீங்கியதாம்.

வாராய் என்மகனே! தன்னை மறந்தவன் பிறந்து இறந்து
தீராத சுழல் காற்று உற்ற செத்தைபோல் சுற்றிச் சுற்றிப்
பேராத கால நேமிப் பிரமையில் திரிவன் போதம்
ஆராயும் தன்னைத் தான்என்றுஅறியுமவ் வளவும்தானே.
(கைவல்லியம் 19)

ஒரு தத்துவ ஞானி தன்னை அடைந்த உத்தம சீடனுக்கு இவ்வாறு உபதேசித்திருக்கிறார். பரமாத்துவின் பாகமே சீவாத்துமா என்னும் உண்மையை மறந்து போனமையால் சீவர்கள் ஓயாமல் சனன மரணங்களில் உழன்று வருகின்றனர். சூறாவளியில் அகப்பட்ட துரும்புபோல் கால சக்கரத்தில் சீவன் சுழன்று வருகின்றது என்றதனால் பிறவித் துயரின் பரிதாப நிலைமையை அறியலாகும். உரிய வழி தவறவே பெரிய இருள் மூடியது.

இறைவனுடைய இன்பச் சுடர் என்று தனது உண்மை நிலையை உணரும் வரையும் துன்பத் தொடர்பில் நின்று நீங்க முடியாது என்பார் அறியும் அளவும் திரிவன் என்றார். மறந்து விட்டமையால் விளைந்த கேடு நினைந்து தொட்டபோது நீங்கி விடுகின்றது. விழி திறக்கவே ஒளி பிறக்கின்றது.

உடலும் பொருளும் மனையும் மக்களும் உலக உறவுகள் யாவும் மறவியால் நேர்ந்த பிறவித் தொடர்புகளே; இடையே போலியாய் ஒட்டிய அப் பொய் மயல்கள் எல்லாம் மெய் தெளிந்தவுடனே அடியோடு குடி வாங்கிப் போகின்றன.

எல்லையில் காலம் இருள்மூடி நின்றாலும்
ஒல்லை ஒளியால் ஒழியுமே—அல்லல்
நெடிய பிறப்பும் நிலைதெளிந்த போதே
நொடியில் ஒழிந்து விடும்.

உன்னை நினைந்து பார்; உண்மையை உணர்ந்து தெளி.

---

487. முன்னநாம் எங்கிருந்தோம் மூண்டிங்கே ஏன்வந்தோம்
இன்னம்போய் எங்கே இருப்புறுவோம்—அன்னவகை
ஒன்றும்நீ ஓராமல் ஊனமுற நின்றாயேல்
என்றுநீ காண்பாய் இதம். (எ)

இ—ள்

நாம் முன்பு எங்கு இருந்தோம்? இங்கு ஏன் வந்தோம்? இனி எங்கே போகப் போகின்றோம்? போகுமுன் செய்ய வேண்டியது என்ன? என இன்னவாறு நிலைமைகளை நினைந்து பாராமல் மறந்திருப்பது மதி கேடாம்; உடனே கதி காண்க என்பதாம்.

இது, வந்த வரவைச் சிந்தனை செய் என்கின்றது.

எண்ணங்கள் சீவ ஒளிகளாய் எழுகின்றன. அவை பல வழிகளில் வெளி வருகின்றன. உலக நிலைகள் பலவற்றையும் எண்ணி அறிகின்ற மனிதன் தன் உண்மை நிலையை யாதும் அறியாமல் மறந்து விடுவது பெரிய மாய மயக்கமாயுள்ளது.

நான் யார்? ஏன் இங்கு வந்தேன்? என்ன செய்ய உரியேன்? முன்னும் பின்னும் யாதும் தெரியாமல் இன்னவாறு வந்துள்ளேனே! என எவன் சிந்தனை செய்ய நேர்கின்றானோ அன்றே அவன் தன்னை அறியத் தலைப்பட்டவன் ஆகின்றான்.

தத்துவஞானி சீவன்முத்தன் என மேவி வருபவர் எவரும் இந்த வித்தக நிலையிலிருந்துதான் விளைந்து வருகின்றனர்.

எதை அறிய வேண்டுமோ அதை அறிவது புனித ஞானம் ஆகின்றது; ஆகவே அதனையுடையவன் புண்ணியவானாய்த் தனி மகிமை யடைகின்றான். முனிவன், யோகி என்னும் பெயர்கள் உண்மையான மனன சீலங்களை உணர்த்தி வருகின்றன.

எளிமையும் இனிமையுமான இந்த நிலையில் எவருடைய சிந்தனையும் செல்வதில்லை; தவறான வழிகளிலேயே யாவரும் தாவி ஓடுகின்றனர். ஆவி அலமந்து அவலமாய் வீடுகின்றனர்.

உலகக் களிப்புகளிலேயே உழன்று திரிந்து பல பிறவிகளிலும் பழகி வந்துள்ளமையால் அந்தப் பழக்க வாசனைகள் மனிதனைப் பாழான வழிகளில் இழுத்துப் போகின்றன.

அசுத்த வாசனைகள் மக்களை அவலநிலையில் ஆழ்த்துகின்றன.

சுத்த இயல்புகள் உத்தம நிலையில் உயர்த்துகின்றன.

நல்ல நீர்மைகளையுடையவர் சித்த சாந்தராய்ச் சிறந்து திகழ்கின்றார், அவரது அறிவு புனிதமாயுள்ளமையால் ஒளி மிகுந்து உண்மை நிலையைத் தெளிவாக உணர்ந்து கொள்கின்றது.

நிலையில்லாத அநித்தியப் பொருள்களை நிலை என்று கொள்வது புலை அறிவாய்ப் புன்மையடைகின்றது. நிலையுடைய நித்தியப் பொருளை நினைந்து தெரிவது உத்தமமான உண்மையறிவாய் உயர்ந்து நன்மைகள் பல சுரந்து நலம் பல பெறுகின்றது.

1. விவேகம்,

2. நிராசை,

3. மன அமைதி,
4. ஆன்ம நோக்கம்.

என்னும் இந் நான்கும் முத்தி இன்பத்தை அருளுகின்ற உத்தம சாதனங்களாய் அமைந்திருக்கின்றன. இந்த நீர்மைகளால் பரிபக்குவம் அடைந்த போதுதான் அந்த மனிதன் அதிசய மேதையாய் ஆனந்தம் அடைகின்ருன்.

சாதனம் இன்றி ஒன்றைச் சாதிப்பார் உலகில் இல்லை;
ஆதலால் இந்த நான்கும் அடைந்தவர்க்கு அறிவுண்டாகும்;
நூதன விவேகி உள்ளம் நுழையாது; நுழையுமாகில்
பூதசன் மங்கள் கோடி புனிதனும் புருடனுமே. (கைவல்யம் 11)

இதன் பொருளை ஈண்டு இனிது சிந்திக்க வேண்டும்.

வைய மையலில் பாய்ந்து பாழாகாமல் தன்னுடைய மெய் நிலையில் ஆழ்ந்து தோய்ந்து உய்தி பெற வுரியாரை இது உணர்த்தியுள்ளது. உயர்ந்த அறிவு படைத்திருந்தும் உண்மையான உறுதியை நாடாமல் மனிதன் புன்மையாய் இழிந்து போவது பொல்லாத கேடாய் விளைந்து வருகின்றது.

என்று நீ காண்பாய் இதம்?

ஒன்றையும் நினைந்து பாராமல் உண்மையை மறந்திருக்கும் புன்மை யாண்டும் யாதும் நன்மை காணுது ஆதலால் அதனை ஈண்டு இது எடுத்துக் காட்டியது. எதையும் பகுத்தறிந்து பார்க்கின்ற உயர்ந்த உணர்வுடைய பிராணியாய் மனிதன் பிறந்திருக்கிருன்; பிறந்தும் பிறவிப் பயனை உணர்ந்து கொள்ளாமல் ஒழிந்து போகின்ருன். அப் போக்குகள் ஆக்கக் கேடுகளாய் அவலம் தருகின்றன. நோக்கிக் கொள்வது பாக்கியமாகின்றது.

உண்மை நினைவு உயர்நலம் அருளுகின்றது.

---

488. இறந்து படுவமென எண்ணி விரைந்து
பிறந்து பெறுவது பேணுர்—மறந்து
களித்துழல் கின்ருர் கடுங்காலன் பின்னே
ஒளித்தழல் கின்ருன் உருத்து. (அ)

இ—ள்

இறந்து போவோம் என்பதை எதிர் அறிந்து பிறந்த பயனை

விரைந்து பெருமல் மாந்தர் மறந்து களிக்கின்ருர்; எமனே அவர் உயிரை வாங்க ஒளித்து நிற்கின்ருன்; அந்தோ! அந் நிலையை உணரவில்லையே என்பதாம்.

பின்னே நேர உள்ளதை முன்னே எதிரறிந்து வாழ்வது அரிய சதுரப் பாடாய்ப் பெருமை பெறுகின்றது. கருதியுணராதது மிருக வாழ்வாய் இழிவுறுகின்றது.

ஆழ்ந்த கருத்தும் அமைதியான கவனமும் எவ்வழியும் திருத்தமாக வாழ்வுகளை விருத்தி செய்து வருதலால் அவை திருந்திய பண்பாடுகளாய் இன்பம் செய்து வருகின்றன.

பிறந்தன யாவும் இறந்து படுகின்றன. அந்த இறப்பு இன்னபொழுது நேரும் என்று யாரும் முன்னதாக எண்ணியறிய முடியாது. முடிந்து போவோம் என்பதை மட்டும் யாவரும் முடிந்த முடிபாய் உணர்ந்திருக்கின்றனர். உணர்ந்தும் உறுதி நலனை விரைந்து நாடாமல் மறந்து திரிகின்றனர்.

பிறந்து பெறுவது என்றது அரிய மனிதப் பிறவியால் அடையவுரிய உறுதி நிலையை. எதைப் பெற்ருல் என்றும் துன்பம் அற்ற இன்ப நிலையை ஒருவன் பெற முடியுமோ அந்த முத்தித் திருவைப் பெறுவதே பிறவிப் பேறும். அல்லாதன எல்லாம் அவலமாய்ப் பெருகிக் கவலைக்கே இடமாம்.

உற்ற பிறப்பால் ஒருபிறப்பும் ஒட்டாமல்
பெற்ற பிறப்பே பெரும்பிறப்பாம்—மற்றப்
பிறப்பெல்லாம் செத்த பிறப்பாய்ப் பெருகி
இறப்படைய வுற்ற இழிந்து.

சிறந்த பிறவிக்கும் உயர்ந்த அறிவுக்கும் உரிய பயன் மறுபடியும் ஒரு பிறவி நேராமல் அரண் செய்து கொள்வதேயாம்: அங்ஙனம் கொள்ளவில்லையானல் இரண்டும் அல்லலுடையனவாய் எள்ளலடைகின்றன.

பிறவி துன்பம்; பிறவாமை இன்பம்; என எவ்வழியும் முடிவாகியிருத்தலால் பிறவி நீக்கமே திவ்விய அறிவின் செவ்விய நோக்கமாய் செறிந்துள்ளது.

பிறப்பு என்னும் பேதைமை நீங்கச் சிறப்பென்னும்
செம்பொருள் காண்பது அறிவு. (358)

மனிதனுடைய புனித அறிவுக்கு இனிய பயனை இது உணர்த்தியுள்ளது. பிறவி நீங்கக் காண்பதே அறிவு என்றதனால் அங்ஙனம் காணாதது வீணாம் என்பது பெறப்பட்டது.

இழந்து போன பழந் தனத்தை எய்தி மகிழ்வது போல் மறந்து விட்ட ஆன்ம வுரிமையை நினைந்து அடைந்து கொள்வதே சிறந்த பிறவிப் பேறாம். அந்தத் திவ்விய நிலையைப் பெறாமல் வேறு எவ்வளவு செல்வங்களைப் பெற்றாலும் அவை உண்மையான உறுதி நலங்களாகா.

இந்திர பதவி முதலிய அந்தர போகங்கள் யாவும் நிலையில்லாதன ஆதலால் நிலையான நித்திய முத்தியைப் பெறுவதே உத்தமப் பிறவியின் முடிந்த பேறாய் முடிவாகியுள்ளது.

பிறந்து வந்துள்ள எவரும் இறந்து படும் இயல்பினர்; அந்த இறப்பு நேருமுன் பிறப்பின் பயனை ஏதாவது ஓரளவில் பெற்றுக் கொள்பவர் சிறந்த பாக்கியசாலிகளாய் உயர்ந்து போகின்றனர்.

உரிய பயனை யடையாமல் ஊனமாய் இழிந்து போவது பெரிய மதிகேடாய்ப் பிழைமிகப் படுகின்றது. ஆவதை அறியாமல் அவமே அவாவிச் சாவதே கண்டு தவித்து அழிகின்றார்.

களித்து உழல்கின்றார்; கடுங்காலன் பின்னே
ஒளித்து அழல்கின்றான் உருத்து.

என்றது உலக மக்களின் நிலையை உய்த்துணர வந்தது.

பொறி வெறிகளில் பொங்கிக் கண்ட போகங்களை எல்லாம் உண்டு செழித்து மனிதர் களித்துத் திரிகின்றார்; அவரை உண்டு கொள்ள அயலே தண்டு கொண்டு எமன் உருத்து நிற்கின்றான்.

பின்னே நிகழ்வதை எண்ணி அறியாமல் பிழை மலிந்து திரிவது பேதைமை ஆகின்றது. எப்படியும் இறந்து போய் விடுவோம்; அதற்குள் உயிர்க்கு உறுதியை நாடிக் கொள்ள வேண்டும் என்று உள்ளி ஒழுகுபவர் நல்ல தருமசீலராய் வருகின்றனர்.

இறப்பின் நினைவு அரிய பல நன்மைகளை அருளி வருதலால் அதனை யாண்டும் மேலோர் எடுத்துக் காட்டி இடித்து அறிவுறுத்தியுள்ளார். அழிவு நிலையை அறிவது அழியாத பேரின்ப நிலைக்கு வழி தெரிவதாம். உண்மையுணர்வு உய்தியில் ஊக்குகின்றது.

இறந்து போவோம் என்பதை மறந்திருப்பதினும் கொடிய கேடு வேறு யாதும் இல்லை என்று தசரதர் தமது இராச சபையில் ஒருமுறை பேசியிருக்கிறார். மன்னன் உரை மதி நலமானது.

ஞாயிறு, திங்கள், செவ்வாய், புதன் என இவ்வாறு இனமாய்ச் சுற்றி வருவதை நாள் என்று நினையாதே; அது உன் உயிரை ஈரும் வாள் என நாயனார் இங்ஙனம் உண்மையை உரிமையாய் உணர்த்தியிருக்கிறார். தினம் கழிவதை உயிர் கழிவதாக நினைக என்றது நிலையான பயனை விரைந்து பெறுக என்றவாறு.

யாக்கையை யாப்புடைத்தாப் பெற்றவர் தாம்பெற்ற
யாக்கையால் ஆய பயன்கொள்க—யாக்கை
மலையாடு மஞ்சுபோல் தோன்றிமற் றாங்கே
நிலையாது நீத்து விடும். (நாலடியார்)

உடற்றும் பிணித்தீ உடம்பின் உயிர் பெய்திட்டு
அடுத்துணர்வு நெய்யாக ஆற்றல் துவையாகக்
குடித்துண்ணும் கூற்றம்; குடில் பிரியா முனனே
கொடுத்துண்மின் கண்டீர்! குணம் புரிமின் கண்டீர்.
(சீவக சிந்தாமணி)

மண் ஒன்று கண்டீர் இருவினைப் பாத்திரம்
திண் என்று இருந்தது தீயினைச் சேர்ந்தது
விண்ணின்று நீர்விழின் மீண்டுமண் ணானவபோல்
எண்ணின்ற மாந்தர் இறக்கின்ற வாறே. (திருமந்திரம்)

அரவினம் அரக்கர் ஆளி அவைகளும் சிறிது தம்மை
மருவினால் தீயவாகா; வரம்பில் காலத்துள் என்றும்
பிரிவிலம் ஆகித் தன்சொற் பேணியே ஒழுகு நங்கட்கு
ஒருபொழுது இரங்க மாட்டாக் கூற்றினயார் உய்தும் என்பார்.
(குண்டலகேசி)

இருப்பது பொய் போவது மெய் என்றெண்ணி நெஞ்சே!
ஒருத்தருக்கும் தீங்கினை யுன்னாதே—பருத்ததொந்தி
நம்மதென்று நாமிருக்க நாய்நரிகள் பேய்கழுகு
தம்மதென்று தாமிருக்கும் தான். (பட்டினத்தார்)

இறப்பு நிலையை எண்ணி யாண்டும் புண்ணிய நீரராய் யாவரும் ஒழுகி வர வேண்டும் என மேலோர் இவ்வண்ணம் கூறியுள்ளனர். நித்திய அநித்திய நிலைகளை நெடிது நோக்கி உத்தம நெறி

களில் ஒழுகியுள்ள தீர்க்கதரிசிகளுடைய வாக்குகள் அவர்களு டைய வாழ்க்கை வகைகளை விளக்கி மனித சமுதாயத்திற்கு ஆக்கமும் ஊக்கமும் உதவி அறிவும் தெளிவும் அருளி வருகின்றன.

இறந்து படுவோம் என்பது எல்லாருக்கும் தெரியும்; ஆயி னும் மாய மயக்கத்தால் அதனை யாவரும் மறந்து விடுகின்றனர்.

"All men think all men mortal but themselves" (Young)

"எல்லா மனிதரும் இறந்து போவர் என்று யாவரும் அறி வர்; ஆனால் தங்களை மாத்திரம் அவ்வாறு எவரும் எண்ணுவதில்லை" என்னும் இது ஈண்டு எண்ணத்தக்கது. சீவ சுபாவங்கள் அதிசய விசித்திரங்களாயிருக்கின்றன.

சாவுண்டு என்பதை நன்கு தெரிந்திருந்தும் அது வருமுன் உய்யும் வழியை உறுதியாய்த் தேடிக் கொள்ளாமல் வையை மைய யில் மயங்கித் திரிவதே மனித இயல்பாய் மருவியுளது.

இறப்பின் இயல்பை எதிரறிவான் இங்கே
பிறப்பின் பயனைப் பெறும்.

சாவு அடையுமுன்னே ஆவதை அடைந்து கொள்க.

---

489. பிறந்தவர் எல்லாம் பிழையாது பின்னர்
இறந்து விழுவரென எண்ணிச்—சிறந்த
அருளுடைய ராகி அறம்புரியா துந்தோ
மருளடைந்து வாழ்தல் மடம். (கூ)

இ—ள்

பிறந்து வந்தவர் எவரும் இறந்து போவர் என்னும் உண் மையை உணர்ந்து தண்ணளியுடையராய்ப் புண்ணியம் புரியாமல் மண்ணிடை மருண்டு வாழ்வது பெரிய மடமையாம் என்க.

அறிவு மனிதனை மகிமைப் படுத்தி வருகிறது. அது உலக அறிவு, கலை அறிவு, உயிர் அறிவு என மூவகையாய் மருவியுளது. பல நிலைகளைத் துருவி அறியினும் தன்னிலையை உன்னி யுணரா வில்லையாயின் அவ் அறிவுகளால் உறுதியான பயனை அடைய முடியா. மெய்யறிவு மேலான பலனை நாடுகிறது.

உயிர் நிலையை நாடி அறிவதே உண்மை யறிவாம்.

அந்த மெய்யுணர்வு தெய்வீக நீர்மையை அருளுகின்றது.

உண்மையை ஓர்ந்து தெளிந்தவன் உயர்ந்த கதியினை அடைகின்றான்? ஓராது கழிந்தவன் இழிந்த நிலைகளில் அழுந்தி யுழல்கின்றான். நித்தியமாய் நிலைத்துள்ளதையும், அநித்தியமாய் அழிந்து படுவதையும் ஒருவன் உய்த்துணருவான் ஆயின் பொய்யான புலைப் பொருள்களில் வெறுப்பும், மெய்யான நிலைப் பொருளில் விருப்பும் விளைந்து வரும். அவ்வரவால் ஆன்ம ஒளி கெழுமி அதிசய மகிமைகள் பெருகி எழும்.

நிலையில்லாத உடம்பு உள்ள பொழுதே நிலையான உறுதி நலனை உயிர்க்கு உரிமையுடன் செய்து கொள்பவர் உயர்ந்த மகிமையுடையராய் ஒளி மிகுந்துள்ளனர்.

தம்மால் இயன்ற அளவு நாளும் புண்ணியங்களை எண்ணித் தொகுத்தவர் யாண்டும் கண்ணியம் பெறுகின்றனர்.

நின்றன நின்றன நில்லா எனவுணர்ந்து
ஒன்றின ஒன்றின வல்லே செயின்செய்க
சென்றன சென்றன வாழ்நாள் செறுத்துடன்
வந்தது வந்தது கூற்று. (நாலடியார்,4)

தந்தை தாய் முதலாக உரிமையாய் வந்து நின்றவர் எல்லாரும் நில்லாமல் மறைந்து போயினர்; காலம் நாளும் சென்று கொண்டேயிருக்கின்றது; எமன் வந்துகொண்டே யிருக்கிறான்; நாம் இறந்து போகுமுன் இயன்ற நன்மையை விரைந்து செய்து கொள்ள வேண்டும் என இது விழைந்து கூறியுள்ளது.

மற்றறிவாம் நல்வினை யாமிளையம் என்னாது
கைத்துண்டாம் போழ்தே கரவாது அறம்செய்ம்மின்
முற்றி யிருந்த கனிஒழியத் தீவளியால்
நற்காய் உதிர்தலும் உண்டு. (நாலடியார்,19)

உயிர்க்கு உறுதியான தருமங்களை வயது முதிர்ந்த பின்பு பார்த்துக் கொள்வோம் என்று காலம் கடத்தி நில்லாதீர்கள்; பெருங் காற்று அடிக்கும் பொழுது முதிர்ந்த கனிகளை அன்றி இளங் காய்களும் உதிர்ந்து விடும்; அதுபோல் இளம் பருவத்திலும் இறக்க நேரும்; ஆதலால் மரணம் புகுமுன்னே மறுமைக்கு உரிமையை விரைவில் மருவிக் கொள்ளுங்கள் என இங்ஙனம் உறுதி நலங்களை உயர்ந்தோர் உணர்த்தியுள்ளனர்.

"There is a Reaper, whose name is Death,
And with his sickle keen,
He reaps the bearded grain at a breath,
And the flowers that grow between." (Longfellow)

"மரணம் என்னும் பெயருடைய எமன் ஒருவன் உளன்; அவன் கையில் உள்ள அரிவாள் மிகவும் கூர்மையானது; விளைந்து முதிர்ந்த பயிரை அவன் விரைந்து அறுக்கின்றான்; அவற்றோடு பூக்களும் அறுபட்டு அழிகின்றன" என்று லாங்பெல்லோ என்னும் மேல் நாட்டுக் கவிஞர் இவ்வாறு பாடியிருக்கிறார்.

பழுத்த கிழவர்களையே அன்றி இளங் குழந்தைகளையும் காலன் கவர்ந்து கொள்வான் என்பதை இவ்வுருவகம் வினயமாய் விளக்கியுள்ளது. எதிர்வதை எண்ணி இசைவதை நண்ணுக.

அழிவு நிலை தலைமேலுள்ளமையால் பருவம் இருக்கும் பொழுதே அரிய பிறவியின் பயனை உரிமை செய்து கொள்ள வேண்டும்; மறதியாய் நழுவவிடின் கொடிய துயரங்கள் தொடர்ந்து நெடிய மருள்கள் படர்ந்து நீசம் அடர்ந்து விடும்.

அருளுடையர் ஆகி அறம்புரி என்றது ஆன்ம ஊதியத்தின் திறம் தெரிய வந்தது. பிறவுயிர்கட்கு இரங்கி இதம்புரியின் அது பெரிய புண்ணியமாய்ப் பெருகித் தன்னுயிர்க்கு இன்பம் தரும்; அந்தத் தரும நீர்மைகளை மருவின் இருமையும் பெருமையாம்.

இத்தகைய உறுதி நலனைக் கருதிக் கொள்ளாமல் காலம் தாழ்த்தி நிற்பது சாலவும் கேடாம்.

மருள் அடைந்து வாழ்தல் மடம்.

அருளுடையராய் அறம் புரியாமல் வாழ்வை இருளடையச் செய்து இழிந்து நிற்பது ஈன மூடமாய் இகழப்பட்டது. காலையில் இருந்தவன் மாலையில் இறந்தான் என எவ்வழியும் சாக்காடுகள் மண்டியுள்ளதை நேரே கண்டும் தன் சீவனுக்கு இனிய நலனைச் செய்யாமல் இறுமாந்து திரிவது கொடிய மடமை ஆகின்றது.

நாளைச் செய்குவம் அறம்எனில் இன்றே
கேள்வி நல்லுயிர் நீங்கினும் நீங்கும்;
இது என வரைந்து வாழும் நாள் உணர்ந்தோர்
முதுநீர் உலகில் முழுவதும் இல்லை. (சிலப்பதிகாரம்)

காலைச்செய் வோம்என்று அறத்தைக் கடைப்பிடித்துச்
சாலச்செய் வாரே தலைப்படுவார்—மாலைக்
கிடந்தான் எழுதல் அரிதால்மற் றென்கொல்
அறங்காலை செய்யாத வாறு. (அறநெறிச்சாரம்)

மின்போல் அழியும் உடல்கொடுநல்
வினைசெய்தழியா உடம்பெய்தி
இன்போடு அமர்தலா யிருப்ப
யாக்கைவருந்தும் என்றெண்ணி
அன்போடு அறம்செய் திளையாமல்
அருந்தி வாளா இருக்கு மவன்
தன்போல் மருளர் இலை என்றான்
தண்பூம் பொழிலவைத் தளிக்கின்றான்.(பிரபுலிங்கலீலை)

பாம்பழல் வாயினுல் பற்ற மண்டுகம்
தேம்பிடும் துயருறும் சீவன் தேயுநாள்
ஓம்பிட வல்லரே உற்ற மற்றையார்
போம்பொழுது அருந்துணை புரிந்த புண்ணியம்.

(சிவதருமோத்தரம்)

நிலத்துக்கு அணிஎன்ப நெல்லும் கரும்பும்;
குளத்துக்கு அணிஎன்ப தாமரை;பெண்மை
நலத்துக்கு அணிஎன்ப நாணம்;தனக்கு அணி
தான்செல் உலகத்து அறம். (நான்மணிக்கடிகை)

கொள்ளும் கொடுங்கூற்றம் கொல்வான் குறுகுதன்முன்
உள்ளம் கனிந்து அறம்செய்து உய்கவே—வெள்ளம்
வருவதற்கு முன்னர் அணைகோலி வையார்
பெருகுதற்கண் என்செய்வார் பேசு. (நன்னெறி)

தன் உயிர்க்கு இனிய துணை தருமம்; அதனை மனிதன் விரைவில் ஈட்டிக் கொள்ள வேண்டும்; மரணம் வருமுன் அரணம் தேடாமல் இருப்பது மதி கேடாம் என இன்னவாறு முன்னோர்கள் உணர்த்தியுள்ளனர்.

சாவின் நினைவு தருமம் புரியத் துணை புரிதலால் அது இணைத்து எண்ண வந்தது. அழியாத நிலைமை அழிவு நிலை தெளிவாக விழி தெரியச் செய்வது வித்தகக் காட்சியாய் விளங்கியுளது.

"Live as though you would die to-night,
Farm as though you would live for ever."

"இன்று இரவே இறந்து போவோம் என்று கருதித் தருமம் புரிந்து வாழ்; என்றும் நிலையாய் வாழ்வோம் என்று எண்ணி உழ வினைச் செய்" என்னும் இந்த விநய மொழி விழைந்து சிந்திக்கத் தக்கது. மறுமை உணர்வும் இம்மை நினைவும் மருவி நின்றன.

மரணத்தை நினைந்து தருமத்தை விரைந்து துணைக் கொள்க; கருமம் செய்யும் போது அவ்வாறு நினையாதே; என்றும் அழியாமல் நித்தியமாய் இருப்போம் என்னும் உறுதியோடு தொழில்களை ஊக்கிச் செய்க. தரும கருமங்களின் மருமங்கள் தெளிக.

---

490. உன்னை மறந்திருக்கும் ஊனத்தால் ஈனமெலாம்
இன்னல் நிலையில் எழுந்தவால்—உன்னுடைய
உண்மை நிலையை உணர்க உணர்ந்தாயேல்
அண்மை தலைமை அறி. (ம)

இ—ள்

உன்னை நீ மறந்துள்ள மடமையால் ஈனமும் இன்னலும் அடர்ந்துள்ளன; உன்னுடைய உண்மை நிலையை உணர்ந்து கொண்டால் உடனே உயர்ந்த மேன்மையை அடைந்து கொள்வாய் என்பதாம்.

இது, உண்மையை ஓர்ந்து உணர்க என்கின்றது.

தன்னை அறிவது மெய்ஞ்ஞானம்; அங்ஙனம் அறியாது நிற்பது அஞ்ஞானம். முன்னது அருள் நிலை; பின்னது மருள் நிலை.

உடல் என்னும் கூட்டுள் உயிர் குடி புகுந்துள்ளது. சீவன், பிராணன், ஆவி, ஆன்மா எனப் பல பெயர்களை அது மேவி நிற்கின்றது. பரமாத்துமாவின் ஒளித் துளியே சீவாத்துமா. அந்த ஆதி மூல நிலையிலிருந்து பலகோடி உருவங்கள் அளவிடலரியபடி எங்கும் தோன்றி நிற்கின்றன. கடலில் அலை திரை நுரை திவலை குமிழி என வேறாகத் தோன்றினும் மீண்டும் அதிலேயே அடங்கி ஒடுங்குதல் போல் உலகம் உயிர்கள் யாவும் பரப்பிரமத்தினிடமே காலாந்தரத்தில் கலந்து கொள்ளுகின்றன.

பரம்பொருள் பரிசுத்த முடையது ஆதலால் அந்தப் புனித நீர்மையை உடைய உயிர்கள் நேரே அதனை அடைந்து மகிழ்கின்றன. தருமம் நீதி கருணை சத்தியம் முதலிய உத்தம இயல்புகள்

வாய்ந்த பொழுது ஆன்மா பரமான்மாவை நோக்கி உருகிக் கரைந்து உன்னதமான பேரின்ப நிலையை மருவுகின்றது. அந்த நிலையில் வருகின்றவர்கள் சீவ கோடிகளுள் அதிசய புருடர்களாய் விளங்குகின்றனர். முத்தன் சித்தன் பத்தன் ஞானி யோகி மகான் என அவர் திவ்விய நாமங்களை எய்தி நிலவுகின்றனர்.

ஆன்ம தரிசனம் செய்து ஆனந்தம் அடைந்துள்ளவர்கள் ஆதலால் தேகத்தை ஒரு சிறைக் கூடமாகக் கருதி எப்பொழுதும் தெய்வீக யோகத்தையே அவாவி நிற்கின்றனர்.

"தோலால் சுவர்வைத்து நாலாறு காலில் சுமத்தி இரு
காலால் எழுப்பி வளைமுது கோட்டிக்கை நாற்றிநரம்
பாலார்க்கை யிட்டுத் தசைகொண்டு மேய்ந்த அகம்பிரிந்தால்
வேலால் கிரிதொளைத் தோன் இரு தாள்அன்றி வேறில்லையே."

(கந்தர் அலங்காரம்)

தேகம் பிரிந்தால் முருகப்பிரான் அடியே தனக்கு உரிய இனிய நிலையமாம் என அருணகிரிநாதர் கருதியுள்ளமை இவ்வுரையால் தெரிய வருகின்றது.

அங்கத்தை மண்ணுக் காக்கி ஆர்வத்தை உனக்கே தந்து
பங்கத்தைப் போக மாற்றிப் பாவித்தேன் பரமா நின்னைச்
சங்கொத்த மேனிச் செல்வா சாதல்நாள் நாயேன் உன்னை
எங்குற்றாய் என்ற போதா இங்குற்றேன் என் கண்டாயே.

(தேவாரம்)

அப்பர் இறைவனை நோக்கி இப்படி உருகி யுரையாடி யிருக்கிறார். உயிரின் பரிபக்குவங்கள் உரைகளில் ஒளிர்கின்றன.

பொத்தை யூன்சுவர்புழுப்பொதிந் துளுத்தசும் பொழுகியபொய்க்கூரை
இத்தை மெய்எனக் கருதிநின் றிடர்க்கடற் சுழித்தலைப் படுவேனை
முத்து மாமணி மாணிக்க வயிரத்த பவளத்தின் முழுச்சோதி
அத்தன் ஆண்டுதன் அடியரில் கூட்டிய அதிசயம் கண்டாமே.

(திருவாசகம்)

ஈசனைப் பார்த்து மாணிக்க வாசகர் இவ்வாறு பேசியிருக்கிறார். பெற்ற தந்தையிடம் பிள்ளைகள் பேசுவது போல் உள்ளம் உருகிப் பேசியிருத்தலால் இறைவனோடு சீவர்களுக்குள்ள உறவுரிமை உணரலாகும். உண்மை தெரியவே உழுவலன்புடை

யராய்க் கிழமை கொண்டாடி ஆற்றாமை மீதூர்ந்து நேரே நெருங்கிப் பேசுகிறார்.

காற்றைப் பிடித்துமட் கரகத் தடைத்தபடி
கன்மப் புனற்குள் ஊறும்
கடைகெட்ட நவவாயில் பெற்ற பசுமட்கலக்
காயத்துள் எனையிருத்திச்
சோற்றைச் சுமத்திநீ பந்தித்து வைக்கத்
துருத்திக்குள் மது என்னவே
துள்ளித் துடித்தென்ன பேறுபெற்றேன் அருள்
தோயநீ பாய்ச்சல் செய்து
நாற்றைப் பதித்ததென ஞானமாம் பயிரதனை
நாட்டிப் புலப்பட்டியும்
நமனென தீப்பூடும் அணுகாமல் முன்னின்று
நாடுசிவ போகமான
பேற்றைப் பகுத்தருளி எனையாள வல்லையோ
பெரிய ஆகி லாண்ட கோடி
பெற்ற நாயகி பெரிய கபிலைமா நகர்மருவு
பெரிய நாயகி அம்மையே. (தாயுமானவர்)

சிவச் சிறையின் நீர்மையை இந்தப் பாசுரம் அழகாக விளக்கி யிருக்கிறது. காற்றைப் பிடித்து ஒரு மண் கலசத்தில் அடைத்து வைத்தது போல் என்னை உடலில் புகுத்தி உணவூட்டி ஆட்டி வருகிறாய்! இந்தப் பாச பந்தத்தால் ஈச சம்பந்தத்தை நான் இழந்து வருந்துகிறேன்; என்மேல் அருள் புரிந்து தேகச் சிறையை நீக்கிச் சிவ போகத்தைத் தந்தருள வேண்டும் என்று பராசத்தியை நோக்கித் தாயுமானவர் இவ்வாறு வேண்டி யிருக்கிறார். நவவாயில் பெற்ற பசுமட்கலம் என்றது உடம்பை. நவம் = ஒன்பது. ஓட்டைக் குடத்தில் காற்று அடங்கியிருப்பது பெரிய அதிசயமாகின்றது. பொள்ளல் உடலில் உயிர் நிலைத்திருப்பது அரிய வியப்பு என்பது தெரிய வந்தது.

வருந்தும் உயிர்ஒன்பான் வாயில் உடம்பில்
பொருந்துதல் தானே புதுமை—திருந்திழாய்
சீதநீர் பொள்ளற் சிறுகுடத்து நிலலாது
வீதலோ நிற்றல் வியப்பு. (நன்னெறி)

இல்லிக் குடத்தில் நீர் இருப்பதுபோல் ஒன்பது துவாரங்களுடைய உடம்பில் உயிர் இருக்கிறது. அது நீங்காமல் நிலைத்திருப்பது ஆச்சரியம் ஆதலால் தேகத்தோடு சீவன் சேர்ந்து வாழ்வதின் அதிசய நிலையை ஓர்ந்து கொள்ளலாம்.

அழிவும் துக்கமும் அசுத்தமும் உடைய உடம்பில் என்றும் அழியாத இன்பமயமான பரிசுத்த சீவன் ஒன்றியிருப்பது விசித்திரமான வினை விளைவேயாம்.

தேகத்தையும் தேகியையும் பகுத்தறிந்து அகமுகமாய்த் திரும்பி ஆன்மக் காட்சி யுறுகின்றவர் பேரானந்த நீர்மையராய் நேரே சீர்மை பெறுகின்றனர் ஆதலால் அவர் அதிசய முத்தர்களாய்த் துதி செய்ய நின்றனர்.

உன்னுடைய உண்மை நிலையை உணர்க.

பொய்யான புன்மை நிலைகளைப் புறந்தள்ளி மெய்யான ஆன்ம நிலையை உணர்ந்து கொண்டால் அதனால் உடனே உய்தியுண்டாகின்றது. ஆகவே அவன் பிறவிப் பேற்றையடைந்த பெரிய பாக்கியவான் ஆய் அரிய இன்பங்களை அனுபவிக்கின்றான்.

தன்னை மறந்திருந்தமையால் விளைந்த இன்னல் இழவுகள் எல்லாம் தனது உண்மையை நினைந்து தெளிந்தவுடனே ஒளி கண்ட இருள் போல ஒழிந்து போகின்றன.

"என்னையே நான் அறிய இருவினையும் ஈடழித்துத்
தன்னை அறியத் தலம் எனக்குச் சொன்னான்"

என இன்னவாறு தமது ஆன்ம அனுபவத்தைப் பட்டினத்தடிகள் சொல்லியுள்ளார். மையல் மயக்கு ஒழிந்து மெய்யை அறிவது மேன்மை தருகின்றது.

நீ பரமனது உரிமையைப் பரிபூரணமாக வுடையவன்; பாவ அழுக்குகள் யாதும் படியாமல் பரிசுத்தனாக உன்னைத் தூய்மை செய்து கொண்டால் அந்த இறைமை தானாகவே உனக்குச் சொந்தமாம். காணியைக் கையிழந்து நிற்பது கண்ணிழந்த படியாம்.

அயலான மயலில் ஆழாமல் இயலுரிமையை எண்ணுவது உயர் நலமாய் உறுதி நிலை அருளுகின்றது. தேக நியதி களைந்து சீவனைக் காண்பவன் தேவனைக் காண்கின்றான்.

"இன்னது தேகம் தேகி இவன் என உணர்வான் யாவன்
அன்னவன் தன்னைத்தான் என்று அறிந்தவன் ஆகும்"
(கைவல்லியம்)

**தன்னை அறிபவன் இயல்பை இது உணர்த்தியுள்ளது.**

மறந்திருந்த உன்னை மனந்தெளிந்து காணின்
பிறந்திருந்த பீழையெலாம் பேரும்—இறந்திருந்த
எண்ணரிய சன்மங்கள் ஏமாந்து நின்றமையை
எண்ணறிந்து கொள்ளும் எதிர்ந்து.

**இவ் வுண்மையை உறுதியாக ஊன்றி உணர்ந்து கொள்க.**

பிறவா திருக்க வரம்பெறல் வேண்டும்; பிறந்து விட்டால்,
இறவா திருக்க மருந்துண்டு காண்! இது எப்படியோ,
அறமார் புகழ்த்தில்லை அம்பலவாணர் அடிக்கமலம்
மறவா திருமனமே அதுகாண்நன் மருந்துனக்கே.
(பட்டினத்தார்)

மூப்புப் பிணியே தலைப்பிரிவு நல்குரவு
சாக்காடும் எல்லாம் சலமிலவாய்—நோக்கீர்
பருந்துக் கிரையாமிவ் யாக்கையைப் பெற்றால்
மருந்து மறப்பதோ மாண்பு? (முனைப்பாடியார்)

---

## இவ் அதிகாரத்தின் தொகைக் குறிப்பு.

**மறதி துயரங்களைத் தருகின்றது.**
**மதி கேடு புரிகின்றது.**
**இழி பழிகளை ஈனுகின்றது.**
**அழி மூடங்களை அருளுகின்றது.**
**மறவாமையால் மேன்மைகள் விளைகின்றன.**
**பான்மைகள் வளர்கின்றன.**
**தன்னை அறிந்தவன் தனியே உயர்கின்றான்.**
**மறந்தவன் இன்னலுழந்து இழிகின்றான்.**
**நினைந்து பாராத வாழ்வு இழிந்து படுகின்றது.**
**உண்மையை உணர்ந்தவன் உய்தி பெறுகின்றான்.**

**சஉ-வது மறதி முற்றிற்று.**

---

# ஐம்பதாம் அதிகாரம்.

## உறுதி.

அஃதாவது தனக்கு இனிய உறுதிநலனை மனிதன் கருதிக் கொள்ளுதல். தன் உண்மை நிலையை நினைந்து திண்மையுடன் நின்று நன்மை புரியும் தன்மையை இது கூறுகின்றது. மறந்து விடாதபடி திறந் தெரிந்து யாண்டும் சிறந்தன செய்க என உணர்த்துகின்றமையால் மறதியின் பின் இது வைக்கப் பட்டது.

491. உள்ளம் உயர உயர்மனிதன் ஆகின்றான்
பள்ளம் படியின் பழிபடிந்து—எள்ளலே
எவ்வழியும் சூழ இழிகின்றான் இந்நிலையின்
செவ்வி தெளிக தெரிந்து. (க)

இ—ள்

தன் உள்ளம் உயரின் மனிதன் உயர்ந்தவனாய்ச் சிறந்து விளங்குகிறான்; அது பள்ளமாய் இழிந்துபடின் அவன் எள்ளலாய் இழிந்து எவ்வழியும் செவ்வி சிதைந்து சிறுமையடைகின்றான் என்பதாம்.

இது, உள்ளத்தை உயர்த்துக என்கின்றது.

உயர்வு தாழ்வு, மேன்மை கீழ்மை, பெருமை சிறுமை என்பன மனிதனுடைய செயல் இயல்களை மருவி வருகின்றன. புறத்தில் தோன்றுகின்ற பொலிவுகளுக்கும் மெலிவுகளுக்கும் மூலகாரணங்கள் அகத்தில் உள்ளன. உள்ளத்திலிருந்து விளைந்து வருகிற விளைவுகளின் படியே வெளியுலகில் மனிதன் விளங்கி நிற்கின்றான்.

மரத்தின் சீர்மை வித்தில் மறைந்திருத்தல் போல் மனிதன் சீர்மை மனத்தில் உறைந்திருக்கிறது. இனிய நினைவுகளையுடையவன் தரும சீலனாய்த் தழைத்து நிலவுகின்றான்; கொடிய எண்ணங்களையுடையவன் படு பாதகனாய் நெடிதே தாங்கி நிற்கின்றான்.

சின்னவன் பெரியவன் என வெளியே இகழ்ந்து புகழ்ந்து பேசப் படுவன எல்லாம் உள்ளே விளைந்த எண்ணங்களின் சிறுமை பெருமைகளின் வழி வந்தனவேயாம்.

அருவமான நினைவின் படியே மனிதன் உருவமாய் ஒளி செய்து உலாவுகின்றான். புனித நினைவுகளுடையதாய் மனம்

இனிது அமையுமாயின் அந்த மனிதனிடம் தெய்வத் தேசுகள் எவ்வழியும் பெருகி எழுகின்றன. மனத்தின்படியே மனிதன் என்றமையால் அதன் அற்புத ஆற்றலை அறிந்து கொள்ளலாம்.

மனமே புருடன் மற்றில்லை;மனத்தின் செயலே செயலாகும்;
கனசீவனத்தால் சீவனுமாம;கவர் நிச்சயத்தால் புந்தியுமாம்;
சினவும் அபிமானத்தாலே தீய அகங்காரமும் ஆகும்;
தனது விகற்ப சாலத்தால் தானே சகமாம் தனிமனமே.

(ஞானவாசிட்டம்)

மனத்தின் அதிசய நிலைகளை இது உணர்த்தியுள்ளது. பொருளமைதிகளைக் கூர்ந்து ஓர்ந்து கொள்ள வேண்டும்.

புத்தி, சித்தம், அகங்காரம், சீவன் என மேவியுள்ள மனமே மனித வுலகைப் படைத்தும் காத்தும் அழித்தும் வருகின்றது.

இத்தகைய மனத்தை ஒருவன் உத்தம நிலையில் பழக்கி நன்கு உயர்த்திக் கொண்டால் அவன் உயர்ந்த சீவன் முத்தனாய் ஒளி மிகப் பெறுகிறான்.

உள்ளம் உயர உயர் மனிதன் ஆகின்றான்.

என்றது உண்மையான உயர்ச்சி நிலையை உய்த்துணர வந்தது.

கல்வி செல்வம் அதிகாரம் முதலியவற்றால் மனிதனுக்கு உளவாகின்ற உயர்வுகள் எல்லாம் அவன் உள்ளம் நல்லதாகாயில்லை ஆயின் பொள்ளல் குடத்து நீர்போல் எள்ளலாய் இழிந்தே போகும்; அது நல்லதாயின் யாவும் நலமாய்த் தேவினியல்போடு அவன் மேவி மிளிர்கின்றான்.

உள்ளம் உயர்தலாவது மேன்மையான எண்ணங்களால் பான்மை சுரந்து வருதல். பரந்த நோக்கம், சிறந்த ஊக்கம், விரிந்த அன்பு, திருந்திய பண்பு என்னும் இவை கனிந்து வருவதே உயர்ந்த உள்ளமாம்.

நல்ல நீர்மைகளால் இவ்வாறு உள்ளம் உயர்ந்த போது அந்த மனிதன் உத்தம புருடனாய் ஒளி பெற்று நிற்கின்றான்.

அதிசய சித்திகளும் பரம முத்திகளும் உள்ளத்தின் நன்மையாலே உளவாகின்றன ஆதலால் ஞானிகளும் யோகிகளும் சித்த சாந்தியையே யாண்டும் முதன்மையாக் கருதி வருகின்றனர்.

"பாழான என்மனம் குவிய ஒரு தந்திரம்
பண்ணுவது உனக்கு அருமையோ?"

என இறைவனை நோக்கித் தாயுமானவர் இங்ஙனம் உருகியிருக்கிறார். மனம் குவிந்து வசமாயின் மனிதன் அதிசய மகான் ஆகின்றான். மன அமைதி இவ்வாறு மகிமையை விளைத்து வருதலால் அதனை உரிமையாக்கிக் கொள்ளப் பெரியோர்கள் அரிய தவம் புரிகின்றனர்.

ஒரு நிலையில் நில்லாமல் பல வழிகளிலும் தாவி ஓடுதலால் மனத்தை அடக்குவது செயற்கு அரிய செயலாய் எவரும் வியப்புற நின்றது. ஆன்ம யோகத்துக்கு இடையூறாய் மீறி மாறுபடும் பொழுது மேலோர் அதனைச் சீறி அடக்குகின்றனர்.

மனம் எனும்ஓர் பேய்க்குரங்கு மடப்பயலே நீ தான்
மற்றவர்போல் எனைநினைத்து மருட்டாதே கண்டாய்
இனமுற என் சொல்வழியே இருத்திஎனின் சுகமாய்
இருந்திடுநீ என்சொல்வழி ஏற்றிலையா னாலோ
தினையளவுன் அதிகாரம் செல்ல ஒட்டான்;உலகம்
சிரிக்கவுனை அடக்கிடுவேன் திருவருளால் கணத்தே
நனவில்எனை அறியாயோ யார் என இங்கிருந்தாய்
ஞான சபைத் தலைவனுக்கு நல்லபிள்ளை நானே.

(அருட்பா)

இராமலிங்க சுவாமிகள் மனத்தோடு போராடியிருக்கும் நிலையை இது நேரே காட்டியிருக்கிறது. பேய்க் குரங்கு என்று திட்டியது அதன்மேல் உள்ள எரிச்சலை விளக்கியது.

"எனது மனம் ஆகிய குரங்கு கொடிய மோகக் காட்டில் எப்பொழுதும் ஓடித் திரிகிறது; ஆசை என்னும் நெடிய மரக் கிளைகளில் கடிது தாவுகின்றது; பருவமங்கையருடைய கொங்கைகள் ஆகிய மலைகளில் ஏறிக் கூத்தாடுகின்றது; கையில் ஓடு ஏந்திப் பிச்சை எடுக்கிற ஓ பரமசிவமே! உன் தொழிலுக்கு இந்தக் குரங்கு நல்ல உபயோகமாயிருக்கும்; இதனைப் பிடித்துக் கொண்டு போ" என ஆதிசங்கராசிரியர், சிவானந்தலகரி என்னும் வடமொழி நூலில் இவ்வாறு புரடியிருக்கிறார். 'மே ஹ்ருதய கபிம் அத்யந்த சபலம்'' "என் மனக்குரங்கு மிகவும் சபலமுடையது" என அந்த மகானே கூறியிருத்தலால் எத்தகைய யோகிகளையும் அலைத்து நிலைகுலைத்து நிற்கும் அதன் நிலை தெரியலாகும்.

பரமாத்தும சித்தியை மருவுகின்றவர் தம் சித்தத்தை எப்படிக் கருதி அடக்கி வருகின்றனர் என்னும் உறுதி நிலைகளை இவ்வுரைகளால் உணர்ந்து கொள்ளலாம்.

"உள்ளமனக் குரங்காட்டித் திரியும் என்றன்
உளவறிந்தோ ஐயா நீ உன்னைப் போற்றார்
கள்ளமனக் குரங்குகளை ஆட்டவைத்தாய்!"

முருகப் பெருமானை நோக்கி வள்ளலார் இவ்வாறு கேட்டிருக்கிறார். தம் உள்ளத்தை அடக்கினவர் எல்லாவற்றையும் அடக்கியாள வல்ல பெருமையை உரிமையாகப் பெற்றுக் கொள்ளுகின்றனர்.

உள்ளத்தை வென்றான் உலகத்தை வென்றுகொண்டான்
கள்ளத் ததன்வழியே காலிழிந்தான்—பள்ளத்தே
பாயுநீர் போலப் பழிமயலுள் பாய்ந்தழுந்தி
மாயுமே யாவும் மருண்டு.

எல்லாரையும் தன் வழிப் படுத்தி யாண்டும் தலை விரித்து ஓடுகின்ற மனத்தை அடக்குவது அதிசயம் ஆதலால் அந்த அற்புத வெற்றியாளன் அகிலத்தையும் வென்றவன் ஆகின்றான். அங்ஙனமின்றி அதன் வழியே போகின்றவன் உயர்நலங்களை இழந்து விடுகின்றான்; விடவே அவன் இழிந்தவனாய் அழிந்து படுகின்றான்.

தூய்மையான நல்ல நினைவுகளையே பழகிவரின் அந்த உள்ளம் அரிய பேரின்ப நிலைகளை அருளுகின்றது; அதனை யுடையவன் பெரிய மனிதனாய் இருமையும் பெருமையுறுகின்றான்.

உயிர்க்கு உறுதி நலன் உணர்ந்து உய்தி காணுக.

---

492. எண்ணியதைச் சாதித் தினிது முடிக்கினது
புண்ணிய மாகிப் பொலியுமால்—எண்ணம்
உயிரின் மணமாய் ஒளிசெயலால் என்றும்
பயில்க உறுதி படிந்து. (உ)

இ—ள்

தான் கருதிய நல்ல கருமத்தை உறுதியாய்ச் செய்து முடித்தால் அது அரிய புண்ணியமாய்ப் பெரிய பகிமை தருகின்றது; எண்ணம் உயிரின் மணமாய் ஒளி புரிகின்றது; அதனைப் புனிதமாகப் பயின்று இனிது உயர்க என்பதாம்.

உள்ளத்தின் தகுதி அளவே மனிதன் உயர்ந்து வருகின்றான் என்பதை முன்னம் அறிந்தோம்; இதில், உள்ளியதை அடைந்து கொள்ளும் திறனை உணர்ந்து கொள்கின்றோம்.

நல்ல எண்ணமும் நல்ல செயலும் மனிதனை நல்லவனாக்கி யாண்டும் நன்மை புரிந்து வருகின்றன. எண்ணங்கள் காரிய சித்திகளை அடையும் பொழுதுதான் அவை சீரிய உருவங்களாய்ச் சிறந்து திகழ்கின்றன.

சிலர் எண்ணுகின்றனர்; எண்ணியபடியே செயல் ஆற்ற முடியாமல் இடையே உடைந்து போகின்றனர். அவ்வுடைவுக்குக் காரணம் உள்ளத்தில் உறுதியான திண்மை யின்மையேயாம்.

என்ன இடையூறு நேர்ந்தாலும் யாதும் தளராமல் ஓயாது முயன்று கருதியதைக் கைக்கொள்பவரே உறுதியாளராய் உயர்ந்து விளங்குகின்றனர். யாண்டும் மூண்டு முடிவு காண்பதே ஆண்டகைமையாம். மனவுறுதியில் மகிமைகள் பல விளைகின்றன.

செயலில் பயன் கண்டு உயர்ந்தவனைக் கருமவீரன் என்று எவரும் புகழுகின்றனர். அங்ஙனம் காணாது சோர்ந்தவனைக் கையாலாகாத பேடி என்று வையம் வைகின்றது.

"Words are women, deeds are men." (Herbert)

"வார்த்தைகள் பெண்கள்; செயல்கள் ஆண்கள்" என ஹெர்பர்ட் என்பவர் இங்ஙனம் கூறியிருக்கிறார். வினையாண்மை புரிந்து வீறு கொண்டு நிற்பது ஆண்மை; அவ்வாறின்றி வீணே பேசித் திரிவது பெண்மை என்னும் இதில் திண்மையின் உண்மையை உணர்ந்து கொள்கின்றோம்

"Words are the daughters of earth and deeds are the sons of heaven." (William Jones)

"செயல்கள் தேவ குமாரர்கள்; வார்த்தைகள் வையச் சிறுமிகள்" என வில்லியம் ஜோன்ஸ் என்பவர் இவ்வண்ணம் சொல்லியிருக்கிறார். ஊன்றிய உறுதி உன்னத நிலையை அடைகிறது.

எண்ணுதல், பேசுதல்களினும் எண்ணியதைத் திண்ணிதாகச் செய்து முடிப்பதே யாண்டும் உயர்ந்த புருடத்தன்மையாம்.

எண்ணியதைச் சாதித்து இனிது முடிக்கின் அது
புண்ணியம் ஆகிப் பொலியும்.

என்றது மனத் திட்பத்தின் மாட்சி தெரிய வந்தது.

சாதித்தல் ஆவது காரிய நிகழ்வில் எவ்வளவு சோதனைகள் நேர்ந்தாலும் அவ்வளவையும் கடந்து சாதனையாய்த் தொடர்ந்து கருதிய உரிமையை உறுதியாய்ப் பெறுதல்.

அருச்சுனன், துருபன், பகீரதன் முதலானவர்கள் எண்ணியதைச் சாதித்துக்கொண்டமையால் திண்ணிய வீரராய் உயர்ந்து புண்ணிய நீரராய் இன்றும் பொலிந்து விளங்குகின்றனர்.

நல்ல கருமங்களிலிருந்து தருமங்கள் விளைகின்றன; அவ் விளைவுகளை நன்கு பேணி வருபவர் நலம் பல பெறுகின்றனர்.

எண்ணம் உயிரின் மணம்.

நல்ல பூவிலிருந்து இனிய வாசனை வீசுதல் போல் உயர்ந்த உயிரிலிருந்து சிறந்த எண்ணங்கள் எழுகின்றன. அந்த அரிய எண்ணங்களை வீணாக்காமல பயனும் நயனும் பொருந்தப் புனிதமாகப் பேணியருள்பவர் மனித சமுதாயத்துக்கு மாண்பு புரிகின்றனர். புனித நினைவுகள் புண்ணியங்களாகின்றன.

மலர்காய் கனி என மானிடன் மருங்கு
நினைவு சொல் செயல்கள் நிலவியுள்ளன.

உன் உள்ளத்தில் தோன்றுகின்ற நல்ல கருத்துக்களைத் திருத்தமாக விருத்தி செய்து செவ்விய பலனை எய்துக.

---

483. ஊக்கம் உறுதி எனும் ஒள்ளியநன் னீர்மைகளே
ஆக்கங்கள் ஆகி அமைதலால்—நோக்கம்
தெரிந்து நிலையைத் தெளிந்து கருமம்
பரிந்து புரிக படிந்து. (௩)

இ—ள்

உள்ளத்தில் உள்ள ஊக்கமும் துணிவும் வெளியே ஆக்கங்களாய் அமைகின்றன; அந்த அமைதியை ஆழ்ந்து நோக்கிக் கருமங்களை ஓர்ந்து செய்து உயர்க என்பதாம்.

உயர்ந்த நிலைகளை அடைந்துகொள்வதே மனித வாழ்க்கையின் குறிக்கோளாயுள்ளது. பறந்து திரிந்து யாவரும் ஆவலோடு பாடுபட்டு வருவது அவனது இயல்பையும் உயர் நோக்கையும்

விளக்கி நிற்கின்றது. எந்நிலையிலும் தளராமல் முன்னேறிச் செல்லும் உன்னத வளர்ச்சிக்கு உள்ளே மூலவேராயுள்ளதையே ஊக்கம் என உணர்வுலகம் உரைத்து வருகிறது.

காரியத்தில் மூண்டு மூளும் உள்ளக் கிளர்ச்சியே ஊக்கம் ஆதலால் அதன் நிலைமையும் தலைமையும் நேரே தெரியலாகும்.

உடையர் எனப்படுவது ஊக்கம்; அஃதில்லார்
உடையது உடையரோ மற்று. (குறள் 591)

ஊக்கம் உடையவரே உண்மையாக எல்லாச் செல்வங்களையும் உடையவர்; அது இல்லாதவர் யாதும் உடையராகார் எனத் தேவர் இவ்வாறு உணர்த்தியுள்ளார். உடையரோ? என வினவியிருக்கும் அழகை ஊன்றி நோக்கி உண்மையை ஓர்ந்து கொள்க.

ஊக்கம் இல்லாதவன் ஆக்கம் கெட்டவன் என்று சுட்டியிருத்தலால் அதன் சீர்மை நீர்மைகளை உய்த்துணர்ந்து கொள்ளலாம். செல்வம் கல்வி முதலிய பலவகை உயர் நிலைக்கும் ஊக்கம் உயிர்நிலையாயுள்ளமையால் உயர்ந்தோர் யாண்டும் அதனைப் போற்றி வருகின்றனர்.

"Energy is divine" (Pope)

"ஊக்கம் உயர்ந்த தெய்வத் தன்மை" என்று மேல்நாட்டார் இங்ஙனம் குறித்திருத்தலால் அதனை அவர் போற்றி வந்துள்ளமை புலனாய் நின்றது.

இங்கிலாந்து அமெரிக்கா முதலிய தேசங்கள் எவ்வகையிலும் உன்னத நிலையில் உயர்ந்து ஓங்கி நிற்றற்குக் காரணம் அத் தேசத்தவரிடம் நிறைந்துள்ள ஊக்கமேயாம்.

ஒரு எந்திரத்தை உந்தி ஓட்டுகின்ற நீராவி போல் ஊக்கம் உயிரினங்களை விசைத்து உயர் நிலையில் ஓட்டி வருகின்றது.

வினைமேல் மூண்டு எழுகின்ற எழுச்சி ஊக்கம் ஆம். அந்த எழுச்சி தளர்ச்சியுறாமல் வளர்ச்சி செய்து வருவது உறுதி என்க.

தம்மையுடையாரைச் செம்மையாக உயர்த்தி இம்மை மறுமைகளில் எல்லா நலங்களையும் நல்கி எங்கும் ஒளி செய்து வருதலால் இவை ஒள்ளிய நன்னீர்மைகள் என ஈண்டு உள்ளியுணர வந்தன. நிலையான உறுதி நெடிய மலையாகின்றது.

செல்வங்களை ஈட்டவும், அவற்றை நல்ல வழிகளில் நீட்டிப் புகழ் புண்ணியங்களை ஆக்கவும் நேரே உரிமையாயிருத்தலால் ஊக்கமும் உறுதியும் ஆக்கங்கள் என நின்றன.

ஆக்கம் இழந்தேமென்று அல்லாவார் ஊக்கம்
ஒருவந்தம் கைத்துடையார். (குறள், 593)

கையில் எய்தியிருந்த பொருள் இழந்து போனாலும் உள்ளத்தில் ஊக்கம் உள்ளவர் வருந்தி அலமரார்; விரைந்து அதனை ஆக்கிக் கொள்வார் என்று இது குறித்திருக்கின்றது. இதனால் அதன் அற்புத நிலைமை அறியலாகும்.

மனிதனுடைய உள்ளத்தில் ஒரு செய்வத் திருவாய் ஊக்கம் மருவியுள்ளமையால் அதனை நோக்கி எல்லா ஆக்கங்களும் உரிமையோடு ஓடி வருகின்றன.

நோக்கம் தெரிந்து கருமம் பரிந்து புரிக

ஊக்கமும் உறுதியும் காரிய சாதனங்களாய்க் கதித்திருக்கின்றன. அவற்றைக் கருததுடன் பேணிக் கருமங்கள் புரியின் பெருமைகள் விளைகின்றன. அங்ஙனம் புரியாமல் அயர்ந்து நின்றால் மனிதன் இழிந்துபட நேர்கின்றான்.

"இருந்தும் இறந்தவன் எவன்?" எனச் சனகரை ஒருமுறை ஒரு முனிவர் வினவினர். அதற்கு அம் மன்னன் சொன்ன பதில் "கிரியா ப்ரஷ்ட:" என்பதே. கருமங்களைக் கருதிச் செய்யாமல் எவன் சோம்பியிருக்கிறானோ, அவன் உயிரோடு இருந்தாலும் செத்தவனேயாவன் என இங்ஙனம் அந்த இராச யோகி கூறியுள்ளமையால் மனிதனுக்கும் கருமத்துக்கும் உள்ள உரிமை யுணரலாகும். கரும வுறுதி தரும நிதியாய்த் தழைத்து வருகிறது.

---

494. தத்தம் இயல்புக்குத் தக்கபடி தாமமைந்தே
ஒத்துயிர்கள் ஊக்கி உஞற்றுமால்—மெத்தியபுன்
பூனை எலிமேல் புலிமான்மேல் பொங்கியெழும்
யானைமேல் செல்லும் அரி. (௪)

இ—ள்

தம்முடைய இயல்புக்குத் தக்கபடியே ஒவ்வொருவரும் கருமங்களைச் செய்து வருகின்றனர்; பூனை எலியை நாடுகின்றது; புலி மானைத் தேடுகின்றது; சிங்கம் யானையை அவாவி அடலோடு செல்லுகின்றது என்க.

இது இயல்பின் அளவே செயல் என்கின்றது.

உயிரோடு இயற்கையாய் இயங்கி வருவது இயல்பு என வந்தது.

உருவங்கள் ஒரு நிலையில் ஒத்திருந்தாலும் பல படிகளில் பேதமாய் மக்கள் பிரிந்திருக்கின்றனர். பிறப்பு இருப்பு பழக்கம் வழக்கம் அறிவு ஆற்றல் முதலிய பிரிவுகளால் சீவர்கள் பலவாறு மாறுபட்டுள்ளனர். மாறுபாடுகள் யாவும் வேறுபாடுகளை விளக்கிக் கூறுபாடுகளாய்க் குலாவி நிற்கின்றன.

வலியவன், மெலியவன், பெரியவன், சிறியவன், அறிஞன், மூடன், செல்வன், ஏழை, வீரன், கோழை என இன்னவாறு பின்னங்களும் பிரிவுகளும் யாண்டும் கூறப்படுகின்றன.

முன் செய்துள்ள கருமங்கள் மருமங்களாய் மருவியுள்ளமையால் அவ்வுரிமைகளோடே யாவரும் பிறந்திருக்கின்றனர். பழகியுள்ள அந்தப் பழைய வாசனையின்படியே விளைவுகளும் நிலைமைகளும் சீவ கோடிகளிடம் விளைந்து நிற்கின்றன.

கறங்கென வினையின் ஓடிக் கதியொரு நான்கினுள்ளும்
பிறந்துநாம் பெற்ற பெற்ற பிறவிகள் பேசலாகா;
இறந்தன இறந்து போக எய்துவது எய்திப் பின்னும்
பிறந்திட இறந்த தெல்லாம் இதுவும் அவ் வியல்பிற்றேயாம்
(யசோதரகாவியம்)

இறந்த பிறப்பில்தாம் செய்த வினையைப்
பிறந்த பிறப்பால் அறிக—பிறந்திருந்து
செய்யும் வினையால் அறிக இனிப்பிறந்து
எய்தும் வினையின் பயன். (அறநெறிச்சாரம்)

பிறவிகளின் நிலைமைகளை இவை உணர்த்தியுள்ளன. அனுமான அறிவால் விளைவுகளை யூகித்துக் கொள்கின்றோம்.

பலவகையான வினைகளின் வழியே வெளி வந்துள்ளமையால் விசித்திர வேறுபாடுகளில் மனிதர் விரிந்து நிற்கின்றனர்.

தம்மிடம் இயல்பாய் அமைந்துள்ள சுபாவங்களின் படியே சீவர்கள் தொழில் முறைகளில் இறங்கி எவ்வழியும் முயன்று வருகின்றனர். முயற்சியின் வழியே உயர்ச்சிகள் ஒளிர்கின்றன.

பூனை புலி சிங்கங்களை இங்கே உவமையாக எடுத்துக் காட்டியது மனிதர்களுடைய தரங்களை இணைத்து எண்ணிக் கொள்ள.

எலியை எதிர்நோக்கிப் பூனை பிடிப்பது போல் சிலர் சிறிய பயனையே கருதிக் கைக்கொண்டு களித்து நிற்கின்றனர். உயர்ந்த மனித உருவங்களில் தோன்றியிருந்தாலும் பலர் உள்ளங்கள் இழிந்து எள்ளல்கள் மலிந்துள்ளனர்.

நரி நாய் பூனை பன்றி முதலிய இழிந்த மிருகங்களின் இயல்புகள் பல மனிதரிடம் நன்கு படிந்திருக்கின்றன. நய வஞ்சகமும் ஏமாற்றும் உள்ளவர்களைக் குள்ளநரிகள் என்று உலகம் சொல்லி வருகின்றது. அதிக சபலமும் வீண் பிடிவாதமும் உள்ளவர்களைக் குரங்குப்பிறவி என்று கூறுகின்றது. மடமையும் முரட்டுத்தனமும் உடையவரை மாட்டுப்பிறவி என்று சாட்டுகின்றது. ஒரு நிலையில் நில்லாமல் இருதலை மணியம் செய்கின்றவரை வௌவால் என்று வையம் வைகின்றது. பிறர் உள்ளம் நோகப் பேசுகின்றவரைக் கொள்ளித்தேள் என்று சொல்லுகின்றது. கடுந் தீம்பு புரிகின்றவரைக் கொடும் பாம்பு என்று குறிக்கின்றது. இவ்வாறே பொல்லாத சுபாவங்கள் பொருந்தியுள்ள மனிதர் இங்கே திரிந்து வருகின்றனர். மனிதனிலே பேய், மனிதனிலே நாய், மனிதனிலே பன்றி, மனிதனிலே கழுதை, மனிதனிலே மாடு, மனிதனிலே குரங்கு, மனிதனிலே மனிதன், மனிதனிலே தெய்வம் மருமமாய் மருவியுள்ளமையைக் கருமங்களிலே காணலாகும்.

திருவொற்றியூர்க் கோவில் எதிரேயுள்ள சாலை அருகில் ஒரு யோக சித்தர் அமர்ந்திருந்தார். அவ்வழியே செல்லுகின்ற மக்களைக் குறித்து அவர் சுட்டிச் சொல்வது விசித்திரமா யிருந்தது. வட்டிகளை விழைந்து கொள்ளும் பெருஞ்செல்வர்களைக் கண்டால் கரடிகள் போகின்றன என்பார். கற்றபடி ஒழுக்கம் இல்லாத கல்விமான்களைக் காணின் குங்குமம்சுமந்த கழுதைகள் செல்லுகின்றன என்பார். நெறிகேடரான தூர்த்தர்களைப் பார்த்தால் நாய்கள் நடக்கின்றன என்பார். பேராசையாளரை நோக்கினால் பேய்கள் பேர்கின்றன என்பார். இன்னவாறே பன்றி, எருமை, ஓநாய், கழுகு எனப் பலவாறு சொல்லி வந்தவர் ஒருநாள் மாத்திரம் "ஒரு மனிதன் போகின்றான்; ஒரு மனிதன் போகின்றான்" என்று இரு முறை மகிழ்ந்து பேசினார். வடலூர் இராமலிங்கசுவாமிகளைக் கண்ட போதுதான் இந்த வார்த்தைகள் அவருடைய வாயிலிருந்து வெளி வந்தன. பித்தரைப் போல் நெடுங்காலம் பிதற்றி

வந்த அந்த ஞான சித்தர் அதிசயமாக அன்று கூறியவுரை மனித வுலகத்தை நன்கு காட்டி நின்றது.

நரிநாய் கழுதையென நாளும் நவின்ற
பெரியார் ஒருநாள் பிறிதாய்—அரிய
ஒருமனிதன் என்ற உரையால் உலகின்
மருமநிலை கண்டேன் மகிழ்ந்து.

குண சீலர்களான அரிய மனிதர்களைக் காணுவது மிகவும் அருமை என்பதை இதனால் அறிந்து கொள்கின்றோம். இனிய மனித வடிவங்களில் மருவியிருந்தாலும் கொடிய இயல்புகளை யுடையவர் மனுடராகார் என்றமையால் புனிதமான மனித நீர்மைகளின் சீர்மைகள் நிலை தெரிய வந்தன.

அரி யானை மேல் செல்லும்.

என்றது மேன்மையான கம்பீர மனிதரது பான்மை காண வந்தது. அரி=சிங்கம். காட்டு விலங்குகளுள் தலை சிறந்துள்ள அது நாட்டு மக்களுள் நிலை உயர்ந்துள்ளவர்க்கு ஒப்பாய் நேர்ந்தது. அதனை மிருகேந்திரன் என்பது போல் அரசனை நரேந்திரன் என்கின்றோம். பான்மை உயர மேன்மை உயர்கிறது.

சிறந்த கருமங்களைக் கருதி முயன்று உயர்ந்த தருமங்களைப் புரிந்து நிற்கும் உறுதியாளர் அரியேறு என யாண்டும் மேன்மை பெற்று விளங்குகின்றனர்.

புருடார்த்தம் என்பது அரிய முத்தி நிலையைக் குறித்துள்ளது. அதனை உறுதியாக அடைகின்றவன் எவனோ அவனே உண்மையான புருடன். உற்ற வுயர் பெயருக்கு உரிமை ஆகின்றான்.

விரைந்து அழிந்து படுகின்ற இழிந்த போகங்களை நச்சி நிற்கும் அளவும் மனிதன் கொச்சையாய் இழிந்து நிற்கின்றான்; அழியாத நித்திய முத்தியை அடைய நேர்ந்தபோது அவன் அதிசய மகானாய்த் துதி செய்யப் பெறுகின்றான். அற்பங்களை இகழ்ந்து தள்ளி விட்டு உன்னத பதவியை உன்னி எழுவது உத்தம நிலையாய் உயர்ந்து திகழ்கின்றது.

கொல்சின யானை பார்க்கும் கூருகிர்த் தறுகண் ஆளி
இல்எலி பார்த்து நோக்கி இறப்பின்கீழ் இருத்தல் உண்டே?

பல்வினை வெள்ளம் நீந்திப் பகா இன்பம் பருகின் அல்லால்
நல்வினை விளையுள் என்னும் நஞ்சினுட் குளித்தல் உண்டே?
(சீவகசிந்தாமணி)

யாளி யானையை உணவாகப் பார்க்குமே அன்றி எலியைப் பார்த்து நில்லாது; அது போல் அறிவுடையோர் மேலான பேரின்ப நிலையைக் கருதுவதல்லது சிற்றின்பத்தை இச்சித்து நில்லார் எனச் சீவக மன்னன் இவ்வாறு கூறியுள்ளான். தன்னுடைய அரச போகங்களை நஞ்சு என்று வெறுத்துப் பரம பதத்தை அவ் வுத்தம வீரன் உறுதியாகக் கருதியுள்ளமையை இவ் வுரைகளால் உணர்ந்து கொள்கின்றோம். அரிய உண்மைகள் பெரியவர் மொழிகளில் தெளிவாய் வருகின்றன. கூறியுள்ள கருத்துக்கள் கூர்ந்து சிந்தித்து ஓர்ந்து உணரத்தக்கன.

உரிமையாக அடைய வேண்டியதை விரைந்து அடைந்து கொள்வதே உயர்ந்த பிறவிப் பேறும் என்பதை சீவகன் உணர்ந்து பேசியிருக்கிறான். தெளிந்த ஞானக் காட்சி எழுந்தபொழுது சிறந்த தெய்வத் தேசுகள் ஒளி வீசி நிற்கின்றன.

---

495. தேசுற ஊக்கித் திறல்புரிந்து ஞாலஞ்சீர்
பேச முயலாது பேதையராய்—மாசு
படிந்து மடிந்துண்டு பாழாய்ப் பலபேர்
முடிந்து கழிகின்றார் மூண்டு. (ரு)

இ—ள்

உறுதியுடன் ஊக்கி அரிய காரியங்களை ஆற்றி உலகம் புகழ்ந்து போற்றும்படி உயர்ந்து நில்லாமல் இழிவாய்ச் சோம்பி நின்று பலர் அழிந்து கழிந்து போகின்றார் என்பதாம்.

பிறந்த பிறவிக்கு ஏதாவது ஒரு சிறந்த பயனை மனிதன் அடைந்து கொள்ள வேண்டும்; அங்ஙனம் கொள்ளவில்லையாயின் அப் பிறப்பு எள்ளலுடையதாய் இழிந்து படுகின்றது.

தேசு—ஒளி, கீர்த்தி, பெருமை, வீரம்.

உள்ளம் ஊக்கி உறுதியாய் முயன்று வருகின்றவரே உயர்ந்த நலங்களை அடைந்து வருகின்றார். உயர்ச்சிகள் எல்லாம் முயற்சிகளில் உள்ளன என்னும் முதுமொழி அதி மருமமான பொருளை

உள்ளே மருவியுளது. உயிர் உணர்ச்சியாய் ஒளி பெற்றிருத்தலால் உறுதியான ஆண்மை வெளியே தொழிலாய் இயங்கி அரிய பல நலன்களை விளைத்தருளுகின்றது. உள்ளிருந்து இயக்கும் அதிசய சத்தி உன்னத கதிகளில் உயர்த்தி விடுகின்றது.

உயர்நலம் கருதி எழுகின்ற ஊக்கம் ஒருவனிடம் இல்லையாயின் அவன் இயல் சிதைந்து இழிந்து மயலுழந்து படுகின்றான்.

ஊக்கி முயலார் உயிரிருந்தும் இல்லாராய்
ஆக்கம் இழந்தே அலமருவார்—ஊக்கம்
உயிரின் ஒளியா யுளதால் அதனின்
உயர்வு தெளிக வுணர்ந்து.

என்னும் இது ஈண்டு உன்னி உணரவுரியது.

மனிதன் எண்ணி முயலும் அளவே கண்ணியம் பெறுகிறான். நெய் ஏறிய திரி விளக்குப்போல் மெய்யில் உறுதி ஏறியபொழுது அரிய மகிமையாய் இனிய ஒளி செய்து திகழ்கின்றான்.

தேசு உற ஊக்கித் திறல் புரிந்து.

என்றது ஆண்மகனாய்ப் பிறந்தவன் ஆற்ற வேண்டிய கடமையை ஏற்றமாகக் காட்டியருளியது. செல்வம் கல்வி கொடை வீரம் முதலிய உயர் நலங்கள் எல்லாம் உறுதியின் அடியாகவே உரம் பெற்று வளர்ந்து வருகின்றன. அவ் வரவால் பேரும் சீரும் பெருகி எழுகின்றன. அத்தகைய சீர்த்தி வளர வாழ்வதே வாழ்வாம் காதவழி பேரில்லான் கழுதை என்னும் பழமொழியால் புகழ் இல்லாத வாழ்வு எவ்வளவு இழிவுடையது என்பது எளிது தெளிவாம்.

ஒருவனுடைய எல்லா மேன்மைகளுக்கும் அவனது உள்ளத்தின் உறுதியே ஏதுவாயிருத்தலால் உயர்ந்தோர் அதனை வியந்து போற்றுகின்றனர்.

கருதி முயலும் உறுதியால் அரிய பெரிய செல்வங்கள் எல்லாம் எளிதே வந்து சேர்கின்றன. ஆகவே அஃது ஓர் அற்புத சத்தியாய்ப் பொற்பு மிகுந்துள்ளது. இம்மை மறுமைகளின் நன்மைகள் யாவும் அதனால் சித்திக்கின்றன. நெஞ்சுறுதியாளனிடம் எவையும் தஞ்சமாய் வந்தடைகின்றன.

உறுதி ஒருவன் உழையுறின் யாவும்
பெறுதி எனவே பெருமை—அறுதியாய்
வந்து.சுரந்தருளும் வையமொடு வானுமே
முந்து புரியும் முதல்.

இதனை நன்கு சிந்தனை செய்து கொள்ளுக.

---

496. கடலலைபோல் தோன்றிக் கணக்கின்றி நாளும்
உடலழிதல் கண்டும் உயிர்க்கோர்—இடனினிதாக்
காண முயலீர் கருதீர் நமரங்காள்!
பேணுமுறை யந்தோ பிழை. (௬)

இ—ள்

கடலில் எழுகின்ற அலைகளைப் போல் தோன்றி உலகில் உடல்கள் நாளும் அழிந்து கொண்டே யிருக்கின்றன; அந்த அழிவு நிலையை நேரே கண்டும் உன் உயிர்க்கு ஓர் உறுதி நலனைச் செய்து கொள்ளாமல் வறிதே இருப்பது வசையாம் என்க.

தனது நிலைமையை எண்ணியுணர்வது மனிதனுக்குப் பெரிய புண்ணியப் பேறுகின்றது; தன்னை உணர்ந்தவன் ஞானி ஆகின்றான்; ஆகவே அவன் அவல நிலைகளைக் கடந்து அதிசய மான ஆனந்த நிலையைப் பெறுகின்றான்.

எண்ணி உணராமல் கண்ணை மூடிக் கவிழ்ந்திருப்பவன் மண்ணாய் மடிந்து போகிறான். நல்ல பகுத்தறிவைப் பெற்றிருந்தும் அதனைப் புல்லிய வழிகளில் செலுத்திப் புலையாய்க் களித்துத் திரிந்து யாதொரு கதியும் காணாமல் அவமே அழிந்து போவது அவலப் பிறப்பாய் முடிந்து மாய்கிறது.

உலக வாழ்வின் நிலைமையை உணர்ந்து தனக்கு உறுதிநலனை விரைந்து ஓர்ந்து கொள்கிறவன் பிறந்த பயனை அடைந்த சிறந்த முனிவனாய் உயர்ந்து விளங்குகிறான்.

ஆயுள் அதி வேகமாய்க் கழிந்து கொண்டே போகின்றது. தினமும் தான் செத்து வருவதை உய்த்துணராமல் ஊனம் அடைந்திருப்பது ஒருவனுக்குப் பெரிய ஈனமாம் என ஓர் ஞான முனிவர் நவின்றிருக்கிறார். புல்லிய நிலை புலையாகிறது.

உலகில் தோன்றி மடிகின்ற உடல் அழிவுகளுக்குக் கடல் அலைகளை உவமை காட்டியது அளவிடலரியனவாய் மாறி மாறி எழுந்து மடிந்து ஓயாது தொடர்ந்து வருதல் கருதி.

பிறந்தவர் யாவரும் இறந்து படுவதைக் கண் கூடாகக் கண்டிருந்தும் தன் கூடு பிரியுமுன் தனக்கு ஊதியத்தை அடையாதிருப்பது பெரிய மடமையாகின்றது. விழி இழந்தவன் குழியில் வீழ்ந்து எழுதல் போல் வழிவகை தெரியாமல் மாந்தர் அழிவில் ஆழ்ந்து அலமருகின்றனர்.

விழியிழந்தான் போம்பொழுது விழுங்குழியில் மீண்டடந்த
வழியதனில் வரும்பொழுது மறித்தும் விழுந்திடுவது போல்
இழிபுறும் அஞ்ஞானத்தால் இறந்து பிறந்து எஞ்ஞான்றும்
ஒழிபிலிடர் உயிர்எய்தும்; உது நீங்கில் உறும் இன்பம். (1)

அடவிதனில் புகுந்திடினும், அடுக்கல்முழை நுழைந்தாலும்,
இடைநிலவு சேய்மை நிலத்து எய்திடினும், எறிதரங்கக்
கடலதனின் மூழ்குறினும், காலமது வருங்காலை
உடல்ஒழியும் இறப்பதனோடு ஒற்றுமையது ஆகலினால். (2)

(சேது புராணம்)

மனித வாழ்வில் அழிவு நிலை இவ்வாறு தழுவியுள்ளமையால் உடல் விழுமுன் உயிர்க்கு உறுதியை நாடிக் கொள்ள வேண்டும் என மேலோரும் நூலோரும் பாடியருளினர்.

நாச்செற்று விக்குள்மேல் வாராமுன் நல்வினை
மேற்சென்று செய்யப் படும். (குறள், 335)

சாவு நேருமுன் சீவனுக்கு இனிய தருமத்தைச் செய்து கொள்ளுக எனத் தேவர் இவ்வாறு உய்தி கூறியுள்ளார்.

மனம் வாக்குக் காயங்களால் மனிதன் செய்து வருகிற நல்வினைகள் யாண்டும் இன்ப நலங்களை நல்கி வருதலால் அவை சீவ அமுதங்களாய் மேவியுள்ளன. காலம் உள்ள பொழுதே நல்ல புண்ணியங்களை நயந்து கொள்பவன் மேலான இன்பங்களை அடைந்தவனாகின்றான்.

இளமை கழிந்து போகிறது; மூப்பு வளர்ந்து வருகிறது; சாக்காடு உன்னை நோக்கி உருத்து நிற்கின்றது; இந்த அபாய நிலைகளை அறிந்து யாதொரு உபாயமும் தேடாமல் நீ ஊனமா

பிருப்பது ஈனமாம். உண்மை தெளிந்து நன்மையை விரைந்து புரிந்து கொள்ளுக.

"நெருநல் என்பது சென்றது, நின்ற
இன்றும் செல்லாநின்றது, முன்சென்று
வருநாள் கண்டார் யாரே? அதனால்
ஒருநாள் கைப்படுத் துடையோர் இன்மையின்,
நல்லது நாடுமின்! உள்ளது கொடுமின்!
வழாஅ இன்பமும் புணர்மின்! அதாஅன்று
கீழது நீரகம் புகினும், மேலது
விசும்பின் பிடர்த்தலை ஏறினும், புடையது
நேமி மால்வரைக்கு அப்புறம் புகினும்
கோள்வாய்த்துக் கொட்கும் கூற்றத்து
மீளிக் கொடுநா விலக்குதற்கு அரிதே." (ஆசிரிய மாலை)

உங்கள் வாழ்நாள் கணம் தோறும் கழிந்து கொண்டேயிருக்கிறது; எங்கே போய் ஒளிந்தாலும் எமனை யாரும் தப்ப முடியாது; பொழுது இருக்கும் பொழுதே உயிர்க்கு உரிய நன்மையை உறுதியாகச் செய்து கொள்ளுங்கள் என உலக மக்களை நோக்கி உரிமையுடன் உரைத்திருக்கும் இந்த அருமைப் பாசுரம் நாளும் நன்கு சிந்திக்கத்தக்கது. அரிய உறுதி நலங்களைப் பெரியோர்கள் தெளிவாக அருளியுள்ளனர். மொழிகளில் மிளிர்கின்ற பொருள்களை அறிவு விழிகளால் கருதி நோக்குபவர் பெரிய பாக்கியங்களை அனுபவிக்க நேர்கின்றனர்.

உயிர்க்கு ஓர் இடன்.

என்றது பல உடல்களிலும் புகுந்து புகுந்து ஒதுக்குக் குடியிருந்து ஒன்றிலும் நிலையின்றி ஓயாது சுற்றி வருகிற உயிர்க்கு நிலையான ஓர் இடம் பேரின்ப வீடே ஆதலால் நித்தியமான அந்த முத்தி நிலையை உய்த்துணர வந்தது.

புக்கில் அமைந்தின்று கொல்லோ உடம்பினுள்
துச்சில் இருந்த உயிர்க்கு. (குறள், 340)

என்றும் நிலையாயிருந்து வாழ இந்த உயிர்க்கு ஒரு சொந்த வீடு இல்லையா? என்று தேவர் இங்ஙனம் இரங்கியிருக்கிறார். பிறவி நீங்கி யாவரும் பேரின்ப வீட்டை அடைய வேண்டும் என்னும் கருணைக் காட்சி இங்கே கனிந்திருக்கிறது.

நீரிலெழும் அலைகள் என நிலத்திலெழு
 தலைகளெலாம் நேரே மாய்ந்து
காரிலெழு மின்னல்கள் போல் கடிதுமறைந்
 தொழிகின்ற காட்சி கண்டும்
ஓரில்நமக் குரிமையா வேண்டுமெனும்
 உணர்வின்றி உயிர்கள் அந்தோ
பாரிலெழு பிறவிகளில் பல படியாய்த்
 திரிந்து வரும் பான்மை என்னே!

**நிலையான குடிபேற்றத்தை மறந்து விட்டு நிலை திரிந்து உயிர்கள் புலையாடி வருவது பொல்லாத அல்லலாய்ப் பொங்கியுள்ளது. உடலுயிர்களின் நிலைகளைப் பகுத்தறிந்து உண்மை காணாமையால் நன்மை காணாது போயது.**

"உற்றதை உணரும் உடல் உயிர் வாழ்வுழி
மற்றைய உடம்பே மன்னுயிர் நீங்கிடின்
தடிந்துஎரி யூட்டினும் தான் உணராது எனின்
உடம்பிடைப் போனது ஒன்று உண்டென உணர்நீ
போனார் தமக்கு ஓர் புக்கில் உண்டு என்பது
யானோ வல்லேன் யாவரும் உணர்குவர்;
உடம்பீண்டு ஒழிய உயிர்பல காவதம்
கடந்து சேட் சேறல் கனவினும காண்குவை
யாங்கனம போகி அவ்வுயிர் செய்வினை
பூண்ட யாக்கையிற் புகுவது தெளிநீ." (மணிமேகலை 16)

**உயிர் நிலையை உணர்த்தி இது உய்தி கூறியுளது.**

பேணும் முறை அந்தோ பிழை.

**உயிர்க்கு இதத்தை நாடாமல் உலக போகங்களில் மயங்கிக் கலகமையலில் களித்துத் திரிவதை இது இளித்து இரங்கியது.**

**உறுதி நிலையைக் கருதித் தெளிந்து உரிமை நலனை மருவுக.**

---

497. வந்தோம் இனிதாக வாழ்கின்றோம் வையமெலாம்
 முந்தோடி ஆள முயல்கின்றோம்—அந்தோபின்
 போகும் நிலையறியோம் போற்றோம் அதற்கொன்றும்
 சாகுநாள் ஆமோ தவம். (எ)

இ—ள்

**இவ் வுலகில் வந்து பிறந்தோம்; இனிதாக வாழ்ந்து வருகி**

றோம்; மேலும் உலகை எல்லாம் ஆள வேண்டும் என்னும் ஆவலோடு அலைந்து திரிகின்றோம்; அந்தோ! போகும் நிலையை உணராமல் புலையாடி நிற்கின்றோம்; சாகும் நாள் யாது வரும்? அதனை யூகமாய் உணர்ந்து உய்க என்பதாம்.

தனது வாழ்வின் நிலைமைகளை ஆழ்ந்து சிந்தித்துத் தனக்கு வேண்டிய உறுதி நலங்களை ஓர்ந்து கொள்வது மனிதனுடைய உயர்ந்த ஞானமாய் ஒளி மிகுந்துள்ளது

வந்தோம் என்றது பல பிறவிகளிலும் படிந்து உழன்று நெடிது திரிந்து முடிவில் அரிய மானிடராய் வந்திருக்கும் அருமையை உணர்ந்து உரிமை புரிந்து கொள்ள. வரவு நிலை தெரிந்து செலவு நிலை அறிந்து உறவு நிலை தெளிந்து உறுதி நிலையை அடைந்து கொள்வதே உயர்ந்த ஞானத்தின் முடிந்த நிலையாம்.

பெற வேண்டியதைப் பெறாமல் பிழைபட்டு நிற்பது பேதைமை ஆதலால் அது ஏதம் என நின்றது தெளிந்த மேதைக்குப் பயன் இழிந்த வழிகளை நீங்கி உயர்ந்த நிலையை உரிமையாக மருவிக்கொள்வதேயாம்

எல்லாவற்றிலும் உயர்ந்து என்றும் அழியாத இன்ப நிலையமாயிருப்பது பரம்பொருளே; அந்த இன்பப்பொருளை அடைந்த பொழுதுதான் துன்ப இருள் தொலைந்து ஒழியும். தனி முதலான அது புனித நிலையுடையது; அந்த இனிய நீர்மையைத் தழுவிய அளவு மனிதன் தெய்வமாய் இன்ப நிலையை எய்துகின்றான்.

எவ்வழியும் பிறவி துன்பம் உடையது ஆதலால் அதனை நீக்கியருள வேண்டும் என்று இறைவனை நோக்கி உருகி உணர்வுடை யுயிர்கள் ஏங்கி அழுகின்றன. நூலறிவு தெளிந்த பொழுது வாலறிவனை வணங்கி வாழ்த்தி வணங்குகின்றது; அன்புரிமையோடு புகழ்ந்து போற்றி இன்ப நிலைகளை விழைந்து வேண்டுகின்றது துதி மொழிகள் எல்லாம் கதி விழைவுகளோடு கனிந்து வருகின்றன.

"செங்கட் குறவர் கருங்காட்டு வளர்த்த
பைங்கொடி வள்ளி படர்ந்தபுய மலையோய்!
இமயம் பூத்த சுனைமாண் தொட்டில்
அறிவில் தங்கி அறுதாய் முலையுண்டு

உழல்மதில் சுட்ட தழல்நகைப் பெருமான்
வணங்கி நின்று ஏத்தக் குருமொழி வைத்தோய்.
ஓம் எனும் எழுத்திற் பிரமம் பேசிய
நான்மறை விதியை நடுங்குசிறை வைத்துப்
படைப்பு முதல் மாய வானமுதற் கூடித்
தாதையும் இரப்பத தளையது விடுத்தோய்!
வெட்சிமலர் சூழ்ந்த நின்னிரு கழற்கால்
குழந்தை அன்பினொடு சென்னிதலைக் கொள்ளுதும்
அறிவுநிலை கூடாச் சின்மொழி கொண்டு
கடவுட் கூறு உலவா அருததியும்
சநநப் பீழையும் தள்ளாக் காமமும்
தற்படு துயரமும அடைவுகெட்டு இறத்தலும்
தென்புலக் கோமகன் தீத்தெறு தண்டமும்
நரகொடு துறக்கத்து உழல்வரு பீழையும
நீளா திம்பரின் முடித்து
மீளாக் காட்சி தருதியின் றெனவே" (கல்லாடம்)

பிறவித் துயரை நீக்கிப் பேரின்ப நிலையை அருளும்படி முருகக் கடவுளை நோக்கிக் கல்லாடர் இவ்வாறு துதித்து வேண்டியிருக்கிறார். துதிகளில் உள்ள சுவைகள் கருதியுணர வுரியன. உலகங்களையெல்லாம் படைக்கின்ற பிரம தேவனையும் சிறையில் இட்டுப் பின்பு சிவபெருமான் வேண்ட அருள் புரிந்து வெளியே விட்ட முருகநாதா! எனது பிறவிச் சிறையை நீக்கி எனக்குப் பேரின்ப முத்தி தந்தருளுக என்று அன்பு கனிந்த நெஞ்சராய்க் கவிஞர் வேண்டியுள்ள உரிமை உவகை புரிந்து வருகின்றது. சிறந்த அறிவு நிறைந்த பொழுது அது உயர்ந்த உண்மையை உறுதியாக விழைந்து கொள்கின்றது.

வையம் எலாம் ஆள முயல்கின்றேம்.

சீவர்களுடைய இயல்பான மையல் மயக்கத்தை வரைந்து காட்டி இது உய்தியை உணர்த்தியுளது. மனிதனது ஆசைக்கு எல்லை இல்லை; எது கிடைத்தாலும் மேலும் மேலும் வேண்டும் என்று மூண்டு எழுந்து நீண்டு திரிகின்றான். உலகம் முழுவதையும் ஆள எண்ணுகின்றான்; இவ்வாறு மண் ஆண்டு மண்ணோடு மண்ணாய் மாண்டு போன மன்னர்கள் கதிகளை எண்ணியுணராமல்

ஏமாந்துழல்கின்றான். முடிவு தெரியாமல் முடிந்து போவனவே சீவ சுபாவங்களாய் மூடிந்திருக்கின்றன.

மிகுந்த பொருளாசையுடைய ஒருவன் அதனை மருள் மண்டி விழைந்தான். தான் தொட்டதெல்லாம் பொன் ஆக வேண்டும் என்று கடவுளை நோக்கிக் கடுந்தவம் புரிந்தான்; தெய்வம் தோன்றியது; உனக்கு யாதுவேண்டும்? என்றது. தீண்டியது எல்லாம் பொன்னுக வேண்டும் என்று வேண்டினன். "அவ்வாறே ஆம்" என்று கூறி அது மறைந்து போயது. அவன் விரைந்து வீட்டுக்கு வந்தான். பண்டங்களைத் தொட்டான்; யாவும் பொன் ஆயின; உவந்து துள்ளினன்; விழைந்து போய் மனைவியைத் தழுவினன்; அவள் பொன்னாய் முன்னே உயிர் இன்றி நின்றாள்; அன்னே! என்று அலறினன்; பசிமிகுந்தமையால் அன்னத்தை எடுத்து உண்ணப் போனன்; அதுவும் பொன்னாய் மாறி நின்றது; யாதும் தெரியாமல் அப் பேதை மகன் விழித்தான்; செயத பிழையை நினைந்து வெய்துயிர்த்தான்; பட்டினி கிடந்து பதைத்துச் செத்தான்.

தொட்டதெல்லாம் பொன்னுக வேண்டும்எனக்
கடவுளைமுன் தொழுது வேண்டி
இட்டமுடன் சித்திபெற்றான் இநங்களிப்பால்
துள்ளி வந்தான் எலலாம தொட்டான்
ஒட்டி நின்ற யாவுமே பொன்னுக
உறுபசியால் உள்ளுடைந்தே
பட்டினியால் பதைத்திறந்தான் படுகேடு
தெரியாமல் பட்டான் அந்தோ!

தனக்கு நேருகிற முடிவை உணராமல் சீவர்கள் இவ்வாறு மாயமயக்கங்களில் மடிந்து முடிந்து போகின்றன. பேதைப் பித்தங்கள் பெருகியிருத்தலால் பேய்ப்பய வுலகம் என வையத்தாரை நோக்கி வானத்தார் வைது வருகின்றனர். 'இருளுடையுலகம் என்று கம்பர் கூறியது பல பொருள்களை யுடையது. ஈன இருளும், ஊன மருளும் ஞான ஒளியால் நீங்குகின்றன; ஆகவே அதனையுடையவர் மானவர் திரளில் மகிமை பெற்று மிளிர்கின்றார். இனிய சீலம் அரிய தவம் ஆகிறது.

சாகும் நாள் ஆமோ தவம்?

ஆகாது என்பதை ஓகாரம் உணர்த்தி நின்றது.

போகும் நிலையை எதிரறிந்து சாரும் முன்னமே செய்ய வேண்டியதைச் செய்து கொள்ளாதவன் உய்தி யிழந்தவனாய் வெய்துயிர்த்து விளிகின்றான்.

தானம், தவம், தருமம் என்பன ஆன்ம ஊதியங்களாய் மருவியுள்ளன. நாளும் அழிவு நிலையில் உள்ள மனிதன் தன் உயிர்க்கு உறுதிநலனை ஓராதிருப்பது பேரிழவாகின்றது.

தேளேறியவிடம்போல் தீயபசி உள்ளேற
நாளேரிடல்போல் நவையாமே—மூளும்
மரணம் வருமுன் மதிதெளிந்து நல்ல
அரணம் அடையார் அவம்.

தேள் கொட்டிய விடம்போல் பசித்தீ உள்ளே வருத்த அன்று போய் நாள் ஏர் வைத்து உழுது விதைக்கப் போனவன் போல் சாவு நேர்ந்தபோது ஒருவன் தருமம் செய்ய எண்ணுவது.

இந்த உவமைக்குறிப்பில் உள்ள நயத்தை ஊன்றிஉணர்ந்து உறுதிநலனை ஓர்ந்து கொள்ள வேண்டும்.

பசிவந்த பின்நெல்லை விதைப்பது போல்
வீட்டில் தீ பற்றிக் கொண்டு
நசியும்போது அதைஅவிக்க ஆறுவெட்டல்
போலும் போர் நடக்குங்காலை
விசிகநூல் கற்கமுயல்வது போலும்
கபமிஞ்சி விக்கிச் சிக்கி
இசிவுகொண்டு சாங்காலத்து எப்படி நீ
அறம் புரிவாய் இதயப் பேயே? (நீதிநூல்)

ஒரு உண்மையை விளக்கப் பல உவமானங்கள் விழி தெரிய வந்துள்ளன. காலம் உள்ள பொழுதே நல்ல உறுதியை நாடிக் கொள்ளுக; இல்லையேல் அல்லல்கள் எல்லையின்றி மூடிக் கொள்ளும்; முடிவு தெளிந்து விடிவு காணுக.

---

498. எய்தற் கரிதாய இம்மா னுடம்பெற்றும்
உய்தற் குரியனசெய் துய்யாமல்—வெய்தாக
வாழ்நாளை வீண்கழித்து மாருத வன்துயருள்
வீழ்கின்றார் அந்தோ விளிந்து. (அ)

இ—ள்

அரிய மானிடப் பிறவியை அடைந்தும் உயிர்க்கு உறுதி

கருதி உய்யாமல் வாழ்நாளை வீண் கழித்து நெடிய துயருள் கொடிதாக மனிதர் விழுந்து மடிகின்றார் என்பதாம்.

இது அரியது பெற்றவன் உரியது பெறுக என்கின்றது.

பிறப்பின் அருமையையும் பெருமையையும் சிறப்பாகக் குறித்தது அதனால் அடைய வுரிய பயனை உறுதியாக அடைந்து கொள்ள வேண்டி. பெற்றுள்ள கருவியையும் நெறி தக்க பேற்றையும் உய்த்துணர்ந்தவர் உயர்ந்த நிலையை விரைந்து பெறுகின்றனர். உண்மையுணர்வு உரிமையை அடைகிறது.

பறவை விலங்கு முதலிய இழிந்த பிறவிகளையெல்லாம் கடந்து உயர்ந்த இந்த மனிதப் பிறவியை அடைந்திருப்பது அரிய அதிசயமான பெரிய பேறும். மனிதருள்ளும் நல்ல உருவும் பல்வகை நலன்களும் மருவி வருவது பெரிதும் வியப்பாம். குருடு செவிடு மூடம் மூடம் முதலிய இழி நிலைகள் பலவும் தப்பி விழுமிய நிலையில் விளங்கி மிளிர்வது எழுமையும் தொடர்ந்த புண்ணியத்தின் பயனாய் நண்ணி எழுகின்றது. அரிய பல நலன்களை அவ்வாறு மருவி நிற்பினும் அழிவு நிலை என்றும் தழுவியுள்ளது. பிறவி இங்ஙனம் எவ்வழியும் பரிபவ நிலைகளில் பெருகியிருத்தலால் அதனால் அடைய வுரிய பயனை விரைவில் அடைந்து கொள்ள வேண்டும் என மேலோர் அருள் புரிந்து பொருள் தெரிந்து கொள்ளும்படி போதித்துள்ளனர்.

விண்டு வேய்நரல் ஊன்விளை கானவ ரிடனும்
கொண்டு கூர்ம்பனி குலைத்திடு நிலைக்களக் குறும்பும்
உண்டு நீரென உரையினும் அரியன ஒருவி
மண்டு தீம்புனல் வளங்கெழு நாடெய்தல் அரிதே. (1)

வில்லின் மாக்கொன்று வெண்ணிணத் தடிவிளிம் படுத்த
பல்வி ஞர்களும் படுகடற் பரதவர் முதலா
எல்லை நீங்கிய இழிதொழில் இழிகுலம் ஒருவி
நல்ல தொல்குலம் பெறுதலும் நரபதி அரிதே. (2)

இன்ன தன்மையின் அருமையின் எய்திய பொழுதே
பொன்னும் வெள்ளியும் புணர்ந்தென வயிற்றகம் பொருந்தி
மின்னு மொக்குளும் எனநனி வீயினும் வீயும்;
பின்னை வெண்ணெயின் திரண்டபின் பிழைக்கவும் பெறுமே. (3)

வெண்ணெய் ஆபது வீங்குபு கூன்புற யாமை
வுண்ணம் எய்தலும் வழுக்கவும் பெறுமது வழுக்காது
ஒண்மை வாண்மதி யுருவொடு திருவெனத் தோன்றிக்
கண்ணணார் அழக் கவிழினும் கவிழு மற்றறி நீ. (4)

அழித வின்றியங் கரு நிதி இரவலர்க் கார்த்தி
முழுதும் பேர்பெறும் எல்லையுள் முரியினும் முரியும்
வழுவில் பொய்கையுள் மலரென வளர்ந்து மையாடிக்
கெழீஇயினா ரொடுங் கிளையழக் கெடுதலும் கெடுமே. (5)

கோதை மங்கையர் குவிமுலைத் தடத்திடைக் குளித்துக்
காதல் மக்களைக் கண்டுவந் தினிதினில் சழிப்பப்
பேது செய்பிணிப் பெரும்புலி பாய்ந்தி ப் பிணமாம்
ஓத மாக்கடல் உடைகலத் தவருற்றது உறவே. (6)

காமம் பைப்பயக் கழியத்தங் கடைப்பிடி சுருங்கி
ஊமர் போலத்தம் உரையவிந்து உறுப்பினில் உரையாத்
தூய்மை யில்குளம் தூம்புவிட்டாம் பொருள் உணர்த்தி
ஈமம் ஏறுதல் ஒருதலை இகலமர் கடந்தோய் (7)

(சீவக சிந்தாமணி)

மானிட வாழ்வின் நிலைமையைக் குறித்து வந்துள்ள இவை இங்கே கூர்ந்து சிந்திக்கத்தக்கன. மனிதப் பிறவி கிடைத்தல் அரிது; கிடைத்தாலும் நல்ல இடத்தில் நல்ல நிலையில் வாய்த்தல் அரிது; அங்ஙனம் வாய்ப்பினும் அதன் அழிவு நிலை அளவிடலரியது; வெள்ளியும் பொன்னும் போல் சுக்கிலமும் சுரோணிதமும் கலந்து கருவடைந்த பொழுதே உருவுடைந்து ஒழியினும் ஒழியும்; பிறந்த வுடன் இறந்துபடினும் படும்; ஓராண்டுள் மாண்டு போயினும் போம்; நேரே பேரிடுமுன் அழியினும் அழியும்; அங்ஙனம் அழிந்து போகாமல் பிழைத்துப் பாலன் குமரனாய் வளர்ந்து பருவம் அடைந்து மங்கையர் போகங்களை மருவி நுகர்ந்து மகிழ்ந்து வரும் பொழுது அவர் மாண்டு டடினும் படுவர்; அவ்வாறு படாது நின்றாலும் மூப்பு அடைந்து எவ்வாறு ஆயினும் சுடுகாடு சேர்தல் திண்ணம்; அந்தச் சாவு நேருமுன் ஆவதை யுணர்ந்து ஆன்ம ஊதியத்தை ஏதாவது ஓரளவு அடைந்து கொள்ளுக என்பதை இது விழைந்து கூறியுள்ளது. மனிதனுடைய அனுபவ வுண்மைகள் மொழிகளில் மிளிர்கின்றன. அறிவு விழிகளால் கருதி நோக்கி உறுதி நலங்களை உரிமையாக மருவிக் கொள்ள வேண்டும். உள் நோக்கம் உயர்வு புரிகிறது.

எவ்வழியும் உன் நிலைமையைச் செவ்வையாகச் சிந்தனை செய்து உய்யும் வழியை ஓர்ந்து கொள்ளுக. எய்திய பிறவிக்கு இனிய பயனை அடைவது திவ்விய மகிமையாகிறது.

---

499. வீடுநிலம் மாடுமனை வேண்டுமென வேணவா
வோடு வருந்தி உழல்கின்றாய்—கூடு
பிரிந்தபொழு துன்னோடு பின்வருவ தென்னே
தெரிந்து தெளிக திறம். (கூ)

இ—ள்

மனைவி வீடு மாடு நிலம் முதலாகப் பலவகையான இன்ப நலங்களைப் பெரிதும் விரும்பிப் பேராசையோடு அலைகின்றாய்; உயிர் பிரிந்து போகும் பொழுது உன்னோடு உடன் வருவது என்னே? அதனை உணர்ந்து தெளிக என்பதாம்.

உடல் உயிர் இரண்டும் ஒருமையாய் மருவி உருவமாய் வெளியே உலாவி வருகின்றன. இளமை மூப்பு முதலிய நிலைகளை அடைந்து உடல் விரைந்து அழிகின்றது. உயிர் என்றும் யாண்டும் நித்தியமாய் நிலைத்து நிற்கிறது.

அழிந்து ஒழிந்து போகின்ற உடலை விழைந்து பேணுவதும் அழியாத உயிர்க்கு உரிய ஆனந்த நிலையை மறந்து விடுவதும் மாயமயக்கமாய் விளைந்திருக்கின்றன.

உடலை வளர்த்து மினுக்கி உல்லாசமாய் வாழும் பொருட்டு மனிதன் பல வசதிகளைத் தேடிப் படாதபாடுகள் படுகிறான். தான் நாடிய பொருள்கள் கைகூடியவுடனே மேலும் மேலும் ஆசை பெருகி எழுகிறது. அளவு மீறி எழுந்த பொழுது அது பேராசை ஆகிறது; ஆகவே ஆன்ம நிலையை மறந்து அவல நிலைகளில் விரைந்து எல்லையில்லாத அல்லல்களில் எவரையும் அது இழிந்துபடச் செய்கின்றது.

தேக யாத்திரைக்கு வேண்டிய போகங்களை விளைத்துக் கொண்டு ஆன்ம நலனைக் கருதி ஒழுகுபவன் மேன்மையான நிலைகளை மேவி மகிழ்கிறான். அவ்வாறு கருதியுணராதவன் வெவ்விய துயரங்களில் அழுந்தி எவ்வழியும் இழிவாய்க் கழிந்து உழலுகிறான். உண்மையான உறுதிநலனை மறந்து புன்மைநிலைகளில் புலை

யாடி ஓடுதலால் புல்லிய ஆசை மனிதனை நிலை குலைத்து நீசப் படுத்தி விடுகிறது. அவல ஆவல்கள் கவலைகளாய்க் கனிந்து வருகின்றன.

வேணவா என்றது வேட்கை, அவா என்னும் இரு மொழிகளும் மருவி ஒரு பெயராய் வந்தது. பெயரமைதி இயலுரிமையை இனிது விளக்கியுளது.

ஒரு பொருளைப் பெற வேண்டும் என்று உள்ளம் விழைந்து நிற்பது வேட்கை அதனை மேலும் மேலும் அடைய வேண்டும் என்னும் ஆவலோடு நீண்டு நிற்கும் ஆசை அவா என்க.

"செய்யுள் மருங்கின் வேட்கை என்னும்
ஐயென் இறுதி அவாமுன் வரினே
மெய்யொடும் கெடுதல் என்மனார் புலவர்:
டகாரம் ணகாரம் ஆதல் வேண்டும்." (தொல்காப்பியம்)

இந்த இயல்விதியை ஈண்டு உணர்ந்து கொள்ள வேண்டும்.

தான் சுகமாய் வாழ வேண்டும் என்றே யாண்டும் மனிதன் ஆவலோடு மூண்டு முயன்று வருகிறான் எது சுகம்? உண்மையான இன்பம் எவ்வழியில் செவ்வையாய் விளைந்து வருகிறது; எதனை உறுதியாக அடைய வேண்டும்? என்னும் இன்னவாறான விசாரணையை யாதும் எண்ணாமலே கண்ணயர்ந்து போகின்றான். கண்ட காட்சிகளிலேயே களிப்பு மீதூர்ந்து காலம் கழித்து ஒழிவது சாலவும் இளிவாம்.

கூடு பிரிந்த பொழுது உன்னோடு பின்வருவது என்னே?

இந்தக் கேள்வியைத் தன்னுள் வினவி ஒவ்வொருவரும் உண்மையை நாளும் ஓர்ந்து உணர வேண்டும்.

தன்னுடைய நிலைமையைத்தனியே இனிது ஆராய்கின்றவன் அரிய பல நன்மைகளை எளிதே பெற்றுக் கொள்கிறான்.

---

500. உள்ள பொழுதே உறுதிநலம் ஓராமல்
எள்ளலுற ஓடி இழிகின்றாய்—வெள்ளந்தான்
போயொழிந்த பின்புநீர் புக்குவணை வந்தான் போல்
நீயழிவாய் நின்று நினை. (ம)

இ—ள்

காலம் இருக்கும் பொழுதே உயிர்க்கு உறுதி நலனைக் கரு

திக் கொள்ளாமல் விருதாவாய் அலேகின்றாய்! வெள்ளம் போன பின் நீர் பருக வந்தவன் போல் நீ மறுகி அயர்வாய் என்பதாம்.

உறுதிநலம் என்றது என்றும் அழியாத இன்ப நிலையை. நித்தியமான அந்த உத்தம ஆனந்த நிலையை எவன் அடைந்து கொள்கின்றானே அவன் முத்தன் ஆய் முதன்மை பெற்று நிற்கின்றான். பிறந்த சீவகோடிகளுள் அத்தகைய இனிய நிலைமையை எய்தியவன் தனி முதல் தலைமையில் நிலவி மிளிர்கின்றான்.

பிறவி யாண்டும் எவ்வகையிலும் துயரமானது ஆதலால் அதனைத்தாண்டி உய்வதே தத்துவஞானமாய் நீண்டு நிலவுகிறது.

"வேண்டுங்கால் வேண்டும் பிறவாமை." (குறள், 362)

இந்த மறைமொழி பிறவியின் துயரையும், பிறவாமையின் உயர்வையும் தெளிவாக உணர்த்தியுளது. தான் யாண்டும் இன்பத்தை அடைய வேண்டும் என்று எவன் விரும்புகிறானே, அவன் எவ்வாற்றானும் பிறவியை அடையாமல் தன்னைப் பேணிக் கொள்ள வேண்டும் என்க.

பிறவி எந்த வகையிலும் துன்பம் ஆதலால் அதனை நீங்கி உய்யவே சீவகோடிகள் யாண்டும் ஏங்கியுழல்கின்றன. தெளிவான வழி தெரியாமையால் இளி வழிகளில் இழிந்து களி மயக்கோடு சுழன்று வருகின்றன. பழியான வாசனைகளில் படிந்து பழகினவை விழி திறந்து காணமல் வீணே அலேந்து திரிகின்றன.

சுத்த எண்ணங்களாலும், நல்ல கருமங்களாலும் சித்தம் தெளிகின்றது; அது தெளியவே ஞான ஒளி உதயமாய் நலம் பல காண்கின்றது; அந்த ஞானக் காட்சி நண்ணிய பொழுது பிறவியின் ஈனங்களும், இழி துயரங்களும எளிதே தெரிகின்றன; அங்ஙனம் தெரிந்த ஞானிகள் பிறப்பின் அல்லல்களை எண்ணி உள்ளம் கலங்கி உய்தி காண மூண்டு உறுதியோடு விரைகின்றார்.

பிறவித் துயரங்களைக் குறித்து அவர் கருதிச் சொல்லியுள்ள காட்சிகள் கொடிய பரிபவங்களாய்ப் பெருகியுள்ளன. சில அயலே வருகின்றன.

"நஞ்சுமிழ் பகுவாய் வெஞ்சின மாசுணம்
தன்முதல் முருக்க நென்முதல் சூழ்ந்த
நீர்ச்சிறு பாம்புதன் வாய்க்குஎதிர் வந்த

தேரையை வவ்வி யாங்கு யான்முன்
கருவிடை வந்த ஒருநாள் தொடங்கி
மறவா மறலி முறைபிறழ் பேழ்வாய்
அயிற்றலை அன்ன எயிற்றிடைக் கிடந்தாங்கு
அருள்நளி யின்றி ஒருவயிறு ஓம்பற்குப
பல்லுயிர் செகுத்து வல்லிதின் அருந்தி
அயர்த்தனன் இருந்தும் போலும் பெயர்த்து நின்று
எண்தோள் வீசிக் கண்டோர் உருகத்
தொல் எயில் உடுத்த தில்லை மூதூர்
ஆடும் அம்பலக் கூத்தனைப்
பாடுதல் பரவுதல் பணிதலோ இலமே"

(கோயினான்மணிமாலை)

பிறவித் துயரைக் குறித்துப் பட்டினத்தார் இவ்வாறு வருந்தியிருக்கிறார். ஒரு கொடிய நச்சுப் பாம்பு; வயலுள் சிறிய நீர்ப் பாம்பைப் பிடித்துக் கொண்டது; அது ஒரு தவளையைக் கவ்வியிருந்தது; அந்தப் பாம்பின் வாய்த் தேரை போல் எமன் வாயில் அகப்பட்டு அல்லல் பல அடைந்தும் புல்லிய போகங்களை நுகர்ந்து உள்ளம் களித்துத் திரிந்து உன்னை மறந்து எல்லையில்லாத பிறவிகளில் இழிந்து அலைந்து நொந்தேன்; அந்தோ! தில்லைப்பரமனே! என்று உள்ளம் உருகி அடிகள் பாடியுள்ளார். உரைகளில் பொதிந்துள்ள உறுதியுண்மைகளை ஊன்றியுணர்ந்து கொள்ள வேண்டும்.

எங்கும் துன்பச் சூழல்களை நிறைந்திருந்தும் சிறிது பொருளைக் கண்டும், இனிய உணவுகளை உண்டும், அழகிய மங்கையரை முயங்கியும் மனிதன் கொஞ்சம் நெஞ்சம் களித்துக் கொள்கிறான். அந்த அற்பக் களிப்பும் அவலமாய் முடிகின்றது.

"இருந்தரா தலப்பரப்பில் இடுக்கண்மேல்
இடுக்கண் எய்தி இமைப்பில் வீந்து
வருந்துமானுடப் பிறப்பில் மங்கைநல்லா
ரொடு மயங்கி மகிழ்ந்து கோடல்
பருந்தின்வாய்ப் படும்அரவம் பிடித்தமண்
டூகம் கொள்சிறு பறவை செந்தேன்
அருந்துமாறு ஒப்பதனால் ஆங்கதுசிற்
றின்பமெனல் ஆயிற்றன்றே." (மெய்ஞ்ஞான விளக்கம்)

கருடன் ஒரு பாம்பைப் பிடித்தது; அந்தப் பாம்பு ஒரு தவளையைக் கடித்தது; அந்தத் தவளை ஒரு வண்டைக் கவ்விக் கொண்டது; இப்படி அல்லலான அபாய நிலையிலுள்ள அந்த வண்டு ஒரு துளி தேனை உண்டு மகிழ்ந்து கொண்டது; அதுபோல் பல துன்பங்களினிடையே மனிதன் மங்கையரை மருவி மகிழ்ந்து கொள்வது என அவனது சிற்றின்ப நிலைமை இது இங்ஙனம் இகழ்ந்திருக்கிறது. உருவக நிலைகள் துக்க பரம்பரைகளை ஒக்க நோக்கி உணர்ந்து கொள்ள வந்துள்ளன.

யானை துரப்ப அரவுறை ஆழ்குழி
நானவிர்ப் பற்றுபு நாலும் ஒருவன்ஓர்
தேனே இழிதுளி நக்கும் திறத்தது
மானுயர் இன்பம் மதித்தனை கொள்நீ. (சூளாமணி)

மானுட வாழ்வின் இன்ப நிலைமை இது வரைந்து காட்டியுளது. துன்பக் கலிப்புகளுள்ளே துளி அளவு இடையே சிறு களி மயக்கம் என விழி தெளிய வெளியிட்டது ஒளி தெளிந்து உய்தி காண.

அடுகரி தொடர வீழ ஐந்தலை நாகம் காண
இடிகிணற்று அறுகின்வேரைப் பற்றிஞான்றிட அவ்வேரைக்
கடுகிஓர் எலியும் வந்து கறித்திட அதில்நின் றேனுக்கு
இடைதுளி தேனக்கு இன்பம் போலுமிப் பிறவி யின்பம்.

ஒருவன் அடவிக்குப் போயிருந்தான்; அங்கே ஒரு பெரிய மதயானை அவனைக் கண்டு துரத்தியது; அவன் அஞ்சி ஓடினான்; அது பின் தொடர்ந்து முடுக்கியது; நெடிது ஓடி முடிவில் இருபுறமும் மரப் புதர்கள் அடர்ந்த சிறு வழியே புகுந்தான்; கரியும் நெருங்கியது; உயிருக்கு அஞ்சி எதிரேயிருந்த பாழ்ங்கிணற்றில் தாவினான்; அடியில் ஒரு கொடிய பாம்பு படம் எடுத்துச் சீறியது; அதற்குப் பயந்து அயலே வார்ந்து தொங்கிய அறுகம்புல்லைப் பற்றித் தூங்கினான்; அந்தப் புல்லையும் இரண்டு எலிகள் வந்து கடித்துக் கொண்டிருந்தன; அந்த நிலையில் அவலமாய்த் தொங்கிக் கிடந்த அவன் முதுகில் சில தேன் துளிகள் விழுந்தன; மேலே நோக்கினான்; அயலே நின்ற பெரியமரத்திலிருந்து இறால் உடைந்து தேன் சிந்தியது ஆதலால் அதற்கு நேரே நாவை நீட்டிச் சிலதுளிகளை நக்கி உளம் உவந்தான். அதிபரிதாபமான கொடிய

துயர நிலையில் உள்ள அவன் ஒரு துளி தேனை நக்கி உள்ளம் உவந்தது போல் எல்லையில்லாத அல்லல்களிடையே அருந்தல் பொருந்தல்களில் மனிதன் கொஞ்சம் இன்பம் கண்டு இறுமாந்து திரிகிறான். உருவகத்தை ஊன்றி நோக்கிப் பொருள் நிலைகளை ஓர்ந்து கொள்க.

அடுகரி என்றது எமனை; ஐந்தலை நாகம் என்றது ஐம்பொறிகளின் வெறிகளை; இடிகிணறு என்றது பிறவியை; அறுகம்புல் என்றது ஆயுளை; எலி கறித்தது என்றது பகல் இரவாய்க் கழிகின்ற நாளகளை; இவ்வாறு நாளும் அழிவு நிலையிலுள்ள மனிதன் இழி போகங்களை நுகர்ந்து களிமிகுத்து வருகிறான் என்க.

மானிட வாழ்வு இவ்வளவு ஊனமுடையதாயுளது; உண்மை தெளிந்து உறுதி நலனை ஓர்ந்து உய்தி பெறுக.

வான்எழுந்த வில்லும் வருதிறையும் மின்னும்போல்
ஊன் அழிந்து போகுமென ஓர்ந்திருந்தும்—ஆன
உறுதியொன்றும் செய்யாமல் உள்ளம் செருக்கி
வறிதொழிதல் வன்பாவ மாம்.

நிலைமைகளைக் கருதியுணர்ந்து நித்திய நலனை அடைக.

---

இவ் அதிகாரத்தின் தொகைக் குறிப்பு.

பண வுறுதி மகிமை மிக வுடையது.
அது சீவ ஒளி.
ஆக்கத்தின் அதி தேவதை.
ஊக்கத்தின் உயிர்.
அதனால் உயர் நலங்கள் உளவாகின்றன.
துயரினங்கள் ஒழிகின்றன.
செயல் இயல்கள் தெளிகின்றன.
அதனை இழந்தவர் இழிந்து கழிகின்றார்.
அடைந்தவர் உயர்ந்து திகழ்கின்றார்.
சிறந்த உறுதி தெளிந்த உய்தியாகின்றது.

ருய-வது உறுதி முற்றிற்று.

---

# ஐம்பத்தோராம் அதிகாரம்.

## இதம்.

அஃதாவது எவ்வுயிர்க்கும் இனியனாய் இதம் புரிவது. பிற வுயிர்க்கு உதவுவது தன்னுயிர்க்கு உயர்ந்த உறுதிநலனாய் விளைந்து வருதலால் அவ்வுறவுரிமை கருதி அதன்பின் இது வைக்கப்பட்டது.

501. என்றும் எவர்க்கும் இனியனாய் ஓர்மனிதன்
ஒன்றி ஒழுகின் உயர்பரனாம்—நன்றி
புரியும் அளவே புனிதநிலை பொங்கித்
தெரியும் வெளியே திகழ்ந்து. (க)

இ—ள்

எவ்வுயிர்க்கும் எஞ்ஞான்றும் இனியனாய் ஒரு மனிதன் இதம் புரிந்து ஒழுகிவரின் அவன் உயர்ந்த பரனாய் ஒளி மிகுந்து திகழ்வான்; நன்மை புரியும் அளவே புனிதநிலை வெளியே தெளி வாய் விளங்கும் என்க.

இது, மனிதனது புனித நிலையை உணர்த்துகின்றது.

உயர்ந்த இன்ப நலங்களையே மனிதன் யாண்டும் இயல்பாக விழைந்து வருகிறான். தான் விரும்பியதை விரும்பியபடியே பெரும்பாலும் அடைந்து கொள்ள முடியாமல் அவலமடைந்து நிற்கிறான். தவறான அந்நிலைக்கு மூல காரணம் தன்னிடமே உள்ளது என்பதை அவன் உணர்ந்து கொள்வதில்லை; உண்மையை ஊன்றி உணராமையால் எல்லாவழிகளிலும் புன்மையாய் இழிந்து அலைய நேர்கின்றான்.

தனக்கு இதத்தை நாடுகின்றவன் என்றும் இதம் உடையவ னாய் எவ்வழியும் நன்கு ஒழுகி வர வேண்டும். இது நித்தியமான சத்திய நியதி. உத்தம நிலைகளுக்கெல்லாம் இதம் உள் மூலமா யுள்ளது.

இதய பரிபாகமான இனிய நீர்மையே இதம் என வந்தது.

இதம்=இனிமை, நன்மை. இதத்திற்கு எதிர்மொழி அகிதம் என நேர்ந்தது. அகிதம்=கொடுமை, தீமை.

இதம் உயிர்களை உயர்கதியில் உய்க்கின்றது.

அகிதம் அதோகதியில் ஆழ்த்துகின்றது.

முன்னது புண்ணிய போகங்களாய்ப் பொங்கி விளைகின்றது. பின்னது பாவத்துயர்களாய்ப் பிணைந்து வருகிறது.

இதம் எவ்வுயிர்க்கும் இனிமையாய் வருதலால் அதனை யுடையவர் யாண்டும் தருமசீலர்களாய்த் தழைத்து வருகின்றனர்.

"இதம் எனும் பொருள் அலது ஓர் இயல்பு
உணர்ந்திலர் இவர்கள்."

இராமலட்சுமணர்கள் இங்ஙனம் குறிக்கப் பட்டுள்ளனர்.

இதத்தைத் தவிர வேறு யாதும் அறியாதவர் என அந்த அரச குமாரர்களைக் குறித்து மதிமானான அனுமான் இவ்வாறு மதித்திருக்கிறான். எவ்வழியும் நன்மை சுரந்திருப்பதே தருமாத்துமாக்களின் தன்மை என்னும் உண்மை ஈண்டு உணர வந்தது.

தனது இயலும் செயலும் இதமாய் இனிமைகனிந்தபொழுது அந்த மனிதன் அதிசய மகிமைகளை அடைந்து எங்கும் துதி செய்யப் பெறுகிறான்.

மனிதன் இனியனாய் ஒழுகின் உயர்பரன் ஆம்.

நரனுக்கும் பரனுக்கும் உள்ள வேற்றுமையை இது விளக்கியுளது. கருணையும் நீதியும கடவுளின் இயல்புகள். அந்த நீர்மைகளை மருவிய அளவு மனிதனும் தெய்வத் தேசுகளை எய்தி நிலவுகின்றான்.

எல்லார்க்கும் நல்லது செய்வதே இதம் ஆதலால் அதனை யுடையவர் புண்ணியவான்களாய்ப் பொலிந்து கண்ணியங்கள் மலிந்து எண்ணிய போகங்களையெல்லாம் எளிதே பெறுகின்றனர். இறைவனுடைய அருள்நலங்கள் அவர்க்குத் தனியுரிமைகளாய் இனிதமைகின்றன.

இதம் அகிதங்கள் என்பது
இகல்மன வாக்குக் காயத்து
இதம் உயிர்க்கு உறுதி செய்தல்;
அகிதம் மற்றது செய்யாமை;
இதம் அகிதங்கள் எல்லாம் இறைவனே
ஏற்றுக் கொண்டிங்கு
இதம் அகிதத்தால் இன்பத் துன்பங்கள்
ஈவன் அன்றே. (1)

இறைவன் இங்கு ஏற்பது என்னை
இதம் அகிதங்கள் என்னின்
நிறைபரன் உயிர்க்கு வைத்த
நேசத்தின் நிலைமை யாகும்;
அறமலி இதம் செய்வோருக்கு
அனுக்கிரகத்தைச் செய்வன்
மறமலி அகிதம் செய்யின்
நிக்கிர கத்தை வைப்பன். (2)

நிக்கிர கங்கள் தானும்
நேசத்தால் ஈசன் செய்வது
அக்கிர மத்தால் குற்றம் அடித்துத்
தீர்த்து அச்சம் பண்ணி
இக்கிர மத்தினாலே ஈண்டு
அறம் இயற்றிடு என்பன்
எக்கிர மத்தினாலும் இறைசெயல்
அருளே என்றும். (3)

தந்தைதாய் பெற்ற தத்தம்
புதல்வர்கள் தம் சொலாற்றின்
வந்திடா விடின் உறுக்கி
வளாரினால் அடித்துத் தீய
பந்தமும் இடுவர் எல்லாம்
பார்த்திடின் பரிவே ஆகும்
இந்தநீர் முறைமை யன்றோ
ஈசனார் முனிவும் என்றும் (4)

(சிவஞான சித்தியார்)

இந்தப் பாசுரங்கள் இங்கே ஊன்றியுணர்ந்து சிந்திக்கத்தக்கன.

இதம் உயிர்க்கு உறுதி செய்தல் என இதத்திற்கு இலக்கணமும் பொருளும் இங்ஙனம் விளக்கியிருக்கிறது. இதம்புரிபவர்க்கு இறைவன் இனியனாய் இன்பத்தை அருளுகிறான்; அஃது இல்லாதவர்க்குப் பொல்லாதவனாய் நின்று துன்பத்தைக் கொடுக்கிறான். எல்லாரும் நல்லவராய்த் திருந்தி வரவேண்டும் என்றே பரம்பொருள் விரும்பியுள்ளமையால் அல்வழியில் செல்பவரை அல்லலுறுத்தித் திருத்தியருளுகின்றான். தந்தை பிள்ளையை அடித்து அவனைத் தன் சொல்வழியே நல்வழிப்படுத்துதல் போல் இதத்தை

மறந்த சீவர்களுக்கு அகிதத்தை அனுபவத்தில் காட்டி அச்சுறுத்தி இறைவன் அவரை இதமுடையவராக்கி இன்பநிலையில் உய்க்கிருன் என்றமையால் இதத்திற்கும் பரத்திற்கும் உள்ள உறவுரிமையை உய்த்துணர்ந்து கொள்ளலாம்.

நன்றி புரியும் அளவே புனித நிலை.

மனிதன் உன்னத நிலையை அடைவது இன்னவகையால் அமையும் என்பதை இதனல் உணர்ந்து கொள்கிறேம். பிறர்க்கு உபகாரமான நல்ல செயல்களைச் செய்பவன் எல்லா வகையினும் உயர்ந்து எவரும் போற்ற விளங்குகிருன்.

இனிய விதைகளை விதைத்தவன் இன்ப விளைவுகளை ஏராளமாக எய்துகின்ருன். வித்தியதை விட விளைவு பல மடங்கு அதிகமாய் வருவது ஈண்டு உய்த்துணர வுரியது.

பிறர்க்குச் சிறிது உதவி செய்பவன் தனக்கே பெரிய நன்மையைச் செய்தவனுகின்ருன். செய்தார்க்குச் செய்த பலன் என்பது பழமொழி. எதைச் செய்தாலும் அதன் பலனை அவன் அனுபவிப்பான் ஆதலால் இன்பம் வேண்டுபவன் யாண்டும் நன்றே செய்ய வேண்டும். நன்று செய்தவனுக்கு ஒன்று நூருய் என்றும் இன்ப நலங்கள் பொங்கி வருகின்றன.

நன்றி ஒருவற்குச் செய்தக்கால் அந்நன்றி
என்று தருங்கொல் எனவேண்டா—நின்று
தளரா வளர்தெங்கு தாளுண்ட நீரைத்
தலையாலே தான்தருத லால். (மூதுரை)

செய்த உதவி திரும்பிப் பலனுய் வரும்வகையை ஒளவையார் இவ்வாறு செவ்வையாக எடுத்துக் காட்டியிருக்கிருர்.

சுவையான இழி நீரைத் தனது அடியில் வார்த்தவர்க்குச் சுவையான இள நீரைத் தன் தலையில் தாங்கி தென்னை தந்து வருதலை அனுபவத்தில் கண்டு வருகிறேம். ஓரறிவுடைய மரத்திற்குச் செய்த உதவியும் இவ்வாறு மகிமையாய் வருதலால் ஆறறிவுடைய மனிதர்க்குச் செய்வது எவ்வாறு வரும் என்பதை எதிர் அறிந்து கொள்ளலாம்.

பலனை எதிர்பாராமல் பிறர்க்கு இதம் செய்; அந்த இனிய செயல் அரிய பல மகிமைகளை உளவாக்கிப் பெரிய இன்ப நலங்களை விளைத்து யாண்டும் இனிமைகள் சுரந்து வரும் என்க.

பருவம் நோக்கிவான் மழைபொழிந்திடுவதும், பகலோன்
இருள் துரப்பதும், தண்புனல் நதிகள் மற்று எவையும்
பெருகுகிற்பதும் ஒப்பிலா நற்குணப் பெரியோர்
அருள் சுரப்பதும் தமக்கு ஒரு பொருள்குறித் தன்றே.

(பிரபோத சந்திரோதயம்)

---

502. பெரிய மனிதரெனப் பேசுவார் யாரும்
அரிய கருணையால் ஆனார்—உரிய
உயிர்போக நேர்ந்தாலும் ஊறு பிறர்க்குப்
பயிலா திருத்தல் பரம். (உ)

இ—ள்

அரிய கருணை யுடையவரே பெரியார் என்று உலகில் யாண்டும் புகழ்ந்து போற்றப் பெறுகின்றார்; ஆதலால் உன் உயிர்போக நேர்ந்தாலும் பிறர்க்கு இடர் புரியாதிருத்தல் உயர் நலமாம்.

இது, தயையுடையவன் உயர்வன் என்கின்றது.

இனிய நீர்மை பெருகிய அளவு மனிதன் சீர்மையுறுகிறான். நல்ல பான்மையால் எல்லாமேன்மைகளும் விளைந்து வருகின்றன.

பெரிய மனிதர் எனத் தம்மைப் பிறர் புகழ்ந்து பேச வேண்டும் என்று எவருக்கும் பிரியம் மிக உண்டு. அந்த உள்ளப் பிரியத்திற்கு உரிய தகுதி தம் உள்ளே இல்லை ஆயின் அது எள்ளலுடையதாய் இகழப்படுகிறது.

அரிய பண்பாடுகள் இனிது நிறைந்த பொழுதுதான் பெரிய மகிமைகள் உளவாகின்றன. எந்த உயிருக்கும் இரங்கி இதம் புரியும் தன்மை ஒருவனிடம் இயல்பாக அமையுமாயின் அவன் ஒரு தெய்வப் பிறவியாகவே வையம் புகழப் பெறுகிறான்.

தண்ணளி செய்வதால் புண்ணியம் விளைகின்றது; அதனால் எண்ணிய இன்ப நலங்கள் எல்லாம் எளிதே அமைகின்றன.

தரும நிலையமாயுள்ளமையால் கருணைப் பண்பு குணகணங்களுள் தலைமையாய் நிலவி நிற்கிறது. எவ்வழியும் சீவர்களுக்கு இதமாய்ப் பெருகி வருதலால் சீவதயை தேவ வுரிமையை மருவுகிறது. இனிய உதவி புனித பதவியாகிறது.

பசி தாகம் முதலியவற்றால் வாடி அலமருகிற உயிர்களுக்குக் கண்ணோடி உபகாரம் செய்கின்ற மனிதனைக் கடவுள் கண்ணோடி நோக்கி எண்ணோடியருள்கின்றார்.

உயிரினங்கள் எல்லாம் கடவுளுடைய உடைமைகள் ஆதலால் அந்தச் சீவர்களுக்குச் செய்யும் உதவியைத் தேவன் உவந்து கொள்கிறான்.

*எவ்வுயிரின் உள்ளும் இறைவனுளன் என்றறிந்தேன்*
*எவ்வுயிர்க்கும் செய்தேன் இதம்.*

உயிர்கள் யாவும் பரமன் உருவங்கள் என்னும் உண்மையுணர்வு உதயமாயின் அந்த மனிதன் பெரிய ஞானியாய் யாண்டும் இனியனவே செய்ய நேர்கின்றான்.

"There is one life in all, and that life is God." (One self)

"எல்லாவற்றிலும் ஒரு சீவன் உளது; அதுதான் கடவுள்" என்னும் இது ஈண்டு அறிய வுரியது. யாண்டும் இறைவன் பரவியிருக்கும் இயல்பினை உணர்ந்து எவ்வழியும் இதமே செய்க.

*அரிய கருணையால் பெரிய மனிதர் ஆனார்.*

பெருமைக்கு உரிய உரைகல்லை இது உணர்த்தி யுள்ளது.

உள்ளம் உருகி எவ்வளவுக்கு எவ்வளவு உதவி புரிகிறதோ அவ்வளவுக்கு அவ்வளவு அவ்வுயிர் உயர்ந்து போகின்றது. பிறவுயிர்கள்பால் அன்பு புரிந்து உதவி வருவதில் தன் உயிர் இன்ப நிலையமாய்த் தழைத்து வருகிறது. உபகாரம் தரும வுருவம் ஆதலால் அதனை யுடையவர் பெரு மகிமைகளை அடைகின்றனர்.

இதம் புரிகின்றவன் இன்ப வித்துக்களை விதைத்து வருகிறான். இடர் புரிவதால் துன்பங்கள் விளைந்து வரும் ஆதலால் அதனை யாண்டும் யாரிடமும் செய்யாதிருப்பதே மெய்யான தவமாம். உய்தி யுணர உயிர் உயர்கிறது.

உன் உயிர் போக நேர்ந்தாலும் பிறர்க்கு ஊறு செய்யாதே என்றது தயா தருமத்தின் தத்துவ முடிவாய் நின்றது.

*தன்னுயிர் நீப்பினும் செய்யற்க தான்பிறிது*
*இன்னுயிர் நீக்கும் வினை.* (குறள், 327)

முன்னிலை ஏவலால் சீவர்களுக்கு இவ்வாறு தேவர் உபதேசித்திருக்கிருர். தன்னைக் கோல்ல வந்த பசுவைக் கோல்லு என்னும் பழமொழியை எதிர்மறுத்து இந்த அருள் மொழி பொருள் பொதிந்து வந்துள்ளது.

துயரைப் பொறுத்துக் கொள்ளுவதில் புண்ணியமும் தெய்வ உரிமையும் உண்டாகின்றன; பொறுக்காமல் ஒறுத்து நிற்பதில் அவை இரண்டும் இல்லாமல் போகின்றன.

துயர் தாங்கி உயிர் நீங்கின் அது உயர் பேரின்பமாய் ஓங்குகின்றது; அந்த உண்மையை நோக்கி இத நீர்மையான இந்த நன்மையைக் கடைப் பிடித்து ஒழுக வேண்டும் என்க.

யாண்டும் இதம்செய்; எவ்வகையினும் இடர் செய்யாதே.

---

503. தன்னலமே நாடித் தவித்துழலு மானிடருள்
மன்னலம் காண்போன் மகானுகிப்—பன்னலமும்
மேவ விளங்கி வியனுலகில் என்றுமே
தேவனென நிற்பன் தெளிந்து. (ங)

இ—ள்

தனக்கே நலத்தை நாடி யாண்டும் தவித்து உழலுகின்ற மானிடருள் பிறர்க்கு இதத்தைப் புரிபவன் பெரிய மகான் ஆய் அரிய தெய்வீக நிலையை அடைகின்றான்; இவ் வுண்மையைத் தெளிந்து உய்தி பெறுக என்பதாம்.

தன்னைச் சார்ந்துள்ளவர்கள் அளவிலேயே மனிதனுடைய அன்புரிமைகள் மருவி நிற்கின்றன. தன்னுடைய மனைவி மக்கள் ஒக்கல் என இன்னவாறு பக்கம் படர்ந்து தொடர்ந்து அபிமானங்கள் புரிந்து வருதலே மனித இயல்பாய் விரிந்து வருகிறது. இந்த நிலையிலிருந்து மேலே சென்ற பொழுதுதான் அந்த மனிதன் பெரியவனுய் அரிய மேன்மைகளை அடைகின்றான்.

உள்ளம் சுருங்கி உதவி நிலை குன்றியிருக்கும் அளவும் அவன் சின்ன மனிதனுகவே சிறுமையில் உழலுகின்றான். பிறருடைய நலத்தைச் சிறிதும் நாடாமல் தன்னலத்தையே பெரிதும் நாடிப் பேயாய்த் திரிவது மாய வுலகின் மயக்கமாயுள்ளது.

தன்நலமே நாடித் தவித்து உழலும் மானிடர்.

என்றது மனித வாழ்வின் பரிதாபநிலையை இனிது காண வந்தது.

சுயநலம் என்பது இயல்பாகவே சூழ்ந்திருத்தலால் அதில் ஆழ்ந்து மூழ்கி அவல நிலையில் யாவரும் வீழ்ந்து கிடக்கின்றனர்.

தன் வயிறு நிறைந்தால் போதும் எனத் தன்னலமே கருதிப் பிறர்க்கு இதம் யாதும் பேணுதிருப்பின் அதுபேய் வாழ்வு, நாய் வாழ்வு என்று பிழை மிகப் படுகின்றது. ஒத்த மக்களுக்கு உள்ளம் இரங்கி உதவி செய்யாதவன் செத்த சவம் என எள்ளப் படுதலால் இதநலம் இல்லாத வாழ்வு எவ்வளவு இழிவடைகின்றது! என்பது தெளிவாகி நின்றது.

நேய நெஞ்சோடு உதவி புரிகின்றவரைத் தாயர் என்று உலகம் உவந்து போற்றுகின்றது; அவ்வாறு உதவாதவரை பேய்கள், நாய்கள் என்று பிழை பேசி இகழ்ந்து போகின்றது.

"சேய்போல் உலகத் துயிரையெல்லாம் எண்ணிச் சேர்ந்து பெற்ற
தாய்போல் உரைப்பர் சன்மார்க்க சங்கத்தவர்; சாற்றும் எட்டிக்
காய்போல் பிறர்தமைக் கண்டால் கசந்துட் கடுகடுத்தே
நாய்போல் குரைப்பர் துன்மார்க்க சங்கத்தவர் நனிலத்தே."

(அருட்பா)

சன்மார்க்கர் இயல்பும், துன்மார்க்கர் நிலையும் இதில் குறிக்கப்பட்டுள்ளன. இனிய பண்போடு இதம் புரிபவர் உயர்ந்த மகான்களாய்ச் சிறந்து விளங்குகின்றனர்; அங்ஙனம் இல்லாதவர் இழிந்த புல்லராய்க் கழிந்து ஒழிகின்றனர்.

செயல் இனிமையாய போது உயர்வு தனிமையாய் ஒளி பெறுகின்றது. எவ்வுயிர்க்கும் இதத்தை நாடிவரின் அவ்வுயிர் திவ்விய தேசோடு சிறந்து திகழ்கின்றது.

மன்னலம் காண்போன் மகான்.

பெரிய மகான்களுடைய தன்மையை இது அறிய வந்தது.

மன் நலம் என்றது பிறர்நலமுடையராய் இன்புறும் வழியை. பிற உயிர்கள் நலமடையும்படி இதம் புரிந்து ஒழுகுபவர் உயர்ந்த மகான்களாய் ஒளி பெறுகின்றனர். இனிய உதவி அரிய தெய்வ பதவியை விரைவில் அருளுகின்றது. அயலார் இன்புறும் செயலையுடையவன் இயல்பாகவே எங்கும் உயர்வெய்தி நிற்கின்றான்.

புகழும் புண்ணியமும் உபகாரங்களால் விளைந்து வருதலால் உபகாரிகள் இம்மை மறுமை என்னும் இருமைகளிலும் இசை பெற்று மகிழ்கின்றார்.

"உலகத் தோரே பலர்மற் செல்வர்
எல்லா ருள்ளும்நின் நல்லிசை மிகுமே
செயலமை கண்ணிச் சேரலர் வேந்தே!
பரிசிலர் வெறுக்கை! பாணர் நாளவை!
வாணுதல் கணவ! மள்ளர் ஏறே!
வசையில் செல்வ! வான வரம்ப!
இனியவை பெறினே தனிதனி நுகர்கேம்
தருகென விழையாத் தாவில் நெஞ்சத்துப்
பகுத்தூண் தொகுத்த ஆண்மைப்
பிறர்க்கென வாழ்திநீ யாகன் மாறே." (பதிற்றுப்பத்து)

காப்பியனார் என்னும் சங்கப் புலவர் ஒரு சேர மன்னனைக் குறித்து இங்ஙனம் பாடியிருக்கிறார். பலர்க்கும் உதவி புரிந்து நீ பிறர்க்கு என வாழ்தி ஆதலால் உன் புகழ் உலகில் உயர்ந்துளது எனப் புலவர் உளம் உவந்து கூறியுள்ளமை கண்டு உணர்ந்து சிந்திக்க வுரியது. பிறர்க்கென வாழ்தி! என்றது அந்த அரசனுக்கு எவ்வளவு பெரிய மதிப்பைக் கொடுத்திருக்கிறது. ஆயிரத்தெண்ணூறு ஆண்டுகள் கழிந்தும் இன்றும் அவனது உதவி நிலை எல்லாருடைய இதயங்களிலும் இன்ப ஒளி வீசி வருகிறது. அயல் வாழ உயிர் வாழ்கின்றவன் அமரரும் புகழ உயர்வோங்கி ஒளிர்கின்றான். உண்மை யுயர்வு உதவியில் உளது.

---

504 தன்னை மறந்து தயைசுரந்து மன்னுயிர்பால்
அன்னை எனவே அருள்புரியின்—பின்னையோர்
தானம் தவமேன் தருமமேன் ஞானமேன்
வானமே உன்முன் வரும். (௪)

இ—ள்

தன்னலத்தை மறந்து தண்ணளி சுரந்து மன்னுயிர்கள்பால் அன்னை என இரங்கி அருள் புரிந்துவரின் அதுவே தானம் தவம் தருமம் ஞானமாய் மருவும்; பரமபதமே உன் முன் உரிமையாய் வரும் என்க. அன்புதவி இன்ப நிலையமாகிறது.

தனக்கு நலத்தை முதலில் நாடிக்கொண்டு பின்பு அயலார்க்கு உதவி செய்வது, தன்னலத்தை மறந்து பிறர்க்கு இதம் புரிவது என உபகார நிலைகள் இருவகையில் உள. முன்னதினும் பின்னது பெரு மகிமையுடையது. அரிய செயல்களையுடையவர் பெரியவர்கள் ஆகின்றனர்.

செயல் சுருங்கி இயல் குறைந்த பொழுது மனிதன் இழிந்து போகின்றான். உதவி நலம் இல்லாதவர் ஒன்றுக்கும் உதவாத களர் நிலம்போல் கழித்துத் தள்ளப் படுகின்றார். கழி நீர்க் குட்டம்போல் இழிவாயுள்ளமையால் அவர் வாழ்வு வையச் சுமையாய் வையப் படுகின்றது.

உள்ளம் கனிந்த உதவியாளரை உலகம் என்றும் உவந்து தொழுகின்றது. கற்பகதரு, சிந்தாமணி, அமுதம் என்னும் அம்புதப் பெயர்களால் போற்றப் பெற்று அவர் புகழ் ஓங்கி மிளிர்கின்றார். அளி புரிய ஒளி புரிகிறது.

இத நலமுடையவர் எவ்வுயிர்க்கும் இனியராய் வருதலால் அவர் திவ்விய நிலையில் சிறந்து திகழ்கின்றார். உயர்ந்த மனிதப் பிறவிக்குத் தகுந்த அடையாளம் உதவி செய்வதேயாம்.

மனிதன் என்றும் தனக்கு இதத்தையே விரும்பியுள்ளமையால் அவன் யாண்டும் அதனைச் செய்து வர வேண்டியவனாய் அமைந்திருக்கிறான். செய்யவுரியதைச் செய்யாமல் மறந்து விட்டு வெய்யதை விழைந்து செய்வது விபரீதமாயுள்ளது.

இனியதை விழைகின்றான்; இன்னாததை விளைக்கின்றான். பழகிய பழக்கங்களில் சுவைக் கேடுகள படிந்திருத்தலால் செயல்களிலும் இயல்களிலும் அவ கேடுகள் விளைந்து வருகின்றன.

நல்லதில் சுவை தோன்றாதிருப்பது பொல்லாத நிலையைப் புலப்படுத்தி நிற்கிறது. அருந்தலிலும் பொருந்தலிலுமே மக்கள் சுவை கண்டு களிக்கின்றனர்.

தேக போகங்களான அவற்றினும் மேலான நிலையில் சுவை காண்பவர் மிகவும் அரியராயுள்ளனர். புத்தி தத்துவத்தில் காண்கின்ற அந்த உத்தம இன்பத்தைக் கலைஞர்களுள்ளும் சிலர் தான் அனுபவிக்கின்றனர். இந்திர போகத்தினும் இனியது கம்பன் கவி இன்பம் என்று அதனை நுகர்ந்து மகிழ்ந்துள்ள சுவையாளன் இங்ஙனம் வியந்து புகழ்ந்திருக்கிறான். கலை நிலையில் கனிந்து எழு

கின்ற இந்த அறிவின் சுவையினும் சீவ தயையில் விளைந்து வருகிற இன்பம் மிகவும் சிறந்தது. பிற உயிர்களுக்கு உதவி புரிவதில் ஓர் உயர்ந்த இன்பம் உதயமாகிறது. ஈத்து உவக்கும் இன்பம் என வள்ளுவப் பெருந்தகை அதனை வாழ்த்தியிருக்கிறார். ஈகையால் விளையும் அவ் உவகையை எவர் அனுபவிக்கின்றனரோ அவர் பெரிய மனிதராய் அரிய தெய்வீக நிலையைப் பெற்றவராகின்றார். அந்தச் சுவையில் அதிகம் தோய்ந்தவர் உடல் பொருள் ஆவி எனதையும் எளிதே ஈந்து விடுகின்றனர்.

"உள்ளி உள்ள எல்லாம் உவந்து ஈயும் அவ்
வள்ளியோரின் வழங்கின மேகமே." (இராமாயணம்)

வள்ளல்கள் உயிர்களுக்கு வழங்குவது போல் மேகம் பயிர்களுக்கு வழங்கின என்னும் இது ஈண்டு உளங்கூர்ந்து உணரவுரியது. உணர்ச்சி யின்றி இயற்கையாகப் பெய்தலால் உணர்ச்சியோடு உதவுகின்ற வள்ளியோர் மேகத்திற்கு உவமையாய் நின்றனர். அவர்க்கு உளவாகின்ற உள்ளலும் உவகையும் இதற்கு இலவாயின. உள்ளி என்றது எதனை? ஈண்டு உள்ளி உணர வேண்டும்.

உதவியில் இன்பம் காண்பவர் உயர்ந்த மேன்மக்களாய் ஒளி மிகுந்துள்ளனர். உண்மையான உயிரின் சுவை யாண்டும் உயர் நிலையில் மிளிர்கின்றது.

"All wordly joys go less
To the one joy of doing kindnesses." (George Herbert)

"அன்பு கனிந்து செய்கிற ஓர் உதவி இன்பத்திற்கு உலக இன்பங்கள் எல்லாம் நிகராகா" என ஜார்ஜ் ஹெர்பர்ட், என்னும் மேல்நாட்டு அறிஞர் இங்ஙனம் கூறியிருக்கிறார். உபகார நீர்மைகளை எந்த நாடுகளும் உவந்து புகழுகின்றன.

தானம், தவம், தருமம், ஞானம், துறக்கம் என்னும் அரிய நிலைகள் உபகாரிக்கு எளிமையாய் உரிமையாகின்றன.

வானமே உன் முன் வரும்.

பிறர்க்கு இதம் புரியும் உதவியாளனை நோக்கிச் சுவர்க்கம் ஓடி வரும் என்றது புண்ணிய வுலகத்தின் தன்மையையும் உண்மையையும் எண்ணி யுணர வந்தது.

எவர்க்கும் இதம் புரிக; யாண்டும் நலமே கருதி நல்லது பேசுக; எல்லா இன்பங்களும் உனக்கு உளவாம்.

505. செய்யும் இதமே திருவான தெய்வமாய்
உய்யும் வகையை உதவுமால்—பெய்யும்
மழையை மரத்தை மதியை நதியைக்
கழையை நினைக கனிந்து. (ரு)

இ—ள்

பிறர்க்குச் செய்கின்ற உபகாரம் தெய்வத் திருவாய்ப் பெருகி வந்து தனக்கு உய்யும் வகையை உதவுகின்றது; மழை மரம் மதி நதி கழைகளை நினைந்தேனும் உதவிகளை விழைந்து செய்க.

கழை = கரும்பு. மதி = சந்திரன்.

திரு, தெய்வம் என்னும் மொழிகள் அரிய ஒளிகளை யுடையன; பெரிய பொருள்களை மருவியுள்ளன. புனித மகிமை வாய்ந்த அவை இனிமை வாய்ந்து யாண்டும் இதம் தோய்ந்திருக்கின்றன.

இதம் என்பது மனம் மொழி மெய்களால் எங்கும் நன்மை செய்தல். அந்தத் தன்மை ஒருவனிடம் அமையின் எல்லாப் பாக்கியங்களையும் அவன் எளிதே அடைந்து கொள்கிறான்.

செய்யும் இதமே திரு தெய்வம்.

என்றது இதத்தின் உண்மை நிலையை ஊன்றி உணரவந்தது.

இன்ப நலங்கள் எவையும் மனிதனுக்குத் தனியே வருவன அல்ல; அவன் செய்து கொண்ட புண்ணிய விளைவுகளாய் அவை பொங்கி வருகின்றன. விதைத்து வைத்தன விளை போகங்களாய்க் கிளைத்து எழுகின்றன.

பருவ காலத்தில் விதையாதவன் பலனை இழந்து பரிந்து நிற்கிறான். உரிய கருமங்களைச் செய்யாதவன் அரிய போகங்களை இழந்து அவலமடைகின்றான்.

உய்த்தொன்றி ஏர்தந்து உழவுழுது ஆற்றவும்
வித்தின்றிப் பைங்கூழ் விளைக்குறல் என்ஒக்கும்?
மெய்த்தவம் இல்லான் பொருளொடு போகங்கட்கு
எய்த்துழந்தே தான் இடர்ப்படு மாறே. (வளையாபதி)

வித்து இல்லை யானல் விளைவு இல்லை; தவம் இல்லை ஆனல் போகம் இல்லை என இது உணர்த்தியுள்ளது. தவம் என்றால் என்ன? "உயிர்க்கு உறுகண் செய்யாமை தவம்" எனத் தவத்தின் உருவத்தைத் தேவர் இங்ஙனம் கருவைத்துக் காட்டி யிருக்கிறார்.

உறுகண் = துன்பம். இடர் செய்யாமையே தவம் என்றால் அதோடு இதம் செய்யின் அது எவ்வளவு பெரிய தவம்! இந்த உண்மையை ஈண்டு உய்த்துணர வேண்டும்.

பிறர்க்கு இனிய இதத்தைச் செய்கின்றவன் அரிய தவத்தைச் செய்கின்றான். சிறிய உபகாரங்கள் பெரிய பாக்கியங்களை உளவாக்கியருளுகின்ற இனிய வித்துக்களாயுள்ளமையால் அவை இன்ப மூலங்கள் என்னும் உயர் பெயர் பெற்று ஒளி மிகுந்து நிற்கின்றன. எண்ணிய ஒவ்வொரு இதமும் புண்ணிய மணம் கமழ்ந்து போகம் கனிந்து வருகிறது. தேகம் மறைந்து போனாலும் தேகியை விடாது தொடர்ந்து தன் பயனை அது தந்தருளுகின்றது.

செய்யும் இதம் உய்யும் வகையை உதவும்

பிறர்க்கு இதமாய் உபகரிப்பது புண்ணியமாய்ப் பொங்கி வருதலால் அதனையுடைய சீவன் மேன்மேல் உயர்ந்து திவ்விய கதியை அடைந்து கொள்கின்றது. மனிதனைப் புனிதன் ஆக்கிப் புண்ணிய போகங்களை ஊட்டியருளுகின்றமையால் உபகாரம் இனிய உயிரமுதமாய்த் தனியே ஒளி மிகுந்துளது.

மழையை நினைக!

மரத்தை நினைக!

மதியை நினைக!

நதியை நினைக!

கழையை நினைக!

இத நீர்மைகளுக்கு இனிய இனமாக இவை ஈண்டு எண்ண வந்தன. புண்ணிய விளைவுகள் கண்ணியம் உறுகின்றன.

மழை யாதொரு பலனையும் எதிர் பாராமல் நீரைப் பொழிந்து பாரைப் புரந்தருளுகின்றது. அதனுடைய உதவி நிலையை உணர்ந்து உள்ளம் உருகி யாவரும் அதனைச் சீவ அமுதம் என்று போற்றி வருகின்றனர். அதன் உதவியால் உயிர் வாழ்ந்து வருகிற மக்கள் பிறர்க்கு உதவியாய் வாழவில்லையானால் அதற்குப் பிழை செய்தவராகின்றார். நல்லார்க்குப் பெய்யும் மழை எல்லார்க்கும் என்னும் பழமொழியால் பொல்லாதார் நிலை சொல்லாமலே புலனும். மழையால் பிழைத்து வருகிற மனிதன் அதன் நீர்மையை நினைந்து ஓரளவாவது உதவி வர வேண்டும். அவ்வாறு இதமுடை

பாரயின் அவர் திவ்விய மகிமைகளை அடைய நேர்கின்றனர்.

கைம்மாறு வேண்டா கடப்பாடு மாரிமாட்டு
என்ஞற்றும் கொல்லோ வுலகு (குறள், 211)

யாதொரு கைம்மாறும் கருதாமல் மேலோர் உதவி புரிவர்; அவர் மாரியனையர் என்று இது கூறியுளது. இனிய உபகாரிகளை வையம் வானம் என வாழ்த்தி வருகிறது.

"மாரி அன்ன வண்மைத்
தேர்வேள் ஆயைக் காணிய சென்மே." (புறம், 133)

ஆய் என்னும் குறுநில மன்னனுடைய உபகார நீர்மையை மோசியார் என்னும் சங்கப் புலவர் இங்ஙனம் பாராட்டியுள்ளார்.

"ஓவாது ஈயும் மாரி வண்கைக்
கடும்பகட்டு யானை நெடுந்தேர் அஞ்சி" (குறுந்தொகை 91)

அதிகமான் நெடுமான் அஞ்சி என்பவனது ஈகை நிலையை ஔவையார் இவ்வாறு கூறியிருக்கிறார். மாரி என்று மனமகிழ்ந்து புகழ்ந்துள்ளமையால் அவரது நீர்மைகளை நினைந்து கொள்கிறோம். பாரி வள்ளலை மாரி என்று கபிலர் உவந்து கூறியுள்ளார்.

ஆரியன் அவனை நோக்கி ஆருயிர் உதவி யாதும்
காரியம் இல்லான் போனுன் கருணையோர் கடன்மை ஈதால்
பேரிய லாளர் செய்கை ஊதியம் பிடித்தும் என்னூர்;
மாரியை நோக்கிக் கைம்மாறு இயற்றுமோ வையம்என்றான்.
(இராமாயணம், நாகபாச, 271)

இந்திர சித்து எவிய நாகபாசத்தால் மயங்கிக் கிடந்த இலக்குவனைக் கருடன் வந்து எழுப்பிப் போனுன். அப்பொழுது அவனை நோக்கி இராமன் இப்படி உருகி உவந்து கூறியுள்ளான்.

கவியின் சுவையைக் கருதி உணர வேண்டும்.

எல்லோர் தமக்கும் இனிது உதவலன்றியே
நல்லோர் தமக்குதவி நாடாரே—வல்லதரு
நாமநிதி மேகம் நயந்துதவ லன்றியே
தாமுதவி நாடுமோ சாற்று. (நீதிவெண்பா 92)

பெருந்தன்மை நிறைந்த உயர்ந்த உபகாரிகளுடைய சீர்மை நீர்மைகள் இங்ஙனம் புகழ்ந்து போற்றப்பட்டுள்ளன. சீரிய உதவி நிலையில் மாரி தலை சிறந்துள்ளமையால் அது முதலில் வந்தது.

"The thirsty earth soaks up the rain,
And drinks and gapes for drink again;
The plants suck in the earth, and are
With constant drinking fresh and fair." (Cowley)

"பூமி மழையில் நனைந்து அந் நீரை நன்கு பருகிக் கொண்டு தன்பாலுள்ள தாவரங்களை ஊட்டியருளுகிறது; அவை நிலையாக உண்டு செழித்து வருகின்றன" என்னும் இது ஈண்டு அறிய வுரியது. மழையினாலேதான் உலகம் நிலை பெற்று வருகிறது.

நல்ல நிழலையும் இனிய கனிகளையும் உதவி மரங்கள் பல வகையிலும் உயிரினங்களுக்கு உதவி புரிந்து வருகின்றன.

இருளை நீக்கி ஒளியை உதவி மதி உலகை மகிழ்விக்கின்றது.

நீரை வாரி வழங்கி நதிகள் நலம் பல புரிகின்றன. ஆற்றுப் பெருக்கு அற்று அடி சுடினும் அவை ஊற்றுப் பெருக்கால் உலகையூட்டியருளுதல் உபகார நிலைகளுக்கு ஒளி நீட்டியுள்ளன.

கரும்பு எவரும் விரும்பி நுகரும்படி இனியசாரத்தை உதவி இன்புறுத்துகின்றது. ஓரறிவுடைய மரங்களும் செடிகளும் இவ்வாறு உதவி புரிந்து வருதலை நோக்கியேனும் ஆறறிவுடைய மனிதன் ஆருயிர்களுக்கு ஆதரவாய் இதம் புரிதல் வேண்டும்.

மன்னிய கனிகாய் நீழல் மற்றெலாம் உதவிப் பின்னும்
தன்னையும் உதவா நின்ற தருவெனத் தம்கை ஆர்ந்த
பொன்னெலாம் உதவிப் பின்னும்பூட்சியால் உழைத்திட்டேனும்
இன்னுயிர் தனையீந்தேனும் இடுக்கண்கள் தீர்ப்பர் நல்லோர்.
(நீதிநூல்)

உள்ளம் உயர்ந்த நல்லோர்கள் இயல்பை இது உணர்த்தியுள்ளது. பூட்சி = உடம்பு. அன்புடையவர் என்பும் உரியர் பிறர்க்கு என்னும் இன்பமொழி இங்கே எண்ணத் தக்கது. எங்கும் இதமே புரிபவர் இன்ப நிலையமாய்ப் பொங்கி மிளிர்கின்றார்.

---

506. பல்கோடி நூல்கள் பகரும் பொருள்களெலாம்
ஒல்கா ஒருமொழியில் உள்ளவால்—அல்கா
இதயம் இரங்கி இதம்புரிக அங்கே
உதயம் அறங்கள் ஒருங்கு (சு)

இ—ள்

பல கோடி நூல்கள் சொல்லுகின்ற பொருள்கள் யாவும் சா

ரமாய் ஒரு மொழியில் அடங்கியுளது; அது இதம் என்பதே; அதனை உவந்து செய்; அங்ஙனம் செய்யின் புண்ணியங்கள் எல்லாம் ஒருங்கே திரண்டு உன்பால் விரைந்து வந்து குவியும் என்பதாம்.

உலகில் தோன்றியுள்ள நூல்கள் எல்லாம் பலவேறு பொருள்களையுடையன. சரித்திரம், சமயம், புராணம், இதிகாசம், கவி, காவியம் முதலாக அவை விரிந்து பரந்திருக்கின்றன. எல்லா நூல்களும் குறிப்பாக எதைச் சொல்லுகின்றன? புண்ணியத்தைச் செய்; பாவத்தை ஒழி என்பதேயாம். இந்த நீதி யுண்மையையே பல துறைகளில் பலவாருக யாவும் போதித்து வருகின்றன.

*புண்ணியம்ஆம் பாவம்போம் போனநாட் செய்தஅவை*
*மண்ணிற் பிறந்தார்க்கு வைத்தபொருள் — எண்ணுங்கால்*
*ஈதொழிய வேறில்லை எச்சமயத் தோர்சொல்லும்*
*தீதொழிய நன்மை செயல்.* (ஔவையார்)

இந்த அருள்வாக்கின் பொருளைக் கருதிக் காண வேண்டும். உலக நூல்களின் சாரங்களையெல்லாம் ஒருங்கே திரட்டி ஔவையார் இவ்வாறு செவ்வையாக அருளியுள்ளார்.

முன் பிறவிகளில் செய்த புண்ணிய பாவங்களின் பலன்களை அனுபவிக்கவே மனிதர்கள் இங்கே பிறந்து வருகின்றனர். புண்ணியத்தின் பலன் இன்பம்; பாவத்தின் விளைவு துன்பம். துன்பத்தைக் கண்டு துடிக்கின்ருர்; இன்பத்தைக் கண்டு களிக்கின்ருர். இன்பமே விரும்பும் இயல்பினையுடைய சீவர்கள் துன்பவித்தான பாவத்தை யாண்டும் தீண்டலாகாது; புண்ணியத்தையே எங்கும் கருதி ஒழுக வேண்டும் என இங்ஙனம் உறுதி கூறியுள்ளார்.

தீது ஒழி; நன்மை செய்! என்பதே வேதம் முதலிய கலைகள் யாவும் ஓதிவரும் நீதியாம் என உணர்த்தியருளினர்.

*பிறர்க்கு இதம் செய்வது புண்ணியம்; இடர் செய்வது பாவம்.*

முன்பு செய்த இதம் பின்பு இன்ப வெள்ளமாய்ப் பெருகி வருதலால் உபகாரங்களை எவ்வழியும் எப்படியும் செய்ய வேண்டும் என மேலோரும் நூலோரும் யாண்டும் வற்புறுத்தி வருகின்றனர். ஆன்ம வுறுதி மேன்மை மிகப் பெற்றது.

*பரோபகார: கர்த்வ்ய: ப்ராணைரபி தனைரபி.*

'பொருளைக் கொடுத்தேனும் உயிரை விடுத்தேனும் பரோ

பகாரம் செய்யத்தக்கது" என்னும் இது இங்கே சிந்திக்கத்தக்கது.

ஒப்புரவி னால்வரும் கேடெனின் அஃதொருவன்
விற்றுக்கோட் டக்க துடைத்து. (குறள், 220)

பிறர்க்கு உபகாரம் செய்வதில் தன் பொருளுக்கும் உயிருக்கும் கேடு நேருமாயினும் அதனை ஒருவன் உவந்து கொள்ள வேண்டும் என இது உணர்த்தியுள்ளது. உள்ளக் குறிப்புகளும் உறுதி நலங்களும் ஓர்ந்து கூர்ந்து உணர வுரியன.

பேடையைப் பிடித்துத் தன்னைப் பிடிக்கவந்து அடைந்த பேதை
வேடனுக்கு உதவி செய்து விறகிடை வெந்தீ மூட்டிப்
பாடுறு பசியைப் போக்கித் தன்உடல் கொடுத்த பைம்புள்
வீடுபெற்று உயர்ந்த வார்த்தை வேதத்தின் விழுமிதன்றோ.
(இராமா, விபீடணன், 112)

விபீடணனைச் சேர்க்கக் கூடாது என்று சுக்கிரீவன் முதலிய வானர வீரர்கள் கூறிய பொழுது இராமன் அவரை நோக்கி இவ்வாறு சொல்லியிருக்கிறான்.

"விபீடணனுக்கு உதவி செய்து அதனால் என் உயிர் போக நேர்ந்தாலும் அதனை நான் உவந்து கொள்ளுவேன்" எனத் தன் உள்ளக் கிடக்கையை வலியுறுத்த அவ் வீர வள்ளல் ஓர் புள்ளை உவமையாக எடுத்துக் காட்டி உரையாடியிருப்பது உள்ளும்தோறும் நம் உள்ளங்களை உருக்கி வருகிறது.

ஒரு வேடன் காட்டில் வேட்டையாடி வந்தான். வலையை விரித்து வஞ்சமாகப் பறவைகளைப் பற்றி வரும்பொழுது ஒரு பெண் புறாவைப் பிடித்துக் கொண்டான். அதன் சோடியான ஆண் புறாவையும் பிடிக்க வேண்டும் என்னும் ஆவலோடு வந்தான். பொழுதடைந்து விட்டது; மழையும் பெய்தது; மரத்தின் அடியில் தங்கி நெடு நேரம் பசியாலும் குளிராலும் வாடியிருந்தான். தன் பேடையைக் காணும் என்று மிகவும் மறுகியிருந்த ஆண் புறா கீழே குளிரில் நடுங்கியுள்ள வேடனை நோக்கியது; பசித் துயரால் வருந்துகிறான் என்று இரங்கியது; குளிருக்காகத் தன் முன்னால் சிறு சுள்ளிகளை அடுக்கி நெருப்பு மூட்டியிருந்தான் ஆதலால் அதில் பாய்ந்து மாய்ந்து போனால் தன்னை அவன் உண்டு பசி தீர்ந்து உவந்து செல்வான் என்று துணிந்து கொண்டது. அவ்வாறே விரைந்து வீழ்ந்து மாண்டது. அதன் கருணையையும் உபகார

நிலையையும் வியந்து கடவுள் அதற்குப் பேரின்ப முத்தியைத் தந்தருளினர். அதன் பேடையும் பிறவி நீங்கி வீடு அடைந்தது. அந்த அதிசய இதிகாசத்தை இராமபிரான் துதிசெய்து தொழுது தனது உதவி நிலைக்கு உதவியாக ஈண்டு உதாரணம் காட்டினன்.

சிறிய பறவையே இவ்வாறு பரோபகாரம் செய்துள்ளதே! அரிய மனிதனாய்ப் பிறந்தும் அது செய்யாது ஒழிவது எவ்வளவு இழிவு! என அவ் வீர மூர்த்தி ஆர்வ மீதூர்ந்து பேசியருளினன்.

"உடைந்தவர்க்கு உதவானாயின்,
உள்ளது ஒன்று ஈயானாயின்,
அடைந்தவர்க்கு அருளான் ஆயின்,
அறம் என்னாம்? ஆண்மை என்னாம்?"

இராமனுடைய கம்பீர மொழிகள் இவ்வாறு பொங்கி வந்துள்ளன. அந்தத் தரும சீலனுடைய உள்ளத்தை இந்த உரைகள் உலகம் அறிய உணர்த்தி நிற்கின்றன.

உள்ளம் இரங்கி உபகரிப்பது உயர்ந்த பெருந் தகைமையாய் ஒளி மிகுந்துள்ளது. அன்புருக்கம் மேலான குல மக்களின் பண்பாடுகளாய்ப் படிந்திருக்கின்றன. தயை, அளி, கண்ணோட்டம் என்னும் மொழிகள் உயர்ந்த பொருள் ஒளிகளுடையன.

"Pity melts the mind to love." (Byran)

'இரக்கம் இதம் செய்யும்படி மனத்தை உருக்குகிறது" என்னும் இது இங்கே அறிய உரியது.

பிறர்க்கு இதம் புரிவதில் எவன் இன்பத்தைக் காண்கின்றானே அவன் பேரின்ப வீட்டை நேரே கண்டவனாகின்றான். சீவதயை படியேறிய திவ்விய உயிரின் செவ்வியநிலையாய் மேவியுளது. ஆன்மவுருக்கம் ஆனந்தப் பெருக்காய்ப் பொங்கி வருகிறது. உன் உள்ளம் உருகின் பேரின்ப வெள்ளம் உன்னுள்ளே பெருகி எழும்; உண்மையை உய்த்துணர்ந்து உய்தி காணுக.

"வித்தி நல்லறம் விளைந்த அதன்பயன்
துய்ப்போர் தம்மனைத் துணிச்சிதர் உடுத்து
வயிறுகாய் பெரும்பசி அலைத்தற்கு இரங்கி
வெயில்என முனியாது புயல்என மடியாது
புறங்கடை நின்று புன்கண் கூர்ந்துமுன்

அறங்கடை நில்லாது அயர்வோர் பலரால்
ஈன்ற குழவி முகங்கண்டு இரங்கித்
தீம்பால் சுரப்போள் தன்முலை போன்றே
நெஞ்சு வழிப்படூஉம் விஞ்சைப் பாத்திரத்து
அகன்சுரைப் பெய்த ஆருயிர் மருந்து அவர்
முகங்கண்டு சுரத்தல் காண்டல் வேட்கையேன்.'
(மணிமேகலை 11)

மணிமேகலை என்னும் தவமகள் ஓர் தெய்வத்தினிடம் இவ்வாறு கூறியுள்ளாள். முன் பிறப்பில் செய்த புண்ணியத்தின் பயன்களை அனுபவிக்கின்ற பெரிய செல்வர்களுடைய வீடுகள் தோறும் பிச்சை எடுத்து அலைகிற ஏழை மக்களை ஒருங்கே கூட்டி வைத்து நல்ல உணவை யூட்டிப் பசியை நீக்கி அவர்தம் முகமலர்ச்சிகளைக் காண வேண்டும் என்னும் வேணவாவுடையேன் என்று அவ் வுத்தமி உரைத்திருத்தலால் அவளுடைய தயா நீர்மையையும் உபகார நிலையையும் தெளிவாக உணர்ந்து அளியோடு மகிழ்கின்றோம். இன்ப மூலங்களை இது இனிது காட்டியுள்ளது.

முன்பு இதம் செய்தவர் இன்று இன்புறுகின்றார்; அது செய்யாதவர் துன்புறுகின்றார் என்னும் உண்மை நுண்மையாக ஈண்டு உணர வந்தது. இனியது புரிபவர் இனியராய் உயர்கின்றார்.

ஆருயிர்கள்பால் அன்பு செய்யவே என்புடைய யாக்கை எடுத்து வந்திருக்கிறோம்; அது செய்தபோதுதான் உய்திபோதும்.

''பரோபகாரார்த்தம் இதம் சரீரம்.''

'பரோபகாரத்தின் பொருட்டே இந்த உடம்பு வந்துள்ளது'' என்னும் இது இங்கே நன்கு சிந்திக்கத்தக்கது.

**பிறர்க்கு இதம் செய்கிறவன் தனக்குப் பதம் செய்கிறான். பிறவிப் பயனை யுணர்ந்து பெருநலம் பெறுக.**

மன்னுயிர்க்கு இதம்புரி மனிதன் புனிதன்;
இன்னுயிர்க்கு இனியன்; இன்ப நிலையன்;
பொன்னுயி ராகிப் போகம் உறுதலால்
தன்னுயிர் பேணும் தகவினை உணர்மின்!

**இதனை உள்ளம் கொண்டு உண்மை தெளிக.**

---

507. காலம் விரைந்து கழிந்து படுகின்ற
மூலம் தெரிந்து முடிவுணர்ந்து—சீலம்
படிந்து மனிதன் பயனடையா னாயின்
இடிந்த சுவரே இவண். (எ)

இ—ள்

ஆயுள் நாளும் கழிந்து கொண்டேயிருக்கிறது; அதனை உணர்ந்து உயிர்க்கு இத நலங்களைச் செய்து கொள்ள வேண்டும்; அங்ஙனம் செய்யாதிருப்பின் அவன் ஒரு குட்டிச்சுவரே என்பதாம்.

மன வுணர்வு மனிதனுக்கு நன்கு அமைந்திருக்கிறது. அவ்வுணர்ச்சியைப் பயன படுத்தும் அளவு உயர்ச்சியுடையனாய் அவன் ஒளி பெறுகிறான். உணர்ந்து பாராத வாழ்வு இழிந்து பாழாகிறது. நெறியோடு நினைந்து வாழும் வாழ்வில் அறிவும் ஆற்றலும் பெருகி வருதலால் அங்கே அரிய மகிமைகள் மருவி மிளிர்கின்றன. உணர்ந்து ஒழுகின் உயர் நலங்கள் எழுகின்றன.

ஆயுள் ஆய்த் தனக்கு அமைந்துள்ள காலம் அருமையும் பெருமையும் உடையது. உயிராதாரமாய் வாய்ந்திருக்கும் நாளை எவன் நன்கு பயன் படுத்துகின்றானோ அவன் கால தேவதையின் கருணையைப் பூரணமாகப் பெற்று மேலான இன்ப நலங்களை அடைகின்றான். கழிகின்ற ஒவ்வொரு கணத்தையும் விழியூன்றி நோக்குபவன் வியன் பயனுடையனாய் நலன் பல பெறுகிறான். உரிய பொழுதை உரிமையாகத் தழுவி வாழ்பவனிடம் பெரிய ஊதியங்கள் உவகையோடு பெருகி வருகின்றன.

காலம் கழிந்து செல்வதை உணர்ந்து கொள்பவர் அதனைத் தகுந்த வகையில் பயன்படுத்துகின்றனர்; உணராதவர் வீணே பாழாக்கி விடுகின்றனர்.

காலையில் எழுந்தவுடன் அன்று செய்யவுரிய வேலைகளை விழைந்து சிந்திப்பதும், சிந்தித்தபடியே செவ்வையாகச் செய்து முடிப்பதும் காலம் பேணி ஒழுகும் சீலர்கள் இயல்பாம். நல்ல எண்ணங்களும் நல்ல செயல்களும் உடையவன் தனது வாழ்நாளைச் செல்வம் புகழ் புண்ணியங்களாகச் செய்து கொள்ளுகிறான்.

இனிய எண்ணங்கள் மனிதனைப் புனிதன் ஆக்கி வருதலால் அவன் புண்ணிய சீலனாய்ப் பொலிந்து திகழ்கிறான்.

சீலம் படிந்து என்றது காலம் படிந்து வந்துள்ள மனிதன் மேலான நிலையை அடைந்து கொள்ள வுரிய அமைதி தெரிய வந்தது. நெறி நின்று ஒழுகி வருகிற ஒழுக்கம் உயிர்க்கு ஒளி புரிந்து உய்தி தருதலால் அது செய்தவமாய்ச் சிறந்து நின்றது. புனித வாழ்வு புண்ணியமாய்ப் பொங்கி வருகிறது.

தன்னைப் புனிதன் ஆக்கிய போதுதான் மனிதன் எவர்க்கும் இனியன் ஆகின்றான். அவனுடைய நினைவு சொல் செயல்கள் யாவும் இத நலங்களாய் உதயமாகின்றன. உள்ளம் கனிந்து பிற வுயிர்கள்பால் இரங்கியருளுவது உயர்ந்த மனிதத் தன்மையாய் ஒளி வீசி மிளிர்கிறது.

இரக்கம் எவ்வுயிர்க்கும் இன்பமாய் வருதலால் அதனையுடையவனை எல்லாரும் உவந்து போற்றுகின்றனர். பரிவு, அனுதாபம், தயை என்பன பெரிய மனிதனுடைய அரிய நீர்மைகளாயுள்ளன. பிறருடைய அல்லலைக் கண்டபொழுது உள்ளம் உருகியுதவுவது பரிவு என வந்தது.

"Sympathy the human species universally craves." (Arthur)

"அனுதாபமான பரிவை மனித இனம் முழுதும் அவாவியுளது" என்னும் இது இங்கே அறிய வுரியது. உயிரினங்கள் துயர்களில் உழலுவதால் உதவி நிலைகளை ஆவலோடு அவாவுகின்றன.

சீவர்கள்பால் தயை புரிந்து வருபவன் திவ்விய நிலையை எய்துகின்றான். இத்தகைய சிறந்த நீர்மை அமைந்து உயர்ந்து போவதே பிறந்த பேறும். நல்ல பிறவிப் பயனைக் காலம் உள்ள பொழுதே கருதிப் பெறாமல் விருதாவாய் விளிந்து தொலைவது மிகுந்த பரிதாபமாம்.

இடிந்த சுவரே.

என்றது பிறந்தபயனை அடைந்து கொள்ளாமல் கழிந்து போவதை நினைந்து வருந்தி நொந்த படியாம். உயர்ந்த மனித வுருவைப் பெற்றும் உரிய பயனைப் பெறாமல் ஒழிவது பெரிய இழிவாதலால் அத் தோற்றம் கட்டமண் எனத் திட்ட நேர்ந்தது. நெஞ்சைப் பண்படுத்தி நீர்மை சுரந்து நிலை உயர்ந்து கொள்ளுக.

508. துன்பம் அறவே தொலைந்து தொலையாத
இன்பம் பெருகநீ எண்ணினே—அன்பமைந்த
எண்ணங்க ளாலுன் இதயம் இனிமையாம்
வண்ணம் புரிக வரைந்து. (அ)

இ—ள்

துன்பம் அடியோடு தொலைந்து நீ என்றும் இன்பம் அடைய வேண்டின் உயிர்கள்பால் அன்பு கூர்ந்து யாண்டும் உதவி செய்க.

இது, உய்தி நெறியை உணர்த்துகின்றது.

சீவர்கள் யாண்டும் சுகபோகங்களையே விரும்பி வருகின்றன; அவ்வாறு வரினும் எவ்வழியும் துன்பங்களே தொடர்ந்து நிற்கின்றன. துயரங்களுக்கு ஏதுவான செயல்களைச் செய்து வந்துள்ளமையால் உயிர்கள் அந்தப் பலன்களையே எங்கும் அனுபவிக்க நேர்கின்றன.

"Man is born unto trouble." (Bible)

"மனிதன் துன்பங்களை அனுபவிக்கவே பிறந்திருக்கிறான்" என எலிபாஸ் (Eliphaz) என்னும் பெரியார் இங்ஙனம் கூறியிருக்கிறார். அல்லல் நிலைகள் அறிய வந்தன.

செல்வம் முதலிய சிறந்த வசதிகள் நிறைந்திருந்தாலும் இழிந்த கவலைகளே யாண்டும் ஊடுருவியுள்ளன.

மானிடவாழ்வு அல்லல்களே நிறைந்திருத்தலால் அவலப் பிறப்பு என அனுபவங்களோடு சொல்ல நேர்ந்தது. வினைப்பயன்களின் படியே நினைப்பும் வாழ்வும் நேர்ந்து வருகின்றன.

கொண்ட மனைவி மக்கள் எனக் கண் கண்ட குழாங்களை எண்கொண்டு பேணி யாண்டும் உரிமை பாராட்டி மனிதன் உழைத்து வருகிறான். பொருள் போகங்களை அவர் அருந்தி மகிழும்படி வருந்தித் தொகுக்கிறான். உற்ற கடன்களை உரிமையாகச் செலுத்தி வருவது வினையின் விசித்திரங்களாய் விளங்கி நிற்கின்றன. வினைப்பயன் உள்ள அளவும் யாவும் நலமாய் மேவி வருகின்றன. அது முடிந்தால் எல்லாம் மாறிப் போகின்றன.

மனைவியும் மகாரும் பொன்னும் மமதை செய்து அமுதம் போல
நினைவினுல் நேயம் செய்து நீணிலத்துள்ள எல்லாம்
அனையவர்க்காகச் செய்வர்: அருத்திகள் ஆன வெல்லாம்
வினையுற முடியும் காலை விடங்களின் மயக்கம் செய்யும்.
(வாசிட்டம்)

தனது நல்வினை இருக்கும் வரையும் மனைவி மக்கள் முதலிய எல்லாரும் நல்லவராய் இதம் புரிந்து வருவர்; அது தீர்ந்தால் யாவும் மாறாய் வேறுபடும் என்றதனால் உலக வாழ்வின் கூறுபாடுகளை உணர்ந்து கொள்ளலாம்.

தான் செய்த இதமே தனக்கு இன்ப நலங்களாய் வருகின்றன; அகிதம் துன்பத்திரள்களாய்த் தொடர்கின்றன.

துன்பம் அறவே தொலைய வேண்டுமாயின், துன்பமான நினைவுகளையும் செயல்களையும் மனிதன் அடியோடு ஒழித்து விட வேண்டும். அவை ஒழியாதவரை துயரமும் ஒழியாது. தொட்டு விதைத்தது துய்க்க வருகிறது.

"They that plow iniquity, and sow wickedness,
reap the same." (Job)

"தீமையை உழுது தீங்கை விதைத்தவர் அதையே அறுக்கிறார்" என்னும் இது இங்கே அறிய வுரியது. எட்டி விதை போல் கெட்ட நினைவு கேட்டையே தரும் ஆதலால் அதனை நட்டினவர் நாசமடைகின்றார்.

அல்லலை விளைத்து அவலம் அடையாமல் நல்லதைச் செய்து ஒல்லையில் உயர்க என எல்லா நூல்களும் போதித்து வருகின்றன.

இன்பம் பெருக நீ எண்ணிநோ.

என இங்ஙனம் எதிர் முகமாய் வினவியது, மனிதன் கண்ணைத் திறந்து கதி காண வந்தது. யாரும் இன்பமே விரும்புகின்றனர்; யாண்டும் அதனை அவாவி அலைகின்றனர்; யாதும் கிடையாமல் அலைந்து தவிக்கின்றனர் கண் குருடுபட்டுக் கடுவழி திரிகின்ற இந்தப் பிழைபாடு மண்ணுலக மருளாய் பருகியுள்ளது.

தான் இன்பத்தை நாடாமல் தன்னை அது நாடி ஓடிவரும் வழியை இதமுடையான் எளிதே செய்து கொள்ளுகிறான்.

அன்பு அமைந்த எண்ணங்களால் இதயம் புனிதமானால் அந்தப் புண்ணியவானுக்கு எல்லா இன்ப நலங்களும் தனி உரிமையாய் இனிதமைகின்றன.

பிறர்க்கு இதம் செய்து வருகிறவன் பேரின்ப நிலையைப் பெறுகிறான். அப் பேற்றை விரைவில் ஆக்கிக் கொள்ளுக.

---

509. தீய நினைவு தினையளவே ஆனாலும்
தூய மகிமை தொலையுமே—பாயும்
இழிநீர் துளிவிழினும் இன்பால் முழுதும்
ஒழியும் பழுதா யுடன். (௯)

இ—ள்

இழிநீர் துளி விழினும் இனியபால் முழுதும் பழுதாம்; அது போல் தீய நினைவு தினையளவு ஆனாலும் தூய மகிமைகள் யாவும் கெடும்; அழிவு நிலை விலகித் தெளிவுறுக என்பதாம்.

தீமை நன்மை என்னும் மொழிகள் முறையே பாவ புண்ணியங்களின் வழிகளில் வந்துள்ளன. தீய நினைவு, தீய சொல், தீய செயல் பழி பாவங்களாய் அழி துயர்களை விளைக்கின்றன. நல்ல நினைவு, நல்ல சொல், நல்ல செயல் புகழ் புண்ணியங்களாய் உயர் நலங்களை அருளுகின்றன. இழிவும் உயர்வும் விழி தெரிய வந்தன.

மனிதன் இனியனாய்ப் புனிதம் அடைந்து உயர்வதும், இன்னாதவனாய் இழிந்து தாழ்வதும் அவனுடைய நினைவுகளின் விளைவுகளாய் நிலவியுள்ளன. நெஞ்சில் நல்ல எண்ணங்கள் படிந்துவரின் அந்த மனிதன் நல்லவன் ஆய்ச் சிறந்து திகழ்கின்றான்; தீய எண்ணங்கள் சேரின் அவன் தீயவன் ஆய் இழிந்து ஒழிகின்றான்.

தீய நினைவு தினை அளவே ஆனாலும்
தூய மகிமை தொலையுமே!

என்றது நினைவின் நிலைமையை நினைந்து தெளிய வந்தது. ஏகாரங்கள் ஒலித்து நிற்கும் பொருள்களை உள்ளச் செவியால் ஓர்ந்து உறுதி நலங்களைத் தேர்ந்து கொள்ளுக.

சிறிய வித்தில் இருந்து பெரிய மரம் தோன்றுதல் போல் நுணுகிய நினைவிலிருந்தே மனித வாழ்வு நெடிது தோன்றுகிறது. புறத்தில் விளங்குகிற எல்லா நிலைகளுக்கும் அகத்தில் மூல வித்தாய் உள்ளது நினைவே ஆதலால் அதன் நீர்மையின்படியே யாவும் நீண்டு நிலவுகின்றன, நிலைமை தெரிந்து தலைமை யுறுக.

நினைவு புனிதமானால் அம் மனிதன் அதிசய பாக்கியவானாய் யாண்டும் துதி செய்யப் பெறுகிறான். அது இழிவாய் ஈனமுறின் ஈனனாய் இழிந்து யாவராலும் இகழ்ந்து தள்ளப் படுகிறான்.

இனிய நினைவுடையவன் ஈசன் அருளை எய்தி யின்புறுகின்றான்; கொடிய எண்ணமுடையவன் ஈசனையிழந்து எவ்வழியும் துன்புறுகின்றான். மனம் போல மனிதன் ஆகிறான்.

கொடியவன், தீயவன், பாவி, நீசன், சண்டாளன் என இவ்வாறு வெளியே பழி நிலையில் எழுவார் எவரும் உள்ளே நெஞ்சம் பழுதாய் இழி நினைவுகளில் பழகி வந்தவரே யாவர்.

தீய நினைவு சிறிது எனினும் நஞ்சுத் துளிபோல் நாசம் செய்தலால் அந்த நீசத்தை நெஞ்சம் புகாமல் நீக்கி விட வேண்டும். நீக்காது வளர விடின் முடிவில் அது நீசப்படுத்தியே விடும்.

கல்வி, செல்வம், குடிப்பிறப்பு முதலியவற்றால் உயர்ந்த மனிதனாயிருந்தாலும் இழிந்த எண்ணம் புகின் அவ்வளவில் அவன் இழிந்தவனாய்க் கழிந்து தாழ்கிறான்.

நல்ல பாலில் துளி அளவு இழிநீர் விழினும் அது இகழ்ந்து தள்ளப்படும்; உயர்ந்த மனிதரிடம் தீய நினைவு சிறிது புகினும் அவர் தீயராய் இழிந்து படுவர். இந்த இழிவை வெளியுலகம் தெளிவாக அறியாது போயினும் தரும சீலமான ஆன்ம வுலகம் நன்கு அறிந்து கொள்ளும் என்க.

இழிநீர் — சிறுநீர்; இழிந்து கழிந்தது என்னும் ஏதுப்பெயர். தினை அளவு என்றது நினைவின் நிலைமை தெரிய.

ஒரு துளி இழி நீரால் பால் முழுதும் பாழ் ஆம்; அணு அளவு தீய நினைவால் அரிய மகிமைகள் யாவும் அழியும் என்க.

பால், மகிமைக்கும்; இழிநீர், தீய நினைவுக்கும்; தினை துளிக்கும் ஒப்பாம். இனிய பால் போன்ற அரிய சுவையுடைய பெரிய மனிதனும் சிறிய தீய நினைவால் சீரழிய நேர்கின்றான்; ஆகவே, தீமையை யாதும் எண்ணாமல் யாண்டும் நன்மையையே நினைந்து யாவர்க்கும் இனியனாய் என்றும் இதம் செய்து வருக.

---

510. தன்னலமே நோக்கித் தவிக்கும் அளவுமோர்
நன்னலமும் நேராக நண்ணாதே—மன்னலமுள்
நாடி வரினே நதியாய்க் கதிநலங்கள்
ஓடி வருமுன் உவந்து. (ம)

இ—ள்

பிறர் நலத்தைக் கருதாமல் தன்னலத்தையே கருதியிருக்

கும் வரையும் மனிதன் உயர்ந்த பயனை அடையான்; பிற வுயிர்களுக்கு இரங்கி இதம் புரியின் அன்றே கதி நலங்கள் அதி வேகமாய் அவனிடம் வந்து சேரும் என்பதாம்.

இதமும் இன்பமும் எவ்வழியும் தமக்கு வேண்டும் என்றே யாவரும் ஆவலோடு அலைந்து திரிகின்றனர். தாம் கருதியபடி யாவும் கைகூடாமையால் யாண்டும் கண்கலங்கி நிற்கின்றனர். மக்கள் நிலை பக்குவம் பெறாமல் பரிதாபம் உறுகின்றது.

மனம் நேர்மையாய் உயர்ந்த போதுதான் மனிதன் சீர்மையும் சிறப்பும் பெறுகின்றான். இனிய பண்பாடுகள் அரிய அமுதங்களாகின்றன; ஆகவே அம் மனிதன் அமரனாகின்றான்.

இரக்கம் தயை இதம் உதவி என்னும் மொழிகள் உயர்ந்த ஆன்ம நீர்மைகளாய் ஒளி வீசியுள்ளன. இந்தத் தன்மைகள் மனிதனைப் புண்ணியவான் ஆக்கி விடுகின்றன; விடவே அவன் எண்ணிய யாவும் எளிதே பெற்று யாண்டும் இன்ப நலங்களைக் காண்கின்றான். இனிய பண்புகள் அரிய இன்பங்களாகின்றன.

தனக்கு மாத்திரம் சுகத்தை நாடுகிறவன் குறுகிய நோக்கம் உடையனாய்ச் சிறுமையையே அடைகிறான்; பிறர்க்கு இதத்தைச் செய்கிறவன் பெருந்தகையாளனாய்ச் சிறந்து திகழ்கிறான்.

சுய நயத்தில் மருளும் மயக்கமும் மண்டி இருள் படிந்துள்ளது; அயல் இதத்தில் அருளும் அறமும் பெருகித் தெருள் நிறைந்து நிலவுகிறது. உண்மை தெரியாமல் ஊனமடைகிறார்.

தன்னலமே கருதி யுழல்கிறவன் பரமன் அருளை இழந்து வெகு தூரத்தில் விலகி நிற்கிறான். தமது நிலைகளை உணராமல் பலர் புலையாடல் புரிந்து புன்மை யுறுகின்றனர்.

"Self-indulgence is a blind alley that leads only to frustration or satiety.' (Human Misery)

“சுய நயம் என்பது இடறான களிவெறியில் செல்லுகிற குறுகிய குருட்டு வழியாம்” என்னும் இது இங்கே அறியவுரியது.

விழி திறந்து விரிந்த நோக்கோடு பாராமையால் மனிதன் இருள் வழியில் இழிந்து போகிறான். சின்ன எண்ணங்களையுடையவன் சின்ன மனிதன் ஆகிறான்; பெரிய எண்ணங்களையுடையவன் பெரிய மனிதன் ஆய் அரிய மகிமைகளை யடைகிறான்.

பிற வுயிர்களுக்கு இதம் புரிகின்றவன் இறைவனுடைய உற வுரிமையாளனாய் உயர்ந்து திகழ்கிருன். சீவர்களுக்குச் செய்யும் இதங்கள் திவ்விய ஒளிகளாயப் பெருகி வருதலால் உபகாரி தெய் வீக நிலையை எய்துகிருன்.

நதியாய்க் கதி நலங்கள் ஓடி வரும்.

என்றது உபகாரிக்கு வரும் ஊதிய நிலைகளை உணர்த்தியரு ளியது. எளிய பிராணிகளிடம் இரக்கமாய் இதம் செய்கின்றவ னுக்கு அரிய துறக்கபதவி தனியே உரிமையாகின்றது.

சுவர்க்கம் என்பது புண்ணிய போகங்களை யுடையது ஆத லால், புண்ணியவான்களுக்குத் தனது இன்ப நலங்களை ஏகபோக மாய் அது ஊட்டியருளுகின்றது. கடமையாளரிடம் உடைமை கள் உரிமைகளாய்த் திரண்டு ஒருமுகமாய் வருகின்றன.

தன்னலம் கருதினவன் சின்னவனாய் இன்னலில் உழல்கின் ருன்; பிறர் நலம் பேணினவன் பேரின்ப நிலைகளில் பெருகி மகிழ் கிருன். உபகார நீர்மைகள் உயிர்க்கு ஊதியங்களாய் உவகை தரு கின்றன; அவ்வரவு நிலைகளைக் கூர்மையாய் உணர்ந்து வாழ்வுகளைச் சீர்மை செய்து கொள்ளுக சீருடைமை பேருடைமையாகிறது.

செய்த உபகாரங்கள் உய்தி நலங்களை உதவி உயிரை உயர்த் தியருளுகின்றன. இதம் புரிந்து வந்தவர் இங்கும் அங்கும் இன்ப வாழ்வுகளை எய்துகின்றனர்; அங்ஙனம் புரியாதவர் எங்கும் என் றும் வறியராய்த் துன்பங்களில் உழலுகின்றனர்.

இம்மி அரிசித் துணையானும் வைகலும்
நும்மில் இயைவ கொடுத்துண்மின்—உம்மைக்
கொடாஅ தவர்என்பர் குண்டுநீர் வையத்து
அடாஅ அடுப்பி னவர். (நாலடி, 94)

இம்மி அளவு ஆவது நாளும் ஓர் உதவியைச் செய்து உண் ணுக; அது பெரிய நன்மையாம்; அங்ஙனம் செய்யாது விடின் கேடாம்; அடுப்பில் உலை ஏற்ருமல் இப் பிறவியில் பட்டினி கிடந்து வருந்துபவர் யார் தெரியுமா? முற் பிறவியில் பிறர்க்கு யாதும் உதவாமல் தன்னலமே கருதி வந்தவரேயாவர் என இது உரைத்துள்ளது. உறுதி உண்மைகளை ஓர்ந்து சிந்திக்க வேண்டும்.

உயிர்களுக்கு இதம் புரிவது தரும வித்துக்களை விதைத்தது போலாம்; ஆகவே இயன்ற அளவு எவ்வகையிலாவது அதனைச் செய்து வருபவர் புண்ணிய போகங்களைக் காணுகின்றனர். இருமைக்கும் இன்பமாய்ப் பெருகி வருதலால் தருமம் உயிரமுதமாய் மருவியுளது. அரிய சஞ்சீவியை உரிமை செய்து கொள்ளுக.

ஒல்லும் வகையான் அறவினை ஓவாதே
செல்லும்வாய் எல்லாம செயல். (குறள், 33)

எனத் தேவர் இங்ஙனம் சொல்லி யுள்ளார்.

நல்ல சிந்தனை, நல்ல சொல், நல்ல செயல் எவ்வழியும் புண்ணியங்களாகின்றன. திவ்விய மகிமைகளை அருளுகின்ற இந் நீர்மைகளை நாளும் பழகிவரின் அது தரும நிலயமாய்த் தழைத்து இருமை இன்பங்களையும் உரிமையோடு தருகிறது.

மன்னுயிர் ஓம்பிவருபவர் புண்ணியவான்களாய்ப் பொலிந்து விளங்குகின்றனர். அங்ஙனம் ஓம்பாதவர் உயர்ந்த நலங்களை இழந்து விடுகின்றனர். உறுதி நிலைகளை உணர்ந்து உயர்க.

ஏவர் எனினும் இடருற் றனராகி
ஓவில் குறைஒன் றுளதேல் அதுமுடித்தற்கு
ஆவி விடினும் அறனே; மறுத்துளரேல்
பாவம் அலது பழியும் ஒழியாதே. (கந்த புராணம்)

உயிர்களுக்கு உதவி உயர்கதி யுறுக.

இவ் அதிகாரத்தின் தொகைக் குறிப்பு.

எவ் வுயிர்க்கும் இதம் செய்.
அது திவ்விய மகிமையாம்.
தேவன் ஆக்கும்.
யாவும் அருளும்.
திருவாய் மருவும்.
தரும நிலயமாம்.
அதனை மறந்தவர் அவலமடைவர்.
புரிந்தவர் புண்ணியராய் உயர்வர்.
அகிதம் அணுவும் ஆகாது.
இதமே உயர் பதமாகும்.

ருக—வது இதம் முற்றிற்று.

# ஐம்பத்திரண்டாம் அதிகாரம்.

## மதம்.

அஃதாவது உயர்ந்த மதி நலத்தால் அமைந்த சிறந்த தெய்வ நெறி. உயிர்க்கு இதமாய் வாய்ந்த உறுதி நலனை உணர்த்துகின்றமையால் அவ்வுரிமை கருதி இதத்தின்பின் இது வைக்கப்பட்டது.

511. பெரிய மதியில் பெருகி எழுந்து
தெரிய வெளியே தெளிவாய்—உரிய
மதமாகி வந்தது மாண்புள் ளுணரின்
இதமே எவர்க்கும் இனிது. (க)

இ—ள்

உயர்ந்த பெரியோர்களுடைய சிறந்த அறிவால் தெளிந்து கண்ட கடவுள் நெறி மதம் என வந்தது; அதன் இயல்பினை நுணுகி உணரின் எவ்வழியும் எவர்க்கும் இதமேயாம் என்க.

இது, மதம் இன்னது என்கின்றது.

உலகம் சீவ கோடிகளுக்கு நிலையமாயுள்ளது. சீவர்களுள் மனிதன் யூக விவேகங்கள் தோய்ந்து உயர்ந்து உலாவுகின்றான். அறிவு நலங்கள் பெருகியுள்ளமையால் அவனுடைய வழிமுறைகளும் வாழ்வுகளும் பலவாறு வளம் பெற்று வந்துள்ளன.

தான் கண்ட உலகத்தைக் கொண்டு காணாத ஒரு அரிய பொருள் உண்டு என்று உணர்ந்து கொண்டான். ஒளியும் இருளுமாய் மாறி மாறிப் பொழுது சுழன்று வருவது அவனுக்கு வியப்பையும் விம்மிதத்தையும் விளைத்து வந்தது. பகல், இரவு என அதனை அழைத்து வந்தான். எல்லாம் ஒழுங்காய் இயங்கி வருதலால் அவற்றை இங்ஙனம் இயக்க வல்லான் ஒருவன் உளன் என்பதை உறுதியாகக் கருதி ஓர்ந்தான். கண்ணுக்கு அதிசயமாகத் தோன்றிய பொருள்களை எல்லாம் துதி செய்து தொழ நேர்ந்தான். யூக விவேகங்கள் வேகமாய் வளர்ந்து வந்தன.

பெரிய நெருப்பு உருண்டை போல் வானத்தில் தோன்றி ஒளி செய்து வருகிற சூரியனை முதலில் தொழுது வணங்கினான். பின்பு மலை, கடல், தீ, பாம்பு முதலிய பல பொருள்களையும் வண

ங்கி வந்தான். வழிபாடுகளாய்ப் பெருகி வந்துள்ள அவை மதங்கள் என வளர்ந்து நிற்கின்றன. பழக்கங்கள் வழக்கங்களாயின.

கடவுளுடைய அருளைப் பெறுதற்கு இதுதான் வழி என்று முன்னோர்களால் மதித்துக் கொண்டது மதம் என வந்தது. உயர்ந்த மதியால் தெளிந்து வந்தது என்னும் பொருளையுடையது ஆதலால் மதம் என்ற பெயர் இதமும்இனிமையும் மருவியமிளிர்கின்றது.

பெரிய மதியில் பெருகி

என்றது மதத்தின் பிறப்பு நிலை தெரிய வந்தது.

மனிதனுடைய இயற்கை அறிவு வளர்ச்சியுடையது. கல்வி கேள்விகள் ஆகிய செயற்கை உதவிகளால்அது செழித்துத் தழைத்து உயர்ச்சியாய் ஒளி வீசி வருகிறது.

புனித எண்ணங்கள் தோய்ந்து சீவான்மாவையும், பரமான்மாவையும் கருதியுணரும் பொழுது அந்த மெய்யறிவு தத்துவ ஞானம் ஆகின்றது. அவ்வாறு தெளிந்த ஞானக் காட்சியடைந்த பெரியோர்கள் கடவுளை நோக்கி ஒழுகி வந்த விழுமிய வழிகளே மதங்கள் என வெளி வர நேர்ந்தன.

சன்மார்க்கம், நன்னெறி நல்வழி, முத்திநெறி, என்பன மனிதா ...த்தை நோக்கிச் செல்லும் வழிகளை விழிகள் காணக் காட்டியுள்ளன. ஒரு ஊருக்குப் பல வழிகள் இருத்தல் போல் பேரின்ப வீட்டுக்கும் நெறிகள் பல மருவி யிருக்கின்றன.

கால தேசங்களுக்கு ஏற்பப் பெரியோர்கள் தோன்றி யிருத்தலால் அவர் கண்ட கதி நெறிகளும் விதி முறைகளும் ஒன்றோடு ஒன்று ஒவ்வாமல் மாறுய் வேறுபட்டு நிற்கின்றன.

புத்தர், ஏசுநாதர், நபி முதலியோர் பெரிய மதத் தலைவர்கள்; அரிய மார்க்க தரிசிகளாய் அத் தீர்க்கதரிசிகள் நிலவியுள்ளனர்.

சிறந்த ஞான சீலர்கள் புகுந்து போன வழிகளாய் வந்துள்ளமையால் மதங்கள் உலக மக்களுக்கு விழிகளாய் ஒளி புரிந்து விழுமிய உறுதி நலங்களை உணர்த்தியுள்ளன.

"The religions of the world are the ejaculations of a few imaginative men." (Emerson)

"உலகிலுள்ள மதங்கள் சில மதிமான்களுடைய வழி மொ

ழிகளே" என எமர்சன் என்னும் அமெரிக்க அறிஞர் இங்ஙனம் கூறியுள்ளார். தத்துவ வுணர்வு உத்தமஒளிகளாய் மிளிர்கின்றன.

உலகில் தோன்றியுள்ள மத ஆசிரியர்களுள் புத்தர் எவ்வகையிலும் தலை சிறந்தவர். அவர் பிறந்த நாடு பெரு மகிமை பெற்றது. அவரைப் பெற்றருளிய இந்தியாவை உலகம் முழுவதும் சிந்தனை செய்து வந்தனையோடு போற்றி வருகிறது. ஆசியசோதி எனமேல் நாட்டாரும் அவரைப் புகழ்ந்து போற்றி வருகின்றனர். அவருடைய அருள் நீர்மைகளும், பொருள் மொழிகளும் உயிரினங்களுக்கு உயர்வான உய்தி நலங்களை அருளியுள்ளன.

"உயிர்கள் எல்லாம் உணர்வு பாழாகிப்
பொருள் வழங்கு செவித்துளை தூர்ந்து அறிவிழந்த
வறந்தலை உலகத்து அறம்பாடு சிறக்கச்
சுடர்வழக் கற்றுத் தடுமாறு காலை ஓர்
இளவள ஞாயிறு தோன்றியது என்ன" (மணிமேகலை, 10)

அவர் தோன்றியுள்ளமையால் அவரால் உலகம் அடைந்துள்ள நன்மைகளை ஊன்றி உணர்ந்து கொள்ளலாம்.

அறிவு பாழாய் இழி நிலையடைந்து மக்கள் இருள் மண்டியிருந்த பொழுது அருள் ஒளி வீசி இனிய இளஞ் சூரியன்போல் புத்தர் தோன்றினர் என்றது மனித சமுதாயம் அவரது புனித போதனைகளால் உயர்ந்திருக்கும் உண்மையை எண்மையாகத் தெளிந்து கொள்ள வந்தது. இனியார்க்கும் இனியனும் இன்னமுதே என அவரை உன்னியுருகி முனிவரர்கள் புகழ்ந்துள்ளனர்.

வழிபாடு செய்யும் முறைகளில் வேறுபட்டிருப்பினும் தரும நீதிகளை எல்லா மதங்களும் ஒரு முகமாகவே போதித்துள்ளன. மதங்கள் யாவும் என்ன சொல்லுகின்றன? மகான்களுடைய எண்ணங்களையே மதங்கள் இதமாகப் போதித்து வருதலால் அவை சீவ கோடிகளுக்குத் தேவ அமுதமாய் மேவி நிற்கின்றன.

எவ்வுயிர்க்கும் எவ்வகையினும் யாதும் துன்பம் செய்யாதே; எல்லார்க்கும் அன்பாய் யாண்டும் இதமே செய் என்பதே மத போதனைகளின் சாரமாய் மருவியுள்ளது.

"Thou shalt love thy neighbour as thyself." (Bible)

"உன்னைப் போலவே பிறரையும் அன்போடு பேணுக" என ஏசுநாதர் இன்னவாறு இனிய நீதிகளைப் போதித்திருக்கிறார்.

"மனிதர்களிடம் அன்புரிமையோடு நடந்து வருவோரை ஆண்டவன் அருள் புரிந்து உயர்த்துகிறான்" (குரான்) என நபிநாயகம் இங்ஙனம் கூறியுள்ளார்.

அன்பு நலம் கனிந்த இதங்கள் உயிரைப் புனிதப் படுத்தி உயர் நிலையில் உய்த்தலால் அவற்றைப் பேரின்ப சாதனங்களாக மேலோர் எவ்வழியும் உரிமையோடு பேணி யுள்ளனர்.

சமய வாதிகள் எல்லாரும் இந்த நீர்மையில் சிந்தை ஒத்து வந்தனை செய்து மூர்த்தி வந்திருத்தலால் அன்பு நெறி யாண்டும் இன்ப நெறியாய் இசை மிகுந்துள்ளது.

அருள்கனிந்த நெஞ்சனாய் ஆருயிர்பால் அன்பும்
பொருள்பொதிந்த சொல்லும் பொருந்தி—மருள்கடிந்து
வாழும் ஒருவன் வழியே மதங்களெலாம்
சூழும் தொடர்ந்து தொழுது.

சீவர்களுக்கு இதம் புரிந்து ஒழுகும் இனிய நீர்மையாளனை மதங்கள் எல்லாம் உவந்து தொழுகின்றன. அங்ஙனம் தொழுவது ஏன்? அவற்றின் உயிர்நிலை அவனிடம் உறைந்துள்ளமையான் என்க.

இதமே எவர்க்கும் இனிது

எல்லா மதத்தவர்களும் உரிமையோடு கருதி ஒழுகி வருவது உயிர்க்கு இதமேயாம். இந்த இதம் இனிய இதயத்திலிருந்து உதயமாகிறது. மனிதனுடைய உள்ளத்தைப் பண்படுத்திப்புனித நிலையை அருளி வருவது எதுவோ அதுவே இனிய மதமாம்.

இனிமைப் பண்பு கனிவு மிகவுடையது; அது மனிதனைப் புனிதமாக்கித் தெய்வத் தேசை அருளுகிறது. எங்கே அன்புநலம் கனிந்திருக்கிறதோ அங்கே கடவுள் அருள் சுரந்து நிற்கிறது.

"God is love"

"அன்பே கடவுள்" என அயல் நாட்டவரும் உவந்து மொழிந்து வருதலால் அதன் இயல்பினை உணர்ந்து கொள்ளலாம்.

உயிர்களுக்கு இரங்கி உதவி புரிந்து வருவது தெய்வீக நீர்மை ஆதலால் அதுவே திவ்விய மதமாய்ச் சிறந்து திகழ்கிறது.

"கதய புந: கோ சசிந: கிரண ஸமா:? ஸஜ்ஜநா ஏவ."

"சந்திர கிரணங்கள் போல் உயிர்களுக்கு இதம் செய்பவர்

எவர்? அவரே உயர்ந்த உத்தமர்" என்னும் இது இங்கே உய்த் துணரவுரியது. தெள்ளிய மதி ஒள்ளிய மதியாய் உதவி புரிகிறது.

இனியராய் இதம் புரிவதே புனித மதமாம்; அந்தப் புண்ணிய நிலையைப் போற்றி ஒழுகிக் கண்ணியம் பெறுக.

---

512. கண்ட மனிதன் கருதி யிறைநிலையைக்
கொண்டது கொள்கையாய்க் கூர்ந்தெழுந்து—மண்டலத்தில்
எங்கும் பரவி இதமாய் இனம்தழுவித்
தங்கி யுளது தழைத்து. (உ)

இ—ள்.

தெளிந்த ஒரு மனிதன் கருதிக் கண்ட வழியே பலரும் ஒழுக நேர்ந்தனர்; கொண்டது கொள்கையாய்க் குலாவியுள்ள அது பல பிரிவுகளாய் உலகில் பரவி யுள்ளது என்க.

அகக்கண் புறக்கண் என மனிதனுக்கு இரண்டு பார்வைகள் உள்ளன. முன்னது ஞானக் காட்சியாய் நலம் பல தருகின்றது; பின்னது ஊன நோக்கமாய் உலக நிலையில் உலாவி வருகிறது. பெரும்பாலும் மனிதர் பொறி நுகர்வுகளோடு அமர்ந்து விடுகின்றனர். உயர் நிலையில் எழுகின்ற அரிய சிந்தனைகள் அவரிடம் வளர்ந்து வராமல் ஒழிந்து போகின்றன.

சித்த சுத்தியோடு உத்தம வுணர்வுடைய சிலரிடமே திவ்விய ஞான நோக்கம் செவ்வையாகவும் தெளிவாகவும் ஒளி பெற்றுள்ளது. அவர்தாம் மனித சமுதாயத்திற்கு இனிய வழி காட்டிகளாய்த் தனி நிலையில் தழைத்து வருகின்றனர்.

அவர் கண்டு கூறியதையே உலகம் உவந்து கொண்டாடி வருகிறது. மானச நோக்குடைய அவர் மேலான தெய்வக் காட்சிகளைத் தெளிவாகக் காட்டி உய்தி புரிந்து வருதலால் உயர்ந்த தீர்க்கதரிசிகளாய்ச் சிறந்து திகழ்கின்றனர்.

கடவுள் உருவம் இல்லாதவர் ஆதலால் அவரைக் கண்ணால் காண முடியாது. உரைகளாலும் உணர்த்த இயலாது.

"இப்படியன்; இந்நிறத்தன்; இவ்வண்ணத்தன்; இவன் இறைவன்; என்று எழுதிக் காட்டொணாதே!" எனக் கடவுளை அப்பர் இப்படிக் காட்டியிருக்கிறார்.

காண முடியாத கடவுளை ஓரளவு கருதி மகிழ அவாவிய மனிதன் தான் விரும்பியபடி வடிவங்களை அமைத்து உருவ வழி பாடுசெய்ய நேர்ந்தான். கருத்து காட்சிக்கு வந்தது. உறுதியோடு எண்ணியதை மனிதன் உரிமையாக எய்துகிறான்.

உள்ளம் உருகினால் கல்லும் உருகிக் கருணை புரியும்; அது உருக வில்லையானால் கடவுளும் கல்லாய்க் கரந்து மறையும்.

மார்க்கண்டேயர் மண்ணைக் குவித்துக் கண்ணீர்மல்கி மறுகி உருகினர்; அங்கே இறைவன் தோன்றி இன்னருள் புரிந்தான்.

மண்ணைப் பிடித்து மறுகினான் மார்க்கண்டன்
கண்ணுக் கெதிர்சிவனைக் கண்டுகொண்டான்—எண்ணுகின்ற
உள்ளம் உருகின் உயர்பரனும்; இல்லையேல்
எள்ளலே யாகும் இழிந்து.

மனம் அன்பாய் உருகின் மனிதன் மகானாய் இன்ப நிலையை எய்துகின்றான். அங்ஙனம் உருகாமல் கடவுள் பெயரை வீணே பிதற்றிக் கொண்டு மத வேடங்களைப் பூண்டு திரிவன எல்லாம் வெறும் கேலிக் கூத்துகளேயாம்.

கடவுள் நித்தியமான சத்திய நீர்மையர்; அந்த உத்தமத் தன்மையை மனிதன் மருவிய போதுதான் அவரது இனிய உற வினனாய் இன்பம் மிகப்பெறுகின்றான். 'கிம் ஸத்யம்?'' சத்தியம் எது? என்று அத்திரி முனிவரிடம் ஒரு துறவி கேட்டார். ''பூத ஹிதம்'' சீவர்களுக்கு இதம் புரிவது என அவர் பதில் உரைத்தார்.

புனிதமான கனிந்த ஞான நோக்கு கடவுட்காட்சியாகிறது; ஆகவே அங்கே அதிசயமான ஆனந்தம் பெருகி வருகிறது.

அகத் தூய்மையில் அடைகிற ஆன்ம இன்பத்தைப் புறப் பார்வையில் அடைய முடியாது ஆதலால் மானச நோக்கை ஞான சீலர்கள் யாண்டும் உரிமையாய்ப் பேணி மகிழ்கின்றனர்.

முகத்திற் கண்கொண்டு காண்கின்ற மூடர்காள்!
அகத்திற் கண்கொண்டு காண்பதே ஆனந்தம்;
மகட்குத் தாய்தன் மணாளனோடு ஆடிய
சுகத்தைச் சொல்என்றால் சொல்லுமா றெங்ஙனே? (1)

உரையற்றது ஒன்றை உரைசெய்யும் ஊமர்காள்!
கரையற்றது ஒன்றைக் கரைகாணல் ஆகுமோ?

திரையற்ற நீர்போல் சிந்தை தெளிவார்க்குப்
புரையற்று இருந்தான் புரிசடை யோனே. (திருமந்திரம்)

கடவுட் காட்சியைக் குறித்துத் திருமூலர் இவ்வாறு கூறியிருக்கிறார். இறைவனை வெளியே ஊன நோக்கோடு பார்த்து உளறித் திரியாதே; உள்ளே ஞான நோக்கால் நயந்து கண்டு உவந்து நில் என உணர்வு போதித்துள்ளார்.

பரமனை மருவி மகிழ்தற்குத் தகுந்த பக்குவம் வேண்டும்; சித்த சுத்தி வாய்ந்து உத்தம சீலம் தோய்ந்து உள்ளம் உருகிய பொழுதுதான் இறைவனை மருவி இன்பம் நுகரலாம்; உரிய பருவம் இல்லையானால் இனிய சுகம் இராது. நல்ல பருவ மங்கை தன் கொழுநனை மூயங்கி நுகரும் சிற்றின்ப போகத்தின் சுவை இளம் பேதைக்குத் தெரியாது; வாய் திறந்து சொன்னாலும் புரியாது. அதுபோல் பரமனோடு தோயும் பேரின்ப போகமும் பத்தி ஞானங்களுடைய பரிபக்குவிகளுக்கே இனிது அமையும்; பிறர்க்கு அது யாதும் அமையாது என்க.

ஊனாய் உயிராய் உணர்வாய் என் உட்கலந்து
தேனாய் அமுதமாய்த் தீங்கரும்பின் கட்டியுமாய்
வானோர் அறியா வழிஎமக்குத் தந்தருளும்
தேனார் மலர்க்கொன்றைச் சேவகனார் சீர்ஒளிசேர்
ஆனா அறிவாய் அளவிறந்த பல்லுயிர்க்கும்
கோனாய் நின்றவா கூறுதும் காண் அம்மானாய்.
(திருவாசகம்)

பேரன்புடைய மாணிக்கவாசகர் பரமனை மருவி மகிழ்ந்துள்ள உண்மையை இவ் வுரைகளில் உணர்ந்து கொள்ளலாம்.

சிவனைத் தோய்ந்த பொழுது சீவ போதங்கள் யாவும் மாய்ந்து அவனாகவே அவர் ஆனந்தம் பெருகியுள்ளனர்.

''தானும் அழிந்து தனமும் அழிந்து நீடு
ஊனும் அழிந்து உயிரும் அழிந்துடன்
வானும் அழிந்து மனமும் அழிந்துபின்
நானும் அழிந்தமை நான் அறியேனே.''

தான் பரம்பொருளோடு தோய்ந்துமாய்ந்திருக்கும் நிலையைத் திருமூலர் இங்ஙனம் உரைத்திருக்கிறார். உரைகள் ஆழ்ந்து சிந்திக்கத்தக்கன. மோன சமாதியில் உதயமாகிய ஞான மொழிகள் வான ஒளிகளாய் வந்துள்ளன. சிந்தனை செய்து தெளிக.

கொண்டது கொள்கை என்றது உலக இயல்பு கருதி.

மனிதன் தெய்வ நிலையைக் கருதிக்கொண்ட அளவே உறுதி கொண்டு திரிகின்றான். ஒரு தலைவன் கூறிய முறைகளைப் பலரும் பின்பற்றி வருகின்றனர். அவ்வரவு வழிதுறையாயது.

உலகம் பலவிதம் என்னும் பழமொழி மதங்களின் விதங்களையும் விளக்கியுள்ளது. மனித இனம் பரந்து விரிந்துள்ளமையால் மதக் கொள்கைகளும் விரிந்து நிற்கின்றன. எல்லா மதங்களும் ஒரு கடவுளையே பல படிகளாகக் கருதிக் கொண்டு மறுகி யுழலுகின்றன. இறைவன் யாவும் கடந்து எங்கும் நிறைந்திருக்கிறான்.

"அங்கு இங்கு எனாதபடி எங்கும் பிரகாசமாய்
ஆனந்த பூர்த்தி ஆகி
அருளொடு நிறைந்தது எது? தன் அருள் வெளிக்குளே
அகிலாண்ட கோடி எல்லாம்
தங்கும்படிக்கு இச்சை வைத்து உயிர்க்கு உயிராய்த்
தழைத்தது எது? மன வாக்கினில்
தட்டாமல் நின்றது எது? சமய கோடிகள் எலாம்
தம் தெய்வம் என் தெய்வம் என்று
எங்கும் தொடர்ந்து எதிர் வழக்கிடவும் நின்றது எது?
எங்கணும் பெரு வழக்காய்
யாதினும் வலலஒரு சித்தாகி இன்பமாய்
என்றைக்கும் உள்ளது எது? மேல்
கங்குல்பகல் அறநின்ற எல்லையுளது எது? அது
கருத்திற்கு இசைந்தததுவே
கண்டன எலாம் மோன உருவெளிய தாகவும்
கருதி அஞ்சலி செய்குவாம்." (தாயுமானவர்)

பல வினாக்களை எழுப்பிக் கொண்டு கடவுள் நிலையைத் தாயுமானவர் இவ்வளவு அழகாக இனிது விளக்கியிருக்கிறார்.

எங்கும் இறைவன் உள்ளமையைக் கருதி யுணர்ந்து எவ்வுயிர்க்கும் அன்பாய் இதம் புரிவதே திவ்விய மதமாம்.

---

513. தெய்வ வழிபாடு சீவனுக் கென்றும்
உய்தி உதவி உறுதலால்—எய்திய
மக்கள் அதனை மதமாகப் போற்றியே
பக்கம் படிந்தார் பரந்து. (௩)

இ—ள்

சீவ கோடிகளுக்குத் தெய்வ வழிபாடு உயர்ந்த உறுதிநலனை உதவி வருதலால் அதனை உரிமையோடு போற்றி மக்கள் ஒழுகி வருகின்றனர் என்பதாம்.

ஆன்மா சார்ந்ததின் வண்ணமாய் சேர்ந்து வருகிறது. மனிதன் எதனை ஆவலோடு எண்ணி வருகிறானே அவ் வண்ணமே ஆகி விடுகிறான். தெய்வ சிந்தனையுடையவன் தெய்வமாய் உய்தி பெறுகிறான்; பாவ சிந்தனையுடையவன் பாவியாய் இழிந்து ஒழிகிறான். நினைவு புனிதமாய் உயரின் அவன் இனிய பாக்கியவான்; அது பழுதாயிழியின் பாழாய் அழிகிறான். அழிவு நிலை தெரியாமல் இழிவில் அழுந்தி வருவது ஒழியா வாழ்வாய் உலகில் நிமிர்ந்துள்ளது. அந்த ஊன நிலை ஞானக் காட்சியால் ஒழிகின்றது.

"உள்ளுவது எல்லாம் உயர்வு உள்ளல்." (குறள் 596)

என வள்ளுவப் பெருந்தகை அருளியுள்ளது அரிய மானச தத்துவமாய் மருவியுள்ளது. சீவ அமுதமான இந்த ஊனர் விறுதியை மனிதன் சிந்தனை செய்து பழகிவரின் விழுமிய பயனை விரைந்து அடைந்து கொள்ளுவான். பொன்னை அடுத்தவன் பொன்; மண்ணை மடுத்தவன் மண் என்னும் பழமொழி எண்ணியுணர வுரியது. பெரிய எண்ணங்கள் அரிய மகிமைகளை அருளுகின்றன.

எல்லாவற்றினும் உயர்ந்த பொருள் கடவுளே. அதனைக் கருதி உருகிய அளவு சீவன் திவ்விய நிலைமையை அடைகிறது.

கடவுள் இருப்பது கண்ணுக்குத் தெரியவில்லை; தெரியாத ஒன்றைப் பெரிதாக எண்ணி வீணே நம்புவது ஏன்? தனக்கு மேலான ஒரு பொருள் இருப்பதாகக் கருதித் தன்னைக் கீழ் ஆக்கிக் கொள்ளுவது அடிமைப் புத்தி அல்லவா? என்று இப்படிச் சில புதிய புத்திகள் கிளைத்திருக்கின்றன.

பொறிகளுக்கு அடிமைப் பட்டுப் பலவகையிலும் இழிந்து உழலுகின்றவர் உயர்ந்த தலைமையாளர் போல உரையாடுவது

மிருந்த நகைவைத் தருகிறது. "இந்த வீட்டுக்காரிக்கு அடிமையா யிருப்பவர் அந்த வீட்டுக்காரனுக்கு அடிமைப் படுவது அடாது தான்" என ஒரு பெரியவர் நாத்திகரை நோக்கி ஒருமுறை நயமாக நவின்றருளினர். வீட்டுக்காரன்=மோட்ச நாயகன்.

கொண்ட மனைக்குக் குடியடிமை யாயிருந்து
கண்டபடி ஊழியங்கள் கைசெய்வார்;—தொண்டு
புரிவார் எவர்க்கும்; புரியார் இறைக்குப்
பெரியார் பெருமை பெரிது.

இந்தப் பெருமையில் சிலர் உரிமை கொண்டுள்ளனர்.

சனகன் முதலிய அரிய ஞான சீலர்களும், பெரிய முடி மன்னர்களும் இறைவனைத் தொழுது உலகங்களை ஆண்டிருக்கின்றனர். ஆண்டவனைக் கருதினவர் ஆண்டவர்களாயினர்; அல்லாதவர் அடிமைகளாய் மாண்டனர், நாளும் மாளுகின்றனர்.

உலகாயிதம்.

தெய்வம் இல்லை என்பதும் ஒரு வகை மதமாய் முடிந்தது. சாருவாகம், உலகாயிதம் என மதங்கள் சில உலாவிவருகின்றன. கண் கண்ட உலக இன்பங்களைத் தவிர மேலாக வேறு ஒன்றையும் கருதி ஒழுகாதவர் உலகாயிதர் எனப் பெருகி வந்தனர்.

கண்டது தான் காட்சி; தெய்வம் உண்டு என்பது பிழை. தருமம் ஒழுக்கம் கருமம் நீதி என்னும் போதனைகள் பேதைமைகளாம். பிறர் மனைவியரை விரும்பினல் பாவம்; பிறர் பொருளை வவ்வினல் தீமை என்பன எல்லாம் நெஞ்சுரம் இல்லாத கோழைகள் சொல்லிய வஞ்சகச் சூழ்ச்சிகளே. மனம் விரும்பியபடி எதையும் அனுபவிக்கலாம். கட்டுப்பாடுகள் செய்வது பகுத்தறிவில்லாத மட்டித்தனங்களாம். கண் எதிரே கண்ட இன்ப போகங்களை எண்ணியபடியே இனிது நுகராமல் காணாத சுவர்க்க மோட்சங்களைக் கருதி யுழலுவது அறிவுகேடான முழு மடமையேயாம்; என இவ்வகையில் உலகாயிதருடையகொள்கைகள் பரவியுள்ளன.

வள்ளமுலை மாதர் அனுபவம் உறாமல்
வாலிபம் வீண் போக உபவாசம் செய்தும்
தள்ளரிய தவமுயன்றும் கனிகாய் தின்றும்
தாம்கெட்டும் கேடு பிறர் தமக்குச் சூழ்வித்து

உள்ளது சொல்பவன் தனைப் பொய்சொல்வோன் என்றும்,
உறுவிழியில் தோன்றாதது உண்மை என்று
விள்ளுமவன் தானே மெய் சொல்வோன் என்றும்,
விளம்புதுர்ப்புத்தியர் இவர்போல் வெய்யோர் யாரே?

கெட்டுடலை இருகூறாய்ப் பிளந்து சீவன்
நிற்பது அதில் கண்டவர் ஆர்? நீர்தாம் பாரும்!
விட்டுடலை அதுபோன வழியார் பார்த்தார்!
விண்ணுலகில் இருந்ததையார் விளங்கி வந்தார்?
எட்டுணை அவ்வளவு இதற்குள் மெய்யுண்டானால்
இன்று முதல் யான் சாருவாகன் என்னும்
கட்டுரையும் வேண்டேன்; பாஷண்ட விஞ்சைக்
கல்வியையும் எவர்க்குமினிக் கழறிடேனால் (2)

எவ்வுயிர்க்கும் பிறப்பும் அவயவமும் ஒக்கும்;
இதில் வருண பேதம் உள என்றால், மேலாம்
அவ் வருணத்தவர்க்கு உறுப்பு ஒன்று அதிகம் உண்டோ?
ஆகாயம் தனில் நின்றும் அவர் வீழ்ந்தாரோ?
செவ்வியவர் நரைதிரை மூப்பு இவைதாமின்றித்
தீர்வையின் சாக்காடுமின்றிச் சிறந்தார் கொல்லோ?
கவ்வையில் ஆண்பெண் சாதி இரண்டின் அல்லால்
காசினியில் வேற்றுருவம் கண்டார் யாரே? (3)

பொலிவுறுதாரம் பரதாரங்கள் என்று
பொறித்தகுறி உளதோ? தம்பொருள் ஈது என்றும்
இலகு பரதிரவியம் ஈது என்றும் ஆங்கே
எழுத்து வெட்டி இருப்பதுண்டோ? எப்பெண்டீரும்
வலியவருக்கு எப்பொருளும் தமதன்றோ? கை
மாட்டாதார் பிறர்மனையாள் மற்றோர் செம்பொன்
நலியில் அதிபாவம் வரும் பழிமேல் உண்டு
நரகம் என்று புகல்வர் எந்த நாளும் தானே. (4)

வானமுதம் என இரதமலிந்த தெண்ணீர்
வாவிதமது அருகிருக்க மடுத்துண்ணாமல்
கானலைநீர் என்றுஓடி உழலுவார் போல்
கைப்பலமாய்க் கிடைத்த இன்பம் கடிந்து புத்தி
ஈனர் சிலர் சொன்ன பொய்யை மெய் என்று எண்ணி
இவ்வுலகில் பற்பல பேர் இரண்டும கெட்டுப்
போனவர்க்கும் இன்பமுற இவ்வாறு ஓதிப்
புத்தி நல்கி நம்மியலிற் பொருத்தினேனால். (5)

(மெய்ஞ்ஞான விளக்கம்)

மோகன் என்னும் மன்னனிடம் தன்னுடைய பிரதாபங்களைக் குறித்து இன்னவாறு சாருவாகன் கூறியிருக்கிறான்.

பகுத்தறிவு வாதிகள் என இக்காலத்தில் கிளைத்திருப்பவர் சொல்லித் திரிவதையும், முற் காலத்தில் மூண்டிருப்பதையும் ஈண்டு இணைத்து எண்ணிக் கொள்ள வேண்டும். மனித சுபாவங்கள் மருள் நிலையில் யாண்டும் ஒருமுகமாகவே மருவி வருகின்றன.

தேகமே ஆத்துமா; போகமே முத்தி என்று அவர் கருதி நிற்கின்றனர். யாதொரு நெறி முறையுமின்றி நெஞ்சு போனபடி அஞ்சாமல் செல்வதே ஆண்மை என அவர் கேண்மை கொண்டாடுகின்றனர். மாயமயக்கங்கள் நேயங்களாய் நிலவி நிற்கின்றன.

கடவுள் உண்டு என்று சிலர் சொல்லிக் கொண்டாலும் பொறிவெறிகளிலும் போகக்களிப்பிலுமே உலகமக்கள் பெரும்பாலும் மூழ்கிக் கிடத்தலால் எல்லாரும் உலகாயிதர்களாகவே உலாவியுள்ளனர். செய்ய எளியதில் வையம் களி கொள்கிறது. அரிய செயல் அயலாயது. உலகமயல் பலவகையிலும் பரிதாபமுடையது.

தெய்வ வழிபாடு சீவனுக்கு உய்தி.

இறைவன் எல்லாம் வல்லவன்; என்றும் உள்ளவன்; இன்ப நிலையினன். அந்தப் பரமபொருளை உழுவலன்போடு கருதி வருவது உயிர்க்கு உயர்ந்த அமுத போகமாய்ச் சுரந்து வருகிறது.

நினைந்துநினைந்துஉணர்ந்துஉணர்ந்து நெகிழ்ந்துநெகிழ்ந்து அன்பே
நிறைந்து நிறைந்து ஊற்றெழுங்கண் ணீரதனல் உடம்பு
நனைந்துநனைந்து அருளமுதே! நன்னிதியே! ஞான
நடத்தரசே! என்னுரிமை நாயகனே! என்று
வணைந்துவணைந்து ஏத்துதும்நாம் வம்மின் உலகியலீர்!
மரணமிலாப் பெருவாழ்வில் வாழ்ந்திடலாம் கண்டீர்!
புனைந்துரையேன்; பொய்புகலேன்; சத்தியம்சொல்கின்றேன்;
பொற்சபையில் சிற்சபையில் புகுந்தருணம் இதுவே.

(அருட்பா)

தெய்வ சிந்தனை செய்து வந்துள்ள இராமலிங்கசுவாமிகள் உலகத்தவரை நோக்கி அன்புரிமையோடு இங்ஙனம் உறுதியுண்மைகளை உரைத்திருக்கிறார். உள்ளத்தின் உருக்கமும் ஆன்ம அநுபவங்களும் உரைகளில் பெருகியுள்ளன. ஊன்றி உணர்ந்து உய்தி நலங்களை ஓர்ந்து தெய்வ நீர்மைகளைத் தோய்ந்து கொள்ளுக.

514. ஒக்கலுறு பிள்ளையாய் உள்ளன்பன் ஒட்டிநின்றான்
மிக்க வுயர்ஞானம் மேவினன்—பக்கல்
வருகின்ற பாலனாய் வந்தான் இறைவன்
அருகொன்றி வாழ அறி. (௪)

இ—ள்

கனிந்த அன்பு கடவுளின் ஒக்கற்குழந்தையாய் மிக்க இன்பம் பெறுகிறது; தெளிந்தஞானம் வளர்ந்த பாலனாய்க் கிளர்ந்து வருகிறது; இருமை நிலையும் உணர்ந்து உரிமையில் உயர்க என்பதாம்.

இது, அறிவினும் அன்பு இனிது என்கின்றது.

உயிர்கள் கடவுளுடைய ஒளிகள். மனித உடம்புகளை மருவியன அறிவு மிகப்பெற்றுச் சீவகோடிகளுள் மேன்மையாய் விளங்குகின்றன. படியேறிப் பக்குவம் அடைந்தபொழுது முடிவு நிலைகளை அவை உணர நேர்கின்றன. அங்ஙனம் உண்மைகளை நன்கு உணருங்கால் மெய்யுணர்வுடையனவாய் உய்தியுறுகின்றன. பரமனை நோக்கியன பரமாய் உயர்கின்றன. அவ்வுயர்வே உயர்ந்த பிறவிப் பயனாய் ஒளி மிகுந்து தெளிவமைந்துள்ளது.

அறிவு நலம் பெருகவே மனிதன் உறுதி நிலைகளை ஓர்ந்து கொள்கிறான். ஓராது ஒழியின் அந்த அறிவு வறிதாய் இழிகின்றது. தெய்வக் காட்சியை மருவிய பொழுதுதான் மனிதன் புனிதனாய் உயர்கிறான். மருவாவழி அவனுடைய கலையறிவும், நிலையறிவும் புலையுறுகின்றன.

கற்றதனால் ஆய பயன் என்கொல்? வாலறிவன்
நற்றாள் தொழாஅர் எனின். (குறள், 2)

சிறந்த கல்வியறிவுக்குப் பயன் உயர்ந்த பொருளை உணர்ந்து வணங்குவதேயாம் எனத் தேவர் இங்ஙனம் உணர்த்தி யுள்ளார்.

எல்லாம் அறிய வல்லவன் ஆதலால் கடவுளை வாலறிவன் என்றார். இயல்பாகவே யாவும் அறியும் மெய்யுணர்வு வாலறிவு என வந்தது. பயின்று முயன்று மனிதன் சிறிதே அறிகிறான். சிற்றறிவனான இவன் முற்றறிவனை உற்றறியின் அது உயிர்க்கு ஊதியமாய் உய்தி தருகிறது.

நூலறிவன், வாலறிவனை உரிமையோடு கருதி வரும் அளவே உயர் மகிமைகளை மருவி வருகிறான். பெரிய நினைவு அரிய பெரு

மையாய் உருவேறி உயர்கிறது இன்ப நிலையமான இனிய பொருளைத் தழுவினவன் இன்பமிகப் பெறுகின்றான்.

"குழந்தையும் தெய்வமும் கொண்டாடுத்த இடம்" என்னும் பழமொழி கடவுள் நிலைமையை விழி தெரிய விளக்கியுளது.

எங்கும் நிறைந்துள்ள இறைவனை எந்த உள்ளம் உரிமையோடு கருதுகிறதோ அங்கே அவன் ஒளியாய் உலாவுகின்றான்.

காயமே கோயிலாகக் கடிமனம் அடிமை யாக
வாய்மையே தூய்மையாக மனமணி இலிங்கமாக
நேயமே நெய்யும் பாலா நிறையநீர் அமைய ஆட்டிப்
பூசனை ஈசனார்க்குப் போற்றவிக் காட்டினோமே. (1)

விள்ளத்தான் ஒன்றுமாட்டேன் விருப்பெனும்வேட்கையாலே
வள்ளத்தேன் போல நுன்னை வாய்மடுத்து உண்டிடாமே
உள்ளத்தே நிற்றியேனும் உயிர்ப்புளே வருதி ஏனும்
கள்ளத்தே நிற்றி அம்மா! எங்ஙனம் காணு மாறே? (2)

(தேவாரம்)

திருநாவுக்கரசர் ஈசனைக் கருதியுருகி உரிமையோடு இவ்வாறு பேசியிருக்கிறார். அன்பு கனிந்த அனுபவ மொழிகள் ஆன்ம இன்பங்களை அருளுகின்றன. உள்ளத்தே நிற்றி; உயிர்ப்புளே வருதி என்றதில் அவர் செய்து வந்துள்ள தெய்வ பாவனை தெரிய வந்தது. சுவாசத்திலும் ஈசுர வாசனை வீசி வருகிறது.

ஒக்கலுறு பிள்ளையாய் உள்ளன்பன் ஒட்டி நின்றான்.

இறைவனை உரிமையுடன் அடையும் நெறிகள் பலவுள்ளன. அவற்றுள் பத்தியும் ஞானமும் தலை சிறந்தன. பத்தி உருகி ஒன்றுகிறது; ஞானம் கருதித் தெளிந்து மருவி மகிழ்கிறது. கனிந்த அன்பும், தெளிந்த ஞானமும் விழி தெரிய வந்தன.

ஒரு தாயின் இடுப்பில் இருக்கும் இளங் குழந்தையைப் போல் பத்திமான் கடவுளை ஒட்டி நிற்கிறான்; கையில் பிடித்து நடத்திச் செல்லும் பாலனைப் போல் ஞானவான் நிலவுகிறான். கையை விடின் ஞானி விலகி விடுகிறான்; பத்தன் யாதும் அகலாமல் என்றும் ஒன்றி மகிழ்கிறான். ஞானம் தானாகப் போய்த் தழுவுகிறது; பத்தி வசமாய்ப் பரமன் வருகிறான்.

ஒக்கல் உறு பிள்ளை;
பக்கல் வரு பாலன்.

என்னும் இவ்வுருவகங்களால் பத்தனும் ஞானியும் பரமனைப் பற்றி நிற்கும் நிலைகளை உய்த்துணர்ந்து கொள்ளலாம்.

இதயம் உருகின் ஈசன் அங்கே உதயமாகிறான்.

---

515. ஆண்டான் ஒருவன் அருமைக் குழந்தைகளாய்
ஈண்டி இவண்வந் திருக்கின்றோம்—மாண்டு
படுமுன் அவனருளைப் பற்றுமல் மாறாய்க்
கொடுமை புரிதல் கொலை. (ரு)

இ—ள்

இறைவனுடைய அருமைப் பிள்ளைகளாய் இங்கே நாம் வந்திருக்கிறோம்; அந்த உரிமையை அடைந்து கொள்ளாமல் வீணே அழிந்து போவது மிகுந்த பரிதாபமாம் என்க.

இவ்வுலகில் ஒருவன் பிறக்கின்றான். பிறந்த அவனைத் தாயும் தந்தையும் உரிமையோடு உவந்து பேணியருளுகின்றனர். தன் பிறப்பிற்குக் காரண பூதராயுள்ளமையால் மாதாவையும் பிதாவையும் அந்த மகன் வணங்கி வழிபட்டு வருகிறான். உடலளவில் ஒரு பிறவியில் உரிமையானவரை இவ்வளவு பெருமையோடு பேணும் கடமையைப் பூண்டு நிற்கிறான். ஆகவே உயிரளவில் என்றும் உரிமையாயுள்ள இறைவனை எவ்வளவு அன்புரிமையோடு தொழுது வர வேண்டும்? என்பது எளிதே தெளிவாம்.

பரமாத்துமா, சீவாத்துமா என்னும் பெயர் வழக்கு அவற்றின் இயல்பையும் இனத்தையும் நேரே விளக்கி நிற்கிறது.

ஆண்டான் ஒருவன் அருமைக் குழந்தைகள்.

என்றது சீவகோடிகளுக்கும் கடவுளுக்கும் உள்ள உறவுரிமையை அனுபவ முறையில் இனிது உணர்ந்து கொள்ள வந்தது.

பிள்ளைகளிடம் பெற்ற தந்தை கொண்டுள்ள அன்புரிமைகளை அனுபவத்தில் அறிந்து வருகிறோம். இயல்பான உருக்கங்கள் உயர்வான உண்மைகளை யாண்டும் நன்கு உணர்த்தி நிற்கின்றன.

அன்னையையும், பிதாவையும், குருவையும் தெய்வமாகப் பாவிக்க வேண்டும் என ஆதி வேதம் ஓதியுள்ளமையால் தெய்வ சிந்தனை மனிதனுக்கு உய்தி நிலையாய் அமைந்துள்ளது. உறுதி உண்மைகளைக் கருதி யுணர்வது பெரிதும் நன்மையாம். ஊனக் கண்ணுக்குத் தெரியாத பொருளை உரிமையான சில இனங்களை எதிர்காட்டி மனந்தெளியச் செய்துள்ளனர்.

உலகங்களையும் உயிர்களையும் நிலையாக இயக்கி என்றும் தலைமையாயுள்ள தனி முதலை தனக்குத் தெரிந்த வகையில் மனிதன் புனைந்து கூறிப் புகழ்ந்து போற்றி வருகிறான். வாக்கினால் வரைந்து சொல்ல முடியாததை வனைந்து சொல்லி வருங்கால் அறிவின் சுவை சுரந்து வருகிறது. உருகிய அன்புடன் இறைவனைத் துதித்து வந்துள்ள ஒன்றை அயலே காண்க.

“இலன்என விதந்தோர்க்கு இல்லையும் ஆயினை;
உளன்என உணர்ந்தோர்க்கு உளையும் ஆயினை;
அருவுருவு என்போர்க்கு அவையும் ஆயினை;
பொருவற விளங்கிய போதம் ஆயினை;
பால்நிற வண்ணம்நீ; பனிமதிக் கடவுள்நீ;
நீல்நிற உருவும்நீ; நிறமிகு கனலிநீ;
அறுமுக ஒருவன்நீ; ஆனிறக் கடவுள்நீ;
பெறுதிரு உருவும்நீ; பெட்பன உருவும்நீ;
மண்ணும்நீ; விண்ணும்நீ; மலையும்நீ; கடலும்நீ;
எண்ணும்நீ; எழுத்தும்நீ; இரவும்நீ; பகலும்நீ;
பண்ணும்நீ; பாவும்நீ; பாட்டும்நீ; தொடரும்நீ;
அண்ணல்நீ; அமலன்நீ; அருளும்நீ; பொருளும்நீ;
இனையை ஆகிய இறைவனின் அடியிணை
சென்னியின் வாங்கிப் பன்னாள் பரவுதும்;
மலர்தலை யுலகின் மன்னுயிர்க் கெல்லாம்
நிலவிய பிறவியை நீத்தல் வேண்டி
மூற்றிய பற்றொடு செற்றம் நீக்கி
முனிமை ஆக்கிய மூவா முத்தியை
மயலற விளித்த நின் மலரடி
அரிய வன்ன யுரிதினிற் பெறவே.”

இதில் பரமனைக் குறித்திருக்கும் நீர்மைகளைக் கூர்மையாக ஓர்ந்து கொள்ளுக. உயிர்கள் எல்லாம் பிறவித் துயரம் நீங்கி உய்யும்படி செய்தருளுகிறநினதுமலரடியை உரிமையாகப் பரவுகின்றேன் என்று பாடியிருத்தலால் கவியினது இதய பரிபாகம்

இனிது தெளிவாயது. அரிய மதி பெரிய கதியை அவாவுகிறது.

சத்து சித்து ஆனந்தம் என்னும் இந்த மூன்று தன்மைகளும் கடவுளுடைய நிலைமைகள் என வேதகாலத்திலிருந்து முனிவர்கள் வழங்கி வந்துள்ளனர்.

சத்து—நித்தியமாய் நிலைத்திருப்பது.
சித்து—யாண்டும் விளங்கி நிற்பது.
ஆனந்தம்—என்றும் இன்பமாயுள்ளது.

இம் மூன்று நீர்மைகளும் **சச்சிதானந்தன்** என்னும் பேரால் துலங்கி வருகிறது. இங்ஙனம் இன்ப நிலையமான பொருளை அன்போடு கருதி வரும் அளவில் சீவன் தெய்வீக நிலையை மேவுகின்றது. அன்பு நலங்கள் கனிய இன்ப நலங்கள் விளைகின்றன.

மனம் வாக்கு காயங்கள் நன்மையில் தோய்ந்து புனிதம் அடைந்த பொழுது மனிதன் கடவுள் நிலையை மருவுகிறான். மருவவே அதிசய ஆற்றல்கள் பெருகுகின்றன. யோகி, ஞானி, மகாத்துமா என விளங்கி வருபவர் எவரும் இறைவன் அருளைப் பருகியுள்ளவரே. உள்ளம் தூய்மையாய்த் தெளிய உரிமைகள் தாமாகவே வருகின்றன; வரவே அரிய மகிமைகளோடு அவர் பெருகி மிளிர்கின்றனர்.

கடவுள் எங்கேயோ மறைந்திருக்கிறார் என மருளர் மருண்டு நிற்கின்றனர்; உள்ளும் புறனும் எங்கும் அவர் ஒளி செய்துள்ளமையைத் தெருளர் தெளிந்து மகிழ்ந்து வருகின்றனர்.

கனிந்த அன்பு மனிதனைக் கடவுள் ஆக்கிவிடுகின்றது.

தந்தை பிள்ளையை அணைப்பதுபோல் உள்ளம்உருகிய அன்பனை இறைவன் உரிமையுடன் அணைத்துக் கொள்ளுகின்றான்; அந்த அணைப்பில் உள்ளவர் மனித உருவில் இருந்தாலும் கருவி கரணங்கள் எல்லாம் பரமாய் உருகி நிற்கின்றனர்.

எந்தை யாய் எம்பிரான் மற்றும் யாவர்க்கும்
தந்தை; தாய்; தம்பிரான்; தனக்கு அஃதுஇலான்;
முந்தி என்னுள் புகுந்தனன் யாவரும்
சிந்தை யாலும் அறிவரும் செல்வனே. (திருவாசகம்)

தனக்குத் தந்தை; அகில உயிர்களுக்கும் தந்தை என இறைவனை எதிர் அழைத்து மணிவாசகப்பெருந்தகை இங்ஙனம் உருகி

உரைத்திருக்கிறார். தன் உள்ளத்தில் புகுந்துள்ளதாகச் சொல்லியுள்ளமையால் அன்பின் வசமாய்ப் பரமன் இன்பம் சுரந்திருக்கும் நிலை இனிது புலனும்.

தாயாகித் தந்தையுமாய்த் தாங்குகின்ற தெய்வம்;
தன்னைநிகர் இல்லாத தனித்தலைமைத் தெய்வம்;
வாயார வாழ்த்துகின்றோர் மனத்தமர்ந்த தெய்வம்;
மலரடிஎன் சென்னிமிசை வைத்தபெருந் தெய்வம்;
காயாது கனியாகிக் கலந்தினிக்கும் தெய்வம்;
கருணைநிதித் தெய்வமுற்றும் காட்டுவிக்கும் தெய்வம்;
சேயாக எனைவளர்க்கும் தெய்வமகா தெய்வம்;
சிற்சபையில் விளங்குகின்ற தெய்வமதே தெய்வம்.
(அருட்பா)

தந்தை தாயும்நீ; என்னுயிர்த் துணையும்நீ; சஞ்சலமது தீர்க்க
வந்த தேசிக வடிவும்நீ; உனையலால் மற்றொரு துணைகாணேன்;
அந்தம் ஆதியும் அளப்பரும் சோதியே! ஆதியே! அடியார்தம்
சிந்தை மேவிய தாயுமா னவனெனும் சிரகிரிப் பெருமானே!
(தாயுமானவர்)

உண்மை தெரிந்த பொழுது கடவுளை இவ்வாறு உரிமை பாராட்டி உருக நேர்கின்றனர். வந்த இடத்தையும் சொந்த நிலையையும் மறந்து நிற்றலால் இறைவனுடைய உரிமையில் உள்ளம் உருகாமல் ஊனமாய் இழிந்து உழலுகின்றனர். ஞானமாய் உயர்ந்தாலன்றி ஈனம் நீங்குவதில்லை.

நீ தெய்வத்தின் பிள்ளை; திவ்விய கதிகளை அடைய உரியவன்; உன் உள்ளத்தைப் புனிதமாக்கி உய்தி காணுக.

---

516. உருவம்பேர் இல்லா ஒருவனுக்குப் பல்வே
றுருவம்பேர் கூறி உளறுகின்றீர்—கருவமதில்
கொண்டு பிணங்கிக் குதிப்பதேன் கூர்ந்துமெய்
கண்டு தெளிமின் கனிந்து. (6)

இ—ள்

அருவமாயுள்ள பரம்பொருளுக்குப் பல உருவங்களையும் பல பெயர்களையும் கூறிக்கொண்டு உளறி வருகிறீர்; அதில் செருக்கு மிகுந்து மாறுபாடு மண்டி வாது புரிகின்றீர்; அந்தோ! உள்ளம் கனிந்து உண்மையை உணர்ந்து கொள்க என்பதாம்.

இது சமயப் பிணக்கை ஒழிக என்கின்றது.

உலகம் உருவத் தோற்றங்களால் நிறைந்திருக்கின்றன. எங்கே உருவம் உள்ளதோ, அங்கே பெயரும் உண்டு. மனிதன் கண்ணில் அகப்பட்ட காட்சிப் பொருள்களுக்கும், மனத்தில் தோன்றியகருத்துப்பொருள்களுக்கும்பொருத்தமானபெயர்களை குறித்து விடுகிறான். அவை வழிமுறையே வழங்கி வருகின்றன.

சிவன் மால் அயன் என இறைவனுக்கு இன்னவாறு பல நாமங்கள் பேசப்படுகின்றன. இப்படிப் பேர் இட்டது யார்? இவை எப்படி உண்டாயின? இக் கேள்விக்கு யாரும் நேரே பதில் சொல்லமுடியாது.

தான் பெற்றபிள்ளைக்குத் தாய் பேர் இடுகிறாள்; தந்தை நாமம் சூட்டுகிறான். ஆதியும் அந்தமும் இல்லாத கடவுளுக்கு யார் பேர் இடுவது? எவ்வாறு கூறுவது? மனிதனுக்குத் தோன்றியபடி எல்லாம் கடவுளுக்குப் பேரைச் சூட்டி வழிபட நேர்ந்தான். அவ்வழிபாடுகள் பல வகைகளாய்ப் பெருகி வரலாயின. பெயர்களுக்கு இயல் அளவில் காரணங்களும் காண வந்தன. காணினும் அவை பூரணமாகத் தெரிந்தபாடில்லை.

"மொழிப் பொருட் காரணம் விழிப்பத் தோன்று" (தொல்கர்ப்)

என ஆசிரியர் தொல்காப்பியனார் இவ்வாறு இலக்கணமும் விதித்தருளினர். பெரியோர் வழங்கிய பெயர்களின் பொருள்கள் அரிய நிலையின என்பது இதனால் அறியலாகும்.

"பேர் ஆயிரம் பரவி வானோர் ஏத்தும் பெம்மான்" (தேவாரம்)

"நாமங்கள் ஆயிரமுடைய நம்பெருமான்" (திருவாய்மொழி)

"சாதிகுலம் பிறப்பு இறப்புப் பந்தமுத்தி
அருவுருவத் தன்மை நாமம்
ஏதுமின்றி எப்பொருட்கும் எவ்விடத்தும்
பிரிவறநின்று இயக்கம் செய்யும்
சோதியை; மாத்தூவெளியை; மனதவிழ
நிறைவான துரிய வாழ்வைத்;
தீதில்பரமாம் பொருளைத் திருவருளே
நினைவாகச் சிந்தை செய்வாம்."

தாயுமானவர் கடவுளை இவ்வாறு கருதியிருக்கிறார்.

அருவமான பொருளை உருவமாகப் பாவித்து, அப்பாவனை களின்படியே பெயர்களைச் சூட்டித் தெய்வ வழிபாட்டை மனிதன் செய்து வந்திருக்கிறான். அன்பு நிலையில் மருவி அருள் வழியில் உருகித் தொழுவதே உண்மையின்பமாம்; அங்ஙனமின்றி மத வெறியோடு மறுகியுழல்வது இதமறியாத இழிந்த நிலையாம்.

உருவம் பேர் கூறி உளறுகின்றீர்!

மத வழிபாடுகளின் இதம் உணராமல் மதம் மீறித் திரிவோரை நோக்கி இது பதி கூறியுள்ளது.

எண்ணவும் உணரவும்முடியாத ஒரு பொருளைக் கண்ணெதிரே கண்டவர் போல் நாம ரூபங்களைக் கொண்டு வாதாடி வருவது பெரிய பேதைமையாம். ஈசன் ஒருவன் உளன்; அவன் எங்கும் நிறைந்து எல்லாமாய் விரிந்து பரந்திருக்கிறான்; அந்தப் பரந்தாமனை விரிந்த நோக்கோடு தெரிந்துஅருந்தவர் நிலைகளை ஆய்ந்து பெருந்தகைமை சுரந்து பேணி ஒழுகுக.

---

517. மதவெறி மண்டி மதத்துப் பிதற்றி
இதமறி யாமல் இழிவர்—முதல்வன்
ஒருவன் பலவே றுருவாகி யுள்ளான்
மருவி மகிழ்க மணந்து. (7)

இ—ள்

இறைவன் ஒருவனே; அவன் பலவேறு நிலைகளில் நிலவியுள்ளான்; அவ்வுண்மையை உணராமல் மதவெறிமண்டி வீணே செருக்கிப் பிதற்றிப் பலர் இழிந்து உழலுகின்றனர் என்பதாம்.

உலக ஆசைகளினும் பாசங்களினும் மக்கள் யாண்டும் உழன்று வருகின்றனர். அவ்வரவில் ஒரோவழி தெய்வ சிந்தனை செய்து உய்தி பெறும்படி மதங்கள் அமைந்துள்ளன.

இனிய இதங்களாய் வாய்ந்து வந்த அவை கால வேற்றுமையால் துனிகள் மிகத் தோய்ந்து மாறுபாடுகள் மண்டி வேறுபாடுகள் விரிந்து நின்றன. தான் சார்ந்துள்ள மதத்தைப் புகழ்ந்தும், பிறர் சேர்ந்துள்ளதை இகழ்ந்தும் ஒருவர்க்கு ஒருவர் பேச நேர்ந்தமையால் எங்கும் பூசல்கள் விரிந்தன. உள்ளப் பிணக்குகள் விரியவே குரோதமும் விரோதமும் வெள்ளமாய்ப் பரந்து

விபரீதங்களை விளைத்தன.

தெய்வ வழிபாடுகளில் வசவுகள் வளர்ந்தன; வசைகள் கிளர்ந்தன. புன்மைபொருமைகள் பொங்கி நன்மைகள் மங்கின. திருமாலைச் சைவர்கள் இகழ்வதும், சிவனை வைணவர்கள் வைவதும் வழக்கங்களாயின. இப்படிக் கொடுமையாகத் திட்டநேர்ந்தமையால் கோடிய வைணவர் எனவும், வீரசைவர் எனவும் பேருபெற நேர்ந்தனர்.

திருமாலை வழிப்படுபவர் வைணவர்.

சிவனைத் தொழுபவர் சைவர்.

பல மதங்கள் இந் நாட்டில் இருந்தாலும் இந்த இருவகையினரிடமே மதப் பிணக்குகள் மிதமீறி நிற்கின்றன. வெறுப் புணர்ச்சிகள் விசித்திர நிலைகளில் விளைந்துள்ளன.

உங்கள் திருமால் எங்கள் சிவனை மாடு ஆய்நின்று சுமந்து வருகிறார் என்று சைவர் சாற்றுவர். எங்கள் பெருமாள் கால் கழுவிய நீரைத்தான் உங்கள் சிவன் தலையில் தாங்கிக் கங்கை வேணியனாய் நிற்கின்றான் என வைணவர் தூற்றுவர். இப்படிப் பழித்தூறல்கள் பல. வாய் வார்த்தைகளோடு நில்லாமல் நூல்களிலும் ஏறின.

தேனமர்ந்த சோலை அரங்கேசர் சேவடிமேல் விசயன்
தானந்த நாளையில் சாத்திய மாலையும் தாள் விளக்கும்
வானந் தருங்கங்கை நன்னீரும் சென்னியில் வைக்கப் பெற்று
ஆனந்தம் தானல்லவோ முக்கணான் மன்றுள் ஆடுவதே.
(பிள்ளைப் பெருமாள்)

மாலின் கால் நீரைத் தலையில் கொண்ட மகிழ்ச்சியினால் தில்லையில் சிவன் ஆனந்தக் கூத்தாடுகிறார் என்று இப்படிப் பாடியிருக்கிறார். மாறுபாடுகள் வேறுபாடுகளாய் விரிந்தன.

ஆனார் இலையே அயனும் திருமாலும்
காணார் அடிமுடிமுன் காண்பதற்கு—மேனாள்
இரவுதிரு வாரூரில் எந்தைபிரான் சென்ற
பரவைதிரு வாயிற் படி. (காளமேகம்)

திருவாரூரில் பரவையார் வீட்டு வாசல்படியாய்த் திருமால் கிடந்திருந்தால் சிவன் அடியைக் கண்டிருக்கலாமே! என்று

இது காட்டியுள்ளது. புராணக் கதைகள் மதவாதிகளுக்கு விநோத விளையாடல்களாய் மேவி நிற்கின்றன. பரிகாசங்களுக்கு இதிகாசங்களை அதிசாகசங்களாப் பயன்படுத்துகின்றனர்.

உண்மாசு கழுவுவது நீறு என்றே உபநிடதம் உரைப்பக் கேட்டும்
மண்மாசு படப்பூசும் வடிவுடையார். (பஞ்சோதிமுனிவர்)
வாயில் மண் இட்டுக் கொண்டவன் தன்னை
மதித்து நன்னுதலில் மண் இடாமல். (சிவப்பிரகாசர்)

புண்ணியமான திருநீறு பூசாமல் மண்ணைப் பூசுகிறார் என வைணவரை இவை இகழ்ந்துள்ளன. வாயில் மண்ணைப் போட்டவனை நினைந்துகொண்டு நெற்றியில் மண்ணைப் போடுகிறார் என்றது நகைச் சுவையை நண்ணி வந்தது.

இடுகாட்டுள் ஆடியை எண்ணிச் சுடுகாட்டுச் சாம்பலைப் பூசுகின்றார் எனச் சைவரை வைணவர் கேலி செய்கின்றனர்.

பரிகாசங்களும் இழி மொழிகளும் பரவிப் பரவி இந்த இரு வகை மத வாதிகளையும் பெரிய வெறியர்களாக்கி விட்டன.

## சிவராமலிங்கம்.

ஒரு சைவர்; நாளும் சிவ பூசை செய்து வருபவர்; முதியவர்; ஒரு நாள் ஒரு புதியவரைச் சந்தித்தார்; அவரை நோக்கி உங்கள் பெயர் என்ன? என்று கேட்டார். அவர் சிவராமலிங்கம் என்று சொன்னார். சொல்லவே "அப்படிப் போட்டு அமுக்கு; அப்படிப் போட்டு அமுக்கு; அமுக்கு! அமுக்கு!" என்று இப்படி இரு கைகளையும் நெருக்கிக் கொண்டு அப் பெரியவர் குதித்தார். அவருடைய கூப்பாடும், குதிப்பும் வியப்பாய் இருந்தன. விவரம் என்ன? என்று விசாரித்ததில் சிவம், லிங்கம் என்னும் இரண்டுக்கும் இடையே ராமன் அகப்பட்டுக் கொண்டான். நடுவே கிடந்து நையட்டும் என்ற மகிழ்ச்சியால் அவ்வாறு குதித்தார் என்று தெரிய வந்தது. மத வெறியை நினைந்து பரிதாபமும் வந்தது.

## சொல்லாத சொல்.

ஒரு வைணவர் வீட்டுப் புறத்திண்ணையில் ஒரு நாள் ஒரு சாமியார் வந்து அமர்ந்தார். அவர் அங்கு உட்காரும் பொழுது

வழக்கப்படி சிவ சிவா என்று சொன்னார். அச்சமையம் வீட்டுக்குளிருந்து வெளியே வந்த பருவமங்கை அச்சொல்லைக் கேட்டாள்; கேட்டதும் உள்ளே விரைந்து போய்த் தன் தந்தையிடம் "அப்பா! சொல்லாத சொல்லை ஒருவன் சொல்லிவிட்டான்" என்று உள்ளம் கனன்று சொன்னாள். "அவன் என்ன சொன்னான்?" எனத் தன் மகளிடம் அவர் கேட்டார். "ஐயோ! சொல்லாத சொல் அப்பா! அது" என்று அவள் கூசித்து நின்றாள். தன் மகளைப் பார்த்துக் கெட்டஎண்ணத்துடன் ஏதோ தவறாகக் கேட்டிருக்கிறான் என்று ஐயங்காருக்குக் கோபம் மூண்டது; வெளியே வந்து அந்தப் பரதேசியைப் பார்த்து "ஏ நீ என்ன சொன்னாய்?" என்று எரிந்து கேட்டார். "நான் யாதும் சொல்லவில்லையே" என்று அவர் சொன்னார். ஐயங்கார் தன் மகளைத் திரும்பிப் பார்த்தார்; "உண்மையாகச் சொன்னான் அப்பா!" என்று அவள் மீண்டும் நேரே விரைந்து உரைத்தாள். உரைக்கவே அவர் வெகுண்டு சாமியாரைக் கன்னத்தில் அடித்தார். அவர் சிவ சிவா என்று திண்ணையை விட்டு எழுந்தார். "கேட்டாயா அப்பா! இப்பவும் அதைச் சொல்லுகிறான்" என அப்பேதைப் பெண் சுட்டிக் காட்டினாள். அப்பொழுதுதான் தந்தைக்கு உண்மை தெரிந்தது. உள்ளம் வருந்தி உள்ளே புகுந்தார். சிவா என்பது சொல்லாத சொல் என அவர் குழுவில் வழங்கி வந்திருக்கும் உண்மை இங்கே விளங்கி நின்றது.

மேலே குறித்த இரண்டு நிகழ்ச்சிகளால் மத வெறிகள் எவ்வாறு மருவியுள்ளன என்பதைச் செவ்வையாக அறிந்து கொள்ளலாம். இவ்வகையில் நிகழ்ந்தன இன்னும் பலவுள; ஈண்டு விரிப்பின் பெருகும் ;ஒருவி விடுவோம். உறுதி நலங்களைக் கருதி யுணர்ந்து உய்தி பெறாமல் வறிதே யுழல்வது பரிதாபமாகின்றது.

இதம் அறியாமல் இழிவர்.

சீவர்களுக்கு இதமாய் அமைந்துள்ள மதத்தின் உண்மை நிலையை உணர்ந்து கொள்ளாமல் புன்மையில் புலையாடி உழலலாகாது. உழலின் மிகவும் இழிவாம் எனக் கழிவிரக்கத்தோடு இது விழி தெரிய விளக்கியது.

முதல்வன் ஒருவன் பலவேறு உருவாகி யுள்ளான்.

ஒரே கடவுள்; மனிதர்களுடைய அறிவு நிலைகளுக்குத் தகுந்தபடி பல வகை நிலைகளிலும் நிலவி அவன் அருள் புரிந்து வருகிறான். தெருள் நிறைந்த அந்தப் பொருள் நிலையை உணர்ந்தவர் இருள் நீங்கி இன்பம் பெறுகின்றார். உணராதவர் மருளராய் மயங்கி மதப் பித்தேறிப் பிதற்றித் திரிகின்றனர்.

ஒன்றது பேரூர் வழிஆறு அதற்குள
என்றது போல இருமுச் சமயமும்
நன்றிது தீதுஇது என்றுரை யாளர்கள்
குன்று குரைத்தெழு நாயை ஒத்தார்களே. (திருமந்திரம்)

ஒரு ஊருக்குப் பல வழிகள் இருத்தல் போல் பேரின்ப வீட்டுக்கும் நெறிகள் பல உள. நதிகள் எல்லாம் ஓடிக் கடலை அடைதல் போல் நெறிகள் எல்லாம் ஓடி முடிவில் கடவுளை அடைகின்றன. இந்த அடைவினை உணராமல் மதவாதங்கள் புரிவது நாய்கள் குலைப்பது போலாம் எனத் திருமூலர் இங்கே தெளிவுறுத்தி யுள்ளார். உண்மை தெளிந்து உயர்கதி காணுக.

---

518. மனிதர்க் கிதம்செய் மதமே சிறந்த
புனித மதமாய்ப் பொலியும்—துனிபுரியின்
எம்மதமே ஆனாலும் ஈனமே யாமிறைவன்
சம்மதமே இல்லையது தான். (8)

இ—ள்

ஒத்த மனிதனுக்கு உள்ளம் இரங்கி உரிமையாய் உதவி புரிவதே புனிதமான உயர்ந்த மதமாம்; இடர் புரியின் அது ஈன மதமாய் இழிந்து இறைவன் அருளை இழந்துபடும் என்பதாம்.

இது, இனிய இதமே புனித மதம் என்கிறது.

ஆன்ம சிந்தனையோடு மருவி வருகிற அத்த மனிதவாழ்வே யாண்டும் மேன்மை அடைகின்றது. அவ்வாறு மருவாதது உயிரற்ற போலி வாழ்வாய்ப் பொலிவிழந்து படுகின்றது.

நெறிமுறைகளையுடைய உயர்தர வாழ்வுகளே மதம், சமயம் எனப் புறம் பொலிந்து திகழ்கின்றன. வேதநெறி, ஆகமநெறி எனப் பலவகையாக வழங்கி வரும் வழி முறைகள் எல்லாம் ஏகமா ஒரு பொருளையே மருவி மகிழ மன்றாடி வருகின்றன.

பழக்கமான மதக் கிழமைகளையே மேலெழுந்தவாரியாய்ப் பலர் தொடர்ந்து வருகின்றனர்; உள்ளே உறைந்துள்ள நலங்களை ஊன்றி உணர்ந்து ஆன்ற அமைதியோடு ஒழுகாமையால் மத வழிபாடுகள் இழிவாக எண்ணப்பட்டன.

தங்கள் உள்ளத்தில் தருக்கி யுள்ள மதங்களை முன்னோர் வகுத்து வைத்துள்ள நல்ல மதங்களின் மேலேற்றிச் சிலர் பொல்லாத்தனங்கள் புரிந்ததனால் எல்லாமதங்களையும் உலகம் இகழ்ந்து நோக்க நேர்ந்தது. ஒன்றிய குழுவால் உயர்வுகள் குன்றின.

அத்துவைதம், துவைதம், விசிட்டாத்துவிதம், மாத்துவம், கணுதிபத்தியம், கௌமாரம், பௌத்தம், சமணம், என இன்னவாறு பல பிரிவுகளாய் மதங்கள் இந்நாட்டில் பெருகியுள்ளன. என்மார்க்கம் நன்மார்க்கம், உன்மார்க்கம் துன்மார்க்கம், என முன் மார்க்கம் தெரியாமல் தன் மார்க்கமும் அறியாமல் பன்மார்க்கமாய் மதவாதிகள் போராடி யுழலுகின்றனர்.

"ஒன்றுஎன்று நின்றசில; பலஎன்று நின்றசில;
உபயத்து நின்ற சிலபேய்;
அன்றென்று நின்றதனை ஆம்என்று சொல்லியுடன்
அலகிட்டு விட்டசிலபேய். (1)

இலதுஎன்று நின்றசில; உளதுஎன்று நின்றசில;
இறைதன்னை நெஞ்சின் உணரும்
வலதுஇன்றி மங்குமல உடல்தங்கு கின்றதவ
வடிவங்கள் கொண்ட சிலபேய். (2)

தண்டைப் பிடித்தசில; சிகையைத் தரித்தசில
சடையைப் பரித்த சிலவே;
முண்டித்து விட்டசில; முடியைப் பறித்தசில
முசுவிற் பொறித்த சிலபேய். (3)

அலைகெட்டி ராதுபல தலைகெட்ட நூல்பழகி
அதுமுக்கிய மாக மிகவே
கலைகற்ற பேய்களொடு சிலுகிட்டு உலாவுவன
கரையற்ற பேய்கள் உளவே." (பரணி) (4)

மதவாதிகளைப் பேய்கள் என இது வருணித்துள்ளது. மதங்களின் விதங்களையும் அவற்றைப் பற்றிக் கொண்டு உழலுபவர்களுடைய நிலைகளையும் இதனால் உணர்ந்து கொள்ளலாம்.

சித்தத்தைச் சுத்தி செய்து அங்கே நித்தியானந்தமான சத்தியப் பொருளைத் தத்துவ ஞானிகள் கண்டு களிக்கின்றனர்; மற்றவர் மாய மயக்கங்களில் மறுகி யலைகின்றனர்.

செந்துகில் புனைவார்; சீவரம் தரிப்பார்;
திரிதண்டோடு ஒருதண்டு பிடிப்பார்;
தந்தம் முத்திரைகள் பலபல தரிப்பார்;
தவம்எனத் தம்முடம்பு ஒறுப்பார்;
மூந்துகாய் கிழங்கோடு இலை அயின்றிடுவார்;
மோனம் என்பார்; கதறிடுவார்;
இந்த ஆகுலத்தால் ஈசன் மேவிடுமோ?
இவர் துயர் உறுவதேன் அந்தோ!" (தத்துவசரிதை)

வெளி வேடங்களால் உண்மையான உயர் பயன்களை எவரும் அடையமுடியா. உள்ளம் தூய்மையாய்த் தகுதி யடைந்த போதுதான் எல்லா நன்மைகளும் எய்த முடியும் என இது உய்தி கூறியுளது.

நல்ல கருமங்களைச் செய்யின் அவை தரும நிலையமாய் இருமையும் இன்பம் தருகின்றன. கடவுள் எல்லா உயிர்களினும் நிறைந்திருக்கிறார்; அந்தச் சீவகோடிகளிடம் அருள் புரிந்து ஆதரவு செய்துவரின் இறைவன் அருள் எளிதே விரைவில் வருகிறது.

மனிதர்க்கு இதம் செய் மதமே புனித மதம்.

உண்மையான நல்ல மதத்தின் தன்மையை இது உணர்த்தி நின்றது. உயிர்களுக்கு இரங்கி உதவுவது உயர்ந்த புண்ணியம் ஆகின்றது; ஆகவே புண்ணிய மூர்த்தியான பரமன் கிருபை அங்கே பெருகி வருகிறது.

உயிரினங்களை ஈசன் உருவங்களாகக் கருதி அன்பு செய்வது உயர்ந்த பண்பாடாய்ச் சிறந்து திகழ்கின்றது. சீவர்களுக்குச்செய்கிற இதம் மேலான தேவபூசையாய் மேவிமிளிர்கிறது.

படமாடக் கோயிற் பகவற்கு ஒன்று ஈயின்
நடமாடக் கோயில் நம்பர்க்கு அங்கு ஆகா;
நடமாடக் கோயில் நம்பர்க்கு ஒன்று ஈயின்
படமாடக் கோயில் பகவற்கு அது ஆமே. (திருமந்திரம்)

உயிர்களுக்கு இரங்கி உதவிபுரிவது பரமனுக்கு மிகவும் பிரிய மாகிறது என்பதை இதனால் அறியலாகும். நடமாடுங் கோயில் என மனிதரைத் திருமூலர் சுட்டிக்காட்டி யிருக்கும் காட்சி சுவை சுரந்துள்ளது.

பொன்னும் மணியும் குவித்து ஈசனை நேரே பூசை செய்வ திலும் ஒரு கவளம் அன்னம் கொடுத்து ஏழைகளை ஆதரிப்பது அவனுக்குப் பேரானந்தம் தருகிறது.

"அன்னம் ஒருவலை; அரன் ஒரு பட்சி;
அன்ன வலையில் அரன் வந்து சிக்குவான்;
அன்னம் எங்குண்டு அரனும் அங்கு உண்டு;
அன்னம் எங்கில்லை அரனும் அங்கு இல்லையே."

என்னும் இது இங்கே நன்கு சிந்திக்கத் தக்கது.

"ஒன்று என்றுஇரு தெய்வம் உண்டுஎன்றிரு; உயர்செல்வம்எல்லாம்
அன்றென்றிரு; பசித்தோர் முகம்பார்! நல்அறமும் நட்பும்
நன்றென்றிரு நடுநீங்காமலே நமக்கு இட்டபடி
என்றென்று இருமனமே! உனக்கே உபதேசமிதே."

ஒரே தெய்வம் உண்டு; அது என்றும் நித்தியமானது; செல் வமுதலிய மற்றவை யெல்லாம் நிலையில்லாதன; பசித்து வந்தவர் க்கு அன்னமிட்டு நல்ல தருமசீலனாய் யாண்டும் அமைதியுடன் ஒழுகி வருக எனத் தம் மனத்தை நோக்கிப் பட்டினத்தார் இவ் வாறு இதமாக உபதேசித்திருக்கிறார்.

இந்த ஞான போதனை நாளும் நினைவில் இருக்கத்தக்கது.

சீவர்களுக்கு இதம் புரிந்து வருவது எதுவோ அதுவே இனியமதமாம்; அந்தப்புண்ணிய நீர்மையைப் போற்றிஒழுகுக.

---

519. உண்டென்று சொல்லி உரைபிதற்றித் தீவினையே
கொண்டு புரியும் கொடியரினும்—கண்டதெய்வம்
இல்லையென்பார் நல்லரே இல்லுடையாள் தீமையினும்
நல்லதன்றோ வேசை நடை. (9)

இ—ள்

கடவுள் உண்டு என்று வாயினால் சொல்லிக்கொண்டு கண் டபடி தீமைகளைச் செய்து வருகிற கொடியரினும் கடவுள்

இல்லை என்று சொல்பவர் மிகவும் நல்லவரே யாவர்; ஒருவனை மணந்துகொண்டு விபசாரியாத்திரிவதினும் வேசைநடை நல்லது என்க.

மனித வாழ்வு புனிதம் அடையத் தெய்வ வழிபாடு இனிது அமைந்துள்ளது. அவ் வழிபாடுகளுள் நாளடைவில் பிழைபாடுகள்பெருகி நிற்கின்றன. உள்ளம் தூய்மை யில்லாமலே உலக ஆடம்பரங்களை அவாவிக் கலக வேடங்களைப் பூண்டு பல வழிகளிலும் மதவாதிகள் வஞ்சிக்க நேர்ந்துள்ளனர்.

கடவுளின் பெயராலும், மதங்களின் பெயராலும் செய்து வருகிற வஞ்சனைகள் பல. தெய்வ நம்பிக்கை இந் நாட்டில் பொது மக்களிடம் நன்கு வேர் ஊன்றி யிருத்தலால் அதனைப் பயன்படுத்திக்கொண்டு மத வேடர்கள் மாய வேலைகளை இதமாகச் செய்து வருகின்றனர்.

இராவணன் சந்நியாசியாய் வந்து சீதையை வஞ்சித்தான். சாதுக்களையும் துறவிகளையும் சனகன் பெரிதும் மதித்துப் பேணி வந்தான் ஆதலால் அம் மன்னன் மகளை அன்ன வகையில் அவ் வஞ்சகன் வஞ்சிக்க நேர்ந்தான்.

சொல்லாலும்வேடத்தாலும் நல்லவர்களைப்போல் வெளியே நடிக்கின்றனர்; பொல்லாத செயல்களை உள்ளம் துணிந்துசெய்கின்றனர். தூயவர்களைப் போல் நடித்து மாய வேலைகளைச் செய்வது மிகவும் தீய செயல்களாம்.

படிப்பது இராமாயணம்; இடிப்பது பெருமாள் கோவில்.

என்பது இந் நாட்டில் வழங்கி வரும் பழமொழி. படிப்பாளிகள் நடிப்பாளிகளாய் நவைபுரிந்து வருவதை இது சுவையாக உணர்த்தி நிற்கிறது.

தங்கள் கள்ள வேலைகளுக்கு நல்ல வேடங்களை இதமாகப் பயன்படுத்திக் கொள்ளுகின்றனர். சிவா, கோவிந்தா, எனத் தெய்வ நாமங்களைச் சபயம்போல் சொல்லிக்கொள்வதும் சமயவாதிகளின் சாதுரியங்களா யுள்ளன.

ஒரு உதைகால் பசுவை ஒருவர் வஞ்சமாக விற்கத் துணிந்தார். அவர் வைணவர்; பெரிய திருமண் குறியை நெற்றியில் நிறைய இட்டிருந்தார். கள்ளப் பசுவை நல்ல விலைக்குத் தள்ள

விரும்பி அயலூருக் கொண்டு போனூர். இடை வழியில் ஒரு காளைமாட்டுடன் ஒருவர் எதிர்ப்பட்டார். அவர் சைவர்; தம் கையில் கொண்டு வந்தது சண்டிமாடு. அதனை எப்படியும் விற்றுவிட வேண்டும் என்று அவர் விழைந்து வந்தார். எதிர்ப் பட்ட இருவரும் எத்தர் ஆதலால் ஒருவரை ஒருவர் வஞ்சிக்க முண்டு விரகோடு பேரம் பேச நேர்ந்தனர்.

சைவர்: இந்தப் பசுவை எங்கே கொண்டு போகிறீர்கள்? விலைக் குக் கொடுப்பதா? என்ன விலை? பால் எவ்வளவு இருக்கும்?

வைணவர்: இது லட்சுமி; வீட்டில் இருந்தாலே போதும்.

சைவர்: அதுசரி; பால் எவ்வளவு கறக்கும்?

வைணவர்: காலையில் ஒரு குடம் கோவிந்தா! மத்தியானம் ஒரு குடம் கோவிந்தா! மாலையில் ஒரு குடம் கோவிந்தா!

இதைக் கேட்டதும் சைவருக்கு ஆசை அதிகமாயிற்று. எப் படியாவது இதைத் தட்டிக்கொண்டு போய்விட வேண்டும் என்று ஆவல் மூண்டது. திருமால் அடிக்கே பெருமால் கொண் டவர்; வீண் வார்த்தை பேசாமல் மொழிக்கு மொழி தெய்வ நாமத்தைச்சொல்லுகிறூர் என மதிப்பு மிகுந்தது; கையில் பணம் இல்லாமையால் தன் காளையைக் கொடுத்துப் பசுவை வாங்கிக் கொள்ளத் துணிந்தார். உள்ளத்துணிவை உரையில் குறிப்பித் தார். மாடு எப்படி? என்று அவர் விசாரித்தர். பாலைக் குறி த்து இவர் கேட்டது போலவே வேலையைப் பற்றி அவர் கேட் டார். இவர் சொன்னூர்: "வண்டியிலே பூட்டினூலும் சிவ சிவா; கமலையிலே மாட்டினூலும் சிவ சிவா; உழவிலே கட்டினூலும் சிவ சிவா!" என இவரும் அவர் மாதிரியே சாதுரியமாய்ப் பதில் கூறினூர். இருவரும் பண்டமாற்றுச் செய்து கொண்டனர். சண்டிமாட்டைக் கொடுத்து நல்ல பால்ப் பசுவைக் கொண் டோம் என்று சைவர் உவந்துபோனூர். ஊர்போய்ச் சேர்ந்த தும் ஆவலோடு பால் கறக்க நேர்ந்தார்; அது ஓங்கி உதைத்தது; கலசம் உடைந்தது; காலையில் ஒரு குடம் கோவிந்தா! என்றதற்கு அப்பொழுதுதான் பொருள் தெரிந்தது.

பொல்லாத பசுவைக் கொடுத்து நல்ல காளைமாட்டை வாங் கிக்கொண்டோம் என்று உள்ளம்உவந்துபோன அவர் காளையை

வண்டியில் பூட்டினர். அது கீழே படுத்துக் கொண்டது. சிவா என்ற சொல்லின் பொருளைத் தெரிந்துகொண்டு வருந்தி நின்றார்.

தெய்வ நாமங்களைக் கைதவமாகக் கூறிக் காரிய சாதனைகளைச் செய்து வருகின்றனர். உள்ளக் கரவுகள் உலகம் எங்கணும் பரவி யுள்ளன. அவற்றின் விளைவுகளை உணராமல் விழிகண் குருடராய் விளிந்து படுகின்றனர்.

கடவுள் உண்டென்று நம்பி மத வழிபாடுகளைச் செய்து வருபவன் ஆத்திகன் என நின்றான். அவ்வாறு நம்பாதவனை நாத்திகன் என்பர். உண்டு இல்லை என உண்மை உலாவியுள்ளது.

தெய்வத்தின் பெயரைச் சொல்லிச் சமய சின்னங்களை அணிந்து கொண்டு மனச் சாட்சிக்கு விரோதமாய்த் தவறான வழிகளில் இழிபவர் மிகவும் பதிதராய்ப் பழி பாவங்களை அடைகின்றனர்.

தெய்வம் இல்லை என்பார் நல்லரே.

ஆத்திகரினும் நாத்திகர் நல்லர் என்றது அவரது நேர்மை நீர்மைகளை நினைந்து. கடவுள் பெயரால் வஞ்சனை புரிவது தீமை ஆதலால் அவ்வாறு செய்யாது நிற்பது நன்மை ஆயது.

சத்தியமும் தருமநீதியும் தெய்வ நீர்மைகள்; அந்தப் புனித நிலைகளில் ஒழுகி வருபவரே தெய்வ வுரிமைகளை எய்தி மகிழுகின்றனர். அல்லாதவர் அயலே விலகிப் போகின்றனர்.

இல் உடையாள் தீமையினும் வேசை நடை நல்லது.

தெய்வத்தின் உரிமையாளர் போல் நடித்து வெய்ய வினைகளைச் செய்து வருபவர்க்கு இடித்து அறிவுறுத்த இது வந்தது.

ஒருவனுக்கு மனைவி என்று சொல்லிக் கொண்டு விபசாரியாய்த் திரிவதினும் வேசிகள் நல்லவர் என்றது இருவருடைய வாசிகளையும் உணர்ந்து கொள்ள. பதிக்குச் சதி செய்வது பாதகம் ஆதலால் அந்த விதிக்கு விலகி நிற்பது மேதகவாயது.

தன் உள்ளத்தில் தகுதியில்லாதவன் மத வேடங்களை மேற்கொண்டு வஞ்சித்து ஒழுகுவது கடவுளுக்கு மிகுந்த அருவருப்பைத் தருகின்றது. தேவகோபமான அந்தப் பாபச் செயல்களைச் செய்யலாகாது என்க.

சடையினைப் பரித்தும் தலையினைப் பறித்தும்
சீவரம் தாதுநற் கலிங்கம்
உடைஎனப் புனைந்தும் உடைகளைத் தவிர்ந்தும்
ஊண் உறக்கங்களைத் துறந்தும்
படியுநற் சருகும் வாயுவும் அயின்றும்
பாரொடு கல்லிடைத் துயின்றும்
இடையதற் றுழலும் இவைஅருட் சொரூபன்
மெய்யருள் பெறுதவர்க்கு இயல்பே.
(போதரத்நாகரம்)

உண்மையான அன்பினலன்றி வெறும் மத வேடங்களால் இறைவனருளைப் பெறமுடியாது; நெஞ்சைத் தூய்மை செய்து நேர்மையுடன் ஒழுகின் எல்லா நன்மைகளும் எளிதே எதிர்வரும்.

மதப் பற்றால் சிலர் மதிகெட்டு உழலுகின்றனர். தெய்வ நிந்தனை செய்து வையம் வைய நேர்கின்றனர். **அரியும் சிவனும் ஒண்ணு; அறியாதவன் வாயிலே மண்ணு** என்னும் பழமொழி மத வெறியர்களுடைய பழி மொழிகளை நோக்கி வந்தது.

அரியைப் புகழ்வார் அரனை இகழ்வார்
அரியரன் ஒன்றென் றறியார்—அரியரனே
எல்லா வுயிர்களிலும் எங்கும் நிறைந்துள்ளான்
நல்லார் அறிவர் நயந்து.

இது நன்கு கருதியுணர வுரியது. **நல்லார் அறிவர்** என்றது அறியாதவரது பொல்லா நிலைமையைப் புலப்படுத்தி நின்றது.

இறைவன் ஒருவனே; அவன் எங்கும் நிறைந்திருக்கிறான்; அவன் இல்லாத இடமில்லை; **அகண்ட பரிபூரணன்** என்னும் பேரே அவனது நிலைமை தலைமைகளை நேரே உணர்த்தியுள்ளது. எல்லா வுயிர்களிலும் தெய்வக் காட்சி செய்து உய்வைத் தேடிக் கொள்ளாமல் ஊனமாயுழல்வது ஞானசூனியமானஈனமேயாம்.

தான் செய்யும் இதமே மனிதனுக்குத் திவ்விய கதியை அருளுகிறது. உயிர்களுக்கு உதவி புரிவது உயிர்க்குயிரான பரமனுக்கு உவகை தருகிறது. மதத்தையும் தெய்வத்தையும் வாயால் பேசிக் கொண்டு கையால் வெய்யன செய்பவர் வெய்யவரே ஆவர். மெய்யை உணர்ந்து தெய்வநிலை எய்துக.

520. உற்ற பரமன் உடைமைகளாய்ப் போந்துள்ள
மற்ற உயிர்களை மாண்புறுத்தி—முற்றியபேர்
அன்போ டிதஞ்செய்க அன்னதே அப்பரமன்
இன்ப மதமாம் இவண். (10)

இ—ள்

உயிர்கள் கடவுளுடைய உடைமைகள்; அவற்றிற்கு அன்பாய் இதம் செய்வதே அவனுக்கு இன்பமான இனிய மதமாம்.

உடையான் என்பது கடவுளுக்கு ஒரு பெயர். அகில அண்டகோடிகளும் சகல சீவகோடிகளும் அவனுடைய உடைமைகளா யுள்ளமையால் அவன் **உடையான்** என நின்றான்.

"உடையானே! நின் தனையுள்கி உள்ளம் உருகும் பெருங்காதல்
உடையார் உடையாய்!" (திருவாசகம்)

மாணிக்கவாசகர் இறைவனை நோக்கி இவ்வாறு உருகி உரையாடி யிருக்கிறார். கடவுளுக்கும் மனிதனுக்கும் உள்ள உறவுரிமைகள் அதிசய மறைவுகளாய் மருவி யிருக்கின்றன.

**உற்ற** என்றது அநாதி நித்தியமாய்ப் பொருந்தி யுள்ள அந்தக் கிழமையின் பழமையை உய்த்துணர வந்தது!

பரஞ்சோதியான இறைவனிடமிருந்து பிரிந்து வந்த பொறிகளே யாண்டும் உயிரினங்களாய்ப் பரந்து விரிந்துள்ளன; இந்த உண்மையை உணர்ந்து உறுதி நலங்களை ஓர்ந்து கருதிய நெறியில் ஒழுகி வரின் விழுமிய நன்மைகள் விளைந்து வரும்.

காண முடியாத கடவுளை நேரே காண வேண்டுமாயின் கண்எதிரே திரிகின்ற சீவர்களிடம் கருணை புரிந்து உதவிசெய்க; அந்தப் புண்ணிய விளைவு எண்ணிய மகிமைகளை எதிரே காட்டி இன்ப நலங்களை ஊட்டி இருமையும் பெருமையருளும்.

"மதங்களின்விதங்களை வீணேபேசிப்பிதற்றிமதங்கொண்டு திரியாதே; உயிர்களுக்கு இதங்களைச் செய்; அதுவே உயர்ந்த தெய்வ வழிபாடாய் உய்தி நலங்களை உதவிவரும்" என **மதங்க முனிவர்** ஒருமுறை ஓர் மதவாதியை நோக்கி உரைத்தருளினர்.

சமய சின்னங்களைத் தரித்துக் கொண்டு தெய்வபத்தியுடையவர் போல் சிலர் நடித்து வருகின்றனர்; அவருடைய செயல்

இயல்கள் யாவும் கொடுமையும் வஞ்சமும் நெடிது நிறைந்திருக்கின்றன. பொது மக்களுக்கு மூத போதனைகளைச் செய்ய நேர்ந்த தலைவர்கள் வேடதாரிகளாய் ஆடம்பர நிலைகளில் பீடங்கள் கொண்டு பெருகி நின்றமையால் பிழைகள் பல பெருகின.

சென்னிஓர் பனங்காய் போல முண்டித்துச்
 சீடர் பற்பலர்கள் பின்செல்லச்
சன்னியாசங் கொண்டு அழல்மழுக் குறிக்கொள்
 தண்டொடு கமண்டலம் தாங்கி
மன்னி ஆதரிப்போர் மனைதொறும் புகுந்து
 வயிறு சாணுந் தனிவளர்த்தற்கு
உன்னிஊர் தொறும்போய் மடந்தொறும் குடிகொண்டு
 ஒண் துகில் காவிதோய்த் துடுத்தே. (1)

உற்றுப நிடதத்து உட்பொருள் தன்னை
 உணர்வுறுது ஒருவருக்கு ஒருவர்
கற்றறி வோதி அத்துவிதம் தாம்
 கழறுவார் போன்று கண்தெரியா
மற்றொரு குருடர் குருடருக்கு உரைக்கும்
 வழிஎனச் சொல்துறை மயங்கித்
தெற்றுரை செய்து தியக்கமுற்று ஏதும்
 தெளிவுறு தவர்கள் இத்திரளால். (2)

மாய வெம்பசியைத் தீர்ப்பதற்கு ஏதும்
 மதித்திடாமல் திரி தண்டு
மேயவெண் பட்ட நாமமும் காவி
 இட்ட பூந்துகிலு மேலிலங்கச்
சீயர் என்பவராய் இல்லறத் தோர்க்கும்
 சென்னிதாழ்த் திறைஞ்சி அத்திருமால்
கோயிலின் அமுதம் புசிப்பதற் கன்றே
 கொண்டனர் இனையர் இக்கோலம். (3)

மூங்கில் நெட்டிலைபோல் கோபி சந்தனமும்
 முத்திரைப் பொறிகளும் சாத்தி
ஆங்கத னிடை அங்காரமும் தீட்டி
 அங்குலிக்கு ஓரோர்செம்பு அடுக்கி

நீங்குமின் என்று பிறர்செல விலக்கி
நெட்டடி குந்திவைத்து அனேகம்
ஈங்கிவர் புரிந்தும் தத்துவர்தாம் என்று
எத்துவார் உலகினை எங்கும். (5

(மெய்ஞ்ஞான விளக்கம்)

பிற்காலத்தில் மத குருக்களாய் வந்துள்ளவர்களுடைய நிலைகளை இவை வரைந்து காட்டியுள்ளன. காட்சிகளைக் கருதிக் காண வேண்டும். வெளிப் பகட்டுகள் விபரீதங்க ளாயின.

ஆன்ம அனுபவிகளாய் உண்மை நெறிகளை உணர்த்தவுரிய ஆசிரியர்கள் பான்மை திரியவே மதங்களும் மேன்மை குலைந்து போயின. போலிக் குருக்களை நம்பினவர் கேலிக் கூத்தராய் இழிந்தனர். குருட்டுநம்பிக்கைகள்மருட்டுவம்புகளாய்மலிந்தன.

"குருட்டினை நீக்கும் குருவினைக் கொள்ளார்
குருட்டினை நீக்காக் குருவினைக் கொள்வர்;
குருடும் குருடும் குருட்டு ஆட்டம் ஆடிக்
குருடும் குருடும் குழிவீழு மாறே. (1)

குருடர்க்குக் கோல்காட்டிச் செல்லும் குருடர்
முரணும் படுகுழி வீழ்வர்கள் முன்பின்
குருடரும் வீழ்வர்கள் முன்பின் அறவே
குருடரும் வீழ்வார் குருடரோ டாகியே." (2)

(திருமந்திரம்)

உள்ளே ஞான சீலங்கள் இல்லாமல் புறத்தே வெறும் மத வடங்களைப் பூண்டிருப்பவரிடம் உறுதி நலங்களை உணர விரும்புவது குருடனிடம் குருடன் வழி கேட்பது போல் இழிவேநம் எனத் திருமூலர் இவ்வாறு தெளிவுறுத்தி யுள்ளார்.

தெளிவான ஞானக்கண் இல்லாமையால் குருடர்என நேர்ர். விழியுடையவரே வழி தெரியவல்லார்; ஞானத் தெளிடயவரே கதி நெறி காண உரியார் என்க.

சித்த சுத்தியுடைய தத்துவ ஞானிகளே உத்தம நிலையில் வர்; அல்லாதவர் பித்தராய் இழிவர்; அவரைப் பின்பற்று பிழையாம் என இது விழி தெரிய விளக்கியது.

"Let them alone: they be blind leaders of the blind, and if the blind lead the blind, both shall fall into the ditch."
(Bible)

"வேடதாரிகளை விட்டுவிடுங்கள்; அவர் குருட்டு வழியினர்; குருடனுக்குக் குருடன் வழி காட்டினால் இருவரும் குழியுள் வீழ்ந்து அழிவார்" என ஏசுநாதர் இவ்வாறு கூறி யிருக்கிறார்.

குருடும் குருடும் குருட்டு ஆட்டம் ஆடிக் குழிவீழும் எனத் திருமூலர் கூறியபடியே ஒரு மூலமாய் இது மருவி வந்துள்ளது. உறுதி யுண்மைகள் உய்த்துணரத் தக்கன.

அன்போடு இதம் செய்க அன்னதே இன்பமதம்.

உயிர்கள்பால் அன்புடையனாய் யாண்டும் இரங்கி யாவருக்கும் உதவி செய்க; அதுவே பரமனுக்குப் பிரியமான புனித மதமாம். தெய்வப் பிரீதி உய்வைத் தருகிறது.

இதம் செய்வது எவ்வழியும் திவ்விய இன்பமாய் விளைந்து வருதலால் அதனையே மகான்கள் உவந்து பேணி வருகின்றனர்.

புத்தர் ஒரு முறை ஒரு பௌத்த மடத்தை அடைந்தார்; அங்கே இருந்த துறவிகள் எல்லாரும் உவந்து எழுந்து அவருடைய அடியில் விழுந்து வணங்கி நின்றார். அவர் உள்ளே சென்று பார்த்தார்; அங்கே ஒரு துறவி தொழு நோயால் வருந்திக் கிடந்தார். அவரைக் கண்டதும் உள்ளம் உருகி அருகே போய் அமர்ந்து தம் கைகளால் தடவி எடுத்து நீராட்டி உபசரித்து நல்ல படுக்கையில் படுக்க வைத்தார். குட்ட நோயாளனைத் தொட்டு எடுத்துப் புத்தர் பெருமான் ஆதரித் தருளியதைக் கண்டதும் எல்லாரும் வியந்து மகிழ்ந்தார். அதன்பின் அத்துறவிகளை நோக்கி அக் கருணை வள்ளல் இதமாகக் கூறிய இனிய அருள் மொழி அயலே வருகிறது.

"Whosoever serves the sick and suffering serves me." (Buddha)

"ஏழைகளுக்கும் நோயாளிகளுக்கும் யார் ஊழியம் செய்கிறார்களோ அவரே எனக்கு உண்மையாகப் பணி செய்தவராவார்" என இங்ஙனம் சொல்லியருளினார். அன்று பாலி மொழியில் சொன்ன இந்த அமுத வாக்கியத்தை ஆங்கிலத்தில் மொழி பெயர்த்து மேல் நாட்டார் உவந்து போற்றி வருகின்றனர். எவ்

வுயிர்க்கும் இதம் செய்வதே திவ்விய மதமாம் என்பதைப் புத்த பகவான் யாண்டும் எல்லார்க்கும் போதித்திருக்கிறார்.

அன்பு கனிந்த இனிய உபகாரங்களே பின்பு தருமம் புண்ணியங்கள் எனத் தழைத்து வருகின்றன. தருமாத்துமா புண்ணியாத்துமா என்னும் பதம் எண்ணரிய மகிமைகளை யுடையது.

மன்னுயிர்க்கு அன்பு செய்வது தன்னுயிர்க்குப் பேரின்பமாய்ப் பெருகி வருகிறது. இவ்வுண்மையை உணர்ந்த மகான்கள் எவ்வழியும் நன்மைகளைச் செய்து உய்தி பெறுகின்றனர்.

மதச் சின்னங்களைத் தரித்துக்கொண்டு நெடுநேரம் தெய்வ பூசனைகளைச் செய்கின்றனர்; பசித்து வந்தவர்க்கு யாதும் உதவாமல் இகழ்ந்து விடுகின்றனர். பசியில்லாத கடவுளுக்குப் பாலன்னங்களை ஊட்ட விழைவதும் அந்தக் கடவுளே பசியுடையனாய் மனித வடிவில் வந்தபோது யாதும் காட்டாமல் ஓட்டுவதும் உலக விசித்திரங்களா யுள்ளன.

தெய்வத்தின் பேரால் சிலர்வாய் மதம்பேசி
ஐயோ உயிர்கட் கவம்புரிதல்—வெய்ய
பழிச்செயலே ஆகும்; பரிந்தருளின் அஃதே
பழிச்சல் அவனைப் பணிந்து.

சீவர்களுக்கு இரங்கி உதவுவதே சிறந்த தேவ பூசையாம்; அதனை மறந்து மதங்கொண்டு திரிவது மறமாம் என்க.

## இவ் அதிகாரத்தின் தொகைக் குறிப்பு.

மதம் மறுமை நோக்கமாய் மருவியது.
கதி நலங்கள் கருதியது
தெய்வ வழிபாடுகள் சேர்ந்தது.
பத்தி ஞானங்கள் படிந்தது.
உறுதி நிலைகள் ஓர்ந்தது.
உண்மை தெரிய உற்றது.
மதப் பிணக்குகள் மதிகேடுகளாம்.
உயிர்கட்கு இதம்செய்வதே உயர்ந்த மதம்.
வெளி வேடங்கள் இழி கூடங்கள்.
அன்பு புரிவதே இன்ப மதமாம்.

52-வது மதம் முற்றிற்று.

# ஐம்பத்து மூன்றும் அதிகாரம்.

## நாகரிகம்.

அஃதாவது திருந்திய பண்போடு பொருந்தி வாழும் பெருந் தகைமை. யாவரிடமும் தண்ணளி புரிந்து கண்ணியம் கனிந்து புண்ணியம் பொருந்தி வருகிற கண்ணோட்டம் தேவகிருபையைச் செய்து வருதலால் மதத்தின் பின் இது இங்கு வைக்கப்பட்டது.

521. நாகரிகம் என்னும் நயச்சொல் அருள்நலத்தின்
பாகமாய் நின்றது பண்டின்று—மோகமிகு
காரியங்கட் கெல்லாம் கருத்தாய் எடுத்ததனை
வாரி இறைக்கின்றார் வந்து. (1)

இ—ள்

நாகரிகம் என்னும் இனிய மொழி முன்னம் அருள் நீர்மையை உணர்த்திப் பொருள் பொதிந்திருந்தது; இந் நாளில் அதனை மருள் நிலையில் புகுத்தி உலகர் மருண்டு திரிகின்றனர் என்பதாம்.

இது, நாகரிகத்தின் நிலைமையை உணர்த்துகின்றது.

உலகில் மொழிகள் பல உள்ளன. மக்களுடைய வாழ்க்கைகள் மொழிகளால் இயங்கி வருதலால் அவை சீவிய நிலைகளாய் விளங்கி நிற்கின்றன. தேசங்கள் தோறும் பாஷைகள் வேறு என்பது பழமொழி. பேசும் பாஷைகளின் பிரிவுகளும் விரிவுகளும் இதனால் அறியலாகும். மக்கள் பல இடங்களிலும் பிரிந்து வாழ்ந்து வருதலால் அங்கங்கே அவர் பேசி வருவன அந் நாட்டு மொழிகளாய் ஈட்டம் எய்தி நின்றன. தம்மைப் பேசி வருகிற மக்களுடைய சீர்மை நீர்மைகளை அத் தேச மொழிகளில் கூர்மையாகக் கண்டு கொள்ளலாம்.

இந் நாட்டு மக்களுடைய பழமையான பண்பாடுகளை நம் தமிழ் மொழி நன்கு காட்டியுள்ளது. பண்டை மக்கள்பால் கண்ட உண்மைகளைக் கருதி உணருந்தோறும் உள்ளம் உருகி வருகிறது. உயர்ந்த குறிக்கோள்கள் ஒளி வீசி நிற்கின்றன.

திருந்திய பண்பும் சீர்த்த நாகரீகமும் பொருந்தி யிருந்து அருந்தவர்களாய் வாழ்ந்து வந்த பெருந்தகையாளர் பலரை இந்

நாடு முன்னாள் இனிதுபெற்றிருந்தது. இந் நாள் இன்னு நிலையில் இடருற்றுளது. நம்முன்னோர் நீர்மைகள் எந்நாளும் பொன்னே போல் போற்ற வுரியன.

பழங்கால நிலைமையை உளம் கூர்ந்து தெளிதற்கு இங்கே ஒரு சொல்லை நாம் சோதனை செய்து பார்க்கவேண்டும்.

**நாகரிகம்** என்னும் வார்த்தையை யாவரும் அறிவர்; அதனை ஒரு மோகன மந்திரமாக மொழிந்து வருகின்றனர். வெளிப் பகட்டான உல்லாச நிலைகளில் இக் காலத்தவர் உபயோகித்து வருகிற இச் சொல் முற்காலத்தில் உயர்ந்த பொருளில் ஒளி செய்து நின்றது.

> நாகரிகம் என்னும் நயச்சொல் அருள்நலத்தின்
> பாகமாய் நின்றது பண்டு.

தயை, இரக்கம், கண்ணோட்டம் ஆகிய கருணைப் பண்பு களையே **நாகரிகம்** என்னும் சொல் முன்னம் உணர்த்தி வந்துள்ளது. கண்ணோடி இரங்கி இதம் புரிகிறவன் எவனே அவனே **நாகரிகன்** என நின்றான். இக்காலத்தில் பேசப்படும் நாகரிகர்க் கும் இதற்கும் எவ்வளவு வேற்றுமை!

> சதுரர் காமுகர் நாகரிகர் ஆகும். (பிங்கலந்தை)

இடைக்காலத்தில் நாகரிகர் இவ்வாறு பேர் பெறலாயினர். ஆதியில் இது அருள் நீர்மையே பொருளா யிருந்தது.

> பெயக்கண்டும் நஞ்சுண்டு அமைவர் நயத்தக்க
> நாகரிகம் வேண்டு பவர் (குறள், 580)

பழகின உரிமையாளர் எதிரே இருந்துகொண்டு நஞ்சைக் கொடுத்தாலும் அதனையும் மறுக்க மாட்டாமல் உண்பர் என நண்பு பேணும் பண்புடையாரை இது விளக்கியுள்ளது. கண் ணோட்டம், தாட்சணியம் என்னும் பொருளில் **நாகரிகம்** இங்கே வந்துள்ளமையைக் கண் ஊன்றி உணர்ந்து கொள்கிறோம். உயர்ந்த நாகரிகம் உடையார் இப்படி இருப்பர் என நாயனார் ஈண்டு வரைந்து காட்டியிருக்கும் காட்சி கருதி உணரத்தக்கது.

> புதல்வன் ஈன்ற பூங்கண் மடந்தை
> முலைவாய் உறுக்கும் கைபோல் காந்தட்
> குலைவாய் தோயும் கொழுமடல் வாழை

அம்மடற் பட்ட அருவித் தீநீர்
செம்முக மந்தி ஆரும் நாட!
முந்தை இருந்து நட்டோர் கொடுப்பின்
நஞ்சும் உண்பர் நனி நாகரிகர்
அஞ்சில் ஓதிஎன் தோழி தோள்துயில்
நெஞ்சின் இன்புறாய் ஆயினும் அதுநீ
என்கண் ணோடி அளிமதி
நின்கண் அல்லது பிறிதியாதும் இலளே. (நற்றிணை, 355)

இது ஒரு தோழி தலைவனை நோக்கிக் கூறியது. "காந்தள் மலர் தழுவிய கொழுவிய வாழைப் பூவிலிருந்து வருகிற நீரை மந்திக் குருளை பருகுவது, தன்கையால் முலையைப் பிடித்துப் பிள்ளைக்குத் தாய் பாலூட்டுவது போலுள்ளது; அத்தகைய நில வளமுடைய நாட்டின் தலைவ! இத் தலைவியை மணந்து வாழ்; உனக்கு அது மனமில்லையேனும் என் பொருட்டாவது செய்; களவில் உனக்கு உளவு கூறி உதவிய என்பால் கண்ணோடி அருளுக" என்று அவள் உரையாடி யுள்ளாள். இதில் வரைந்து காட்டியிருப்பது உவகைக் காட்சியாய் ஒளி சுரந்துள்ளது.

நட்டோர் கொடுப்பின் நாகரிகர் நஞ்சும் உண்பர் என்று சுட்டிக் காட்டி யிருக்கும் இதில் நாகரிகத்தின் பொருள் நன்கு காண வந்தது. தயை சுரந்த உயர்ந்த பெருந் தகைமையை உணர்த்தி வருதலால் இதனை யுடையவர் சிறந்த மேன்மையாளராய்த் திகழ்ந்துள்ளனர். "நங்கை தோழி நனி நாகரிகி" என ஒரு மங்கையை இங்ஙனம் குறித்திருக்கிறார்.

பெருங்கண் கோட்டி விரும்புவனள் நோக்கி
நாணொடு நிற்கும் நனி நாகரிகம்." (பெருங்கதை)

நாகரிகம் என்னும் இனியசொல் உயர்ந்தநீர்மையில் முன்பு உலாவி வந்துள்ளமையை இவற்றால் உணர்ந்து கொள்ளலாம்.

கருணை கனிந்த கண்ணோட்ட முடையவரே நாகரிகர் என்றதனால் அஃது இல்லாதவர் அநாகரிகர் என்பது பெறப்பட்டது.

ஆக்கரிய மூக்கு உங்கை அரியுண்டாள் என்றுரை
நாக்கரியும் தயமுகனார் நாகரிகர் அல்லாரே
மூக்கரிந்து நும்குலத்தை முதலரிந்தீர் இனியுமக்குப்
போக்கரிது இவ்அழகை எல்லாம் புல்லிடையே உகுத்தீரே.
(இராமாயணம், சூர்ப்ப, 125)

மூக்கு அறுபட்ட சூர்ப்பநகை இராமலட்சுமணரை நோக்கி இவ்வாறு கூறியிருக்கிறாள். என் மூக்கை அறுத்து விட்டார் என்று யாரேனும் போய்ச் சொன்னால் என் அண்ணன் அவரு டைய நாக்கை அறுத்து விடுவானே! அவ்வளவு கொடிய கோபி; அவன் கோபத்திற்கு ஆளான நீங்கள் குலத்தோடு இனி அழி ந்தே போவீர்கள்; எவ்வழியும் தப்பமுடியாது; என்னை நீங்கள் சேர்த்துக் கொண்டால் தப்பிப் பிழைக்கலாம்'' என இப்படி அச்சுறுத்தி ஆசையோடு பேசியுள்ளாள். இராவணன் மிகவும் பொல்லாதவன்; தயை தாட்சண்யம் யாதும் இல்லாதவன் என்பாள் தயமுகனுர் நாகரிகர் அல்லர் என்றாள்.

நாகரிகம் என்னும் பதம் கருணைப் பண்புடையது என்பது இதுவரை கூறியவற்றால் இனிது தெளிவாயது.

பண்டு தூய அருள்நிலையில் தோய்ந்து இருந்த அது இன்று மாய மருள் நிலையில் மண்டி யுள்ளது. உள்ளம் கனிந்து உயர் நிலையில் திருந்தாமல் எள்ளல் படிந்து இழி நிலையில் வெளி மினுக் கானவையெல்லாம் நாகரிகம் என நேர்ந்தன. இந்த மோக மருள் நீங்கி ஏக அருள் ஓங்க வேண்டும்.

---

522. அருள்காட்டி நின்ற அருஞ்சொல் திரிந்து
மருள்காட்டி நின்ற மரபால்—இருள்காட்டி
நின்றார் எவரும் நெடுந்தீமை யேநிமிர்ந்து
சென்றார் துயர்மேற் செல. (2)

இ—ள்

அருள் நிலையைக் குறித்து நின்ற நாகரிகம் என்னும் அரிய சொல் மருள் நிலையில் மாறி வந்தமையால் மனிதர் இருள் நிலை யில் இழிந்து திரிந்து நெடிய தீமைகளில் நிமிர்ந்து கொடிய துய ரங்களில் உழலுகின்றனர் என்பதாம்.

கால வேற்றுமையால் யாவும் மாறு படுகின்றன. அவ் வகையானமாறுபாடுகளால் பலபுரட்சிகள் நேர்ந்துவிடுகின்றன.

நல்ல பண் பாடுகளில் வழங்கி வந்த வார்த்தைகள் பொல் லாத புண்பாடுகளில் திரிந்து வரநேர்ந்தது மிகுந்த காலப் புரட்சி யாய் விரிந்து நிற்கிறது.

நண்புநலம் கனிந்து இரங்கி இதம்புரியும் இனிய நீர்மையே நாகரிகம் எனத் தனி மகிமை பெற்றிருந்தது. இக் காலத்தில் இச் சொல் அத்தகைய உயர்ந்த காட்சியை உணர்த்தாமல் அயலே மயலாய் இழிந்துள்ளது.

மருள் காட்டி நின்ற மரபால்
இருள் காட்டி நின்றார்.

பண்டு அருள் காட்டி நின்ற சொல் இன்று மருள் காட்டியுள்ளமையால் மக்கள் வாழ்வுகள் இருள் காட்டி யுள்ளன என இது பொருள் காட்டியுள்ளது.

அன்புரிமை யுடன் எவ்வுயிர்க்கும் இரங்கியருளும் செவ்விய நீரரே நாகரிகர் என முன்னம் நின்றார். இன்று நாகரிகர் என்றால் யாரைக் கருது கின்றனர்? தலை மயிரை நன்றாக வெட்டித் திருத்திச் சட்டை தரித்து ஓர் தொப்பி மாட்டிக் காலுறை பூட்டிக் கையில்சுருட்டும் வாயில் புகையுமாய் வெளிவருவோரே நாகரிகர் என மோகம் அடைந் துள்ளனர்.

முன்பு உயிர்மேல் ஊன்றியிருந்த நாகரிகம் பின்பு மயிர்மேல் மாறவே போலி வேடங்களே நாகரிகம் என்று பெரு மோகம் கொண்டு வெளியே யாவரும் ஏகமாய்த் திரிய நேர்ந்தனர்.

தன்வாயில் ஒருசுருட்டு தலைமயிரில்
பலசுருட்டு தருக்கு நோக்கம்
என்வாயில் உள்ளதையும் எனதகத்தில்
இருப்பதையும் எதிரே நோக்கிப்
பொன்வாயில் சொரியும்எனப் புகல்கின்ற
மொழியினராய்ப் பொங்கி வாழ்வார்
முன்வாயில் திறந்துள்ளே முழுவதையும்
காட்டுகின்ற முதல்வர் தாமே.

தங்களுடைய செயல் இயல்கள் யாவும் உயர்ந்த நாகரிகங்கள் என்று நினைந்துகொண்டு நெஞ்சம் திமிர்ந்து நெடிது திரிந்து கடிது களித்து வருவாரது நிலைகளை இது சிறிது விளக்கியுள்ளது. நாடு அடைந்துள்ள கேட்டு நிலைகளைப் பாட்டில் ஓரளவு காட்டினும் காட்சிகளைக் கண்ணூன்றி ஓர்ந்துகொள்ள வேண்டும். நாகரிகம் எனக் கருதி மயங்கி இக்காலத்தில் நம்மக்கள் செய்து வருகிற அநாகரிகங்கள் அதிசய விநோதங்களா யுள்ளன.

சிறந்த பண்பாடுடன் செறிந்திருந்த இந்நாட்டு நாகரிகத்தை மறந்து விட்டு அயல் நாட்டு மினுக்கில் மயல் நாட்டி நின்றமையால் நல்ல தன்மைகள் சிதைந்து போயின; பொல்லாத புன்மைகள் புகுந்துகொண்டன. சிறுமைகள் பெருமைகளாய்ப் பெருகி நின்றன.

இழிந்த பழக்கங்களை உயர்ந்த வாழ்க்கைத் தரங்களாக நினைந்து கொண்டு பலர் மகிழ்ந்து வாழ்ந்து வருகின்றனர். மருண்ட காட்சிகள் இருண்ட மாட்சிகளாய் எதிர்ப்படுகின்றன. சிறந்த நாகரிகர் என்று தங்களை எண்ணிக்கொள்பவர் நாகரிகம் என்னும் இந்த அருமைத் தமிழ்ப் பதத்தின் உரிமைப் பொருளைச் சிறிது ஊன்றி உணர வேண்டும். அருளுடைய பெரியார்க்கு உரியதை மருளுடைய வெறியார் விழைவது பெரிதும் இழிவாகின்றது.

**மோக மயக்கில் முழுகியுளார் தம்மையுயர்**
**நாகரிகர் என்றல் நகை.**

கண்ணோடி அருள் புரியும் புண்ணிய நீர்மையே நாகரிகம்; அந்த அருமைப் பண்புடையவரே நாகரிகர் என்னும் பெருமைக்கு உரியராவர். உள்ளம் இரங்கி; ஒத்த மக்களுக்கு உதவிசெய்; எல்லா மகிமைகளும் உன் எதிர் வந்து நிற்கும்.

---

523. கண்ணோ டிருந்தாலும் கண்ணோட்டம் இல்லானேல்
மண்ணோடு கல்மரமே மானுமவன்—கண்ணோடி
அன்பு புரிவான் அமரர் தொழுதேத்த
இன்பம் உறுவான் இவண். (3)

இ—ள்

கண்ணுடையராயிருந்தாலும் கண்ணோட்டம் இல்லை எனின் அவர் மண் கல் மரம் என இழிந்து படுவர்; கண்ணோடி யாவர்பாலும் அன்பு புரிபவர் தேவரும் தொழுது ஏத்த ஈண்டு இன்பம் அடைவர் எனபதாம்.

குண நலங்களால் மனிதன் உயர் நிலைகளை அடைந்து கொள்ளுகிறான். பண்பு பரிபக்குவம் என்பன மேலோர்களுடைய நீர்மைகளாய் மேவி யுள்ளன. உள்ளம் கனிந்து உருகின் அந்த மனிதனிடம் பேரின்ப வெள்ளம் பெருகி வருகின்றது.

கண்ணோட்டம் என்னும் சொல் கருணைப்பண்பு உடையது ஆதலால் அது புண்ணிய நீர்மையாய்ப் பொலிந்து திகழ்கின்றது. பிற உயிர்கள் துயருறுவதைக் கண்டால் உடனே உள்ளம் உருகி உதவி புரிய நேர்வதே கண்ணோட்டமாம். கண் ஓடி இரங்குவது **கண்ணோட்டம்** என வந்தது.

இந்தப் புண்ணிய நீர்மையுடையதே உண்மையான கண் ஆம்; இத் தன்மை இல்லையானால் அது புன்மையான ஒரு புண் என்று இகழ்ந்து தள்ளப்படும்.

கண்ணிற்கு அணிகலம் கண்ணோட்டம்; அஃதின்றேல்
புண்என்று உணரப் படும். (குறள், 575)

காணும் கண்ணுக்கு ஒரு பூண் அணிந்து கருணைக் காட்சியைத் தேவர் இவ்வண்ணம் காட்டி யிருக்கிறார். காது கழுத்து கை கால் விரல் முதலிய அவயவங்களில் அணிகலங்களை அழகுக்காக அணிந்து திரியும் மானிடர்க்கு இங்கே ஒரு புண்ணிய அணிகலனைக் கண் எதிரே காட்டி எண்ணியுணரச் செய்துள்ள திறம் இன்ப மிகச் செய்கிறது.

எவனுடைய கண் இரங்கி யருளுகின்றதோ அவனே நல்ல கண்ணுடையவன்; அல்லாதகண் பொல்லாத குருடே. என்னுமல் புண்என்று சொன்னது அதன் மேல் உள்ள வெறுப்பையும் அருவருப்பையும் வெளிப்படுத்தியது.

கருணை புரியாத கண் கொடுமையாய்ப் பழி பாவங்களை விளைத்துத் தன்னை யுடையானுக்கு இருமையும் துன்பம் தருகின்றது; கருணை புரியும் கண் இனிமையாய்ப் புகழ் புண்ணியங்களைச் செய்து என்றும் இன்பம் அருளுகின்றது.

கருதிக் கண்ட பின்பே உள்ளம் உருகி உதவும் ஆதலால் கண்ணோட்டமும் கருணையும் வித்தும்விளைவும்போல் ஒத்துள்ளது.

பண்ணுக்கு வாம்பரித்தேர் ஆதபனும்
பணிந்துபசு பதியை நோக்கி
மண்ணுக்குத் தவம்புரியும் தனஞ்சயற்குக்
கோடையினும் மதியம் போன்றான்
எண்ணுக்கு வரும்புவனம் யாவினுக்கும்
கண்ணவான் இவனே அன்றோ

கண்ணுக்குப் புனைமணிப்பூண் கண்ணோட்டம்
என்பதெல்லாம் கருணை அன்றோ.
(பாரதம், அருச்சுனன் தவநிலை 43)

அருச்சுனன் சிவபெருமானை நோக்கி வெயிலிடை நின்று அரிய தவம் புரிந்தான். வேனில் காலத்திலும் வெயில் வெப்ப மின்றிச் சீதள மதிபோல் ஆதவன் குளிர்ந்திருந்தான்; உலகுக் கெல்லாம் அவன் கண்ணுயுள்ள உண்மையை அன்றுபுரிந்த கண் ணோட்டத்தினால் நன்று காட்டியருளினான் என்னும் இது இங்கே நின்று கண்டு நெடிது மகிழவுரியது.

கண்ணோட்டம் என்பது எவ்வழியும் இரங்கி இதம் புரியும் இனிய நீர்மை என்பது தெளிவாய் நின்றது. ஆன்ற சான்றோர் இயல்பாய் இது தோனறி யுள்ளது.

உடலுறுப்புக்களில் கண் மிகவும் சிறந்தது. உயிர் வாழ்வு அதன் வழியே உலாவி ஒளி வீசி வருகிறது. அத்தகைய கண் ணும் தயை இல்லையானால் இழிபுண்ணாய் இகழப்படுகிறது. ஆக வே கண்ணோட்டத்தின் மேன்மையும் அதனை யுடையவரது மகி மையும் உணரலாகும்.

கண்ணுக்கு அணிகலம் கண்ணோட்டம்; காமுற்ற
பெண்ணுக்கு அணிகலம் நாணுடைமை—நண்ணும்
மறுமைக்கு அணிகலம் கல்வியிம் மூன்றும்
குறியுடையார் கண்ணே யுள. (திரிகடுகம், 52)

நல்லாதனார் என்னும்சங்கப் புலவர் இங்ஙனம் கூறியுள்ளார்.

உயர்கதியடையவுரிய அரிய பெரியார்கள்பால் அருமையாக மருவி யிருத்தற்குரிய தயையை எல்லாரிடமும் எளிதே காண இயலாது. நல்லார் சிலரிடமே அது உரிமையாயுளது.

மக்கள் எல்லாரும் தந்நலமே கருதித் தம் சுகமே எங்கும் நாடி வருதலால் பிறர்க்கு இரங்கி யருளுவதில் பின்னமடைந் துள்ளனர். இந்தப் புல்லிய தடையைக் கடந்து மேலேறிய போதுதான் அவர் மேலான பெரியோராகின்றனர்.

தாட்சணியம் தனநாசம் என்பது பழமொழி.

பொருள் முதலியவற்றைப் பொருட்படுத்தாமல் துணிந்து அருள் புரியும் தியாகிகளே அரிய கண்ணோட்டம் பேணும் பெரிய நாகரிகராய்ப் பெருகி நிற்கின்றனர்.

தன்னலம் துறந்து பிறர்நலத்தைப் பேண வேண்டுமாயின் அந்த உள்ளம் எவ்வளவு உன்னத நிலையை அடைந்திருக்க வேண்டும்?

பஹூ ஜந ஹிதாய பஹூ ஜந ஸுகாய ஜீவிதம் பவேத்

"உலக மக்களுடைய நலத்துக்காகவும், சுகத்துக்காகவும் உங்கள் உயிர் வாழ்க்கை யிருக்கட்டும்" எனத் தன்னுடைய சீடர்களை நோக்கிப் புத்தர் பெருமான் முடிவில் இப்படிப் போதித்திருக்கிறார். இந்த உத்தமருடைய யுள்ளக் கருணை எத்தகைய நிலையது? கண்ணோடியருளும் நாகரிகம் இந்தப் புண்ணியமூர்த்தியிடம் புகலடைந்துள்ளது.

சீவதயை தேவ இதயமாய்த் தேசு புரிகிறது. தண்ணளி இல்லாதவர் புண்ணிய ஒளி குன்றிப் புலையுறுகின்றனர்.

கண்ணோட்டம் இல்லானேல் மண் கல் மரம்.

ஆறறிவுடைய உயர்ந்த மனிதப் பிறவியில் பிறந்திருந்தாலும் சீவதயை இல்லையாயின் அவன் மண்ணே கல்லே மரமே என எண்ணி இகழப் படுவான் என்றதனால் அவனது இழி நிலை வெளியே தெளிவாய் நின்றது.

மண்ணோ டியைந்த மரத்தனையர் கண்ணோடு
இயைந்துகண் ணோடா தவர். (குறள், 576)

என்றது பொய்யாமொழி. கண்ணோட்ட மாகிய இனிய தன்மை இல்லாமையால் மனிதன் இன்ன நிலையனாயினன்; ஆகவே இழிவும் பழியும் எவ்வழியும் ஏறின.

ஒன்று நாம்பென்கோ? ஒன்றாத என்பென்கோ?
இன்றசை தான்என்கோ? யாதென்கோ—மென்தொடையாழ்
பண்ணூட்டும் இன்சொற் பணைத்தோளாய்! சேர்ந்தவர்பால்
கண்ணோட்டம் இல்லாத கண். (பாரதம்)

அடுத்தவர்பால் இரங்கியருளாத கண்ணை எலும்பு நரம்பு தசை என இவ்வாறு பெருந்தேவனார் இகழ்ந்து கூறியுள்ளார். கண்ணோட்டம் இல்லாத மனிதரை நேரே இகழாமல் கண்ணை இகழ்ந்தது கண்ணோட்டத்தாலாம் என்னை? உயிருள்ளவர் ஆகலால் உள்ளம் வருந்துவர் என்று இரங்கி வசைகளைக் கண்மேல் ஏற்றிக் கண்ணோடிப் போனார் என்க.

நெற்றப் பகைவர் இடர்ப்பாடு கண்டக்கால்
மற்றுங்கண் ணேடுவர் மேன்மக்கள்—தெற்ற
நவைக்கப் படுந்தன்மைத் தாயினும் சான்றேர்
அவைப்படின் சாவாது பாம்பு. (பழமொழி)

பகைவரிடமும் கண்ணேடியருளுவர் மேன்மக்கள் என முன்றுறையரையனார் இங்ஙனம் மொழிந்திருக்கிறார். எதிரி இடருற்ற போது இரங்கியருள்வது அரிய தகைமை ஆதலால் அது பெரிய கண்ணேட்டம் ஆயது.

கண் வனப்புக் கண்ணேட்டம் கால்வனப்புச் செல்லாமை
எண் வனப்பு இத்துணையாம் என்றுரைத்தல்—பண் வனப்புக்
கேட்டார்நன் றென்றல் கிளர்வேந்தன் தன்னுடு
வாட்டானன் றென்றல் வனப்பு. (சிறுபஞ்சமூலம்)

காரியாசான் என்னும் சங்கப் புலவர் இங்ஙனம் கூறியிருக்கிறார். உறுதி நலங்கள் கருதி யுணரவுரியன.

ஐந்து அழகுகளைச் சொல்ல வந்தவர் முன்னதாகக் **கண் வனப்புக் கண்ணேட்டம்** என்றார். இந்த அழகை இழந்து விடாமல் விழைந்து பேணி விழுமிய நிலையில் வாழ வேண்டும்.

---

524. நெறிமுறையே நின்றெழுகி நெஞ்சம் உயரின்
அறிவுலகம் எல்லாம் அவனைப்—பொறிபுலன்கள்
வென்ற பரனெனவே மேலாகக் கொண்டாடி
ஒன்ற வணங்கும் உவந்து. (4)

இ—ள்

உள்ளம் கருணைப் பண்பில் உயர்ந்து நெறிமுறையே ஒருவன் ஒழுகி வருவானாயின் அறிவுலகம் யாவும் அவனை இறைவன் எனவே உவந்து கொண்டாடிப் புகழ்ந்து போற்றும் என்பதாம்.

மேன்மையில் உயர்ந்து செல்வதே மனித வாழ்வின் உயர்ந்த குறிக்கோளாயுள்ளது. எல்லையில்லாத பேரின்ப நிலையமான பரம்பொருளிடமிருந்தே வந்திருத்தலால் மேல் நோக்கம் சீவர்களுக்கு இயல்பாய் அமைந்திருக்கிறது. வழுவிய அந்த ஆதிமூல நிலையை மீளவும் அடைய வேண்டுமானால் யாதொரு வழுவுமின்றி விழுமிய சீலமாய் ஒழுகிவர வேண்டும்.

நெறி முறை என்னும் உரைகள் உயர் பொருளுடையன. விதி நியமங்களை விளக்கி வந்துள்ளன. பொறிபுலன்களை நெறியே செலுத்தித் தரும நீதிகளில் ஒழுகிவரின் அவ்வரவு ஆன்ம ஒளியாய் ஆனந்தம் அருளுகிறது.

நல்ல வழியில் செல்பவர் நல்லவராய் எல்லா இன்பநலங்களையும் எளிதே எய்தி மகிழ்கின்றார்· தீய வழியில் நடப்பவர் தீயராய் இழிந்து யாண்டும் நோயுழந்து படுகின்றார்.

நெஞ்சம் உயரின் என்றது மனிதனுடைய உயர் நிலைகளின் உரிமை தெரிய வந்தது. உயர்ந்தவன் என ஒருவன் ஒளிபெற்று வருவது அவன் உள்ளத்தினாலேயாம். புனித எண்ணங்களும் இனிய பண்பாடுகளும் எவனுடைய உள்ளத்தில் குடிகொண்டிருக்கின்றனவோ அந்த மனிதன் தெய்வீக நிலையில் சிறந்து திகழ்கிறான்- நல்ல உள்ளமுடையவனிடம் எல்லா வல்லமைகளும் எளிதே வந்து சேர்கின்றன.

பரிவும் பண்பும் அரிய நிலையின ஆதலால் அந்நீர்மையாளரை அறிவுலகம் மேன்மையாகப் போற்றி வருகிறது. அறிவினும் அன்பு பெருமகிமையுடையது. தெளிந்த அறிவாளியினும் கனிந்த அன்பாளன் உயர்ந்து திகழ்கிறான். அன்பு என்பையும் பிறர்க்கு ஈயவல்லது ஆதலால் அது தூய பேரின்ப நிலையமாய்த் துலங்கி நிற்கிறது. துயர்களை நீக்கி உயிர்களை உயர்கதியில் உய்த்து வருதலால் அன்பு ஆன்ம அமுதமாய் இன்பம் சுரந்துள்ளது.

எளிய பிராணிகளிடம் அளி சுரந்து உதவுவது தயை: உறவாய் உற்றவர்களிடம் உள்ளம் இரங்கி யருளுவது கண்ணோட்டம்; இந்த நீர்மைகளுக்கும் அன்புக்கும் உள்ள உறவுரிமையைக் கூர்மையாக ஓர்ந்து கொள்ள வேண்டும்.

உள்ளம் உருகிய பொழுது உயிர் உயர்ந்து ஒளி பெறுகின்றது. இரங்கி யருளும் அளவு சீவ ஒளி மிகுந்து மனிதன் தேவனாய் மிளிர்கின்றான்.

Benevolence is absolute and real. So much benevolence as a man hath, so much life hath he. (Emerson)

"சீவதயை உயிரின் உண்மையான உறுதிநிலை. அதனை மருவியுள்ள அளவு மனிதன் உயிர்உள்ளவனாய் 'ஒளிபெறுகிறான்"

என்னும் இது இங்கே உணரவுரியது. அருள் உள்ள அளவே ஆருயிர் உள்ளது; அவ் வுண்மைப் பொருளை ஓர்ந்து கொள்ளுக.

இரக்கம் எவ்வழியும் நன்மை புரிகிறது; ஆகவே அதனை யுடையவர் யாண்டும் திவ்விய நிலைமையை எய்தி நிலவுகிறார்.

பண்பு படிந்து அன்பு கனிந்து யாவர்மாட்டும் நண்புபுரிந்து எவ்வுயிர்க்கும் இதமாய் ஒழுகிவருவதே இனிய நாகரிகமாம்; அந்தப் புனித வாழ்வைப் போற்றி ஒழுகுக.

---

525. நீர்மை சுரந்து நிலைதெரிந்து நேர்ந்தவரைக்
கூர்மையாய் ஓர்ந்து குறிப்பறிந்து—சீர்மையுடன்
பேணி ஒழுகும் பெருந்தகையே நாகரிகம்
காணியாக் கொண்டான் கனிந்து. (5)

இ—ள்

நல்ல பண்புகள் நிறைந்து எல்லாருடைய நிலைகளையும் எதிர் அறிந்து யாண்டும் இனிய நீர்மையராய் உதவி எவ்வழியும் உரிமை கெழுமி ஒழுகுவோரே விழுமிய நாகரிகர் என்பதாம்.

உண்மையான நாகரிகம் இன்னது என உன்னி உணர்ந்து கொள்வது மிகவும் நன்மையாம். நல்லதை இகழ்ந்து தள்ளி விட்டு அல்லதை உவந்து கொள்வது பொல்லாத போக்காம். அப் போக்கு புனிதமான வாழ்க்கையைப் புலைபடுத்தி விடும் ஆதலால் அதில் தலைப்படலாகாது.

மனிதனுக்கு மனிதன் மரியாதை புரிந்து இனிய நீர்மை யோடு புனிதமாய் வாழ்வதே உயர்ந்த நாகரிகம்; இந்த நிலைக்கு மாறுபட்டன வெல்லாம் இழிந்த அநாகரீகங்களே யாம்.

குண நலங்கள் நிறைந்து பிறருடைய நிலைமைகளை நுணுகி யுணர்ந்து எவ்வகையும் செவ்வையாய் நயமும் வினயமும் மருவி ஒழுகின் அந்த மனித வாழ்வு புனிதம் மிகவுடையது: திருந்திய பண்பாடுகள் அமைந்த அளவு அது பெருந்தன்மையாய் உயர்ந்து விளங்குகிறது.

பேணி ஒழுகும் பெருந்தகையே நாகரிகம்
காணியாக் கொண்டான்.

என்றது நாகரிக வாழ்வின் நீர்மையை ஓர்ந்து கொள்ள வந்தது. தாழ்ந்தாரை உயர்த்திச் சூழ்ந்தாரை ஆதரித்து யாண்டும் உயர்ந்த எண்ணங்களோடு வாழ்ந்து வருகின்றவனே உண்மையான சிறந்த நாகரிகன் ஆகின்றான். ஒத்த மனிதர்கள் உள்ளம் உவந்து கொள்ள எத்திறத்தும் இனிய நீரனாய்ச் சித்த சுத்தியுடன் ஒழுகி வருவது உத்தம நாகரிகமாம்; அத்தகைய சன சமுதாயம் உள்ள நாடு உயர்நலமுடையதாய் ஒளிபெற்று விளங்கும். இனிய தன்மைகள் வளர அரிய நன்மைகள் வருகின்றன.

இற்றைக்கு ஆயிரத்து எண்ணூறு ஆண்டுகளுக்கு முன்னர் செங்கண்மா என்னும் ஊரில் ஒரு குறுநில மன்னன் இருந்தான். அவனுடைய உறவினர் உயர்ந்த நாகரிகமுடையராய்த் திருந்தியிருந்தனர் என்று பெருங்கௌசிகனார் என்னும் சங்கப் புலவர் உவந்து பாடியுள்ளார்.

"நல்லோர் குழீஇய நாநவில் அவையத்து
வல்லார் ஆயினும் புறமறைத்துச் சென்றோரைச்
சொல்லிக் காட்டிச் சோர்வின்றி விளக்கி
நல்லிதின் இயக்கும் அவன் சுற்றத்து ஒழுக்கம்."

(மலைபடுகடாம்)

அந்தச் சிற்றரசனிடமிருந்த கல்விமான்களின் பெருந்தகைமையை இது காட்டியுள்ளது. பரிசில்கருதிவந்த புலவர்கள் தாம் கற்றவற்றைத் தெளிவாகச் சொல்ல மாட்டாமல் தியங்கி நின்றாலும் அவற்றைத் திருத்தமாகச் சுட்டிக் காட்டிச் சிறந்த உதவி புரிந்து உவந்து பேணுவர் என்னும் இது அவரது உள்ளப் பண்பையும் உயரிய நாகரிகத்தையும் உணர்த்தி நிற்கிறது.

"ஆறு உட்பகை செற்று அருங்கலை ஓர்ந்து
பாரில் கீர்த்தி படைத்தோர் வைகுநல்
நல்லவை; அடக்கம் வாய்மை நடுநிலை
சொல்லு நன்மை யுடையோர் தொகைஇ
வல்லார் மொழியினும் வல்லுநர் ஆக்கிக்
கேட்போர் உறையவை நிறை அவையாகும்."

(இலக்கண விளக்கம்)

இதில் குறித்துள்ள மக்களுடைய பண்பாடுகளைக் கண்டு மகிழ்கின்றோம். பெரியநீர்மைகள் பேரின்பங்களை அருளுகின்றன.

பொறாமையும் வஞ்சமும் குரோதமும் நிறைந்த கூட்டங்களையே பார்த்துப் பார்த்துப் பரிந்து வருந்திய கண்களுக்கு இது பெரிய களிப்பை ஊட்டி யருளுகின்றது.

அன்பும் தயையும் மனித சமுதாயத்தை இன்ப நிலையமாக் குகிறது. கண்ணோடி அருளுகின்ற நாகரிக வாழ்வு பண்டு இந் நாட்டில் தலை சிறந்திருந்தது. இன்று பரிதாப நிலையில் புலை மண்டியுள்ளது.

மேனி மினுக்காய்ச் செய்து வருகிற வெளிப்பகட்டுகளையே நாகரிகங்கள் என்று கருதிக் குருட்டுத் தனமாய்க் களித்துச் செருக்கி மருண்டு மயங்கி மக்கள் திரிந்து வருகின்றனர்.

உருட்டும் புரட்டும் உளமலிந் தோங்கச்
சுருட்டுவாய் நின்று துலங்க—மருட்டு
தொழிலும் மொழியும் தொடர்ந்து வளரப்
பழியுந்தி நிற்பர் பரிந்து.

என்றபடியே திரிந்து வருதலால் நாட்டு மக்கள் வாழ்வு கேட்டு நிலையை நோக்கிப் பரிதாபமாய்ப் பாழ்பட்டுள்ளது.

அயல் நாட்டு மினுக்கில் செயல் காட்ட நேர்ந்தமையால் யாவும் போலிகளாய் நீண்டு யாண்டும் மயல் நீட்டி நின்றன.

" **Modern civilization has tended to make our lives artificial.** "

"நவீன நாகரிகம் நமது வாழ்க்கைகளை வெளிப் பகட்டாச் செய்திருக்கின்றன" என்று மேல் நாட்டாரைக் குறித்து ஸ்மித் என்னும் ஆங்கில ஆசிரியர் இங்ஙனம் கூறியிருக்கிறார்.

தேக சுத்தம், வெள்ளை உடை, மயிர் ஒழுங்கு முதலியன அவசியம் தேவையாயினும் அவ்வளவோடு பிலுக்காய் நின்று விடுவது நாகரிகம் ஆகாது; உள்ளப் பண்புடன் யாண்டும் இதம் புரிந்து வருவதே உயர்ந்த நாகரிகமாம்.

கண்ணோட்டம் புரிந்துவரும் அளவு அந்த மனித வாழ்க்கை கண்ணியம்கனிந்துபுண்ணியமுடையதாய்ப் பொலிந்துவருகிறது.

கண்ணோட்டம் என்னும் கழிபெருங் காரிகை
உண்மையான் உண்டிவ் வுலகு. (குறள், 571)

உலகிற்குக் கண்ணோட்டம் உயிராதாரமா யுள்ளமையை

இதனால் உணர்ந்து கொள்ளுகிறோம். காரிகை—அழகு. கண்ணோட்டம் மனிதனுக்குப் பேரழகு என்றதனால் அதன்பெருமையும் அருமையும் அறியலாகும்.

தன்னை யுடையவனை யாவரும் விழைந்து நோக்கி உவந்து புகழும்படிசெய்யும் ஆதலால் கண்ணோட்டம் கழிபெருங்காரிகை என விழிதெரிய விளக்கினர். இந்த உயிரழகை யுற்றவன் உயர் நாகரிகனாய் ஒளிபெற்று நிற்கிறான்.

---

526. நல்ல கருணை நயந்துநின்ற நாகரிகம்
அல்லல் நிலைகட் கமைவாகச்—சொல்லவந்த
இன்னா நிலைமையே ஏற்ற கலிஎன்னும்
இந்நாளுக் காகும் இசைந்து. (6)

இ—ள்

கருணை கனிந்து நல்ல நிலையில் உயர்ந்திருந்த நாகரிக வாழ்வு இன்று அல்லல் நிலையில் இழிந்துள்ளது; இருந்தும் அதனைப் புகழ்ந்து சொல்வது பொல்லாத கலியின் இயல்பாம் என்க.

உண்மை தெரியாமல் உழல்வது பொல்லாத புன்மையாய்ப் புலையுறுகின்றது. சிறுமையைப் பெருமை ஆகவும், இழிவை உயர்வாகவும் களிமிகுத்துத் திரிவது பழிவாழ்வாய் அழிவையே தருதலால் அது கொடிய அவலமாய் முடிகிறது.

நகர வாழ்வு நாகரிகம் என வந்தது எனப் பலர் பகர நேர்ந்தனர். நாகர் என்பது தேவர் ஆதலால் அவர் இயல்பு தோய்ந்தது நாகரிகம் என நேர்ந்தது என்று அதற்கு எதிர்மொழி எழுந்தது. நாகர்—தேவர். இகம்—இவ்வுலகம். விண்ணுலக வாசிகளைப் போல் புண்ணிய நீர்மை தோய்ந்து கண்ணியமுடன் இம் மண்ணுலகில் நடத்தி வரும் வாழ்வையே நாகரிகம் என்னும் பதம் நன்கு உணர்த்தியுள்ளது என அறிஞர் முடிவு செய்துள்ளனர்.

எவ்வழியும் திவ்வியமான செவ்விய நீர்மையையே இது குறித்து வருதலால் இதன் சிறப்பும்சீர்மையும் செழித்து வந்தன.

நல்ல கருணை நயந்து நின்ற நாகரிகம்.

என்றது நாகரிகத்தின் உருவையும் உயிர் நிலையையும் கருதி புணர வந்தது. திருந்திய கருணையும் பெருந்தகவும் பொருந்தியுள்ளவரே சிறந்த நாகரிகர் ஆய் உயர்ந்து விளங்குகிறார்.

முதல் நாள் போரில் எதிர்ந்து பொருது தோல்வியடைந்து மறுகி நின்ற இராவணனைக் கண்ணோடி இரங்கி இராமன் அருள் புரிந்து விடுத்த பெருந்தகைமையை உலகம் வியந்து புகழ்ந்து வருகிறது. அந்தப் புண்ணிய வீரன் அன்று கண்ணோடியருளியது கண்ணியமான நாகரிகம் என்று இன்றும் யாவரும் உவந்து போற்றுகின்றனர்.

"ஆளையா உனக்கு அமைந்தன மாருதம் அறைந்த
பூளையாயின; கண்டனை! இன்று போய்ப் போர்க்கு
நாளைவா என நல்கினன் நாகிளங் கமுகின்
வாளை தாவுறு கோசலை நாடுடை வள்ளல்."

(இராமா, முதற்போர், 256)

"சூறைக் காற்றில் எதிர்ப்பட்ட பூளைப் பூழிகள் போல் உன் படைகள் முழுவதும் நாசமாயின; பாணங்களால் அடிபட்டு நீயும் நொந்து நின்றாய்; இன்று உன்னால் யாதும் இயலாது; ஊருக்குப் போய் உன் உடலைத் தேற்றிக் கொண்டு முடியுமானால் போருக்கு நாளைக்கு வா" என்று இலங்கை வேந்தனை நோக்கி இராமன் இங்ஙனம் கூறியுள்ளான். தன் மனைவியைக் கவர்ந்து கொண்டு தனக்குப் பெரிய துன்பங்களை விளைத்துள்ள கொடிய பகைவனை உரிய சமையம் வாய்த்தும் கொன்று வீழ்த்தாமல் இன்று போய் நாளை வா என்றது எவ்வளவு பெருந்தன்மை! எத்துணை நாகரிகம்! இதனை உய்த்துணர வேண்டும்.

தன்னைச் சிலுவையில் அடித்து உயிர் வதை செய்த கொடியவர்களிடத்தும் ஏசுநாதர் இரங்கியருளி இதம் புரிந்துள்ளார்.

"Father, forgive them; for they know not what they do."
(Bible)

"பிதாவே! இவர்களை மன்னித்தருளும்; தாங்கள் செய்வது இன்னது என்று இவர்கள் அறியவில்லை" என ஆண்டவனை நோக்கி அம் மகான் இவ்வாறு வேண்டியிருக்கிறார். தன்னைக் கொல்லுகின்ற கொலையாளிகளிடத்தும் உள்ளம் இரங்கி உதவியிருப்பது அவரது உன்னத நிலைமையை உணர்த்தி நிற்கிறது.

இன்னவாறு உயர்ந்த பண்பு படிந்து சிறந்த அன்பு நிலையில் இருந்த மேன்மையாய் மேவியிருந்த நாகரிகம் இன்னளில் கீழ்மையான வழிகளில் வீணே பேசப் படுகின்றது.

கலி என்னும் இந் நாளுக்கு ஆகும்.

என்றது முன்னளில் உயர்ந்த மேன்மக்களின் இயல்பாய்ப் பான்மை சுரந்திருந்த நாகரிகத்தை இழிந்த நிலைகளில் இந் நாள் வழங்கி வருவது கலிகாலக் கொடுமையாய் முடிந்தது என இங்ஙனம் கடிந்து கூற வந்தது.

உணவு உடை முதலிய பலவகைகளிலும் இஞ் ஞான்று அஞ்ஞானமாய் நாகரிகங்கள் பரவி நிற்கின்றன. நாகரிகம் எது? நல்ல நாகரிகர் யார்? இந்தக் கேள்விகளுக்கு யாரும் விடை கூருமலே எல்லாரும் பதில் சொல்ல நேர்வர்.

பாத்திரத்தைக் கடித்துக் குடிப்பது நாகரிகம்.

அண்ணுந்து எடுத்துக் குடிப்பது அநாகரிகம்.

தன் கையால் தன் முகத்தைச் சிரைத்துக் கொள்வது நாகரிகம்.

சிரஞ்சீவியிடம் போய்ச் சிரைத்து வருவது அநாகரிகம்.

உயர்ந்த புகைச் சுருட்டுப் பிடிப்பது நாகரிகம்.

அங்ஙனப் பிடியாதிருப்பது அநாகரிகம்.

தலை மயிரைத் தறித்து வகுப்பு எடுத்து நிற்பது நாகரிகம்.

முடியை நெடிது வளர்த்து வருவது அநாகரிகம்.

இன்னவாறு நாகரிகங்கள் பல நம் நாட்டில் வந்து குடியேறியுள்ளன. அவற்றைத் தனித்தனியே ஈண்டு எடுத்துக் காட்டுவது மிகை ஆதலோடு நகையுமாம். வந்தேறியான அந்த வகைகளை இந்த அளவில் விட்டு விடுவது எந்த வகைக்கும் நலமாம்.

கண்டவர் எல்லாம் கடித்துவாய் வைத்தெச்சில்
கொண்ட கலங்களையே கூசாமல்—தொண்டை
அளவும் துழாவி அருந்துவார்; இந்நாள்
அளவும் தெரிய அமர்ந்து.

நம்முடைய நாட்டின் முன்னேற்றத்தை இது காட்டியுளது.

கன்னத்தில் முத்தமிட்டுக் கட்டித் தழுவுகின்ற
வன்னப் படக்காட்சி வந்தவுடன்—அன்னதனைப்
பார்த்துக் களித்தல் பரவசமாய் வந்ததுபோல்
வார்த்துக் கழித்தலே வாழ்வு.

நம் மக்களின் தினசரி வாழ்க்கையை இது மனமறிய விளக்கியது. மருளும் மயக்கமும் வாழ்வை இருள் செய் துள்ளன.

தங்கையால் தம்முகத்தைத் தாம்சிரைக்கத் தந்தலையைப்
பங்கையாய் வெட்டிப் பதம்படுக்க—மங்கைமார்
சொன்னத்தைக் கேட்டுத் தொழும்புசெய்யக் கற்றதல்லால்
என்னத்தைக் கற்றாரும் இவண்.

நாம் புதுமையாய்ப் படித்திருக்கும் படிப்பை இது வடித்துக் காட்டியுள்ளது. சிரைத்துக் கொள்வதைக் குறைத்துச் சொல்வதாகக் கோபம் கொள்ளலாகாது. நன்றாகச் சிரையுங்கள். கால வேற்றுமையால் நேர்ந்த மாறுதல் அது; அவசியம் செய்ய வேண்டியதே; ஆயினும் மயிரை மாத்திரம் அங்ஙனம் திருத்துவதோடு நின்று விடாமல் உயிரையும் உளத்தையும் கொஞ்சம் திருத்திக் கொள்ள வேண்டும். உள்ளம் திருந்திய போது தான் உயர்ந்த நாகரிகம் விளைந்து வரும்; வெளிப் பகட்டிலும் மேனி மினுக்கிலும் வியனான பயனை அடைந்து கொள்ள முடியாது. மயிரைத் தடவி மடியாமல் உயிரைத் தடவி உயர்ந்து கொள்ளுக.

முகத்தில்எழு மயிரைநிதம் முளைக்காமல்
துடைக்கின்றார்; மூண்டு தீதாய்
அகத்தில்எழு செயிர் களையார்; ஆசைகளை
மிகவளர்ப்பார் அவமாய் நின்று
சகத்தில் இவர் செய்து வரும் சதுராட்டம்
தனைக்கண்டு சான்றோர் எல்லாம்
நகைத்து வருதலைக் காணார் நவையிலே
சுவைகண்டு நடக்கின்றாரே. (1)

வாசமுறு தைலங்கள் வளம் படுத்தி
வகுப்பெடுத்து வகை சுருட்டி
நேசமுடன் மயிர்ஒழுங்கு நேர்செய்ய

நெடும்பொழுது நிதம் கழிப்பார்;
பாசமுடன் மயிர் திருத்தப் படித்தன்றி
உயிர் திருத்தப் படியார் அந்தோ!
ஈசனெதிர் பின்பிவர்போய் இன்னுயிருக்கு
என்னபயன் இசைப்பார் அம்மா! (2)

இந்தப் பாசுரங்கள் ஈண்டு சிந்திக்கத் தக்கன.

வந்துள்ள பிறவிப்பயனை முந்த உணர்ந்து முடிவு நேருமுன் கடிது கதி காணுக. அந்த இனிய காட்சி அரிய மாட்சியாம்.

---

527. படித்தபடிப் பெல்லாம் படியாமை புன்மை
பிடித்தபிடி எங்கும் பெருகத்—தடித்த
வனவிலங்கு போல மனமழுங்கி நின்றால்
கனவிலிங் குண்டோ கதி. (7)

இ—ள்

கற்ற கலைகளை எல்லாம் பொல்லாத நிலைகளில் செலுத்திக் காட்டு மிருகங்கள் போல் மனம் போனபடி திரிந்து மதிகெட்டு நின்றால் கனவிலும் கதி காண முடியாது என்பதாம்.

பல நூல்களையும் படித்து வருவது படிப்பு என வந்தது. கல்விக்கும் இதற்கும் சிறிது வேறுபாடு உண்டு. உள்ளத்தில் புதைந்திருக்கும் அறிவை ஊன்றித் தோண்டிக் கொள்வது கல்வி. வெளியே விரிந்து பரந்துள்ள நூல்களை ஓர்ந்து படித்துத் தேர்ந்து கொள்வது படிப்பு. மனமும் இனமும் போல் இவை அகமும் புறமும் உறவாய் மருவியுள்ளன.

இந் நாட்டுப் படிப்பு மறுமை நோக்கம் மருவியது; உறுதி நலங்களைக் கருதியது. தெய்வ சிந்தனை செய்து உய்தி பெறுவது.

நித்திய அநித்தியங்களை உணர்ந்து சத்தியம் தெளிந்து உத்தம நிலையை அடையவில்லையாயின் அந்தக் கல்வி அறிவு கடையாய் இழிந்து படுகிறது.

சென்றது காலம்; சிதைந்தது இளமை நலம்;
நின்றது சாவென்று நினைந்துருகி—மன்றில்
நடிக்கின்ற பால்வண்ணர் நாமம்எண்ணு மாந்தர்
படிக்கின்ற நூல்எல்லாம் பாழ். (வரதுங்க பாண்டியன்)

காலம் இருக்கும் பொழுதே உயிர்க்கு ஊதியம் கருதிக் கொள்ள வேண்டும்; அங்ஙனம் கொள்ளாஞயின் அந்த மனித னுடைய படிப்பும் வாழ்வும் பாழ் என இங்ஙனம் பரிந்து கூறி யுள்ளார். துக்கம் ஒழிய, சுகம் விளையப் படிப்பதே படிப்பாம்.

கற்றும் பலபல கேள்விகள் கேட்டும் குறங்கு எனவே
சுற்றும் தொழிலுற்றுச் சிற்றின்பத்தாடு சுழலின்என்னும்?

கற்றும் என்பலன்? கற்றிடு நூன்முறை
சொற்ற சொற்கள் சுகாரம்ப மோ? நெறி
நிற்றல் வேண்டும் நிருவிகற்பச் சுகம்
பெற்ற பேர்பெற்ற பேசாப் பெருமையே. (தாயுமானவர்)

படிப்படக்கிக் கேள்வியெலாம் பற்றறவிட் டடக்கிப்
பார்த்திடலும் அடக்கியுறும் பரிசெலாம் அடக்கித்
தடிப்புறும் ஊண்சுவை அடக்கிக் கந்தமெலாம் அடக்கிச்
சாதிமதம் சமயமெனும் சழக்கையும் விட்டடக்கி
மடிப்படக்கி நின்றாலும் நில்லேன் நான் எனவே
வன்குரங்கும் வியப்ப என்றன் மனக்குரங்கு குதித்த
துடிப்படக்கி ஆட்கொண்ட துரையே! என்னுளத்தே
சுத்தநடம் புரிகின்ற சித்த சிகா மணியே. (அருட்பா)

படித்த,மேலோர்களுடைய மன நிலைகளையும் குறிக் கோள் களையும் இவை உணர்த்தி யுள்ளன. இன்னவாறு உன்னத நிலை யில் உயர்ந்த நோக்கோடு ஓங்கி யிருந்த இந்நாட்டுப் படிப்பு இன்னளில் கேட்டுப் படிப்பாய்க் கெடுநிலையில் இழிந்துள்ளது.

படித்த படிப்பு எல்லாம் படியாமை. என்றது இக்காலப் படிப்பின் கோலம் தெரிய வந்தது.

எவ்வளவு படித்தாலும் உண்மை யுணர்ச்சியின்றி எங்கும் பலர் பொங்கித் திரிகின்றனர். அவருடைய உள்ளப்போக்கும் உரைகளும் செயல்களும் யாண்டும் எள்ளத் தக்கனவாய் இழி ந்து நிற்கின்றன.

இளமை தொடங்கி இருபதாண் டெல்லை
வளமையொடு கற்று வரினும்—உளமையல்
தீரார்தம் தாய்மொழியும் தேரார்முன் கற்றதும்பின்
ஓரார் ஒழிவர் உலைந்து.

கற்றவர்கள் என இக்காலம் களித்துத் திரிபவர்களுடைய நிலைகளை இது சிறிது குறித்துக் காட்டியிருக்கிறது. அயல் மொழியில் மயலாய் இருபது வருடங்கள் படித்தாலும் எதும் தெளிவாகத் தெரியாமல் இறுமாந்து திரிவது பெரிதும் பரிதாபமாயுள்ளது.

"Getting by heart the thougts of others in a forein language and stuffing your brain with them and taking some university degrees, you consider yourself educated. Is this education?"
(Vivekananda)

"அன்னிய பாஷையிலுள்ள பிறருடைய எண்ணங்களை மூளையில் வருந்தித் திணித்து மனப்பாடம் செய்து காட்டிச் சர்வகலாசாலையில் சில பட்டங்களைப் பெற்றுக் கொண்டவுடன் பெரிய கல்விமான்கள் என உங்களை நீங்களே நினைத்துக் கொள்ளுகிறீர்கள்; இது கல்வியா?" என ஆங்கிலப் பட்டதாரிகளை நோக்கி விவேகானந்தர் இவ்வாறு வினவி இருக்கிறார்.

உணர்ச்சியில்லாத படிப்பு; நம்நாட்டுக்குக்கேட்டை விளைப்பது என அம்மகான் இப்படி வருந்தியிருத்தலால் படிப்பாளிகளின் நிலைமைகளைத் தெரிந்து கொள்ளுகிறோம். தமது உரிமையான அருமைத் தாய்மொழியை அறவே மறந்து ஆங்கில மோகத்தால் நம்மவர் செய்து வருகிற சிறுமைச் செயல்களை எண்ணுந்தோறும் உள்ளம் எரிகிறது; கண்ணீர் வருகிறது.

தாயைச் சிறிதும் மதியா திகழ்ந்து தழுவிநின்ற
மாயைச் சிறுமி மயக்கில் இழிந்த மருளரென
நோயைத் தவிர்த்தருள் தண்தமிழ்த் தாயை நுவலலின்றி
வாயைத் திறந்திடில் ஆங்கிலச் சொல்லே வழங்குவரே

நம் நாட்டு மக்களுடைய நிலைமைகளை இப்பாட்டு காட்டியுள்ளது. இழிவாய் மொழியாடி வருகிற இந்த இழிந்த பழக்கம் இப்பொழுது குறைந்து வருகிறது. வரினும், முழுதும் ஒழியாமல் உள்ளது. அயல் மொழிகளை நன்கு பயின்று அவற்றின் கருத்துக்களைத் தெளிந்து திருத்தம் அடையாமல் வெறும் வாய் உருட்டிலேயே வயிற்றை வளர்க்க மூண்டு களித்துத் திரிகின்றனர்; திரிபுணர்ச்சி ஒருவி மரபுணர்ச்சி மருவிவரவேண்டும்.

ஆங்கிலேயரிடம் நாம் அறிந்து கொள்ள வேண்டிய அறிவு

நலங்கள் பல உள்ளன. காலங்கருதல், வலியறிதல், வினையாண்மை, ஊக்கம், உறுதி, நேர்மை, சீர்மை, கூர்மை முதலியநல்ல நீர்மைகளை அவர்களிடமிருந்து உணர்ந்து கொள்ளாமல் பொல்லாத பகட்டுகளையே பழகிக் கழித்து இழவு கூட்டி வருகிறோம்.

வெள்ளையர்பால் அமைந்துள்ள வினையாண்மை
முதலாய மேன்மை வாய்ந்த
ஒள்ளியநற் குணங்கள்ஒன்றும் ஊதியமா
உளங்கொள்ளார்; ஊக்கி அன்னார்
கொள்ளுகின்ற உடைநடையும் தலைதறிப்பும்
புகைக்குடியும் குடியும் அந்தோ
அள்ளிநின்று துள்ளுகின்றார் அவநிலையில்
நம்மவர்தம் ஆர்வம் என்னே! (இந்தியத்தாய் நிலை)

அவநிலை என்றது அழிவும் இழிவும் தருதல் கருதி. குடி இரண்டனுள் புகைக் குடியை முதலில் குறிதத்து அவற்றின் வகையும் தொகையும் தெரிய. மூத்தகுடி முன்னுற வந்தது.

கள்ளுக் குடியைக் காட்டிலும் புகைக்குடி நம் நாட்டைப் பலவகையிலும் பாழாக்கி யுள்ளது. அந்தக் குடியை ஒழித்ததில் அரசாங்கத்திற்குப் பதினெட்டுக் கோடி நட்டம்; சுதந்திர ஆட்சியில் நிரந்தரமான நலனை அரச மன்றம் துணிந்து செய்திருப்பது புகழ்ந்து போற்ற வுரியது. புகைக் குடிக்கும் இப்பொழுது தடை விதித்திருக்கிறது. விதித்துள்ள தடை விசித்திர முடையது; "சிறுவர் புகை குடிப்பது குற்றம்" எனக் குறித்துள்ளது. பெரியவர் குடிக்கலாம் என இது அடி கோலிய படியாயது. வயது முதிர்ந்தவரைத் தடுப்பதில் அச்சம் தோன்றி யுள்ளது என்று தெரிகின்றது. சட்டம் விதிக்கின்ற ஆட்சிக் குழுவினரிடமே இந்தப் புகைக்குடி புகுந்திருத்தலால் அதனை அடியோடு ஒழிக்கமுடியாமல் சிறிது விலக்களித்துப் பெரிய மனிதர் குடிக்கும் அரிய குடியைப் பேணி யிருகின்றனர் எனச் சிலர் பேசி வருகின்றனர். தான் திருந்தாமல் உலகத்தைத் திருத்த முயல்வதுபயனில் செயலாம். கோன் திருந்தின் குடிகள் திருந்தும்

மிகவும் குளிர்ந்த தேசமாகிய மேல் நாட்டில் புகை குடிப்பது குற்றமாகாது. இந் நாட்டிற்கு எவ்வகையிலும் வேண்டாதது. செவ்வாயைக் கருவாய் ஆக்கி, ஈரலைக் கெடுத்து, உதிரத்தைப் பழுதாக்கி, உடல் வலியைச் சிதைத்து, ஊறு செய்து வரு

கிற பேரிழவை நாளும் வாயில் வைத்து வந்தால் அந்த மனித வாழ்வு எவ்வளவு பாழானது! எண்ணி உணர வேண்டும்.

ஒரு காசுக்கு இரண்டு பீடி விற்கிறவர் பலகோடி திரவியங்களுக்கு அதிபதிகளாயுள்ளனர்; ஆகவே எத்தனை கோடி புகைக்குடியர் இந்நாட்டில் பெருகி யிருக்கின்றனர் என்பதை ஒருவாறு உணர்ந்து கொள்ளலாம்.

பொருளாதாரத் துறையில் நன்கு பயின்ற அறிஞர் ஒருவர் ஒரு நாள் இங்கு வந்தார். உலக நிலைகளைக் குறித்து பல பேச்சுகள் நிகழ்ந்தன. முடிவில் புகைக் குடியைப் பற்றிப் பேச நேர்ந்தது. கேள்வியும் பதிலும் கிளர்ந்து வந்தன.

நான்: நூற்றுக்கு எத்தனை பேர் புகை குடிப்பார்கள்?

அவர்: நூற்றுக்கு எழுபது பேர் குடிப்பார்கள்.

நான்: அவ்வளவுஇராது; கொஞ்சம் குறைத்துச் சொல்லுங்கள்.

அவர்: ஐம்பது பேருக்குக் குறையாது.

நான்: ஒரு ஆள் எவ்வளவு குடிப்பான்?

அவர்: ஒரு நாளைக்கு எழு ரூபாய்களுக்குக் குடிக்கும் பெரிய மனிதரும் உளர்; அதற்குக் குறைந்து குடிப்பவரும் இருக்கின்றனர்.

நான்: பெருங் குடியரையும் சிறு குடியரையும் ஒருங்கு சேர்த்துச் சரா சரி கணக்கு எடுத்தால் ஓர் ஆளுக்கு எவ்வளவு ஆம்?

அவர்: குறைந்தது நாலு அணு ஆகும்.

நான்: இன்னும் சிறிது குறைத்துக் கூறுங்கள்.

அவர்: இரண்டு அணு வைக்கலாம்.

நான்: ஒரு அணு வைத்துக் கொள்ளுங்கள். இந்த மதுரையில் சனத் தொகை எவ்வளவு?

அவர்: எழு லட்சம் பேர் உள்ளனர்.

நான்: மூன்றுலட்சம் பேராவது கட்டாயம் குடிப்பர் அல்லவா?

அவர்: ஆம்.

நான்: மூன்று லட்சம் அணுக்களை ரூபாய் ஆக்குங்கள்.

அவர்: பதினெண்ணுயிரத்து எழுநூற்று ஐம்பது.

நான்: நாள் ஒன்றுக்கு இவ்வளவு ஆனல் ஒருமாதத்திற்கு என்னும்?
அவர்: ஐந்து லட்சத்து அறுபத்திராயிரத்து ஐந்நூறு.
நான்: ஒரு மாதத்திற்கு 562500 ஆனல் வருடத்துக்கு என்னும்?

இதற்கு அவர் பதில் சொல்லவில்லை; திகைத்து நின்றார்.

இந்த ஒரு ஊரிலேயே புகைக்குடியில் இவ்வளவு பாழாகின்றது; எல்லா ஊர்களிலும் சேர்த்துக் கணக்கு எடுத்தால் எவ்வளவு ஆம்? என வினவவே அவர் வியப்படைந்தார். "கள்ளுக் குடியிலும் இக் குடி கொடியது; பெருங் கேடுடையது" என்று சொல்லிப் போனர்.

இந்தக் கேட்டிலிருந்து நீங்கி நம் நாட்டு மக்கள் நலம்பெற ஆண்டவன்தான் அருள் புரிய வேண்டும். பரிதாப நிலைகள் பெரிதாய் உள்ளமையால் பாவ மருள்கள் யாண்டும் நீண்டு நிற்கின்றன.

ஒருகாசுக்கு இருபீடி விற்பவரும் பலகோடிக்கு அதிபர் ஆகிப்
பெருகாசர் எனஎவரும் பேணிவரப் பெருகிவரும்பெருமைகாணின்
வருகாசும் புகைக்குடியும் இந்நாட்டில் எவ்வளவு வளமாய் நீண்டு
திருகாசர் திரிகின்றார் என்பதைநேர் தெரியிலே தீமை யாமே.
பீடிநீ குடித்தாயேல் பீடையுனை விடாதுகாண்! பிழை மலிந்து
நீடிவரு சுருட்டுளனிலே நீசுருண்டு வீழ்ந்தழிவாய்! நெடியமூச்சுள்
ஓடிவரு பொடியாயின் ஒருபொடிய ஆயிழிவாய்! உறுதி ஓர்ந்து
நாடியுனை எவ்வழியும் நலமாகப் பேணிவரின் நன்மை யாமே.

தன்னைச் சீரழித்துச் சிறுமைப் படுத்தும் ஈனங்களை இகழ்ந்து ஒழித்த போதுதான் மனிதன் மானமும் ஞானமும் உடையனய் மகிமை யடைவான். புலை ஒழிக; நிலை தெளிக.

---

528. பெரியரெனத் தம்மைப் பிறர்மதிக்க எண்ணி
அரிய அவாவில் அலைவர்—உரிய
இயலும் செயலும் இழிவாகி யுள்ளே
மயலாய் உழல்வர் மருண்டு. (8)

இ—ள்

தம்மைப் பெரியவராக் கருதிப் பிறர் எல்லாரும் மதித்துப் புகழ வேண்டும் என்று பலர் வெளியே பேராவலோடு அலைகின்

றனர்; உள்ளே இயலும் செயலும் இழிந்து மயலாய் மருண்டு நிற்கின்றனர் என்க.

மனிதனைப் பிணித்திருக்கும் ஆசைகள் பல. எந் நிலையிலும் தன்னை உயர்ந்தவனாக உலகம் மதித்துப் புகழ வேண்டும் என்று ஒவ்வொரு மனிதனும் எவ்வழியும் தவித்து அலைகின்றான். அந்த ஆவலில் அவன் படாதபாடுகள் படுகிறான். தன் பெயரை அச்சு எழுத்தில் பார்ப்பதில் அவன் எவ்வளவு இச்சை யுடையனாய் நச்சி நிற்கிறான்! தன்னைப்பற்றி எவரேனும் புகழ்ந்து பேச நேர்ந்தால் அதனை நெடு நேரம் விழைந்து நயந்து நுழைந்து கேட்கிறான். மேலும் மேலும் பேசும்படி பலவகையிலும் நயமாகத் தூண்டி முயன்று வேண்டி விரிகிறான்.

"Talk to a man about himself and he will listen for hours."
(Disraeli)

"ஒரு மனிதனைக் குறித்துச் சிறப்பாகப் பேசு; நெடுநேரம் அதனைஅவன் விருப்பமாய்க் கேட்பான்" என டிசரேலி என்னும் ஆங்கில இராச தந்திரி இவ்வாறு கூறி யிருக்கிறார்.

தான் என்பதில் மனிதனுக்கு ஒரு பெரிய ஆனந்தம் பெருகி யிருக்கிறது. தன் உள்ளத்தில் நல்ல தகுதி இல்லாத பொழுது தன்னை வெளியே புகழ்ந்து சொல்லுவன எல்லாம் பழிமொழி களே என்பதை அவன் தெளிவாக உணர்ந்து கொள்ளுவதில்லை. ஆசைமயக்கில் அறிவுநிலை குலைந்து பெரியவெறியனாகி விடுகிறான்

அரிய அவாவில் அலைவர்.

என்றது இழிவான நிலைகளில் இருந்து கொண்டே உயர்வான பெருமைகளை அவாவி அலைகிற அவரது சிறுமை தெரிய வந்தது. வஞ்சக் கபடங்களை நெஞ்சக் குகைக்குள் ஒளித்து வைத்து வெளியே நல்லவர்கள் போல் நடித்துத் தம் நிலைமைக்கு மிஞ்சிய மதிப்புகளை உலகில் அடைந்து கொள்ளலாம் என்று விழைந்து திரிவது இழிந்த மடமையாம்.

தன் உள்ளத்தின் தகுதி அளவே உலகத்தில் ஒருவனுக்கு மதிப்பு உண்டாகிறது. பான்மைக்கு மாறான மேன்மையை எவனும் அடைந்து கொள்ள முடியாது. கள்ளம் புரியக் கருது கின்றவன் எவ்வழியும் எள்ள லடைந்தே இழிகின்றான்.

பிறரை ஏமாற்ற எண்ணுகின்றவன் தானே ஏமாந்துபோத லால் தன் அழிவுக்கு அவன் வழி கோலினவ ஞகின்ருன்.

மயலாய் உழல்வர் மருண்டு.

என்றது இயலும் செயலும் இழிந்து நின்றும் உயர்ந்த மேன்மைகளை அடைய விழைவது மதி கேடான மடமையாம் என்பதை விழிகாண விளக்கிக் காட்டியது.

உள்ளத்து லோபம் உரையில் வெறும்பசப்பு
பள்ளத்தே பாயும் பசும்புனல்போல்—கள்ளத்தே
ஓங்கு பொருள்மேல் ஒழியாத பேராசை
ஈங்கு மருளர் இயல்பு.

என்றபடி இழிவழிகளில் ஓங்கி யிருந்தும் உயர் மகிமை களுக்கு ஏங்கி அலேவது மருளான மயலேயாம். அருளான நாகரிகத்தின் பொருள் நிலை தெரிந்து தெருளுற வேண்டும்.

பகட்டான வெளி மினுக்கில் எவனும் பெரிய மனிதனுக முடியாது. உள்ளத்தைப் பண்படுத்தி நல்லநீர்மைகளை வளர்த்து வந்தால் அங்கே எல்லாப்பெருமைகளும் தாமாகவேவந்துசேரும்.

---

529. தெள்ளமுதம் என்னத் தெளிந்த கலைஞானம்
உள்ளம் முழுதும் உவகையாய்—வெள்ளமெனப்
பொங்கி யிருந்தவிப் புண்ணியநா டிஞ்ஞான்று
மங்கி யுளதே மருண்டு. (9)

இ—ள்

தெள்ளிய அமுதம் போல் தெளிந்த கலைஞானம் உள்ளத் தில் நிறைந்து மக்கள் எவ்வழியும் கண்ணிய முடையராய் உயர்ந் திருந்த இத்தப் புண்ணிய நாடு இஞ்ஞான்று எள்ளல் படிந்து இழிந்து மெலிந்து பொலிவிழந் துள்ளது என்க.

கலை ஞானத்திலும் நாகரிகத்திலும் இந் நாடு எந்நாட்டினும் என்றும் தலைசிறந்து நின்றது. இன்று அந்நிலை குலைந்துள்ளது.

கடலில் அலைகள் உயர்ந்து எழுவதும் தாழ்ந்து விழுவதும் போல் உலகிலுள்ள சமுதாயங்கள் ஒரு நிலையில் நில்லாமல் உயர்ந் தும் தாழ்ந்தும் ஓயாது சுழன்று வருகின்றன. காலச் சக்கரத்

தில் சீவகோடிகள் வினை வயத்தராய்ச் சுழன்று வருதல்போல் உருவெடுத்த மனிதத் திரள்களும் உலகில் உழன்று திரிகின்றன.

குமரிக் கோடு முதல் இமய மலை வரை விரிந்து பரந்துள்ள இந் நில மண்டலம் பரதகண்டம் என முன்பு நிலவி நின்றது. இந்தியா என்று இப்பொழுது வழங்கப் படுகின்றது. இந்தப் பெயரை முந்தியிருந்த நம்முன்னோர்கள் கேட்டிருக்க மாட்டார். கால வேகம் எதையும் மாற்றி விடுகிறது; பழையது மறைந்து போகிறது; புதியது நிறைந்து வருகிறது.

இந்த நாடு ஆன்ம சிந்தனையை மேன்மையாக வுடையது. நித்திய அநித்தியங்களைப் பகுத்துணர்ந்து சத்திய நிலையை நன்கு தெளிந்து கொண்டது. துறவிகள் தவசிகள் முனிவர்கள் யோகிகள் இருடிகள் சித்தர்கள் தத்துவ ஞானிகள் என இந் நாட்டில் உதயமாகி யுள்ள மகான்கள் எந் நாட்டிலும் மனித சாதிக்குப் புனித சோதிகளை வீசியுள்ளனர்.

தெள்ளமுதம் என்னத் தெளிந்த கலைஞானம்

என்றது இந்நாட்டின் கல்வி நிலையைக் கருதி யுணரவந்தது. தெளிந்த கல்வி யறிவுக்குப்பயன் கடவுளைமருவி மகிழ்தலே என்று உறுதி செய்துள்ளது.

கற்றவர் விழுங்கும் கற்பகக் கனியைக்
கரையிலாக் கருணைமா கடலை
மற்றவர் அறியா மாணிக்க மலையை
மதிப்பவர் மனமணி விளக்கை. (திருவிசைப்பா)

கற்றவர் வளைத்துத் திரிபுரம் எரித்தோன்
கற்றவர் கருத்தினால் காண்போன் (பாரதம்)

கடவுளை இவ்வாறு வருணித் திருக்கின்றனர்.

வாலறிவனை வணங்கி வருவதே நூலறிவுக்குப் பயன் என வள்ளுவப் பெருந்தகையும் வகுத்தருளியது. தெய்வ சிந்தனை செய்து உய்தி பெறுவதே மனித அறிவின் மாண்பயன் என்று இந்நாட்டுக் கலைகள் யாண்டும் காட்டியுள்ளன. உறுதியான உண்மைக் காட்சி யாவரும் கண்ணூன்றிக் கருதி யுணர வுரியது.

ஒன்றாகக் காண்பதே காட்சி; புலன்ஐந்தும்
வென்றான்தன் வீரமே வீரமாம்;—என்றானும்

சாவாமல் கற்பதே கல்வி; தனைப் பிறர்
ஏவாமல் உண்பதே ஊண். (ஔவையார்)

காட்சி வீரம் கல்வி ஊண் என்னும் நால்வகை நிலைகளுக்கும் நூல்வகையின்று மிக்க மேலான இலக்கணத்தை விளக்கி மனித வாழ்வின் புனித நிலையை இது உணர்த்தியுள்ளது.

காட்சி என்றது மெய்யறிவினை. புறத்தே தோன்றுகின்ற பொய்த் தோற்றங்களில் மயங்கி நில்லாமல் மெய்ப் பொருளைத் தெளிவாக உணர்ந்து கொள்வதே காட்சி என்றதனால் அதன் மாட்சி காணலாகும். போரில் நேர்ந்த எதிரிகளை வென்று வருவதே வீரம் என நூல்கள் கூறியுள்ளன. புலன்களை வென்று கொள்வதே வீரம் என இது குறித்துள்ளது. வயிற்றை வளர்க்கும் பொருட்டுக் கற்றுவருவது கல்வி அன்று; என்றும் அழியாத நித்திய முத்தியில் உயிர் நிலைத்திருக்கக் கற்றுக் கொள்வதே கல்வி என இது காட்டியருளியது. பிறர் வசமாய் எவல் செய்து உண்பது ஈனம் ஆதலால் அங்ஙனமின்றித் தன் மதிப்போடு தானே முயன்று மானமுடன் வாழ்வதே வாழ்வாம் என்றார். மனித சமுதாயத்திற்கு ஒரு புனிதமான ஞான போதனையை ஔவையார் இவ்வாறு செவ்வையாக அருளியுள்ளார்.

இத்தேச மக்களுடைய வாழ்க்கை முறைகளையும் நாகரிக நிலைகளையும் மறுமை நோக்கங்களையும் பழங்கால நூல்களில் உளங்கூர்ந்து காணுந்தோறும் உவகை மீதூர்கின்றோம்.

ஒரு தலைவன் பொருள் ஈட்டும் பொருட்டு மறுபுலம் போயினன். அந்தப் பிரிவை ஆற்ற முடியாமல் அவனுடைய மனைவி பெரிதும் மறுகினள். அருகிருந்த தோழி அவளை ஆற்றியருளினள். தேறுதலாக அவள் ஆறுதல் கூறிய உரைகள் சீர்மையோடு நீர்மை சுரந்து தேச நிலைமைகள் தெரிய வந்தன.

சுனைவாய்ச் சிறுநீரை எய்தாதென் றெண்ணிப்
பிணைமான் இனிதுண்ண வேண்டிக்—கலைமாத்தன்
கள்ளத்தின் ஊச்சுப் சுரமென்பர் காதலர்
உள்ளம் படர்ந்த நெறி. (ஐந்திணை ஐம்பது)

நம் தலைவர் பல காடுகளைக்கடந்து அயல் நாடு போயுள்ளார். காட்டு மிருகங்களுள் ஒரு கலைமான் தனது பிணையோடு நீர் பருக வந்தது; அந்தச் சுனையுள் கொஞ்சம்தான் தண்ணீர் இருந்

றது. துணைவி குடித்துக் கொள்ளட்டும் என்று கலைமான் நின்றது; தன் கணவன் நீர் பருகவில்லையே என்று பிணைமான் அனுகாதிருந்தது; தான் குடித்தால் தன் பிணைக்கு நீர் காணாது என்று கருதி அந்தக் கலைமான் சுனையில் வாயை வைத்துத் தண்ணீர் பருகுவதுபோல் கள்ளமாக உறிஞ்சியது; அதனை நோக்கிப் பிணைமான் நீரை நன்கு பருகியது. அதன்பின் பிணையோடு அது உவந்து போயது. "காட்டு மிருகங்களும் தங்கள் பேடுகளை அன்புரிமையுடன் ஆதரித்து வருவதை நேரே கண்டு சென்றார் ஆதலால் உன்மேல் காதலால் விரைந்து வந்தருளுவார்; நோதலுற வேண்டா" என்று அவள் ஆதரவு கூறி இவ்வாறு தேற்றியிருக்கிறாள். நாட்டின் நாகரிகங்கள் இதில் தோற்றியுள்ளன.

இது பழங்காலப் பாட்டு. இருபது நூற்றாண்டுகளுக்கு முன்னர் எழுதியது. மாறன் பொறையனார் என்னும் புலவர் பெருமான் பாடியருளியது. காதல் துறையில் ஒரு பெண்ணின் வாய்மொழியாக இவ்வண்ணம் அரிய அன்பு நீர்மையை விளக்கியுள்ளார். இனிய பண்பாடுகள் இன்பம் தருகின்றன.

தன்னலம் கருதாமல் கண்ணோட்டம் புரிந்து பிறரைப் பேணி வருவதே பெரிய நாகரிகம் என்னும் அரிய உண்மை இங்கே அறிய வந்தது. உரிய நீர்மையை ஓர்ந்து ஒழுகுக.

---

530. மன்னுயிர்க் கன்பாய் மருவி இதம்புரியின்
தன்னுயிர்க் கின்பம் தழையுமே—முன்னொருவன்
உள்ளம் உருகி உதவினன் ஈசனருள்
வெள்ளமெதிர் கண்டான் விரைந்து (10)

இ—ள்

ஒருவன் பிற உயிர்களுக்கு இரங்கி உதவின் அவனுடைய உயிர்க்கு அது பேரின்பமாய்ப் பெருகிவரும்; முன்பு உள்ளம் உருகி உதவி புரிந்தவன் பின்பு இறைவன் அருளை வெள்ளமா எதிரே கண்டு உள்ளம் உவந்து கொண்டான் என்பதாம்.

இது அன்பின் வழியே இன்பம் என்கின்றது.

சுகத்தையும் புகழையும் எல்லாரும் விரும்புகின்றனர்; தாம் விரும்பியபடி அவற்றை அடைந்து கொள்பவர் அரியராயுள்ள

னர். கரும சாதனங்களைச் சரியாக உணர்ந்து கொள்ளாமை யால் உரிமைகளை இழந்து போகின்றனர்.

உள்ளம் கனிந்த அரிய செயல்கள் பெரிய புண்ணியங்க ளாய்ப் பெருகி வருகின்றன. அவ் வரவால் பேரின்பங்கள் விளை கின்றன. தன்னலம் துறந்து பிறர்க்கு உதவி புரிய நேர்ந்தபோது அவன் உயர்ந்த தியாகியாய்ச் சிறந்து விளங்குகிறான். உள்ள பொருள்களை அள்ளிக் கொடுத்தவர் வள்ளல்கள் என வந்தார். சிறந்த சீரும் சிறப்பும் உயர்ந்த செயல் இயல்களால் உளவா கின்றன.

மன்னுயிர்க்கு அன்பாய் இதம்புரியின்
தன்உயிர்க்கு இன்பம் தழையும்.

மனிதன் அரிய இன்ப நலங்களை அடைதற் குரிய எளிய வழியை விழிதெரிய இது விளக்கி யுள்ளது. விதையை நிலத்தில் விதைத்தவன் மிகுந்த விளைவுகளைப் பெறுதல் போல் இதத்தை உயிர்கள்பால் செய்தவன் உயர்ந்த மகிமைகளைப் பெறுகின்றான்.

தனக்கு இச்சையாய்ச் சுகத்தை நாடுகிறவன் கொச்சை மனிதனாய் இழிந்து படுகிறான்; நச்சிய இன்பங்களையும் இழந்து விடுகிறான். பிறர்க்கு அன்பாய் இதத்தைச் செய்கிறவன் உச்ச நிலையில் உயர்ந்து ஒளி மிகுந்து நிற்கிறான்; எல்லா இன்ப நலங் களையும் எளிதே அடைந்து கொள்கிறான்.

"He that loveth his life shall lose it; and he that hateth his life in this world, shall keep it unto life eternal." (Bible)

"சுய நயமாய்த் தன் சீவனை நேசிக்கிறவன் அதனை இழந்த வனாகிறான்; இவ்வுலகில் பிறர்க்கு இதமாய்த் தன்னைத் துறந்தவன் நித்திய சீவனாய் நிலைத்து நிற்கிறான்" என ஏசுநாதர் இவ்வாறு தன் சீடர்களை நோக்கிக் கூறியுள்ளார்.

தன்னலம் பாராமல் சீவர்களுக்கு இதம் செய்யும்படி அத் தீர்க்கதரிசி போதித்திருப்பது இங்கே நன்கு சோதித்துச் சிந்திக் கத் தக்கது.

முன் ஒருவன் உள்ளம் உருகி உதவினான்
ஈசன்அருள்வெள்ளம் எதிர்கண்டான்.

பண்டு நிகழ்ந்த ஓர் அதிசய நிகழ்ச்சியை இது துதிசெய்து வந்தது. தெய்வ ஒளிகள் வையம் தெளிய வருகின்றன.

இமயச் சாரலில் ஒரு தங்கப் பாளம் கிடந்தது; முனிவர் சிலர் கண்டு வந்து மகத மன்னனிடம் சொன்னர். அரசன் அதனைக் கொண்டு வரும்படி செய்தான்; அது வந்தது; மன்னன் மகிழ்ந்து பார்த்தான்; இது அரிய புண்ணிய சீலர்க்கு உரியது என அதன் மேல் எழுதியிருந்தது. வேந்தன் வியந்து நின்ருன். தருமவான்கள் எனத் தன் நாட்டில் பெருமை பெற்றுள்ளவர் யாவரையும் ஆராய்ந்து அழைத்தான்; அனைவரும் வந்தனர். அரச சபையில் கூடினர். அவருள் உயர்ந்த புண்ணியவான் யார்? என எண்ணி நோக்கி இறுதியில் ஒருவனை ஏகமாத் தேர்ந்து எடுத்தனர். தன் செல்வம் முழுவதையும் கல்வி நிலையங்களுக்கும், வைத்திய சாலைகளுக்கும், அன்ன தானங்களுக்கும் அள்ளிக் கொடுத்தவன் எனத் தெள்ளி எடுத்த அவனை அரசன் உவந்து நோக்கி அந்தத் தங்கக்கட்டியை எடுத்துக்கொடுத்தான்; அவன் கையில் வாங்கினன். வாங்கவே அது ஈயம் ஆயது. யாவரும் மருண்டு திகைத்தார்; அவனும்வெருண்டுநாணினன். மன்னன்மறுகிப் பின்னர் ஒருவனிடம் அப் பொன்னின் பொதியை உரிமையாகத் தந்தான். பெரிய தரும சீலன் எனப் பேரும் சீரும் பெற்றிருந்த அவன் கையில் பட்டவுடனே அது இரும்பாய் மாறியது. புண்ணியவான்கள் எனக் கண்ணியம் கொண்டிருந்த யாரும் வந்து தொட்டனர்; தொடவே அது பித்தளை செம்பு வெண்கலம் வெள்ளி என இழிந்து மாறியதேயன்றி ஒருவரிடமாவது தன்னிறம் கொண்டு அப் பொன் பொதி நின்றிலது. அரசன் அயர்ந்து நின்ருன். இறுதியில் அங்கோர் உழவன் வந்தான்; மிகவும்எளியவன்; நாட்டுப் புறத்தான். அந்தக் கூட்டத்தைக் கண்டதும் என்ன இது! என உன்னி அடைந்தான். அருகு வரவே அந்தத் தங்கப் பாளத்திலிருந்து ஒரு பேரொளி எழுந்து அவன் மேல் நேரே வீசியது. யாவரும் வியந்தனர். மன்னன் மகிழ்ந்து அப் பொன்னின் பொதியை அன்னவனிடம் கொடுத்தான்; அவன் கையில் வாங்கினன்; முன்னையினும் பன்மடங்காக அது ஒளி வீசி நின்றது. வேந்தன் அவனை உவந்து உபசரித்துப் புண்ணிய சீலன் என்று புகழ்ந்து போற்றினன்.

தங்கள் பேரும் சீரும் உலகம் அறிய வேண்டும் என்று முன்னவர் எல்லாரும் ஆடம்பரமாகத் தருமங்களைச் செய்தனர்; இவன் யாருக்கும் தெரியாமல் பசித்தவர்களுக்கு அன்னம் உதவி

எல்லா உயிர்களிடத்தும் உள்ளன்புடையனாய் ஒழுகி வந்தான் ஆதலால் எங்கும் நிறைந்துள்ள கடவுளுடைய கருணை இவனிடம் உரிமையாய்ப் பொங்கி எழுந்தது.

இமயச் சாரலில் எரிகதிர் வீசித்
தமனியப் பாளம் தனியே கிடந்தது;
மகத வேந்திடம் மாதவர் மொழிந்தனர்;
மன்னன் மகிழ்ந்து அன்னதைக் கொணர்ந்தான்
மன்னிய வாசகம் முன்னுற நின்றது:
கண்ணுற நோக்கி எண்ணியுள் வியந்தான்
“தண்ணளி நிறைந்த புண்ணியர் தமக்கே
ஒண்ணிதி இஃது உரியதாம்” எனத்
தீட்டி யிருந்ததை நோக்கி வியந்து
தேசம் எங்கணும் ஓசையுற உணர்த்தினன்;
தரும வான்களாய்த் தரணியில் உயர்ந்த
நல்லோர் யாவரும் ஒல்லையில் குழுமினர்;
சேர்ந்தவ ருள்ளே தேர்ந்தனர் ஒருவனை
உரிய பொருளெலாம் வறியவர்க்கு உதவிப்
பெரியவன் எனப் பெருமை பெற்றிருந்த
அன்னவன் தனக்கே பொன்னின் பொதியை
மன்னவன் வழங்கினன் வாங்கினன் அவனும்
தொட்டதும் அந்தப் பொன்னின் திரளை
ஈயக் கட்டியாய் இழிந்து விழுந்தது;
யாவரும் வெருண்டனர்; அவனும் மருண்டான்;
கடவுட் பரிசிது கைபெற உரியார்
யாரும் இலர்என அரசன் வருந்தி
மறுகி இருந்துபின் மதியோடு ஆய்ந்தான்
உரியவர் இவர்எனத் தெரியஓர் சூழ்ச்சி
பெரியவர் ஒருவர் பேசி அருளினர்;
நல்லவர் இவர்என நானில மதனில்
பல்லவர் புகழப் பாடுபெற் றிருந்த
எல்லவரும் அவன் எதிரே வந்தனர்
பொன்னின் கட்டியைப் போந்து தொட்டனர்
இரும்பு செம்பு ஈயம் பித்தளை
வெண்கலம் வெள்ளி இங்ஙனம் ஆயது;
யாவரும் நாணி அயலே போயினர்;
இறுதியில் அங்கோர் உழவன் அடைந்தான்;
எளியன் ஆயினும் அளிமிக உடையவன்;
பிறவுயிர்க் கிரங்கும் பேரரு ளாளன்;
வழியிடை ஒருவன் விழியிலா திருந்ததைக்

கண்டுளம் வருந்திக் கண்ணீர் சொரிந்துஅவன்
கையைப் பிடித்துப் பைய நடத்தித்
தருவிடை இருத்திப் பரிவுடன் ஆற்றி
உறுதி கூறி உரிமையின் வந்தான்
வேந்தன் எதிரே மாந்தர் குழுமி
நேர்ந்து நிற்றலை நினைந்து வியந்து
அருகு நெருங்கி ஆய்ந்து நோக்கினன்
வெள்ளியாய்க் கிடந்தது தங்கமாய் மாறிப்
பொங்கொளி வீசி அங்கவன் மேனியில்
எங்கும் இன்கதிர் இனிது திகழ்ந்தது
அரசன் முதலா யாவரும் வியந்தனர்;
தெய்வக் கொடையாய்ச் சேர்ந்துள அந்தப்
பொன்னின் பொதியை அன்னவற் களித்தனர்;
இன்னொளி பரப்பி இளஞ்சூரியன் போல்
மன்னி அவன்கை மருவி
தண்ணளி புரிந்து தழைத்திருந் ததுவே.

உண்மையான புண்ணிய நிலையை இச்சரிதம் இனிது உணர்த்தி யுள்ளது. உள்ளம் கனிந்த அன்பே கடவுளுடைய அருளை உரிமையாகப் பெறுகிறது. நாகரிகங்கள் என மோகம் அடைந்துள்ள வெளி மினுக்குகள் உயர்பயன்களை அடையா. கண்ணோடி இரங்கி உபகரிக்கும் உதவியே சிறந்த புண்ணியமாய் விண்ணோடி விளங்கி நிற்கும் என்பதை இது கண்ணாடி போல் காட்டி யருளியது. கருத்தை உணர்ந்து கதிநலம் காணுக.

## இவ் அதிகாரத்தின் தொகைக் குறிப்பு.

நாகரிகம் என்பது நல்ல நீர்மை.
அருள் நலம் ஆனது.
கண்ணோட்டம் உடையது.
புண்ணியம் புரிவது.
கண்ணியம் தருவது.
அருளுடைய அது மருளடைய நேர்ந்தது,
வெளிப்பகட்டாய்க் களிப்படைந்தது.
மருள் நிலையில் மருவி இழிந்தது.
நாகரிக நாடு அநாகரிகமாயது.
அளிபுரிந்து ஒளிபெற வேண்டும்.

53-வது நாகரிகம் முற்றிற்று.

# ஐம்பத்து நான்காம் அதிகாரம்

## ப ண் பு.

அஃதாவது உயர்ந்த குண சீலங்கள் நிறைந்து உலகம் அறிந்து ஒழுகும் நீர்மை. அன்பு சுரந்து யாண்டும் அமைதி யாய்ப் பண்பு படிந்து வருவது சிறந்த நாகரிகத்தின் சீவியமா யுள்ளமையால் அதன் பின் இது வைக்கப்பட்டது.

531. என்போ டியைந்த இனிய உயிர்வாழ்க்கை
அன்போ டியையின் அமுதாகும்—இன்போடு
வாழ விரும்பின் மனமும் இனமும் சீர்
சூழ வருக தொடர்ந்து. (1)

இ—ள்

உடலோடு கூடிய உயிர் வாழ்க்கை அன்போடு அமை யின் அது அமுதமாம்; இன்பமாய் வாழ விரும்பின் மனமும் இனமும் பண்பு சுரந்து எவ்வழியும் நண்பு நிறைந்து வர வேண் டும் என்பதாம்.

புழு, பூச்சி முதலிய சிறிய பிராணிகள் எலும்பு இல்லாத உருவங்களை மருவி யுள்ளன. மனிதன் என்போடு இயைந்த யாக்கையை அடைந்து வந்திருக்கிறான். பறவை மிருகம் முத லிய சீவகோடிகள் எவற்றினும் தலை சிறந்து நிற்றலால் மனிதப் பிறப்பு அதிசயமுடையதாய் யாண்டும் துதி செய்ய வந்தது. அரிய பிறவியும் உரிய தன்மை மருவிய பொழுதுதான் பெருமை மிகப் பெறுகிறது. மருவாவழி விருதாவாய் விளிந்து படுகின்றது.

உடலுக்கு என்பு எப்படி உறுதி புரிந் துள்ளதோ, அப்படி யே உயிர்க்கு அன்பு உயர்வு சுரந்துள்ளது. அன்பு இல்லையானால் மனிதன் என்பில்லாத புழுவாய் இழிந்து படுகிறான்.

என்பு இல்லாததை வெயில் காய்தல்போல்
அன்பு இல்லாததை அறம் காயும்.

என நாயனார் இவ்வாறு அருளி யுள்ளார். அன்புடையவன் புண்ணியவான்; தருமதேவதைஅவனை உவந்து போற்றும்; அன்பு இல்லாதவன் பாவி; அவனை அறக்கடவுள் வெறுத்து வருத்தும் என்பதை இங்கே குறிப்பாய்க் கூர்ந்து அறிந்து கொள்கிறோம்.

உள்ளத்தில் அன்பு கனிந்தபோது அந்த உயிர் இனிமை சுரந்து இன்ப நிலையமாய் உயர்கிறது; அன்பு இல்லையாயின் அது கொடுமை மண்டித் துன்பச் சூழலில் தொடர்ந்து உழலுகின்றது. உள்ளத்தில் இனிய அன்பு இல்லாதவர் வெளியே கொடியவர், தீயவர், துட்டர், முரடர் எனத் திரிய நேர்கின்றனர். ஆன்ம நீர்மை குன்றிய பொழுது மேன்மை இழந்து கீழ்மை யுறுகின்றனர்.

அன்பு மனிதனைப் பண்படுத்தி மகான் ஆக்குகின்றது.

அன்பு இயையின் அமுது ஆகும்

மனித வாழ்க்கை எவ்வழியும் புனிதமாய் இனிமை சுரந்து தனிமகிமையுறுவது அன்பினலேயாம் என இது அறிவுறுத்தியுள்ளது. அமர நிலையை அருளி வருதலால் அமுதம் என நேர்ந்தது.

செவ்வையாய்த் திருந்திய குணநீர்மை பண்பு என வந்தது. இந்தப் பெருந்தன்மையின் நறுமணமாய் அன்பு இனிது அமைந்திருக்கிறது.

அன்புடைமை ஆன்ற குடிப்பிறத்தல் இவ்விரண்டும்
பண்புடைமை என்னும் வழக்கு. (குறள்,992)

அன்பும் குடிப்பிறப்பும் மருவியுள்ள இடத்தில் பண்புடைமையைக் காணலாம் என இது காட்டியுள்ளது. பரம்பரையாகவே நல்ல பழக்கங்களைப் பழகி வந்துள்ள உயர்ந்த குடும்பத்தில் பிறந்தவர்களிடத்தே தான் அன்பும் பண்பும் அமைந்திருக்கும் என்றதனல் அவற்றின் தலைமையும் நிலைமையும் நன்கு தெரியலாகும். புனித நீர்மைகள் புண்ணியங்களாகின்றன.

இனிய குணநலங்கள் அமைந்த அளவு மனிதன் புனிதனய் உயர்ந்து ஒளி பெறுகிருன். அன்பு பண்பின் சாரமா யுள்ளது; அதனை இயல்பாகவுடையவன் தெய்வ நிலையை எளிதாக அடைகிருன். உருகிய அன்பின் சுவையாய் இறைவன் உறைகிருன்.

"அன்பினில் விளைந்த ஆரமுதே" (திருவாசகம்)

எனக் கடவுளை நோக்கி மாணிக்கவாசகர் இவ்வாறு உருகிக் கூவி ஓலமிட்டிருக்கிருர். உள்ளத்தில் அன்பு கனிந்த அளவு அங்கே இன்ப மயமான பரமன் ஒளிசெய்து உலாவுகிருன் என்பதை இந்த அனுபவ மொழியால் இனிது அறிந்து கொள்கிருேம்.

அன்பு இறைவன் உருவம் ஆதலால் அதனையுடையவர் பரமனோடு பரவசமாய்க் கலந்து களித்து உவந்து திளைக்கின்றார்.

அன்புள் உருகி அழுவன்; அரற்றுவன்;
என்பும் உருக இராப்பகல் ஏத்துவன்;
என்பொன் மணியை இறைவனை ஈசனைத்
தின்பன்; கடிப்பன்; திருத்துவன் தானே. (திருமந்திரம்)

அன்பின்பெருக்கினால் இறைவனைத் திருமூலர் மருவிமகிழ்ந்திருக்கும் நிலையை இது உணர்த்தி நிற்கிறது. உருகிய அன்புடையவர் பரமானந்தத்தை எளிதே அடைந்து கொள்ளுகின்றனர்.

"He who does not love will never know God, but
he who lives in love lives in God and God in him."(Jesus)

"அன்பில்லாதவன் கடவுளை யாதும் காணமுடியாது; அன்புள்ளவன் கடவுளிடம் வாழ்கிறான்; கடவுள் அவனிடம் இருக்கிறார்." என ஏசுநாதர் இவ்வாறு கூறியுள்ளார்.
ஆன்ம உருக்கம் பரமான்மாவை வாரி விழுங்கிக் கொள்ளுகிறது.

"அடங்கா ஐம்புலன் அடங்கினர்க்கு அம்ம
ஒடுங்கா ஐம்புலன் உளத்தினும் உளவே; அவைதாம்
செவிப்புலன் அறியா அகத்துஒலி ஒன்றே;
மெய்ப்புலன் அறியாத் தட்பமற்று ஒன்றே;
கட்புலன் அறியாக் கதிர்ஒளி ஒன்றே;
நாச்சுவை அறியா நறுஞ்சுவை ஒன்றே;
மூக்குஉயிர்த் தறியா முருகுமற்று ஒன்றே;
பேரா இன்பமிப் பெற்றியில் திளைக்கும்
ஆரா இன்பம்ஒன்று ஆர்ந்தனம் யாமே; அதுவே
பரமா னந்தப் பரவையுள் தோன்றிய
இன்ப ஆரமுதம் அவ் வமுதம்
அன்பருக்கு எளிதுஎளிது; அரிது விண்ணவர்க்கே."

கடவுளைக் கலந்து மகிழும் பேரின்பம் அன்பருக்கு எளிது; அமரருக்கு அரிது என இது குறித்துள்ளது. புறத்தே புலன்களை அடக்கிய தவயோகிகள் அகத்தேஅனுபவிக்கும் சிவபோக நுகர்ச்சிகளை இதில் கூர்ந்து ஓர்ந்து உள்ளம் உவந்து கொள்ளுகிறோம். தத்துவ நிலைகள் உய்த்துணரத் தக்கன.

அரிய பேரானந்தம் அன்புடையவர்க்குத் தனி யுரிமையாய் இனிதமைந்துள்ளது. இத்தகைய அன்பு சுரந்த போது அது உத்தமமான பண்பு அமைந்த வாழ்வாய் உயர்ந்து திகழ்கிறது. அன்பு கனிந்த மனமும், பண்பு படிந்த இனமும் மனிதனுக்குப் பேரின்பம் அருளுகின்றன.

பண்பு நலம் சுரந்து மன்பதை இன்படைய வேண்டும்.

---

532. எல்லார் இயல்பும் எதிரறிந்து எவ்வழியும்
நல்லார்வ மோடு நலம்புரிந்து—பல்லாரும்
பண்பு படிந்து பயனுடைய ராகிவர
நண்பு படிக நயந்து. (2)

இ—ள்

பிறருடைய இயல்புகளை நுணுகி அறிந்து யாண்டும் இதம் புரிந்து எல்லாரும் நல்லவராய்ப் பண்பும் பயனும் படிந்து வர அன்பு சுரந்து நண்பு நிறைந்து வருக என்பதாம்.

உலக நிலைகளை அறிந்து ஒழுகுவது கலையறிவின் தலையாய பயனாய் நிலவியுள்ளது. தன்னைச் சூழ்ந்துள்ள மக்களுடைய இயல்புகளை நுணுகி யுணர்ந்து இதமாய் இணங்கிப் பதமாய் வாழ்ந்து வருகிறவன் அதிசய சாதுரியவானாகின்றான்.

கலையறிவினும் அனுபவ அறிவு மனிதனுக்கு இனிய துணையாய்த் தனி மகிமை தருகிறது. நூல்களைப் படித்து வருவதில் கல்வியறிவு வருகிறது; மனிதர்களைப் படித்து வருவதில் அனுபவ அறிவு அமைகிறது. முன்னது கண்ணாடிப் பார்வை; பின்னது கண் பார்வையாம். சொந்தமான தன்பார்வையில் தேர்ச்சி பெற்றவன் எந்த நிலையிலும் உயர்ந்து யாண்டும் ஒளி பெற்று நிற்கிறான்.

தன் அனுபவத்தைக் கொண்டு உலகத்தை அளந்து கொள்ளுகிறவன் உயர்ந்த மேதையாய்ச் சிறந்து விளங்குகிறான். தனக்கும் பிறர்க்கும் நலமும் பலமும் விளைந்து வர அவன் வளர்ந்து வருகிறான்.

உலகம் தெரிந்து ஒழுகாதவன் பலவும் தெரிந் திருந்தாலும் பதராய் இழிகிறான். ஏட்டுப் படிப்பினும் நாட்டுப் படிப்பு நலம்

பல புரிகிறது. தன் பாடுகொண்டு பிறர் பாடு கண்டு யாண்டும் பிழைபாடு நேராமல் பெருந் தகவோடு நடந்து வருவதே உயர்ந்த பண்பாடாம்.

"பண்பு எனப்படுவது பாடறிந்து ஒழுகுதல்;
அன்பு எனப்படுவது தன்கிளை செறாஅமை" (கலி,133)

நல்லந்துவனுர் என்னும் சங்கப் புலவர் பண்புக்கும், அன்புக்கும் இங்ஙனம் இலக்கணம் விதித்திருக்கிருர். பாடு—உலகப் போக்கு. கால நிலைகளைக் கருதி, உலக இயல்புகளை ஓர்ந்து நண்போடு ஒத்து நடப்பதே வித்தகமான பண்பாடு ஆம் என்றதனல் இதன் பான்மையும் மேன்மையும் அறியலாகும்.

பல்லாரும் பயன் உடையராகி வர

என்றது தன்னுடைய பண்புடைமையினல் தன்னை அடுத்தவர் எல்லாரும் நல்லவராய் நலம் பல அடையும்படி ஒருவன் ஒழுகி வரவேண்டும் என்றவாறு. நன்மையால் நன்மை விளையும் ஆதலால் அந்த உண்மை உரை வந்தது.

அமைதி பொறுமை அன்பு ஆதரவு முதலிய பண்பாடுகள் ஒருவனிடம் மருவிய பொழுது அவன் உலகத்திற்கு ஓர் இன்ப நிலையமாய் ஒளி செய்து நிற்கிருன். அவனைக் கண்டவரும் கருதினவரும் பெருமகிழ்வுடையராய் உறுதி நலங்களை அடைந்து கொள்ளுகின்றனர்.

இனிய பண்பாடுகளில் இராமன் தலைசிறந்துள்ளமையால் குணங்களால் உயர்ந்த வளள்ல் என உலகம் உவந்து புகழ்ந்துள்ளது. தன்னுடைய நீர்மை சீர்மைகளால் இக் கோமகன் மனித சாதி முழுவதுக்கும் புனித போதனைகளைச் செய்திருக்கிருன்.

தீர்வரு மன்ன தீமை செய்யினும் செய்ய சிந்தைப்
பேரருளாளர் தத்தம் செய்கையில் பிழைப்ப துண்டோ?
கார்வரை நிறுவித் தன்னைக் கனல்எழக் கலக்கக் கண்டும்
ஆர்கலி அமரர் உய்ய அமிழ்துபண்டு அளித்த தன்றே. (1)

துறவியின் உறவு பூண்ட தூயவர் துணைவன் என்னை
உறவுவந்து அருளி மீளா அடைக்கலம் உதவி ஞனே
மறவினை நீக்கல் இல்லா மாயமும் மாய வாழ்க்கைப்
பிறவியும் பெயர்த்தேன் பின்னும் நாகினிற் பிழைப்ப தானேன்.
(இராமாயணம்)

தன்பால் அன்பாய்த் தன்னை இராமன் ஆதரித்து அருளியதை நினைந்து மகிழ்ந்து வீடணன் இவ்வண்ணம் உருகி உரையாடி யிருக்கிறான். பகைவனுடைய தம்பி என்பதையும் எண்ணாமல் தன்னிடம் கண்ணோட்டம் கொண்டு தண்ணளி புரிந்துள்ளதை எண்ணி எண்ணிக் கண்ணீர் மல்கி அந்தப் புண்ணியமூர்த்தியை அவன் புகழ்ந்து போற்றியுள்ள நிலைகளை உவந்து நோக்கி நாம் வியந்து நிற்கிறோம். நெடிய மலையை நிறுத்தித் தன்னை நிலைகுலைத்துக் கலக்கினவர்க்கு இனிய அமுதத்தைக் கடல் அளித்தது போல் தனக்குத் துயர் இழைத்தவர்க்கும் கருணைக் கடலான இராமன் இதம் அளித்தான் என ஏத்தியுள்ளான்.

திருந்திய பண்புடையாளர் யாண்டும் பெருந்தகைமையாய் நடந்து வருதலால் யாவரும் அவரை உவந்து தொழுது உயர் நலம் பெறுகிறார். இனிய நீர்மை தனி மகிமை ஆகிறது.

---

533. பண்பால் உயர்ந்து பதம்படிந்து ஆருயிர்பால்
நண்பால் அமர்ந்து நலம்புரியின்—விண்பால்
விளங்கு மதிபோல் வெளியுலகம் எங்கும்
விளங்கும் அவன்சீர் விரிந்து. (3)

இ—ள்

உள்ளப்பண்பால் உயர்ந்து உயிர்கள்மாட்டு நண்பு புரிந்து யாண்டும் நலமாய் ஒருவன் ஒழுகிவரின், அவன் விண்ணில் விளங்கும் தண்மதி போல் மண்ணில் ஒளி பெற்று விளங்குவான் என்பதாம்.

இயல்பு, குணம், தன்மை, நீர்மை என்னும் மொழிகள் உயர்ந்த நிலைகளில் ஒளி செய்துள்ளன. உயிர்ப் பண்புகளை உரைகள் உணர்த்தி வரினும் அவற்றின் பெயர்க் காரணங்கள் அரிய மறைகளாய் மருவி நிற்கின்றன. மேன்மையான ஆன்ம மணங்கள் பான்மைகளாய்ப் பரிணமித்து வருகின்றன.

தன் அகத்தில் அமைந்துள்ள குண நீர்மைகளுக்குத் தக்கபடியே மனிதன் புறத்தில் மணம் பெற்று மிளிர்கிறான். நல்ல சுபாவம் எல்லா மகிமைகளையும் ஒருங்கே நல்கியருளுகின்றது.

பண்பால் உயர்ந்து என்றது உண்மையான உயர்ச்சியின் தன்மை தெரிய வந்தது. உயர்வுகள் பல வழிகளால் உளவாகின்

றன. செல்வம் கல்வி அதிகாரம் முதலிய நிலைகளாலும் உயர்ச்சிகள் உளவாம் ஆயினும் பண்பால் வருவதே யாண்டும் உயர்ந்த மாட்சியாய் ஒளி வீசி உலாவுகின்றது.

பயிற்சியால் உறுவதினும் இயற்கையான மன நலத்தால் விளைவது அரிய பெரிய மகிமையாய்ப் பெருகி மிளிர்கிறது.

இருதயம் புனிதமாய்ப் பரிபாகம் அடையின் அந்த மனிதன் அதிசய மகானாய்த் துதி செய்யப் பெறுகிறான். 'மனமே மனிதன் என்பது மறைமொழி. அரிய மனிதனுக்கு உரிய மூல வித்தாய் மனம் அமைந்திருக்கிறது.

"Humanity is nothing but a heart." (Victor Hugo)

"இதயம் இல்லையானால் அங்கே மனித உதயம் இல்லை" என்னும் இது இங்கே அறிய வுரியது. மனித சாதிக்கு இனிய மூலமாயுள்ள மனம் நல்லதாய் அமையின் எல்லா மேன்மைகளும் அங்கே வெள்ளமாய்ப் பொங்கி வருகின்றன.

பண்பாடு என்பது அரிய பெரிய தன்மை ஆதலால் அதனையுடையவர் உயர்ந்த பெரியோர்களாய்ச் சிறந்து விளங்குகின்றனர். உள்ளம் விரிந்து வர உலகம் புகழ்ந்து வருகிறது.

பண்பு படிந்த பெருந்தகைமைக்குச் சிறந்த அடையாளம் யாரையும் இகழ்ந்து பேசாமல் யாண்டும் இதமாய் நடந்து எவ்வழியும் செவ்வி புரிந்து வருதலேயாம்.

"புல்லா எழுத்தின் பொருளில் வறுங்கோட்டி
கல்லா ஒருவன் உரைப்பவும் கண்ணோடி
நல்லார் வருந்தியும் கேட்பரே மற்றவன்
பல்லாருள் நாணல் பரிந்து." (நாலடியார், 155)

நல்ல கல்வியறிவில்லாமல் சபையில் ஒருவன் பிழையாகப் பேசினாலும் பண்புடையவர் அதனையும் பரிந்து கேட்பர்; பிழை என்று எழுந்து தாம் வெளியே போனால் பிறர் அவனை இகழ நேர்வர்; அதனால் அவன் அவமானமடைவன் என இரங்கிக் கண்ணோடிப் பொறுத்திருப்பர் என்க. இதனால் பண்பாளரது பெருந்தன்மையும் பொறுமையும் அறிந்து கொள்ளலாம்.

"நைவாரை நல்லார் நலிவரோ? நாளும் அருள்
செய்வார்; சிரியார் சிறியார் போல்—தெய்வ

எழிலோய்! தொழுதேற்கு இரங்குவதுன் பண்பின்
வழியால் மறவாய்என் மாட்டு.''

துயரால் நலிவாரை நோக்கிச் சிறியார் சிரிப்பர்; பெரியார் இரங்கி அருள்வர் என இது உணர்த்தியுள்ள அழகை ஊன்றிப் பார்க்க. இனிய பண்பு எங்கும் இதம் புரிகிறது.

பன்னாளும் சென்றக்கால் பண்பிலார் தம்முழை
என்னானும் வேண்டுப என்றிகழ்வார்—என்னானும்
வேண்டினும் நன்றுமற் றென்று விழுமியோர்
காண்டொறும் செய்வர் சிறப்பு. (நாலடியார், 159)

யாரேனும் தம்மிடம் வந்தால் ஏதேனும் பொருளைக் கேட்பரோ என்று மருண்டு பண்பிலார் இகழ்ந்து நிற்பர்; அவர் எது கேட்டாலும் நல்லதே என்று உவந்து காணும்தோறும் முகம் மலர்ந்து பண்புடையார் நண்பு கொண்டாடி அன்புடன் சிறப்புச் செய்வர் என இது உரைத்திருக்கிறது.

பண்புள்ள பெருந்தகையாளரது உயர்வுகளையும், அஃது இல்லாத சிறியரது இழிவுகளையும் இங்கே தெளிவாக உணர்ந்து கொள்கிறோம்.

விண்பால் விளங்கு மதி போல் விளங்கும்.

பண்பால் உயர்ந்தவர்கள் மண்பால் இருந்தாலும் விண்பால் விளங்கி ஒளிரும் சந்திரன்போல் எங்கும் புகழ் ஒளி வீசி இனிது விளங்குவர் என இது விளக்கியுளது. மனப்பண்பு மனிதனைத் தேவன் ஆக்கி யாவரும் தொழுது வணங்கும்படி செய்தருளும் என்பதை உவமை உணர்த்தி நின்றது.

மனம் மொழி மெய்கள் இனியராய் இருத்தலால் பண்புடையவர் யாண்டும் உபகார நலங்கள் சுரந்து உதவி புரிந்து வருகின்றனர்; வரவே யாவரும் அவரைப் புகழ்ந்து போற்றி மகிழ்ந்து வருகின்றனர். இனிய செயல் அரிய பலனை அருளுகிறது.

தரும நீதிகள் தழைத்து அருமை நீர்மைகள் செழித்து நிற்றலால் பண்பாளரை அன்போடு உலகம் பாராட்டி வருகின்றது.

நயனொடு நன்றி புரிந்த பயனுடையார்
பண்பு பாராட்டும் உலகு. (குறள், 994)

பண்புடையவரது நிலைமைகளை இஃது உணர்த்தியுள்ளது.

நயன் அறிபவர், நன்மை புரிபவர், பயனுடையவர் என்ற தனால் பண்பாளரது மன நிலைகளையும் நடைமுறைகளையும் நன்கு தெளிந்து கொள்ளுகிறோம்.

பண்பட்ட நிலம் மிகுந்த விளை போகங்களைச் சுரந்தருளுதல் போல் பண்பட்ட மனம் அரிய பல உறுதி நலங்களை அருளி வரு தலால் அதனையுடையவன் சிறந்த பாக்கியசாலியாய் உயர்ந்து விளங்குகிறான். ஒருவன் உள்ளம் சிறிது பண்படையினும் அவன் பெரிய இன்படைகிறான்.

நஞ்சையைத் திருத்தி நலம்பல கண்டு உடலை வளர்த்து வருபவர் நெஞ்சைத் திருத்தி நிறைபலன் கொண்டு உயிரை உயர்த்தி உய்தி பெற வேண்டும்.

---

534. உள்ளம் சிறுமை ஒழியின் உயர்பெருமை
வெள்ளம் எனவே விரியுமால்—உள்ளம்
புனிதம் உறினேஅப் புண்ணியவான் அன்றே
மனிதருள் தேவன் மதி. (4)

இ—ள்

உள்ளத்தில் சிறுமை ஒழியின் உலகத்தில் பெருமை வெள் ளம் என விரியும்; புனிதமுடைய அந்தப் புண்ணியவான் மனித ருள் தெய்வமாய் மகிமை மிகப் பெறுவான் என்பதாம்.

மேன்மை கீழ்மை என்பன மனிதனுடைய பான்மைக ளால் வருகின்றன. தன்னுடைய அகநிலைகளுக்குத் தக்கபடியே புறத்தில் யாவும் வெளிப்பட்டு நிற்கின்றன. புல்லிய எண்ணங் கள் மனிதனைப் புலைப்படுத்தித் தாழ்த்துகின்றன; நல்ல சிந்தனை கள் நலம் பல தந்து மேலான நிலைகளில் உயர்த்தியருளுகின்றன. உயர்வும் தாழ்வும் எவரும் தருவதில்லை; உள்ளம் தருகின்றன.

புனிதமான இனிய நினைவுகள் மனிதனைத் தெய்வம் ஆக்கு தலால் அவை சீவ அமுதங்களாய்த் தேசு மிகுந்துள்ளன. உயிர்க்கு உய்தி நிலை உள்ளத்தின் கண்ணே உறைந்திருக்கிறது. மனம் நல்லதாய்ப் பண்படின் மனிதன் நல்லவனாய் எல்லா

இன்ப நலங்களையும் எளிதே அடைந்து கொள்கிருன். அரிய பெருமைகள் யாவும் உரிய மனத்தால் உளவாகின்றன.

சிறுமை என்றது அற்ப எண்ணங்களை. பொருமை குரோதம் கரவு முதலிய இழி நினைவுகள் மனிதனை ஈனன் ஆக்கி விடும்; அவை ஒழியின் அவன் விழுமிய மேலோனய் ஒளி மிகப் பெறுகிருன்.

சிறுமை ஒழியின் பெருமை விரியும்.

என்றது இருள் நீங்க ஒளி ஓங்குதல்போல் மனப் புன்மை ஒழிந்த அளவில் மாட்சி விளைந்துவரும் காட்சி தெரிய வந்தது. ஒருவன் உயர்ந்தவனக வேண்டின் இழிந்த எண்ணங்கள் அவன் உள்ளத்திலிருந்து உடனே ஒழிந்து போக வேண்டும்.

உள்ளம் உண்மையில் உயர்ந்த பொழுது அங்கே உறுதியும் தெளிவும் ஊக்கமும் கம்பீரங்களும் பெருகி எழுகின்றன.

மதுரைக் குமரனர் என்னும் புலவர் திலகர் ஒரு நாள் திருமாவளவன் என்னும் சோழ மன்னனைக் கண்டார். அந்தப் புவியரசன் இந்தக் கவியரசை உவந்து உபசரியாமல் சிறிது உளம் செருக்கி யிருந்தான். அதனை அறிந்ததும் இவர் நேரே மொழிந்த உரைகள் தெளிந்த உணர்வு நலங்கள் படிந்து வந்தன. சில அயலே வருகின்றன.

“மண்கெழு தானை ஒண்பூண் வேந்தர்
வெண்குடைச் செல்வம் வியத்தலோ இலமே;
எம்மால் வியக்கப் படூஉமோரே
புன்புல வரகின் சொன்றியொடு பெறாஅம்
சீறூர் மன்ன ராயினும் எம்வயின்
பாடறிந்து ஒழுகும் பண்பி னோரே;
மிகப்பேர் எவ்வம் உறினும் எனைத்தும்
உணர்ச்சி இல்லோர் உடைமை உள்ளேம்;
நல்லறி வுடையோர் நல்குரவு
உள்ளுதும் பெரும யாம் உவந்துநனி பெரிதே.” (புறம்)

உலகம் முழுவதும் ஆளும் அரசரே எனினும் பண்பு இலராயின் அவரை ஒரு பொருளாக மதியேம்; எளியராயினும் பாடறிந்து ஒழுகும் பண்புடையர் எனின் அவரை மதித்துப் புகழ்